உ

சிவமயம்





# சைவ சமயம்

திருச்சிற்றம்பலம்.

சீல மின்றி நோன்பின்றிச் செறிவே யின்றி அறிவின்றித்
தோலின் பாவைக் கூத்தாட்டாய்ச் சுழன்று விழுந்து கிடப்பேனை
மாலுங் காட்டி வழிகாட்டி வாரா உலக நெறியேறக்
கோலங் காட்டி ஆண்டானைக் கொடியேன் என்றோ கூடுவதே.

திருச்சிற்றம்பலம்.

— மாணிக்கவாசகர்

18/-

கொழும்பு விவேகாநந்த சபை வெளியீடு

உ
சிவமயம்



# சைவ சமயம்

திருச்சிற்றம்பலம்.

சீல மின்றி நோன்பின்றிச் செறிவே யின்றி அறிவின்றித்
தோலின் பாவைக் கூத்தாட்டாய்ச் சுழன்று விழுந்து கிடப்பேனை
மாலுங் காட்டி வழிகாட்டி வாரா உலக நெறியேறக்
கோலங் காட்டி ஆண்டானைக் கொடியேன் என்றோ கூடுவதே.

திருச்சிற்றம்பலம்.

— மாணிக்கவாசகர்

கொழும்பு விவேகாநந்த சபை வெளியீடு

விலை : ரூ. 18 00

முதலாம் பதிப்பு ... 1973
இரண்டாம் பதிப்பு ... 1975
திருத்திய மூன்றும் பதிப்பு ... 1978

இந்நூலிலுள்ள ''பொருளடக்கம்'' என்ற பகுதியிலுள்ள 5 ஆம், 6 ஆம், 11 ஆம், 12 ஆம் பகுதிகளைத் தவிர்ந்த ஏனைய பகுதிகள் யாவும், சைவத்தின் உயர்வுக்காகத் தன் வாழ்வை ஒப்பு வித்து வாழ்ந்து வரும் எமது சபைப் பரீட்சைச் செயலாளர் திரு. சி. கந்தசாமி அவர்களினால் எழுதப்பட்டவை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

திருமகள் அழுத்தகம், சுன்னாகம்.

உ
சிவமயம்

# பதிப்புரை

''சைவநன் னெறிதான் தழைத் தோங்குக
தெய்வ வெண்டிரு நீறு சிறக்கவே''

**க**டவுட் கொள்கை சமயம் எனப்படும். அச்சமய உண்மைகளைத் தேர்ந்து-தெளிந்து, தெளிந்தபடி ஒழுகுவதே-வாழ்வதே கற்றதனாய பயனாகும். உய்வினை உறுதியாகத் தரவல்ல தெய்வக் கொள்கைகளைக் கல்லாது, ஏனையவற்றைக் கற்பவர் வாழ்வில் பூரணத்துவம் பெற்றுவிடமுடியாது. இதனைக் கருத்திற்கொண்டே பல்லாற்றானும் அல்லுமட்டுஞ் சைவ பரிபாலனத்தில் பேரூக்கஞ் செலுத்திவரும் **கொழும்பு விவேகாநந்த சபை**, தமிழர் தொன்னெறியாகிய சைவசமயக் கல்வி - அறிவு – ஒழுக்கம் – ஆசாரம் போன்றவற்றை மக்கள் நன்கு கற்றுத் தெளிந்து, தெளிந்த நிலையில் நன்மைபெற வாழ்ந்து, ஈற்றில் பெருநிலையில் அடங்கிவாழும் பேரின்பப் பேற்றிற்கு எம் சமயத்தவரை ஆட்படுத்தவேண்டும் என்ற நோக்கோடு, கடந்த 48 ஆண்டுகளாகச் சிறார்களுக்கென அகில இலங்கை அடிப்படையில் ஆண்டுதோறுஞ் சைவ சமய பாடப் பரீட்சை ஒன்றை நடத்தி வருகின்றது. அப் பரீட்சையின் பொருட்டுச் சபையாரினால் எழுதப்பட்டு, பாடசாலைகளில் சைவ சமயம் கற்பிப்பதற்குப் பாடநூல்களாகப் பயன் படுத்துவதற்கு ஏற்றவை எனக் கல்விப் பகுதியினரின் அங்கீகாரம் பெற்றவையே சபை வெளியீடுகளான **சைவபோதினிகள்**. கல்விப்பகுதியினரின் பாடத்திட்டத்திற்கு அமையவே சபையாரின் பரீட்சை இப்போது நடந்து வருவதனால், அப்பாடத் திட்டங்களுக்கு அமையவே சகல வகுப்புக்களுக்குமுரிய சைவபோதினிகள் வெளியிடப்படுகின்றன. **2 ஆம்** வகுப்பு முதல் 8 ஆம் வகுப்பு வரை படிமுறையாக-விளக்கமுறையில் அடக்க விலைக்கு இந்நூல்களை வெளியிட்டுவரும் அறத்தைக் கடைப்பிடித்துவரும் சபையாரை, க. பொ. த. (சாதாரண) வகுப்பிற்குரிய சைவ சமய பாட நூல் ஒன்றையும் வெளியிடும்படி பல காலமாகச் சைவச் சான்றோர் வேண்டுகோள் விடுத்து வந்தனர். 1974இல் க. பொ. த. (சாதாரண) வகுப்பின் பாடத்திட்டம் மாற்றமடைந்தபோது, இவ்வேண்டுகோள் மேலும் வலுப்பெற்றது. சபையாரும் இப் பாடத்திட்டத்திற்கு இசைவான நூல் எழுத உறுதி கொண்டனர். உறுதியை நிறைவு செய்யத் திருவருள் துணையாக முன் வந்தனர் சபையின் பெரும்புலவர் குழுவைச் சேர்ந்த **பண்டிதர் சு. சுப்பிரமணியம், சித்தாந்த பண்டிதர் இ. செல்லத்துரை, புலவர் க. கந்தசாமி ஆகியோர்**. அந்நூல் சிறந்த கருவூலங்களுடன் வெளிவர

வேண்டுமென்ற பேரவாவுடன் அயராது உழைத்தவர் எமது சபைப் பரீட்சைச் செயலாளர் திரு. சி. கந்தசாமி ஆவார். அப் புதிய பாடத் திட்டத்திற்கமைய அவரின் அரும் முயற்சியினுல் சேகரித்து ஒன்று திரட்டித் தொகுக்கப்பட்ட கட்டுரைகள் பல அந்நூலின் முதற் பகுதியை அணி செய்தன. சைவ உலகம் அலட்சியப் போக்கில் அறியாது இருக்கும் பல உண்மை விடயங்கள் அத்தொகுப்பு நூலில் இடம் பெற்றிருந்தன. படிக்கும் மாணவர்கள் மாத்திரமன்றி, வளர்ந்தோரும், பலவித ஆராய்ச்சியாளருங்கூடப் படித்துப் பயன் பெறக் கூடியதாக "சைவசமயம்" என்னும் அந்நூல் ஆக்கம்பெற்றிருந்தது. இவ்வாறு கருத்திலும், தரத்திலும், விளக்க நுட்பதிட்பச் செறிவிலும் உயர்ந்த நூல்ஒன்றைப் பாடத்திட்டத்திற்கு அமைய ஒழுங்காக எழுதி ஒளிவிளக்குச் சுடராக்கிய மேற்கூறிய சைவப் பெரியோர் சபையாரின் நன்றிக்கும், சைவ உலகின் போற்றலுக்கும் உரியவராவர்.

இதன் அருமைப்பாட்டை நயந்து நூற்றுக்கணக்கான பெரியோர் பலவிதமான வாழ்த்து மடல்களை எழுதியிருந்தனர். அவற்றுள் குன்றக்குடி திருவண்ணுமலை ஆதீனத்தில் குருமூர்த்தியாக இப்பொழுது வீற்றிருந்து அருளாட்சி இயற்றி வரும் தவத்திரு. குன்றக்குடி அடிகளார் கூறியவை: "சைவசமயத்தைப்பற்றிச் சாதாரணமானவர்களும் அறிந்து கொள்ளக்கூடிய அடிப்படைச் செய்திகளும், சிறப்புச்செய்திகளும் நூலில் எடுத்துக் கூறப்பெற்றுள்ளன, காலத்தின் தேவையை அறிந்த அரிய முயற்சி; காலத்தினை வென்று விளங்கும் இம்முயற்சி மேலும் முனைப்புடன் நம்மைத் தொண்டில் ஈடுபட ஆற்றுப்படுத்துகின்றது" என்பதாகும்.

இவ்வாறு படிப்பவர் சிந்தை இன்புற்றுப் பல பாராட்டுக்களையும் பெற்ற இந்நூலினை, 1975முதல் 1976வரை நடைபெற்றுவந்த தேசிய கல்விப் பொதுத் தராதரப் பரீட்சைப் பாடத்திட்டத்திற்கு அமையத் திருத்தி எழுதவேண்டிய பொறுப்புச் சபையார்க்கு இருந்தது. அப் பொறுப்பினை நிறைந்த திருவுள்ளத்தோடு ஏற்று, குறுகிய காலத்தில் பல்சுவை நயங்களும் ஒருங்கிணைய நிறைவு செய்து தந்துதவியவர் சைவத்தின் உயர்வுக்காக அயராது துடிப்புடன் உழைத்து வரும் எமது பரீட்சைச் செயலாளராகிய திரு. சி. கந்தசாமி ஆவார்.

இரண்டாம் பதிப்பு நூலினையுஞ் சற்று விரிவு செய்து 1978ஆம் ஆண்டுக் க. பொ. த. (சாதாரண) பரீட்சைப் பாடத் திட்டத்திற்கு இணங்க மூன்றும் பதிப்பு நூலாகவே இந்நூல் வெளிவருகின்றது. முன்னைய இரு பதிப்புக்களிலும் காணப்பெருச் சில அருமையான பகுதிகள் இப்பகுதியில் இடம் பெற்றுள்ளன. "ஈழத்தில் சைவம்" என்ற பகுதியில் அறிவு முனைவர் எவருமே இற்றைவரை கண்டிராத—தொட்டிராத — எழுதாத விடயங்கள் பலவற்றை வரலாற்று முறையில் குறிப்பாகக் கூறிக்கொண்டு செல்வது இந்நூலுக்கு அழகு



செய்வதுடன், ஆராய்ச்சியாளர்களையும் விழிக்கச் செய்கின்றது. சைவஉலகம் மெச்ச இவற்றை நல்ல முறையில் எழுதியுதவியதுடன், நூலின் பதிப்பு வேலைகள் முழுவதையும் பார்வையிட்டுதவியவரும் மேலே யாம் கூறிய எமது சபைப் பரீட்சைச் செயலாளரேயாம். இவருக்குள்ள நல்ல சமயநூற் பயிற்சி, நினைவாற்றல், நுண்ணிய ஆராய்ச்சித்திறன், சிறந்த சொல்லாட்சி-எழுத்து வன்மை போன்றவை சபையாருக்கு நல்ல தரமான நூலையும், சைவ உலகிற்கு நல்ல ஒரு சைவக் களஞ்சியத்தையும் தந்துள்ளன. நலமெதுவும் இன்றிச் சைவத்திற்கும் — சமுதாயத்திற்கும் — சபைக்கும் இவராற்றி வரும் பணிகள் மேலும் மேலும் சிறந்து வளர்ந்தோங்கி நன்மை பெருக வேண்டுமென வாழ்த்தி, அதற்காகவேண்டிய சகல நிறைவுகளை யும் — வலிமையையும் இறைவன் அவருக்கு ஈந்தருளவேண்டுமெனப் பிரார்த்திக்கின்ருேம்.

முந்திய நூல்களில் இடம்பெருத திருக்கோவில்களின் வரலாறுகளும், சைவசமயத் திருவுருவ வழிபாடு பற்றிய அரும்பொருள் மெய் விளக்கங்களும் காலத்திற்குகந்த பான்மையில் தெள்ளு தமிழ் நடையில் இடம்பெற்றுள்ளமை இங்கு குறிப்பிடத்தக்க இன்னெரு சிறப்பு அம்சமாகும்.

இன்னும் இப்புதிய பதிப்பில் யாதேனும் பிழைகள், குறைகள் இருக்கக்கண்டால், அவற்றைச் சபையார்க்குத் தெரிவிக்கும்படி அன்புடன் கேட்டுக்கொள்ளுகின்ருேம்.

ஆண்டுதோறும் சபையார் வெளியீடுகளான சைவபோதினிகளுக்கு மாணவர்கள் காட்டி வருமளவு மதிப்பை, சபையார் அடக்க விலை வெளியீடான இந்நூலுக்கும் அளிப்பர் என எதிர்பார்க்கிருேம்.

சீரிய முறையில் சைவக் களஞ்சியமாகத் திரட்டி வழங்கப்படும் இந் நூற்ருெகுதியில உள்ள பாடங்களை ஒழுங்காகக் கற்கும் மாணவருலகம் பெருநன்மை பெறுவர் என்பதில் ஐயமில்லை.

இந்நூல் ஒப்பசெப்பமாக விரைவில் அச்சாகி வருவதில் கண்ணும் கருத்தும் உடையவர்களாக இருந்து முழு நூலாக்கித் தந்தமைக்கு, அச்சகத் தொழிலில் பல்லாண்டு காலம் பெரும் புகழுடன் நல்ல தேர்ச்சி பெற்று விளங்கும் சுன்னுகம், திருமகள் அழுத்தக ஊழியர் யாவர்க்கும் எமது நெஞ்சம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்ருேம்.

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு."

**கொழும்பு விவேகாநந்த சபையார்**

காலயுக்தி ஆவணி கரு.
30-8-1978.

உ

# பொருளடக்கம்


பக்கம்

1. சைவசமய வரலாறு
 (அ) சைவசமயத்தின் தொன்மை ... 1
 (ஆ) சிந்துவெளி நாகரிக காலச் சிவ வழிபாடு 7
 (இ) சிவாகமங்களின் தோற்றமும் வழிபாடும் 10
 (ஈ) வேதங்கள் கூறும் சிவ வழிபாடு ... 13
2. பன்னிரு திருமுறைகள் ... 17
3. சைவ சித்தாந்தம்
 (அ) சைவசித்தாந்த சாத்திரங்கள் ... 26
 (ஆ) மெய்கண்டசாத்திரநூல் விளக்கம் ... 29
4. சைவ சாதனைகள்
 (அ) திருநீறு (விபூதி) ... ... 34
 (ஆ) உருத்திராக்கம் ... ... 36
 (இ) சமய தீட்சை ... ... 38
 (ஈ) குருலிங்க சங்கம வழிபாடு ... ... 40
 (உ) சைவ நாற்பாதங்கள் ... ... 43
 (ஊ) விரதங்கள் ... ... 47
5. சமயாசாரியர் வரலாறுகள்
 (அ) திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் ... 55
 (ஆ) திருநாவுக்கரசு நாயனுர் ... 59
 (இ) சுந்தரமூர்த்தி நாயனுர் ... 63
 (ஈ) மாணிக்கவாசக சுவாமிகள் ... 67
6. சந்தானுசாரியர் வரலாறுகள்
 (அ) மெய்கண்டதேவர் ... ... 71
 (ஆ) அருணந்தி சிவாசாரியர் ... ... 73
 (இ) மறைஞான சம்பந்தர் ... ... 74
 (ஈ) உமாபதி சிவாசாரியர் ... ... 74
7. சமயாசாரியர் — சந்தானுசாரியர் அட்டவணை 78
8. திருக்கோவில் விளக்கம்
 வழிபாட்டுமுறை ... ... 83
9. திருவுருவ வழிபாடு—பொது அறிவு ... 88
 (1) சிவன் ... ... 94
 (2) நடேசர் ... ... 98





பக்கம்

 (3) சந்திரசேகரர் ... ... 99
 (4) சோமாஸ்கந்தர் ... ... 100
 (5) தட்சணுமூர்த்தி ... ... 101
 (6) பிட்சாடனர் ... ... 101
 (7) உமாதேவியார் ... ... 101
 (8) விநாயகர் ... ... 104
 (9) வைரவக்கடவுள் ... ... 108
 (10) முருகக்கடவுள் ... ... 111
10. சைவ சித்தாந்த தத்துவம்
 (அ) பதி ... ... ... 117
 (ஆ) பசு ... ... ... 119
 (இ) பாசம் ... ... ... 120
11. திருவருட் பயன் ... ... 125
12. திருவருட் பாடல்கள் ... ... 152
13. ஈழத்தில் சைவம் ... ... 174
 *ஈழத்துப் புராதன சிவாலயங்கள்
 1. திருக்கேதீச்சரம் ... ... 225
 2. திருக்கோணேசுவரம் ... ... 234
 3. நகுலேசுவரம் ... ... 236
 4. முன்னேசுவரம் ... ... 238
 5. கதிர்காமம் ... ... 239
 6. மாவிட்டபுரம் கந்தசுவாமி கோவில் ... 241
 7. மண்டூர் கந்தசுவாமி கோவில் ... 254
 8. நல்லூர் கந்தசுவாமி கோவில் ... 257
 9. நயினுதீவு நாகபூஷணியம்மன் கோவில் ... 261
14. ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர்
 I. ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் சைவப்பணிகள் 267
 II. நாவலர் சமூகப் பணிகள் ... 275
 III. நாவலர் திருக்கோயிற் பணிகள் ... 279
 IV. நாவலர் கல்விப்பணிகள் ... 283
 *பின்னிணைப்பு — கதிர்காமம் ... 289
 *மாதிரிப் பயிற்சி வினுக்கள் ... 293

உ
சிவமயம்

# சைவ சமயம்

## 1. சைவ சமய வரலாறு

### (அ) சைவ சமயத்தின் தொன்மை

உலகத்திலே பல சமயங்கள் உள்ளன. அவற்றுள், ஈழத்தில் வழங்கும் சமயங்கள் நான்கு. அவை சைவம், பௌத்தம், இஸ்லாம், கிறீஸ்தவம் என்பன. இவற்றுள், பௌத்த சமயம் 2518 வருடங்களுக்கு முன் கௌதம புத்தராலும், இஸ்லாம் சமயம் 1394 வருடங்களுக்கு முன் முகமது நபியாலும், கிறிஸ்து சமயம் 1975 வருடங்களுக்கு முன் கிறிஸ்துவினாலும் தோற்றுவிக்கப்பட்டன. இவ்வாறு ஒருவராலே தோற்றுவிக்கப்பட்ட சமயத்துக்கு மாத்திரம் தொடக்க காலம் கூறலாம். சைவ சமயத்துக்குத் தொடக்க காலம் கூறுவதானால், அது யாரோ ஒருவரால் ஏதோ ஒரு காலத்திலே தோற்றுவிக்கப்பட்டிருத்தல் வேண்டும். அங்ஙனம் அது எவராலேனும் எக்காலத்திலேனும் தோற்றுவிக்கப்படாமையால், அதற்குத் தொடக்ககாலம் இல்லையாம்.

சிவபெருமான் என்றும் உள்ளவர், உயிர்களும் என்றும் உள்ளவை, என்றும் உள்ள சிவபெருமானை என்றும் உள்ள உயிர்கள் அடைந்து, பேரின்பம் அநுபவிப்பதற்கான வழியும் என்றும் உள்ளது. அந்த வழி சமயம். அதுதான் சிவ சமயம் – சிவத்தை அடைவிக்கும் சமயம்; சைவ சமயம். ஆதலால், சைவ சமயம் என்றும் உள்ளது; அநாதியானது; எவராலும் தோற்றுவிக்கப்படாதது என்பது தெளிவாம்.

சிவபெருமான் உயிர்கள் இளைப்பாறும் பொருட்டுச் செய்தருளும் சர்வசங்காரத்தில் எல்லாத் தநு, கரண, புவன, போகங்களும் அழியும்; மாயையிலே ஒடுங்கும். உயிர்கள் இளைப்பாறிய பின், ஆணவ மல நீக்கத்தின் பொருட்டுச் சிவனருளால் அவை மீளவும் தோன்றும். இந்தப் புவனமுந் தோன்றும்; உயிர்களும் தநு கரணங்கள் பெற்றுத் தோன்றும்; அவ்வுயிர்கள் போகங்களை அநுபவிக்கும்போது முன் செய்த தவ விசேடத்தால் நாளடைவிலே அவற்றுக்குச் சமய உணர்வுந் தோன்றும். சர்வ சங்கார காலத்துக்கு முன் இருந்த அந்தச் சைவசமயம் மீளவும் இவ்வாறு தோன்றுதலால், அது இடையிலே வந்தது என்றும், தொடக்கமுடையது என்றேனும் சொல்லுவது பொருந்தாது.

என்றும் உள்ளதான சைவ சமயத்தை, இன்றுள்ள இப் பூமியிலே தோன்றிய ஆன்மாக்கள் அறிந்தமைக்கும், அதனை அபிவிருத்தி செய்து கொண்டமைக்கும் மாத்திரம் ஒருவாறு கால எல்லை கூறலாம்.

மக்கள் அறிவு வளர்ச்சியின்றி, உண்டிருந்து வாழ்வதற்காக வேட்டையாடியும், நாடோடிகளாய் அலைந்து சீவித்த காலத்திலேயும், தமக்கு மேலான ஒரு கடவுள் உண்டென்பதைப் பெரும்பாலும் உணரவில்லை. காலஞ் செல்லச் செல்ல அவர்கள் ஓரிடத்திலே நிலையாய் இருந்து பயிரிடுதல் முதலான தொழில்களை மேற்கொண்டு, பல நாளுக்கும் போதுமான உணவுப் பொருள்களைச் சேமித்து வைத்து வாழத் தலைப்பட்டனர். அப்பொழுது பிற விடயங்கள் பற்றிச் சிந்திப்பதற்கு அவர்களுக்குப் போதிய நேரம் கிடைத்தது. அந்நேரத்திலே அவர்கள் தமது முயற்சிகளெல்லாம் தாம் எண்ணியபடி எல்லாக் காலங்களிலும் நடைபெறுமையை நினைந்தும், எதிர்பாராத இன்பதுன்பங்கள் தோன்றுவதை நினைந்தும், நியதி தவறாமலே சந்திர சூரியர் இயங்குதல், மழை பெய்தல், காற்று வீசுதல் முதலியவற்றை நினைந்தும், இயற்கைப் பொருள்களின் அமைப்பு விநோதங்களை நினைந்தும், அவற்றுக்கெல்லாம் மூலகாரணமாய் ஏதோ ஒரு பொருள் இருத்தல் வேண்டும் என்றும் உணர்ந்தார்கள். அந்தப் பொருளே பல இன மக்களாலும், பல பெயரிட்டுக் கூறப்படும் கடவுள் ஆகும்.

இவ்வாறு 'கடவுள்' என்றதோர் எண்ணமும், அக்கடவுள் தமக்கு எவ்வகையாலும் நன்மையே செய்யும் 'சிவம்' ஆவர் என்ற தெளிவும் உண்டான காலமே, இப்பூமியிற் சைவ சமயத்தின் தொடக்க காலம் எனலாம். அதன்பின் மக்கள் கடவுளின் செயல்கள் இயல்புகள் பற்றி ஆராய்ந்து, சைவ சமய உண்மைகளை அறிந்து, நல்லொழுக்கங்களைக் கடைப்பிடித்துச் சைவ வாழ்வு வாழத் தலைப்பட்டனர்.

இம் மக்களுள் ஒரு பகுதியினர் இந்தியாவிலுள்ள சிந்துவெளிப் பிரதேசத்திலே மிகப் பழைய காலத்தில் வாழ்ந்தனர் எனவும், அவர்கள் சைவ சமயிகளா யிருந்தனர் எனவும், அப் பிரதேசத்திலுள்ள "**மொஹஞ்சதாரோ ஹரப்பா**" என்னுமிடங்களில் அகழ்வாராய்ச்சி செய்தோர் கூறுவர்.

சைவ சமயம் வரலாற்றுக்கு முந்திய சமயம். உலகில் முதற் தோன்றிய சமயம் இதுவேயாம். புராதன காலத்தில் இச் சமயம் உலகில் பல பகுதிகளிலும் விளங்கியுள்ளது. இதன் தொன்மைக்குப் பழம்பெரும் நூல்கள், வழிபாட்டு முறைகள், வரலாற்றுக் குறிப்புகள், தொல்பொருள்கள், அகழ்வாராய்ச்சிகள் என்பன சான்றாக உள்ளன. சைவம் சிவ சம்பந்தமானது. சிவம்–கடவுள். சமயம்–நெறி.



வேதாகமங்களும், புராணங்களும் சைவத்தின் தொன்மைக்குச் சான்றாவன. வேதங்களின் காலம் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் என வரலாற்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். **இவ் வேதங்களிலும் பழைய வேதங்கள் இருந்தன எனத் தொல்காப்பியப் பாயிர உரையில் நச்சினார்க்கினியர் எழுதியுள்ளார். வேதங்களையும், ஆகமங்களையும் சிவபிரான் அருளினார் எனச் சமய நூல்கள் கூறுகின்றன.**

சிவபுராணங்கள் உலகத் தோற்றங்களையும், பழைய வரலாறுகளையும் கூறுவன. உலகத் தோற்றம் பற்றி எமது புராணங்கள் கூறும் காலக் கணிப்பும், நிலநூலாராய்ச்சியாளரின் காலக் கணிப்பும் ஒன்றோடொன்று ஒத்து இருக்கின்றன. பழைய காலத்தில் மதுரையில் நிகழ்ந்தனவாகத் திருவிளையாடற் புராணம் கூறும் செய்திகள், வரலாற்றினோடு தொடர்புள்ளன. கடல்கொண்ட தென்நிலப் பரப்பில் வாழ்ந்த சூரன் முதலியோரும், ஏனைய பகுதிகளில் வாழ்ந்தோரும் சிவ வழிபாட்டினர் எனக் கந்தபுராணம் கூறும்.

இராவணனும், வாலியும் நாள்தோறும் சிவ வழிபாடு செய்தனர் எனவும், இராவணனைக் கொன்றபின் இராமர் சிவவழிபாடு செய்தார் எனவும், பழைய இதிகாசமாகிய இராமாயணம் கூறுகின்றது. இவர்கள் வழிபட்ட தலங்கள் முறையே **திருக்கோணேசுவரம், குரங்காடுதுறை, திருஇராமேச்சுரம்** என்பனவாகும். அருச்சுனன் தலயாத்திரை செய்து சிவ வழிபாடு செய்ததையும், அவன் தவமிருந்து சிவபிரானிடம் பாசுபதம் என்னும் படைக்கலத்தைப் பெற்றதையும், கண்ணனோடு திருக்கைலை சென்று வழிபட்டதையும் இன்னோர் இதிகாசமான பாரதம் கூறுகிறது. (இராமாயண பாரத காலங்கள் முறையே கி. மு. 3000, கி. மு. 1500 என ஆராய்ச்சி அறிஞர் கூறுவர்).

பண்டைய சித்தர்களும், முனிவர்களும் சிவ வழிபாட்டினராவர். ஆதிசோழ அரசனான **முசுகுந்தன்** பல இடங்களில் சிவலிங்கங்களைத் தாபித்தான் என வரலாறு கூறுகிறது. **திருக்கைலை, காசி, காளத்தி, காஞ்சி, சிதம்பரம், திருவண்ணாமலை, மதுரை** ஆகியவை மிகப் புராதனமான சிவத் தலங்கள் என வரலாறுகள் தெரிவிக்கின்றன.

பழைய சங்க நூல்களில் சிவனைப் பற்றிக் கூறுஞ் செய்திகள் சைவத்தின் தொன்மைக்குச் சான்றாக இருக்கின்றன. கடல் கொண்ட தென்னாட்டில் இருந்த **தலைச்சங்கத்தில் சிவபிரான்—திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள்**–புலவராக இருந்து தமிழாய்ந்தார் எனக் கடைச் சங்க காலத்து இறையனார் களவியலுரை தெரிவிக்கின்றது. சங்ககால மன்னர்களும், மக்களும் சிவ வழிபாட்டினர் எனச் சங்கநூற் குறிப்புக்கள் உணர்த்துகின்றன. "**முது முதல்வன்**", "**ஈர்ஞ்சடை அந்தணன்**", "**காரி

யுண்டிக் கடவுள் ” “ஆலமர் கடவுள்”, நீரும் நிலனும், தீயும் வளியுமாக விசும்பொடு ஐந்துடன் இயற்றிய மழுவாள் நெடியோன், நீல மேனி வாலிழை பாகத்து ஒருவன் இருதாள் நிழற்கீழ் மூவகை உலகும் முகிழ்ந்தன முறையே, இமையா முக்கண் மூவெயில் முருகிய முரண்மிகு செல்வன், ஆனேற்றுக் கொடியோன், சூலம் பிடித்த காலக் கடவுள், தொன் றொழுகு மரபில் தம் இயல்பு வழாது அருந்திறற் கடவுள் பழிச்சிய பின்றை, நீல மணி மிடற்றொருவன் போல மன்னுக பெரும, பணியியரத்தை நின் குடையே முனிவர் முக்கட் செல்வர் கோயில் நகர் வலஞ் செயற்கே. பிறவா யாக்கைப் பெரியோன், முக்கட் பகவன் அடி தொழார்க்கு இன்னா ” எனச் சிவபிரானின் பெயர்களையும் முதன்மையையும் சங்க நூல்கள் தெரிவிக்கின்றன.

மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்த திருமூலரும், அவர் பின் வந்த சமய குரவர்களும் சைவத்தின் தொன்மையைத் தெளிவாக்கியுள் ளனர். “முன்னைப் பழம்பொருட்கும் – முன்னைப் பழம் பொருளே”, “எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி” என மாணிக்கவாசக சுவாமிகளும், “அப்பாலும் அடி சார்ந்தார் அடியார்க்கும் அடியேன்” எனச் சுந்தரமூர்த்தி நாயனாரும், “யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வ மாகி ஆங்கே மாதொரு பாகனார் தாம் வருவார்” என அருணந்தி சிவாசாரியாரும், “பல பல மதமு மீற்றி னொருவழிப்படலும் போலும்” என சிவஞான சுவாமிகளும், “சைவசமயமே சமயம்” எனத் தாயுமானவரும் அருளிய வாக்குக்கள் எமக்குச் சான்று பகர்கின்றன.

கடவுட் திருவுருவங்கள், வழிபாட்டிடங்கள் ஆகியவைகளின் அமைப்புகளின்படி சிவ வழிபாடு புதிய கற்காலத்திற்கு முன்பே உரு வாகியது என அறிஞர் கூறுவர். பழைய கற்காலத்தில் காடுகளில் வாழ்ந்த மக்கள் இயற்கையின் தாக்கங்களினால் கடவுள் ஒருவர் உளர் என உணர்ந்து, தனிக்கல்லை மரத்தின் கீழ் வைத்து வழிபட் டார்கள். புதிய கற்காலத்தில் இத் தனிக்கல் சதுர பீட அமைப்பைப் பெற்றுச் சிவலிங்கமாகியது. அதே காலத்தில் கல்லிலும் மரத்திலும் திருவுருவம் அமைக்கும் முறை தோன்றியது. இத் திருவுருவத்திற்குச் சூலம் – மழு என்பன ஆயுதங்களாகவும், பாம்பு அணியாகவும், புலி யானை ஆயவற்றின் தோல்கள் உடையாகவும், மரங்கள் தல விருட் சங்களாகவும், காடுகளின் பெயர்களே தலங்களின் பெயர்களாகவும் அமைந்தமை இதற்குத் தக்க சான்றுகளாகும். **கடம்பவனம் (மதுரை), தில்லைவனம் (சிதம்பரம்), திருமறைக்காடு, திருவெண்காடு, திருவாலங் காடு** என்னும் தலப் பெயர்கள் இதற்குச் சான்றாக உள்ளன. மேலும், சைவ வழிபாடு பல படிகளைக் கொண்டிருப்பதும் அதன் தொன் மைக்குச் சான்றாகும்.



சிந்து வெளியின் அகழ்வாராய்ச்சியின்போது கிடைத்த சிவலிங்கங் களும், அத்தோடு தொடர்புபட்ட ஏனைய தொல் பொருட்களும், சிவ வழிபாடு ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முந்தியது என்பதை உலகுக் குத் தெளிவாக்குகின்றன. பரதகண்டத்திற்கு அப்பால் வரலாற் றிற்கு முந்திய காலத்தில் உலகின் பல பகுதிகளிலும் சிவ வழிபாடு நிலவிய தென்பதற்குப் போதிய சான்றுகள் பல கிடைத்துள்ளன.

ஆஸ்திரேலியாவிலும், நியூசிலாந்திலும் உள்ள ஆதி மக்களின் மொழிகளில் “இலிங்கம்” என்னும் சொல் காணப்படுகிறது. நியூ கினியாவில் காணப்படும் கிரியை முறைகள் சிவ வழிபாட்டின் தேய்வு கள் ஆகும். சுமாத்திராவிலும், ஜாவாவிலும், போர்னியோவிலும் பழைய சிவ வழிபாட்டிடங்களின் சிதைவுகள் காணப்படுகின்றன. பாலித்தீவில் சிவ வழிபாடும், கோவில்களும் இன்றும் உள்ளன.

சீயத்திலும், கம்போடியாவிலும் பழைய சிவ வழிபாட்டு உரு வங்கள் கிடைத்திருக்கின்றன. சீயத்தில் பழைய ஆலயம் இருந்த ஓர் இடத்தில் மத வேறுபாடின்றி இன்றும் பொங்கல் பூசை செய்து வழிபடுகின்றனர்.

“**யப்பானிய சின்டோயிசம்**” என்னும் மதத்தில் சிவலிங்க வழிபாடு முதன்மையானது. பிற்காலத்தில் அவை நீக்கப்பட்டாலும், சில இடங்களில் இன்றும் இவை இருக்கின்றன, இவர்கள் குறிப்பிடும் “**சிவோ**” என்பது சிவனேயாம். திபெத் சீனாவினூடாகவே இவ்வழி பாடு யப்பானுக்குப் பரவியிருக்கலாம் என அறிஞர் கருதுகின்றனர்.

பாபிலோனில் நடந்த அகழ்வாராய்ச்சியின்போது, ஆறாயிரம் ஆண்டுப் பழைமை வாய்ந்த சிவலிங்கமும் ஆலயத்தின் சிதைவுகளும் கிடைத்தன. இச் சிவ உருவம் மழுவுடனும், இருபுறமும் தலை உள்ள சூலத்துடனும் இடபத்தின்மீது காணப்படுகிறது. இங்கு கண்டெடுத்த களிமண் பட்டயத்தில் “சிவன்” என்னும் இடப்பெயர் காணப் படுகிறது. இவர்களின் **மாதம் ஒன்றிற்கும் “சிவன்” எனப் பெயர் உண்டு.** சுமேரியரின் கடவுளுக்கு “**எல்**” எனப் பெயர். தமிழில் “எல்” என்பது சூரியனைக் குறிக்கின்றது.

சீரியாவில் சிவன் சிலையும், சிவ உருவம் பொறித்த வெண்கலத் தட்டும் கிடைத்துள்ளன. இச் சிவ உருவம் பாபிலோனியச் சிவ உருவம் போன்றது. பழைய ஏற்பாடுகள் கூறும் வழிபாடுகள் சைவத்துக்கு ஒத்தனவாக உள்ளன. சின்னாசியாவில் சிவன் – சக்தி – கோயில் என்பவைகளின் உருவங்கள் பொறித்த நாணயம் ஒன்று கிடைத்துளது.

எகிப்திய சமாதிச் சுவர்களில் சிவலிங்க உருவங்கள் காணப்படுகின்றன. லிபியப் பாலைவனத்தில் உள்ள பசுந்தரை ஒன்றிற்குப் பெயர் **சிவன்**. இங்கு பழைய ஆலயமும் வழிபாடும் இன்றும் உண்டு. **கிறீட்தீவில்** ''சிவன்'' என்னும் இடம் இருக்கிறது. இங்கு சிவன், சக்தி உருவங்களும், இவ்வுருவங்களுள்ள நாணயங்களும், சிவலிங்கங்களும் கிடைத்துள்ளன. இச் சிவ உருவமும் பாபிலோனியச் சிவ உருவம் போன்றதேயாம். இங்கு சிவ ஆலயங்கள் பண்டை நாட்களில் இருந்திருக்கின்றன என்பதை மேற்கூறிய விபரங்கள் தெளிவுபடுத்துகின்றன.

கிரேக்கு நாட்டில் சிவ வழிபாட்டுத் தொடர்பான கிரியைகள் ''**விசா**'' என்னும் இடத்தில் இன்றும் நடைபெற்று வருகின்றது. இவர்கள் இலிங்கங்களைப் பொது இடத்தில் வைத்து எண்ணெய் இட்டு வழிபட்டனர் என கி. மு. 4ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த கிரேக்க அறிஞரான **தியோபிரேசியஸ்** கூறியுள்ளார்.

உரோம நாட்டிலும் சிவலிங்கங்கள் கிடைத்துள்ளன. உரோமர் சிவலிங்க வழிபாட்டை மேற்கு ஐரோப்பாவில் பரப்பியுள்ளனர் என்பதற்குப் பல ஆதாரங்கள் உண்டு.

அமெரிக்காவுக்கு ஐரோப்பியர் முதலில் சென்றபோது **மெக்சிக்கோ, பெருகெயிற்றி** ஆகிய நாடுகளிலுள்ளவர்கள் சிவ வழிபாடு உள்ளவர்களாக இருந்ததைக் கண்டனர். அங்கு பல இடங்களில் சிவ்லிங்கங்கள் கிடைத்துள்ளன. கலிபோர்னியாவில் **கொலரடோர் நதிக்கு** அயலில் உள்ள **சிவன்** என்னும் பழைய பீடபூமியிலுள்ள மலையில், பழைய ஆலயம் இருக்கிறது. இது பத்தாயிரம் ஆண்டுப் பழைமையானது எனத் தொல்பொருளியலார் கூறுகின்றனர். சிவ வழிபாடு பல நாடுகளில் பரவியிருந்தமையைத் தெளிவுபடுத்துவதில் **ஆதர் லில்லி, டெயிலர், பல்பூர், கில்பேர்ட், சிலாற்றர், கெலொனல் டொட்வடல், ஸ்ரீபன்சன், கிரையர்சன், மூகர்சி** ஆகிய அறிஞர்கள் உதவியுள்ளனர். இவ்வாறு பண்டு உலகின் பல நாடுகளிலும் சைவம் பரவியிருந்தமையை இவர்கள் எடுத்துக்காட்டுவதுடன், அதனது தொன்மை பற்றியும்உலகிற்கு உணர்த்தியுள்ளனர்.

சிவன் வழிபாடு மேற்காசியா, கிறீஸ், உரோம் முதலிய நாடுகளில் மிகப் பழைய காலத்தில் பரவியிருந்தது. பிற்காலத்து மக்கள் அதன் வரலாற்றை மறந்து போனமையின், தம் தேசத்துக்கும், மனப்பான்மைக்கும் பொருந்தாத பழங்கதைகளைப் புனைந்து விட்டனர் என அறிஞர் **ஆதர் லில்லி** கூறுவார்.



சிவலிங்க வணக்கம் உலகில் எல்லா நாடுகளிலும் ஒருகாற் பரவியிருந்தது என்பதற்குப் போதிய சான்றுகள் கிடைத்துள்ளன. சீனா, யப்பான், பசுபிக் கடற் தீவுகள் முதலிய இடங்களில் இவ் வழிபாடு இன்னும் முற்றிலும் மறைந்துவிடவில்லை என, **மூகர்சி** என்பவர் கூறுகின்றார்.

இங்கு நாம் அறிந்தவற்றால் சைவ சமயம் எவராலும் தோற்றுவிக்கப்படாதது என்பதும், அது சிவபெருமானைப் போல அனாதியானது என்பதும், சர்வசங்கார காலத்தின் பின் உலகம் மீளப் படைக்கப்படும்போது ஆன்மாக்களது அறிவிலே இறைவனருளால் அது தோன்றுமென்பதும், அவ்வாறு தோன்றிய சைவ சமய உணர்வையே சிந்துவெளிப் பழங்குடி மக்களும், சங்ககால மக்களும் பெற்றிருந்தார்களென்பதும், அவர்கள் சிவபெருமானின் அருள் மூர்த்தங்கள் பலவற்றை வழிபட்டார்களென்பதும் தெளிவாம்.

குறிப்பு: **''இந்து மதம்'' என்ற சொல் இன்று இந்திய நாட்டிலுள்ள வெவ்வேறு கடவுட் கொள்கைகளையுடைய சைவம், வைணவம். சாக்தம் முதலிய பல பிரிவுகளையும் சேர்த்துக் கூறும் பொதுச் சொல்லே தவிர, தனியான ஒரு சமயத்தைக் குறிக்கும் சொல் அல்ல என்பது இங்கு விளங்கிக்கொள்ளவேண்டிய விடயமாகும்.**

## (ஆ) சிந்து வெளி நாகரிக காலச் சிவ வழிபாடு

**சி**ந்து வெளி என்பது **சிந்து, ''பலுசிஸ்தான், பஞ்சாப், இராசபுத்தான், சௌராட்டிரம்''** என்னும் பகுதிகளை அடக்கிய நிலப்பரப்பு ஆகும். இருக்கு வேதத்திலும், இதிகாசங்களிலும் இப்பகுதியின் தொன்மை பற்றிக் குறிப்பிடப்பட்டிருந்ததால், இதனை அறிதற்குப் பல அறிஞர்கள் ஆர்வமுற்றனர். 1921–22ஆம் ஆண்டுகளில் சேர் யோன் மார்சல் என்பார் தலைமையில் இந்தியத் தொல்பொருள் ஆராய்வாளர் சிந்துவிலுள்ள **மொஹஞ்சதாரோவிலும்**, பஞ்சாப்பிலுள்ள **ஹரப்பாவிலும்** உள்ள மண்மேடுகளை அகழ்ந்து ஆராய்ந்தனர். பின்பு **மசூம்தார், மக்கே** ஆகியோர் 30க்கு மேலான இடங்களை ஆராய்ந்தனர். தொடர்ந்து **இராசபுத்தானத்திலும், சௌராட்டிரத்திலும்** 25 இடங்களை ஆராய்ந்தனர். இவைகளின் பேறாகப் புராதன நாகரீக காலப் பொருட்கள் பலவும், எழுத்துக்களும், கட்டடங்களின் சிதைவுகளும் கிடைத்தன.

இப்பொருள்களின் அமைப்புக்களையும், எழுத்துக்களையும் ஆராய்ந்த அறிஞர்கள், இவை ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டவை எனவும்,

இங்கு வாழ்ந்த மக்கள் சிறந்த நாகரிகம் உள்ளவர் எனவும், இங்கு வாழ்ந்தவர்களே இந்தியாவின் தொல்குடியினர் எனவும், உலகிலுள்ள மற்றும் இனத்தவர்களுடன் இவர்கள் தொடர்பு உள்ளவர்களாக வாழ்ந்திருக்கின்றனர் எனவும் கூறியிருக்கின்றனர். இங்கு கிடைத்த பொருள்களுட் பல சைவத்தின் தொன்மைகளை விளக்குவனவாகும், வரலாற்றாராய்வாளர் தொல்பொருட் சான்றுகளையே ஒப்புக் கொள்பவர்களாவர். நூற்சான்றுகளை அவர்கள் ஏற்பதில்லை. அதனால் இவ்வாராய்விற்கு முன்பு இந்தியத் தொல்குடியினரின் மிகச் சிறந்த நாகரிகத்தையும், சைவத்தின் தொன்மையையும்பற்றி உலகம் நன்கு உணரவில்லை. உலக நாகரிகங்களுட் சிந்துவெளி நாகரிகமே தலையாயது எனவும், சைவம் பழைமையான சமயம் எனவும் இவ்வகழ்வாராய்வின் பின்பே உலகம் உணரத் தொடங்கியது. ஆகவே **இவ்வாராய்வு சைவத்தின் நீண்ட வரலாற்றில் ஓர் அரிய ஒளிவிளக்காகும்.**

களிமண்ணாற் செய்து சுடப்பட்ட முத்திரைகள், தாயத்துக்கள், கல்லினால் செய்த சிவலிங்கங்கள், யோக நிலையிலுள்ள சிவ உருவம், கொம்புகள் உள்ள சிவ உருவம், பெண் தெய்வ வடிவங்கள், உருவகங்கள் பொறித்த செம்பு, வெண்கலத் தகடுகள், நந்தி உருவங்கள் ஆலய அமைப்புக்கள், பூசைக்குரிய பொருள்கள், ஆகியன இப் பிரதேசத்தில் கிடைத்தன.

இவைகளுள் சிவலிங்கங்களும் யோகநிலைச் சிவ உருவமும் மிக முக்கியமானவை. அறுநூற்றுக்கு மேலான சிவலிங்கங்கள் இங்கு கிடைத்துள்ளன. இவை மாக்கல்லினாலும், மரத்தினாலும் செய்யப் பெற்றவை. சில பீடமில்லாதனவாகவும் கிடைத்தன. சில சிவலிங்கங்களில் உருவங்கள் உள. சிவலிங்கங்கள் கிரியை நெறிக்கு உரியவை. அக்காலத்தில் இங்குள்ளோர் கிரியை நெறி உடையவர்களாக இருந்திருக்கின்றனர் எனவும், பரவலாக இவ்விடங்களில் சிவலிங்க வழிபாடு அக்காலத்தில் இருந்திருக்கின்றது எனவும் ஆராய்வாளர் கருதுகின்றனர். சிவலிங்கங்களைத் தாயத்துக்களாகக் கழுத்தில் அணியும் வழக்கமும் இருந்திருக்கின்றது. இதனை அணிவதனால் தீமைகளும், நோய்களும் அணுகா என்பது நம்பிக்கையாக இருந்து வந்திருக்கின்றது. இவ் வழக்கம் பண்டை நாளில் ஆசிய நாடுகள் பலவற்றிலும் இருந்திருக்கின்றது.

யோக நிலையிலுள்ள சிவ உருவம் சிந்துவெளி மக்களின் உயர்ந்த நிலைச் சிவ நெறிக் கோட்பாட்டை உணர்த்துகிறது. சைவக் கோட்பாட்டின்படி யோகஞான முறைகள் உயர்ந்தவை. புராதன காலத்தில் முனிவர்களும், சித்தர்களும் யோக – ஞான முறைகள் உள்ளவர்களாக விளங்கினர். இதிலிருந்து சிந்து வெளி மக்கள் கடவுளை யோகியாகவும் ஞானியாகவும் வழிபட்டனர் என்பதும், அவர்கள் யோக வழிபாட்டு முறைகளில் மிக ஈடுபாடு உள்ளவர்களாக இருந்தனர் என்பதும் தெளிவாகின்றது.



மக்களும், விலங்குகளும் சூழ்ந்திருக்கும் நிலையில் உள்ள சிவ உருவமும் காணப்படுகின்றது. இது சிவன் உலகின் உயிர்கள் அனைத்திற்கும் தலைவன் எனச் சிந்து மக்கள் கொண்டிருந்த கொள்கையை உணர்த்துகிறது. இன்னொரு உருவத்தில் சிவனின் தலையில் இரு கொம்புகள் காணப்படுகின்றன. இவை சிவன் முதன்மையும், அதிகாரமும் உள்ளவன் என்பதை உணர்த்துகின்றன. இங்கு பல நந்தி உருவங்களும், பெண்தெய்வ உருவங்களும், மர உருவங்களும் கிடைத்துள்ளன. இவற்றைக்கொண்டு அந்நாளிலே இங்கு சக்தி வணக்கம், நந்தி வணக்கம், நாக வணக்கம், மர வணக்கம் போன்றவை இருந்திருக்கின்றன என்பதை அறிந்துகொள்ளலாம்.

கிடைத்த பொருட்களுள், தகடொன்றில் நந்தியோடு கூடிய ஊர்வலக் காட்சி ஒன்று காணப்படுவதிலிருந்து, அக் காலத்தில் சிந்து வெளி மக்கள் சமய விழாக்களைச் சிறப்பாகக் கொண்டாடி வந்திருக்கின்றனர் என்பதை உணர்ந்து கொள்ளக் கிடக்கின்றது.

இன்னொரு தகட்டில் பெண்தெய்வத்தின் முன் சில பெண்கள் உணவுப் பண்டத்தைக் கொண்ட தட்டுக்களை ஏந்தியபடி நிற்குங் காட்சி காணப்படுகின்றது. இக்காட்சி தெய்வத்துக்கு நேர்த்திக் கடன் செலுத்தும் வழக்கம் இருந்ததைக் காட்டுகின்றது.

இன்றுள்ளது போல அக் காலத்திலும், அவரவர் அறிவு நிலைக்கும் வாழ்க்கை நிலைக்கும் ஏற்ப, சிலர் உயர்ந்த வழிபாடுகளையும், சிலர் குறைந்த வழிபாடுகளையும் மேற்கொண்டிருக்கலாம். கோயில்கள் பல இருந்தன எனவும், வலுவற்ற பொருள்களால் ஆக்கப்பட்டமையால் அவை அழிந்து விட்டன எனவும் "மக்கே" என்னும் ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். மண்மேடுகள் மூவகை அடுக்குகளைக் கொண்டிருந்தமையாலும், கண்டெடுத்த பொருள்கள் கல், மரம், செம்பு, வெண்கலம் ஆகியவைகளால் செய்யப் பெற்றிருந்ததாலும், சிந்து வெளியில் சிவ வழிபாடு புதிய கற்காலம் செம்புக் காலம், வெண்கலக்காலம் ஆகிய மூன்று வகைக் காலங்களிலும் நீடித்திருந்திருக்கிறது எனக் கருத இடமுண்டு.

இரும்பின் உபயோகத்தை அறிந்த மத்திய ஆசிய மக்களின் வருகையால் சிந்து வெளி மக்கள் வலிமை இழந்தனர். கங்கைச் சம வெளியில் வேள்வி முறை வழிபாடு தோன்றமுன், சிவ உருவ வழி

பாடு சிந்துவெளியில் நிலைத்திருந்தது எனவும், அவ்வழிபாட்டை மேற்காசியாவில் பரவச் சிந்துவெளி மக்கள் உதவினர் எனவும் அறிஞர் பலர் கூறுகின்றனர். அங்கு கிடைத்த எழுத்துக்களைத் தெளிவாக வாசித்தறியக்கூடிய நிலை ஏற்படின், அங்கு நிலவிய சிவவழிபாட்டைப் பற்றிய உண்மைகள் பல மேலும் உலகிற்குக் கிடைக்கும். அக்காலம் சிந்துவெளிச் சிவ வழிபாட்டின் பெருமையையும், அதன் தொன்மையையும் மேலும் நன்கு அறிய வாய்ப்பு உண்டாகும்.

## (இ) சிவாகமங்களின் தோற்றமும் வழிபாடும்.

**தொ**ன்றுதொட்டு வரும் முறை ''ஆகமம்'' எனப்படும் "ஆகமம்" என்பதற்கு பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருள்களைக் கூறுவது எனவும், மலத்தை நீக்கி ஞானத்தைக் கொடுப்பது எனவும் பொருள் கூறுவர் பெரியோர். ஒவ்வொரு சமயத்திற்கும் ஆகமங்கள் வெவ்வேறாக உள. இதனால் ஆகமங்கள் சமயச் சிறப்பு நூல்கள் ஆகும். சிவ வழிபாடு மிகத் தொன்றுதொட்டு வழங்கி வருவது. சிவாகமங்கள் சிவ வழிபாட்டு முறைகளை விளக்கிக் கூறுகின்றன. ஆகவே, சிவாகமங்கள் சைவச் சிறப்பு பிரமாண நூல்கள் எனப் படும். சிவாகமங்களில் சைவ சமயக் கொள்கைகளும் வழிபாட்டு முறைகளும் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. இவை சிவபிரானால் அருளிச் செய்யப்பெற்றவை. ''மகேந்திரமதனில் சொன்ன ஆகமம் தோற்றுவித்தருளியும்'' என மணிவாசகனாரும், "'வேதமோடாகமம் மெய்யாம் இறைவனூல்'' எனத் திருமூலரும் அருளியமை நோக்கற்பாலன. ஆகமங்கள் தந்திரம் என்றும் கூறப்படும்.

வேதங்களில் பொதுவான சமயக் கொள்கைகள் கூறப்படும். வழிபாடுகளும், கிரியைகளும், சிறப்பாகவும் விரிவாகவும் ஆகமங்களிற்றான் கூறப்படுகின்றன. கடவுளின் இயல்புகள் ஆன்மாக்களுக்கு அருள் செய்யும் வழிகள், கடவுளை வழிபடும் முறைகள், வழிபடும் இடங்களின் அமைப்புகள், கடவுட்டிருவுருவங்களின் அமைப்புக்கள், கோயிற் கிரியைகளின் வகைகள், அவைகளை நடத்தும் முறை, வழிபடுவோர்க்குரிய இயல்புகள், சைவ சாதனங்கள், கடவுள் வழிபாட்டினால் ஆன்மாக்கள் அடையும் பேறுகள் ஆகியவைகளை ஆகமங்கள் விரிவாக விளக்குகின்றன.

ஆகம முறையிலான கடவுள் வழிபாட்டில் இரகசியம், மந்திரம், ஆலயம், மூர்த்தி என்பன முக்கியமானவை. கடவுள் சொல்லுக்கும் மனத்திற்கும் எட்டாதவர். அவர் அருளைப் பெற ஆலய வழிபாடு



தேவை எனச் சிவாகமங்கள் வற்புறுத்துகின்றன. இதனாலேயே ஆலய அமைப்பு, ஆலய வழிபாடு, ஆலயத் தொண்டு என்பவைகளை ஆகமங்கள் விளக்குகின்றன.

கடவுளை அடைதற்கு ஆலய வழிபாடு எளிதானது. அனைவராலும் செய்யக்கூடியது. இது செயல்முறை வழியாம். ஆகவேதான் சிவாகமங்களில் ஆலய வழிபாட்டுக் கிரியைகள் முக்கிய இடத்தை வகிக்கின்றன. அறிவு வழி (ஞானவழி) – உயர்ந்த வழி. ஆயின் அனைவராலும் எளிதில் அடைதற்குரியதன்று. நம் நாட்டில் ஆலய வழிபாட்டு முறை தொன்றுதொட்டு வந்த பழமையான முறையாகும். இது தெய்வ அருளால் உருவானது. திருக்கோயிற் தொண்டுகளும், வழிபாடுகளும் பக்தியை வளர்க்கும்; உள்ளத்தைத் தூய்மையாக்கும்; சிவ அருளுக்கு உரிமையாக்கும்; பேரானந்தப் பெருவாழ்வைக்கொடுக்கும். இம்மைப் பேறுகளையும், மறுமைப்பயன்களையும் பெறுவதற்கு வழிபாடும் கிரியைகளும் உதவுகின்றன. வழிபாட்டின் பயனைப் பெற விரும்புவோருக்கு ஆத்ம, ஸ்நான, திரவிய, இலிங்க, மந்திரம் ஆகிய ஐவகைச் சுத்திகளும் இன்றியமையாதனவெனச் சிவாகமங்கள் கூறுகின்றன.

வழிபடுவோரின் தூய்மைக்காக விரதம், செபம், தியானம், தோத்திரம், தலயாத்திரை செய்தல், சைவ சாதனங்களை அணிதல் என்பன அறிவுறுத்தப்பெற்றுள்ளன. வேதங்களில், வைதிக யாகம் போன்று சிவாகமங்களில் சிவயாகம் முக்கிய இடத்தை வகிக்கிறது. நித்திய, நைமித்தியக் கிரியைகள் மிக விரிந்தும், பரந்தும் அமைந்துள்ளன, மந்திரங்களினால் மண், கல், மரம் ஆகிய அனைத்தும் தெய்விக இயல்பைப் பெறுகின்றன என்பது சிவாகமத் துணிபு.

கடவுளை அடைதலே ஆன்மாக்களின் நோக்கமாதல் வேண்டும் என்பது ஆகமங்களின் கருத்தாகும். ஆகவே ஆகமங்கள் இந்நோக்கத்தை அடிமை மார்க்கம், சற்புத்திர மார்க்கம், தோழமை மார்க்கம், சன்மார்க்கம் என நான்கு வழிகளை வகுத்துள்ளன. இவை முறையே சரியை, கிரியை, யோகம், ஞானம் எனப் பெயர் பெறும்.

*சரியை வழியில்:* சிவ சின்னங்களை அணிதல், சிவாலய வழிபாடு, ஆலயத் தொண்டு, சிவனடியார் தொண்டு என்பனவும், கிரியையில் பிரம்மசரியம் முதலிய நிலைகள் – தீட்சை வகைகள் – திருக்கோயில் அமைப்பு, திருக்கோயிற் கிரியைகள், அபரக் கிரியைகள் என்பனவும், யோகத்தில் இயமம், நியமம் முதலிய எண் வகை முறைகளும், ஞானத்தில் பாசத்தை நீக்கிக் கடவுளை அடைதலும் விளக்கப்பெற்றுள்ளன. இவைகள் ஒருவனைப்-படிப்படியாகத் தூய்மைபெறச் செய்து சிவ அருளுக்கு உரிமையாக்கிப் பிறவா நிலையை எய்துவிப்பன.

சிவாகமங்கள் குரு வழிபாடு, இலிங்க வழிபாடு, சங்கம வழிபாடு ஆகிய மூன்றையும் வழிபாடுகளாக விதித்துள்ளன. ஆன்மா சிவத்துடன் அத்துவிதமாதலே பிறவாப் பெரு நிலையாகும் எனச் சிவாகமங்கள் கூறும். சிவாகமங்கள் சதாசிவ மூர்த்தியின் உச்சி முகத்திலிருந்து தோன்றியவை.

சிவாகமங்கள் 28. அவை காமிகம், சிந்தியம், காரணம், அசிதம், சுப்பிரபேதம், ரௌரவம், லளிதம், பரமேஸ்வரம், வாதுளம் முதலியன. இவைகளுள் சிலவே இப்போது உள்ளன. சிவாகமங்களைச் சிவன் அருளினராதலால், சிவாகம முறைகள், வழிபாடுகள் என்பவைகளையும் அவரே அருளினர் என்ப. மேலும் இவற்றில் உப ஆகமங்கள் 207 உள. அவற்றையும் சைவம் ஏற்றுக் கொள்ளும் என்ப. சுத்த வைதிக சுத்த சைவத்தின் உட்பட்ட சிவதீட்சை செய்தலும், பெறுதலும் சரியை முதலியனவற்றை அநுட்டித்தலும், ஆகமம் உணர்ந்தார்க்கன்றி, வேதம் மாத்திரம் உணர்ந்தார்க்கு முடிதல் இல்லையாம். சிவாகமங்கள் சைவச் சிறப்பு நூல்கள் என்பதற்கு இது மேலான ஓர் எடுத்துக்காட்டாகும். சிவாகமங்களுள் ஞானகாண்டப் பகுதியை நிர்வாண தீட்சை பெற்றோரும், கர்ம காண்டப் பகுதியை விசேட தீட்சை பெற்றோரும் ஓதலாம் என்று பெரியோர் கூறுவர்.

சிவாகம வழிபாட்டையும் கருத்துக்களையும் தெய்வத் தமிழ்த் திருமுறைகளும், மெய்கண்ட சாத்திரங்களும் தெளிவாக விளக்குகின்றன. சிவாகமங்கள் இருபத்தெட்டையும் திருமூலர் தமது திருமந்திரத்தில் விளக்கியுள்ளார். சிவாகம வழிபாட்டின் சிறப்பையும் பயனையும் நோக்கியே சமய குரவர்கள் தலங்கள் தோறும் சென்று வழிபாடு செய்து திருமுறைகளை அருளியுள்ளனர்.

சிவாகமங்கள் வடமொழியிலுள்ளன. ''நிலைபெறுமா றெண்ணுதியே'' என்பது அப்பரதும், ''மாலற நேய மலிந்தவர் வேடமும் ஆலயந்தானும் அரனெனத் தொழுமே'' என்பது மெய்கண்ட தேவரதும் அருள் வாக்குக்கள். இவை சிவாகமங்களின் வழிவந்த கருத்துக்களேயாம். சிவாகமங்களின் சிறப்பு நோக்கியே மணிவாசகனர் ''ஆகம மாகிநின்று அண்ணிப்பான் தாள்வாழ்க'' என அருளினர்,



## (ஈ) வேதங்கள் கூறும் சிவ வழிபாடு

**வே**தங்கள் சைவத்தின் முதனூல்கள். இவைகள் வடமொழியில் உள்ளன. மனித அறிவுக்கு எட்டாத உயர்ந்த உண்மைகளைக் கூறுவதால் ''வேதம்'' எனவும், உயர்ந்த தத்துவங்களைத் தெரிவிப்பதால் ''மறை'' எனவும், மனிதனுல் ஆக்கப்படாததால் ''அபௌருசேயம்'' எனவும், பல காலமாகச் செவி வழியாகக் கேட்கப்பட்டு வந்தமையால் ''சுருதி'' எனவும், எழுதப்படாமல் இருந்ததால் ''எழுதாக்கிளவி'' எனவும் பெயர்பெறும்.

வேதங்கள் மிகத் தொன்மையானவை. அவை கடவுளால் அருளப்பட்டவை. அவைகளை முனிவர்கள் அவர்பாற் கேட்டு உலகிற்கு வழங்கினர். ''வேதம் நான்கும் பதினெட்டொடும் விரித்தார்'' என்பது ஞானசம்பந்தர் அருள்வாக்கு. அவை இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என நான்காகும். ஒவ்வொரு வேதமும் தனித்தனி **''சங்கிதை, பிராமணம், ஆரணியகம், உபநிடதம்''** என்னும் பகுதிகளை உடையன. இவை ஒன்றன்பின் ஒன்ருகத் தோன்றியவை. சங்கிதை ஆகிய நான்கும், பிரமசரியம், இல்லறம், வானப்பிரத்தம், சந்நியாசம் ஆகிய நான்கு நிலையினர்க்கும் உரியவை. ஆச்சிரமப் பகுப்பு இந்நிலையிலிருந்து தோன்றியதேயாம்.

ஆரம்பகால மக்கள் இயற்கைச் சக்திகளையே தெய்வமாக வணங்கினர். ஒவ்வொரு தெய்வத்திற்கும் ஒவ்வொரு சக்தி இருப்பதாக அவர்கள் எண்ணினர். காலப்போக்கில், அவைகளுக்கு மூல காரணமான ஒரு பொருள் உண்டு எனவும், இயற்கைச் சக்திகள் இப் பொருளின் கூறுகளே எனவும் அவர்கள் உணர்ந்தனர். இப்படியான தெய்வங்களுக்குச் செய்யும் வழிபாடு அவர்கள்மூலம் கடவுளை அடைகின்றது என அவர்கள் நம்பினர். நாளடைவில் கடவுளுக்கு வெவ்வேறு பெயர்களும், உருவங்களும் அமைந்தன. வேதங்களின் வழிபாடு இயற்கைச் சக்திகளுக்கே உரியது எனக் கூறுவது பொருந்தாது. ''அக்நி! நீயே உருத்திரன்'', ''தீக் கடவுளே...... நீ புரங்களைப் பொடி செய்தனை'' என இருக்கு வேதமே கூறுகின்றது. வேத வழிபாடுகள் கங்கைச் சமவெளியை நிலைக்களனுகக் கொண்டிருந்தன என ஊகிக்க இடமுண்டு.

தெய்வங்களின் அருளைப் பெறுவதால் இம்மைப் பயன்களையும் மறுமைப் பயன்களையும் பெறலாமென மக்கள் நம்பினர். வேதங்களிலுள்ள பாடல்கள் அவர்களைப் பிரீதிப்படுத்துவனவாகவும், அவைகளைத் துதித்துத் தம் தேவைகளை நிறைவேற்றும்படி வேண்டுவன

வாகவும் உள்ளன. பாடல்களின் சொற்கள் சக்திவாய்ந்திருந்தமையால், அவை மந்திரங்களாகக் கொள்ளப்பட்டன. வேதங்களின் பாடல்களை ஒழுங்குபட அமைத்துக் கூறுவன சங்கிதைகள் எனப்படும்.

**இருக்கு வேதம் :–** **வேதங்களுள் முதன்மையானது இருக்கு வேதம்.** உலகின் மிகப் பழைய சிறந்த இலக்கியமும் இதுவேயாம். இந்திரன், அக்கினி, சூரியன், உருத்திரன், வருணன், உசஸ் ஆகிய தெய்வங்களின் பெயர்கள் இதில் இடம் பெறுகின்றன. இவர்கள் பூமியிலும், வானத்திலும் இருந்து உலகைக் காப்பவர்கள் எனக் கருதப்பட்டனர். இருக்கு வேதப் பாடல்கள் தெய்வங்களை **அழைத்தல், துதித்தல் வேண்டல்** ஆகிய பகுதிகளை உடையன. தெய்வங்களை முன்னிலைப்படுத்தி அழைத்தல் ஒரு சிறு கிரியையாக அமைகிறது. இருக்கு வேதம் கிரியையின் தொடக்க நிலையாகவும், பக்தி நிலையின் ஆரம்ப இடமாகவும் விளங்குகின்றது. பாடல்கள் தெய்வங்களுக்குச் சமர்ப்பிக்கப்படுகின்றன. இவ்வாறு சமர்ப்பித்தல் ஒருவகை வழிபாட்டு முறையாகும். இம்முறை சைவத் தமிழ்த் திருமுறைகளிலும் அமைந்துள்ளமை நினைவு கொள்ளற்பாலது. இருக்கு வேதம் கடவுளை இயற்கையிலும், இயற்கைக்கு அப்பாலும் வைத்து வழிபடுகிறது. மந்திரங்களின் தோற்றத்திற்கும் இருக்கு வேதமே மூலமாகும்.

**யசுர் வேதம் :– இருக்கு வேத வழிபாட்டு முறையை விரித்தும், ஒழுங்குபடுத்தியும் கூறுவது யசுர் வேதம்.** யசுர் வேத முறை புதியதோர் அம்சமாக அமைகிறது. தெய்வங்களை மேலும் பிரீதிப்படுத்துதற்காக வேள்வி செய்து வழிபடும் முறையை இது கூறுகிறது. வேள்விவேட்டு வழிபடும் முறையை விளக்குதற்காகவே யசுர் வேதம் அமைந்திருக்கிறது. தெய்வங்களைப் பிரீதிப்படுத்தி உலகிற்கு நன்மைகளை உண்டாக்குவதே வேள்வியின் நோக்கம். மந்திரங்களை ஓதுவதால் உள்ளமும், இடமும் தூய்மை அடைகின்றன. வேள்வித் தீ அவிந்து உருக்கரக்கும் நிலை உள்ளத்திற்குச் சக்தியை ஊட்டும். சிவபிரானின் பெருமையைக் கூறும் ''ஸ்ரீ ருத்திரம்'' யசுர் வேதத்தில் இடம் பெறுகிறது. பஞ்சாட்சர மந்திரமும், பிரணவ மந்திரமும் ஸ்ரீ ருத்திர மந்திரங்களுக்குள் உள்ளன. யசுர் வேதம் உரைநடையில் உள்ளது. இதில் தெய்வங்களுக்குப் பல பெயர்கள் கூறப்படுகின்றன, இவை அஷ்டோத்திரம், சகஸ்ரநாமம் முதலியவை தோன்றுவதற்கு வழியாய் அமைந்திருக்கின்றன.



**சாம வேதம் :– உள்ளம் உருக்கும் இசையை உடையது சாம வேதம்.** வேண்டும் பொருளைப் பெற்றுக் கொடுப்பதுவே ''சாமம்'' என்னும் சொல்லின் பொருளாகும். இருக்கு வேதப் பாடல்களே இவ் வேதத்தில் உள்ளன. இறைவன் சாம வேத விருப்பினன் ஆவன். வழிபாட்டில் இசை பெறும் முக்கியத்துவத்தை இவ் வேதம் உணர்த்துகிறது.

**அதர்வணவேதம் :– காலத்தின் அருமை, பிரமசரியம், செல்வத்தைப் பெருக்கல், பூமி விருத்தி, போர் முறை, நோய் நீக்கம், தீமைவிலக்கல் வயப்படுத்துதல்** முதலியவைகளைப் பற்றிக் கூறுவது அதர்வணவேதம். இவ் வேதம் வாழ்க்கையின் பல்வேறு அம்சங்களையும், கிரியைகளையும், மந்திரங்களின் பிரயோகங்களையும், உயர்ந்த கருத்துக்களையும் விரிவாகக் கூறுகின்றது. மந்திர சக்தியின் பயனை உணரவும் இவ் வேதம் உதவுகின்றது. இவ்வேதம் செய்யுள் நடையிலும் உரைநடையிலும் எழுதப்பட்டுள்ளது.

**வேத சங்கிதைகளின் விளக்கங்களே பிராமணங்கள்.** இவை உரைநடையில் உள்ளன. இவை வைதிக வேள்விகளின் வகைகளையும், அவைகளை நடத்தும் முறைகளையும் விரிவாகக் கூறுகின்றன. இவற்றுடன், சமயக் கொள்கை, கதை, தத்துவம் என்பனவும் உள. பிராமணங்கள் சிறந்த கருத்துக்களை உடையன. இவை சிந்தனையைத் தூண்டுவன. பிராமணங்களின் ''பிரசாபதி'' முதன்மையான தெய்வமாகும். அவரே சிருட்டி கர்த்தா. அதன் விளைவே பிரபஞ்சம் என்பது; பிராமணங்களின் கருத்து. பிராமணங்களில் சிவனின் பெயர் முக்கிய இடம் பெறுகிறது. அவை சிவனின் பெருமையைக் கூறி, வழிபாட்டின் அமைப்பை உயர்நிலைக்கு நிறுத்த முயல்கின்றன. பிராமணங்களில் வரும் உருத்திரன் சிவனேயாம் உருத்திரன் பெருந் தேவனாக விளங்குகிறான். உருத்திரனுக்கு **''பசுபதி'', ''ஈசானன்''** முதலிய பெயர்கள் கௌசீதகிப் பிராமணத்தில் உள. **சாங்காயனம்** என்னும் பிராமணம் **தீ**, நீர், காற்று ஆகியவைகளையும் சூரியன், சந்திரன் முதலியவைகளையும் உருத்திரனுடன் தொடர்புறுத்துகிறது. இதனாலேயே சிவனுக்கு **அட்டமூர்த்தி** என்னும் பெயர் அமையக் காரணமாயிற்று.

**ஆரணியகங்கள்** வானப்பிரத்த நிலையில் காடுகளிலே தங்கி வழிபாடு செய்தற்காக அமைந்தவை. இவை பிராமணங்கள் கூறும் நிலைக்கும் உபநிடதங்கள் கூறும் நிலைக்கும் இடைப்பட்ட நிலையைக் கூறுகின்றன. இவை மானசீக வேள்விகளைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. வேள்விக் குண்டங்களை உள்ளத்தில் கற்பனையாக அமைத்தலுக்கு இவை வழி காட்டுகின்றன,

**உபநிடதங்களில்** உயர்ந்த ஞானம் முக்கிய இடம் பெறுகிறது. இவை இதனையே அறிவுறுத்துகின்றன. கிரியைகளும், வேள்விகளும் இவைகளில் இல்லை. ஞானமே வேள்வியாகிறது. தவம் செய்தலே கிரியை. பிரமம் என்னும் பெயர் முதன்மை பெறுகின்றது. உயர்ந்த சமயக் கருத்துக்கள் இங்கு உள. இவை பிரமம், ஆன்மா, மோட்சம், பிரபஞ்சம், உபாசனை, ஞானம் ஆகியவைகளைப் பற்றியன. உலகப் பற்றைத் துறந்து மெய்யுணர்வு பெற்ற ஞானியரை வேண்டி, அவர் வாயிலாக ஞானத்தைப் பெறவேண்டும்; தனித்திருந்து தியானம் செய்யவேண்டும். இவையே உபநிடதங்கள் காட்டும் வழிபாட்டு வழிகளாகும். ஈசாவாசியம், கேநம், கடோ, பிரச்சினம், முண்டகம், மாண்டுக்கியம், சாந்தோக்கியம் என்பன பிரதான உபநிடதங்கள்.

**வேதங்கள் சமய தத்துவங்களைப் பரந்த அடிப்படையில் கூறுவதனால், எல்லாச் சமயங்களுக்கும்** பொதுநூல் ஆகின்றன. வேதங்களிலுள்ள கிரியைகள், வேள்விகள், மந்திரங்கள், தத்துவங்கள் என்பன விரிவடைந்து, ஆகமங்களின் கிரியை, யாகம், மந்திரங்கள், தத்துவங்கள் ஆகவும் அமைகின்றன. ஆரணியகம் கூறும் மானசீக வேள்வி ஆகமத்தில் அந்தர்யாகமாகிறது. ஆகவே ஆகம வழிபாடுகளின் விரிவுக்கு வேதங்களின் வழிபாடு துணையாயின எனலாம். வேதங்களின் பெருமைகளைத் தெய்வத் தமிழ்த் திருமுறைகளும், மெய்கண்ட நூல்களும் நன்கு உணர்த்துகின்றன.

வேதங்களுக்குத் தரும சாத்திரங்கள், புராணங்கள், இதிகாசங்கள், வேத அங்கங்கள், வேத தரிசனங்கள், உப வேதங்கள் என்பன துணை நூல்களாகக் கொள்ளப்படுகின்றன. வேதங்களிலுள்ள உண்மைகளையும், விதிகளையும் எளிதாக அனைவரும் அறிதற்கு இவை துணைபுரிகின்றன. வேத முறைப்படி வாழவேண்டிய முறைகளைத் தருமசாத்திரங்கள் கூறுகின்றன. புராணங்கள் சிவபிரானின் பெருமைகளையும், பழைய அருட்செயல்களையும், வழிபாட்டு முறைகளையும் பற்றிக் கூறுகின்றன.

இதிகாசங்கள் வரலாற்றிற்கு முந்திய அரசர்களின் வரலாறுகளையும், வேதங்களின் முறைப்படியான வாழ்க்கை முறைகளையும் கூறுவனவாம்.

புராணங்களும் இதிகாசங்களும் வேதக் கிரியைகளினதும், வழிபாடுகளினதும் வளர்ச்சி நிலையை உணர்த்துகின்றன. வேத அங்கங்கள் **சிட்சை, வியாகரணம், நிருத்தம்**, சோதிடம், **கற்பம், சந்தசு** என ஆறு.

# 2. பன்னிரு திருமுறைகள்

செந்தமிழ் மொழியிலுள்ள சைவ நூல்களெல்லாம் மூவகையில் அடங்குவன. அவை சாத்திரம், தோத்திரம், காப்பியம் என்பன. சைவ சமயத்திலுள்ள பதி, பசு, பாச உண்மைகளை, நியாய சாத்திர முறையில் நிலைநாட்டிக் கூறும் நூல்கள் (மெய்கண்ட சாத்திரங்கள் சாத்திரங்களெனப்படும். இறைவனையும் அடியார்களையும் போற்றித் துதிப்பனவாகிய பாடல்கள் **தோத்திரங்களாம்**. இறைவன் அருட்செயல்களையும், அடியார் வரலாறுகளையும் கதை வடிவில் எடுத்துக் கூறும் புராணம் முதலான நூல்கள் **காப்பியங்களாகும்**. இம்மூவகையில் திருமுறைகள் தோத்திரங்களாகும். இவற்றுள் பன்னிரண்டாந் திருமுறையாகிய பெரியபுராணம் காப்பியமாகவும் விளங்குகிறது.

திருமுறை என்ற பெயர்: திருமுறை என்ற தொடரில், ''திரு'' என்பது தெய்வத் தன்மையைக் குறிப்பது. ''முறை'' என்ற சொல்லுக்கு நூல், ஒழுங்கு, வரிசை, உறவு முறையீடு முதலிய பல கருத்துக்கள் உள. எனவே திருமுறை என்பது தெய்வத்தன்மை பொருந்திய நூல், உயிர்களைச் செம்மையான ஒழுங்கு முறையில் இறைவனிடம் சேர்ப்பிக்கும் நூல், தொகுத்து வரிசைப்படுத்தப்பட்ட தெய்வீகப் பாடல்களைக் கொண்ட நூல், இறைவனுக்கும் ஆன்மாக்களுக்குமுள்ள உறவை விளக்கும் நூல், மெய்யடியார்கள் உள்ளம் உருகி இறைவனிடம் செய்துகொண்ட முறையீடுகளைக் கொண்ட நூல் எனப் பலவகையிற் பொருள் கொள்ளக் கூடியதாயுள்ளது.

திருமுறை **கண்டது**: திருநாரையூர்ப் பொல்லாப்பிள்ளையாரை வழிபட்டு, அவரருளால் சகல சாத்திர ஞானமும், மெய்ஞ்ஞானமும் பெற்று விளங்கியவர் **நம்பியாண்டார் நம்பிகள்** என்னும் சிவ வேதியர்; அக்காலத்தில் சோழ நாட்டை ஆண்ட அபயகுலசேகர சோழ மகாராசா என்பவர் தேவாரம், திருவாசகம் முதலிய அருட்பாக்களிலே சிற்சிலவற்றைச் சிவனடியார்கள் ஓதக் கேட்டு, அவற்றையெல்லாம் முற்றுகத் தேடித் தொகுத்துச் சைவ மக்கள் பாராயணஞ்செய்யத் தர வேண்டுமென்று நம்பியாண்டார் நம்பிகளை வேண்டிக் கொண்டார். ஒருநாள் அரசன் நம்பியாண்டார் நம்பிகளிடம் வந்து, பொல்லாப் பிள்ளையாருக்கு விசேட பூசைகள் செய்வித்து, அருட்பாக்களைப் பெறு

வதற்குரிய உபாயத்தைப் பிள்ளையாரிடம் வேண்டியறியும்படி இரந்து கூறினர். நம்பியாண்டார் நம்பிகளும் விநாயகப் பெருமானிடம் அரசனின் குறைதீர அருளும்படி வேண்டினர். பிள்ளையாரும், நம்பிகளுக்குத் திருமுறைகள் தில்லையில் சிற்றம்பலத்தை யடுத்துள்ள மண்டபத்திலுண்டென்று அருளியதோடு, அருட்பாக்களின் பெருமையையும், அவற்றைப் பாடியருளிய மெய்யடியார்களின் வரலாறுகளையும் அருளிச் செய்தார். நம்பிகள் அதனை அரசருக்குக் கூறியருளினர். அரசர் நம்பிகளையும் அழைத்துக்கொண்டு சிதம்பர தலத்திற்குச் சென்றார்.

அரசர் தில்லையை அடைந்து, தில்லைவாழ் அந்தணர்களைக் கொண்டு நடராசப் பெருமானுக்கு விசேட பூசை செய்வித்து, தேவாரம் அருளிச்செய்த நாயன்மார் மூவரையும் திருவுலா எழுந்தருளச் செய்வித்து, அவர்களது திருக்கர முத்திரை பொறித்த மண்டப வாயிலை அடைந்து, திருக்கதவத்தைத் திறப்பித்துத் திருமுறை ஏடுகளை எடுத்த பொழுது, அவற்றில் பெரும்பகுதி கறையானல் அழிக்கப்பட்டிருப்பது கண்டனர். அதனல் அரசர் பெருங் கவலையுற்றார். அப்போது இறைவனருளால் ஓர் அசரீரி வாக்கு "இக்காலத்துக்கு வேண்டுவன இருப்ப ஏனையவைகளை நாமே அழியும்படி செய்தோம்; கவலை ஒழிக; பெற்றவற்றைப் பேணிப் பயனடைக" என்று கூறியது. பின் மனந்தெளிந்த அரசர், அவ்வேடுகளைச் செம்மை செய்து, அவ்வருட்பாக்களை ஓதும் முறைப்படி தொகுத்தும் வகுத்தும் தருமாறு நம்பியாண்டார் நம்பிகளிடம் வேண்டினர்.

**திருமுறை வகுத்தமை:** அரசனது வேண்டுகோளுக்கு இசைந்த நம்பிகளும், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் அருளிச் செய்த தேவாரங்களில் கிடைத்தவற்றை முதலாம், இரண்டாம், மூன்றாந் திருமுறைகளாக வகுத்தார். திருநாவுக்கரசு சுவாமிகள் பாடியருளிய தேவாரங்களிலே கிடைத்தவற்றை நான்காம், ஐந்தாம், ஆறாந் திருமுறைகளாக வகுத்தார். சுந்தரமூர்த்தி நாயனர் தேவாரங்களை ஏழாந் திருமுறையென வைத்தார். ஆகவே தமிழ்மறையாகிய மூவர் தேவாரங்களும் முதலேழு திருமுறைகளாயின. இவ்வேழையும் அடங்கன் முறை என்பர். மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய திருவாசகம், திருக்கோவையார் ஆகிய இரண்டையும் எட்டாந் திருமுறையென வைத்தனர். திருமாளிகைத் தேவர் முதல், சேதுராயர் வரையுள்ள மெய்யடியார் ஒன்பதின்மர் அருளிச்செய்த திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்பன ஒன்பதாந் திருமுறையாயின. திருமூல நாயனர் அருளிச் செய்த திருமந்திர நூல் பத்தாந் திருமுறையாயிற்று. (இது தலைசிறந்த மந்திர சாத்திர நூலாகவும் போற்றப்படுவதாகும்.) திருவாலவாயுடையார் திருமுகப் பாசுரம் முதலாகப் பட்டினத்தடிகள் பாடல்வரை உள்ளவை பதினேராந் திருமுறையாக வகுக்கப்பட்டன. பொல்லாப்பிள்ளையார் அருளால் நம்பியாண்டார் நம்பிகள் விநாயகப் பெருமானையும், திருஞானசம்பந்தப் பிள்ளையாரையும், திருநாவுக்கரசு சுவாமிகளையும், திருத்தொண்டத் தொகையிலுள்ள அடியார்களையும் போற்றி செய்த பாடல்களையும் பதினேராந் திருமுறையில் சேர்த்து வைக்குமாறு அரசர் வேண்டிக்கொண்டபடி அவ்வருட்பாக்களும் அத்திருமுறையில் அடங்கின. இவ்வாறு நம்பிகள் வகுத்த திருமுறை பதினென்றும்.



**பண்ணமைப்பு:** இத்திருமுறைப் பாடல்களின் பண்களையும், ஓதும் வகையையும் அறிவித்தருளுமாறு அரசரும், நம்பிகளும் நடராசப்பெருமானிடம் வேண்டினர். பெருமான் அருளிச்செய்தபடி திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனர் மரபில் வந்த, பண்முறைகளைத் தெரிந்திருந்த பெண்ணை அரசர் அழைப்பித்து, நடராசப்பெருமான் சந்நிதியிலே அவ்வவற்றின் பண்முறைகளையும் அமைத்துக்கொண்டார்.

**திருமுறைகளைப் பேணிச் சேமித்தமை:** பின்னர், அரசர் திருமுறைப் பாடல்களையெல்லாம் செப்பேடுகளில் எழுதுவித்துப் பாதுகாப்பாக அழியாதிருக்கும்படி செய்தார். அக்காலம் முதல் தமிழகத்துச் சைவக் கோயில்களிலெல்லாம் ஓதுவார்களை நியமித்துத் திருமுறைப் பாடல்களைப் பண்ணேடு பாராயணஞ் செய்துவருமாறு அரசர்கள் நியமனஞ் செய்தனர். இன்றுவரை அது தொடர்ந்து நடந்து வருகிறது.

**பன்னிரண்டாந் திருமுறை:** சில ஆண்டுகளின் பின் அநபாயசோழ அரசரின் வேண்டுகோளின்படி, அவரது முதன் மந்திரியாகிய சேக்கிழார் நாயனர், நடராசப் பெருமானே "உலகெலாம்" என அடியெடுத்துக் கொடுக்கப் பாடியருளிய திருத்தொண்டர் புராணம் ஆகிய பெரியபுராணம், சைவப் பேரறிஞர்கள் சபையில் அரசர் முன்பு அரங்கேற்றப்பட்டது. அப்பொழுது அறிஞரும், அரசரும் அந்நூலின் சிறப்பை நோக்கி அதனைப் பன்னிரண்டாந் திருமுறை நூலென ஏற்றுப் போற்றினர். இவ்வாறே சைவத் திருமுறைகள் பன்னிரண்டும் அமைந்தனவாம்.

## திருமுறைகள் அருளியோர் :

| | |
|---|---|
| * முதலாம், இரண்டாம், மூன்றும் திருமுறைகள் – தேவாரம் | திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் |
| * நான்காம், ஐந்தாம், ஆறும் திருமுறைகள் – தேவாரம். | திருநாவுக்கரசுநாயனுர் |
| * ஏழாந் திருமுறை – தேவாரம் | சுந்தரமூர்த்தி நாயனுர் |
| * எட்டாந் திருமுறை திருவாசகம் – திருக்கோவையார் | மாணிக்கவாசக சுவாமிகள் |
| * ஒன்பதாந் திருமுறை திருவிசைப்பா, திருப்பல்லாண்டு | திருமாளிகைத்தேவர், சேந்தனுர், கருவூர்த்தேவர், பூந்துருத்திகாடநம்பி; கண்டராதித்தர், வேணுட்டடிகள், திருவாலிய மூதனுர், புருடோத்தம நம்பி, சேதிராயர். |
| திருப்பல்லாண்டு | சேந்தனுர் |
| * பத்தாந் திருமுறை திருமந்திரம் | திருமூலநாயனுர் |
| * பதினெராந் திருமுறை | அருளியோர் பன்னிருவர் |
| (1) திருமுகப் பாசுரம் | திருவாலவாயுடையார் (சிவபிரான்) |
| (2) திருவாலங்காட்டு மூத்ததிருப்பதிகம்<br>(3) மூத்ததிருப்பதிகம்<br>(4) திருவிரட்டை மணிமாலை<br>(5) அற்புதத் திருவந்தாதி | காரைக்கால் அம்மையார் |
| (6) ஷேத்திரத் திருவெண்பா | ஐயடிகள் காடவர்கோன் |
| (7) பொன்வண்ணத்தந்தாதி<br>(8) திருவாரூர் மும்மணிக்கோவை<br>(9) திருக்கயிலாய ஞான உலா | சேரமான்பெருமான் நாயனுர் |



| | |
|---|---|
| (10) கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி<br>(11) திருவீங்கோய்மலை எழுபது<br>(12) திருவெழுகூற்றிருக்கை<br>(13) பெருந்தேவபாணி<br>(14) கோபப்பிரசாதம்<br>(15) காரெட்டு<br>(16) போற்றித்திருக்கலி வெண்பா<br>(17) திருமுருகாற்றுப்படை<br>(18) திருக்கண்ணப்பதேவர் திருமறம் | நக்கீரதேவ நாயனுர் |
| (19) திருக்கண்ணப்பதேவர் திருமறம் | கல்லாடனுர் |
| (20) மூத்தநாயனுர் திருவிரட்டை மணிமாலை<br>(21) சிவபெருமான் திருவிரட்டை மணிமாலை<br>(22) சிவபெருமான் திருவந்தாதி | கபிலதேவர் |
| (23) சிவபெருமான் திருவந்தாதி | பரணதேவர் |
| (24) சிவபெருமான் திருமும்மணிக்கோவை | இளம்பெருமானடிகள் |
| (25) மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை | அதிராவடிகள் |
| (26) கோயில் நான்மணிமாலை<br>(27) திருக்கழுமல மும்மணிக்கோவை<br>(28) திருவிடைமருதூர் மும்மணிக்கோவை<br>(29) திருவேகம்பமுடையார் திருவந்தாதி<br>(30) திருவொற்றியூர் ஒருபா ஒருபது | பட்டினத்தடிகள் |

(31) திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணிமாலை
(32) கோயில் திருப்பண்ணியர் திருவிருத்தம்
(33) திருத்தொண்டர் திருவந்தாதி
(34) ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி
(35) ,, திருச்சண்பை விருத்தம்
(36) ,, திருமும்மணிக்கோவை
(37) ,, திருவுலாமாலை
(38) ,, திருக்கலம்பகம்
(39) ,, திருத்தொகை
(40) திருநாவுக்கரசுநாயனார் திருஏகாதசமாலை

} நம்பியாண்டார் நம்பி

பன்னிருவர் பாடிய நாற்பது பிரபந்தங்கள் பதினொராந் திருமுறையிலுள்ளன.

* பன்னிரண்டாந் திருமுறை
திருத்தொண்டர் புராணம்
(பெரிய புராணம்)

} சேக்கிழார் நாயனார்.

**திருமுறைகளின் காலம்:** பத்தாந் திருமுறை அருளிய திருமூல நாயனாரும், பதினொராந் திருமுறைப் பாடல்கள் அருளியவர்களில் காரைக்காலம்மையார், நக்கீரதேவர், கபிலதேவர், பரணதேவர், கல்லாடதேவர் என்பவர்களும், எட்டாந் திருமுறை அருளிய மாணிக்கவாசக சுவாமிகளும் காலத்தால் முற்பட்டவர்களென ஆராய்ச்சியாளர் கூறுவர். காலங்களை இன்னும் அறுதியாக முடிவுசெய்யவில்லை. ஆளுடைய பிள்ளையாரும், திருநாவுக்கரசு நாயனாரும் சம காலத்தவர்கள். இவர்கள் காலம் கி. பி. ஏழாம் நூற்றாண்டென்பர். சுந்தரமூர்த்தி நாயனாரும், சேரமான் பெருமாள் நாயனாரும் ஒரு காலத்தவர்கள். அவர்கள் காலம் கி. பி. எட்டாம், ஒன்பதாம் நூற்றாண்டென்பர். ஐயடிகள் காடவர்கோன் சுந்தரமூர்த்தி நாயனாருக்கு முற்பட்டவர். பட்டினத்தடிகள் சுந்தரமூர்த்தி நாயனாருக்கும், நம்பியாண்டார் நம்பிகளுக்கும் இடைப்பட்ட காலத்தவர். நம்பியாண்டார் நம்பிகள் வாழ்ந்த காலம் கி. பி. பத்தாம் நூற்றாண்டு. இக்காலமே திருமுறைகள் கண்டெடுத்துத் தொகுத்து வகுக்கப்பட்ட காலம். சேக்கிழார் பாடியருளிய பெரியபுராணம் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் அருளப்பட்டது.



**திருமுறைகளின் பெருமை:** சிவபெருமானது திருவருள் கைவரப் பெற்ற, முனிசிரேட்டர்கள் ஓதியருளிய மந்திரங்களும் தோத்திரங்களும் வடமொழியில் **வேதம்** எனப்பட்டன. அங்ஙனமே சிவபிரானது அருள் பெற்ற மெய்யடியார்களால் திருவருள் வழிநின்று பாடியருளிய பத்திப் பாடல்களாகிய அருட்பாக்கள் **தமிழ் வேதம்** என அழைக்கப்படுகின்றன. வேதசாரமே தேவார திருவாசகங்கள் என்பதைச் சைவப் பேரறிஞர் பலரும் அறுதியிட்டுக் கூறியுள்ளனர். காசிவாசி செந்திநாதையர் இதை நன்கு ஒப்பிட்டுக்காட்டி விளக்கியுள்ளார். இத் தமிழ் வேதமாகிய திருமுறைப் பாடல்கள் பத்தி உணர்ச்சி மேலிட்டுப் பாடியவை; இவற்றைப் பாராயணஞ் செய்பவர்களுக்கு அப்பண்பை உண்டாக்குவன. நாயன்மார்கள் இப்பாடல்களை இறைவன் திருவருள் துணை தூண்டவே பாடினர். இப்பாடல்கள் பல அற்புதங்களை நிகழச் செய்தமை நாயன்மார் வரலாறுகளால் அறியலாம். சுருங்கச் சொன்னால், வேத மந்திரங்களைக் கொண்டு பல சாதனைகளை மாந்திரிகர்கள் செய்வதுபோல, இத் தமிழ்வேதப் பாடல்களைப் பாராயணஞ் செய்து பல சாதனைகள் புரிகிறார்கள். திருமுறைப் பாடல்கள் ஆக்கவும், காக்கவும், அழிக்கவும் வல்லன; தெய்வீக சக்தி உடையன; அவற்றை மெய்யன்போடு பொருளுணர்ந்து பண்ணமைய வழுவின்றி ஓதவேண்டும். அங்ஙனமின்றி ஓதுவோர் பூரணமான பயனை அடையார்.

திருமுறைப் பாடல்கள் இறைவனுடைய பெருமைகளைப் பேசும், போற்றும்; வாழ்த்தும்; ஆன்மாவாகிய நம் குறை தீர்க்கும்படி வேண்டும்; நமக்கு இன்ன இன்ன நற்பேறுகளைத் தருக எனப் பிரார்த்திக்கும்; நம்மிடமுள்ள பிழைகளைச் சுட்டிக் காட்டிக் கண்டிக்கும்; இப்படிப் பல விதத்தில் இவை அமைந்திருக்கின்றன. நாமாக ஒரு புதிய முறையில் இறைவனைப் போற்றி நமது குறைகளைத் தீர்க்கும்படி வேண்டும்போது, நம்மையறியாமலே நமது சிற்றறிவினால் பல தவறுகளைச் செய்து, நன்மைக்கு மாறாகத் தீமைகளைத் தேடவும் நேரும். ஆதலால், இத்திருமுறைப் பாடல்களில் நமக்கு உகந்தவற்றை நாம் தெரிந்து, அவற்றைப் பாராயணஞ் செய்து வருவது நமக்கு இம்மை, மறுமை, அம்மையாகிய பேறுகளில் ஒன்றும் குறைவின்றி நன்மையாயமைவதற்கு வழியாகுமென்று ஆன்றோர் கூறுவர். இவற்றைப் பாராயணஞ் செய்து பயனடைந்தோரும் எண்ணிலராவர்.

**திருமுறைகள் கூறும் பொருள்:** பதி, பசு, பாசங்களின் இயல்பும், தொடர்பும், பிறப்பறுக்கும் உபாயமும், (சரியை, கிரியை, யோக, ஞான வழிகள்) பேரின்ப நிலையமாகச் சைவசித்தாந்தம் கூறும் விடயங்களேயாம். இவ்விலக்கியங்களில் கண்ட கருத்தையே சைவ சித்தாந்தம் நெறிப்படுத்தி இலக்கணமாகக் கூறியது. பன்னிரு திருமுறை

வகுப்பிற்கும், சிவஞானபோதத்துப் பன்னிரு சூத்திரங்களுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டென ஆன்றோர் ஒப்பிட்டுக் காட்டுவர். சாத்திரங்களைப் படித்து மெய்யுணர்வு பெறுவதிலும் பார்க்க, திருமுறைப் பக்திப் பாடல்களை ஓதி இறைவனருளைப் பெறுவது எளிதென்பர்.

இத் திருமுறைகளின் ஆசிரியர்களிற் பலரும் சுந்தரமூர்த்தி சுவாமிகளது ஏழாந் திருமுறையாகிய தேவாரத்தில் திருத்தொண்டத் தொகையிலே போற்றப்பட்ட மெய்யடியார்களேயாவர். இம் மெய்யடியார்கள் பெருமையை நம்பியாண்டார் நம்பிகள் பதினொராந் திருமுறையில் — திருத்தொண்டர் திருவந்தாதியில் வகைப்படுத்திப் போற்றியுள்ளார். அவ்விரண்டையும் ஆதாரமாக வைத்து நாயன்மார் வரலாற்றைத் திருத்தொண்டர் புராணத்திலே விரித்துக் கூறியருளியவர் சேக்கிழார் சுவாமிகள். இந்த மூன்று தொகை வகை விரி நூல்களில், திருமுறைகளின் பெருமையும், அருளியவர் பெருமையும், ஓதுதலின் பயனும் கூறப்பட்டிருக்கின்றன.

சைவ நூல்கள் வேத ஆகம புராணங்கள் என்றமைவது போலவே, முதலிலுள்ள ஒன்பது திருமுறைகளும், வேத மந்திரங்களும், தோத்திரங்களுமாயமைய, பத்தாந் திருமுறையாகிய திருமந்திரம் ஆகம நூற் கருத்துக்களைக் கூறுவதாக அமைய, பன்னிரண்டாந் திருமுறை புராணமாக அமைந்து நிற்கிறது. பதினொராந் திருமுறையில் தோத்திர வகையோடு, பிரபந்த வகைகளும் இடம் பெற்றுள்ளன.

**திருமுறை ஓதுவதன் பயன்:** திருஞானசம்பந்தப் பிள்ளையார் இவ்வருட்பாடல்களை, ''திருநெறிய தமிழ்'' எனக் குறிப்பிட்டுள்ளார். திரு என்பது சைவத் திரு. சைவத் திருவாவது பேரின்ப முத்தி. அதைப் பெற ஏற்ற வழியே திருநெறியாம். அத் திருநெறியில் நம்மை இட்டுச் செல்ல வல்லதே திருநெறிய தமிழ். எனவே திருநெறிய தமிழ் எனப்படும் இத் திருமுறைகள் பாராயணஞ் செய்பவர்க்கு முடிந்த பேருனமோட்சானந்தத்தைப் பெற வழிசெய்வனவாகும். அன்றியும் திருஞானசம்பந்தப் பிள்ளையாரும், சுந்தரமூர்த்தி சுவாமிகளும் திருக்கடைக்காப்புப் பாடல்களில், ஓதுவாரைத் தீவினை சாரா; நோய், வறுமை, அல்லலுறா; நல்வினை பெருகும், செல்வமும், அரசும், வாழ்வும் சிறக்கும்; நரக துன்பமடையார்; விண்ணவரும்



மண்ணவரும் ஏத்த வாழ்வர் என்று கூறியவாறு. இம்மை மறுமை இன்பங்களையும் குறைவின்றிப் பெற்று இனிது வாழ உதவுவனவாகும். திருநீற்றுப் பதிகம், கோளறு பதிகம், நமச்சிவாயப்பதிகம் முதலியவற்றைப் பாராயணஞ் செய்து நோய் தீர்த்தல், கிரகதோஷங்களினின்று நீங்குதல் முதலிய பயன்களை இன்றும் பெறுவோர் பலருளர். பயனடைய வேண்டுவோர் அன்பும் ஆசாரமும் நியமமும் உடையவராய், திருமுறைப் புத்தகத்தைப் பூசை செய்து பத்தி சிரத்தையோடு திருமுறை ஓதும் முறைகளைக் கடைப்பிடித்து ஓதற்பாலர்.

**திருமுறை ஓதும் முறை:** பன்னிரு திருமுறைகளையும் முன் பின் முறை மாற்றாது ஓதவேண்டும். தினந்தோறும், குறித்த காலத்தில் ஆசார சீலமுடையவராய், புத்தகத்தைத் தூப தீபம் மலர் முதலியவற்றால் பூசித்து எடுத்துப் பாராயணம் செய்யவேண்டும். திருமுறைப் புத்தகம், பட்டாலே மூடிப் புனிதமான இடத்தில் வைத்துப் போற்றப்படல் வேண்டும். திருமுறைகளை ஓது முன்னும் முடிவிலும் ''திருச்சிற்றம்பலம்'' என்பதைச் சொல்லவேண்டும் என்ற நியதிகளை மீறலாகாது. திருமுறைப் பாடலோடு பிறபாடல்களைக் கலந்தோதுதல் குற்றமாகும்.

**திருமுறைகளின் சிறப்பு:** வேதாகமங்களின் வழி நின்று சைவ நெறியினை உலகம் உய்ய இசைத்தமிழாலும், இயற்றமிழாலும் எடுத்தோதுவன இத்திருமுறைகள். வானவெளியில் பன்னிரு இராசிகள் போலப் பன்னிரு திருமுறைகளும் விளங்குகின்றன. இவற்றை அருளிச்செய்த அநுபூதிமான்கள் இருபத்தேழு நட்சத்திரங்களுக்கு நிகரான இருபத்தெழுவராவர். இவர்களால் சைவ சமயம் அவ்வப்போது சிறப்புப்பெற்று வளர்ந்துள்ளது. வேதாகமங்கள் பிரணவத்தின் விரிவாகும். அங்ஙனமே பன்னிரு திருமுறைகளும் அமைந்துள்ளன எனலாம். இவை ஓகார உயிரொலியில் (தோடுடைய என்று) தொடங்கி, மகர ஒற்றில் முடிகின்றன. பன்னிரு திருமுறைகளும் உள்ளங் கசிந்துருகி ஓதுதற்குரியன. திருமந்திரம் சாத்திர நூலாகவும், திருத்தொண்டர் புராணம் காப்பிய நூலாகவும் அமைந்திருந்தாலும், அவற்றுள்ளும் தோத்திரப் பாடல்கள் உண்டு. ஓதுவார் உள்ளத்தையும், கேட்பார் உள்ளத்தையும் உயர்த்தி, பக்குவ வெள்ளம் பெருகச் செய்யும் பான்மை பன்னிரு திருமுறைகளுக்கும் உண்டு.

# 3. சைவ சித்தாந்தம்

## (அ) சைவசித்தாந்த சாத்திரங்கள்

சித்தாந்த சாத்திரங்கள் மெய்கண்ட சாத்திரங்கள் எனவும் சொல்லப்படும். அவை பதினுன்கு. அவற்றை அருளிச் செய்தவர் அறுவராவர்.

பரமேசுவரன் வேதாகம உண்மைகளையெல்லாம் திருநந்தி தேவருக்கு உபதேசித்தருளினுர். அந்தத் திருநந்திதேவரை அபரசிவன் எனவும் கூறுவர். திருநந்திதேவரே சனற்குமாரர், திருமூலர் முதலிய ஞானிகளுக்கெல்லாங் குருவாக இருந்து வேதாகமங்களைப் போதித்தருளினுர். அங்ஙனம் போதித்த ஞானச்செல்வமானது குருசீட பரம்பரை உரிமையாக (தந்தை – மகன் உறவும் உரிமையும் போல) வழி வருவதாயிற்று. அதனுல் சித்தாந்த சாத்திரம் அருளிய பெயர்களைத் திருக்கயிலாய பரம்பரைச் சந்தனுசாரியர்கள் என அழைப்பர்.

சந்தனுசாரியர்கள் அகச்சந்தனுசாரியர், புறச் சந்தனுசாரியர் என இரு வகையினர். திருநந்திதேவர், சனற்குமாரர், சத்தியஞான தரிசனர், பரஞ்சோதியார் என்பவர்கள் அகச் சந்தனுசாரியர்கள். இவர்கள் ஒருவருக்கொருவர் குருவுஞ் சீடருமாய் வழிவழி வந்தோர்; இவர்களில் நான்காமவரான பரஞ்சோதியாரிடம் தீட்சையும் உபதேசமும் பெற்றவர் மெய்கண்டதேவராவர். இவர் புறச் சந்தனுசாரியரில் முதல்வர். இவரது தலைமாணவர் அருணந்திசிவாசாரியர். இவரது சீடர் மறைஞானசம்பந்தர், இவர் மாணவர் உமாபதி சிவாசாரியர். உமாபதிசிவம் வரையுள்ள நால்வரும் புறச்சந்தனுசாரியராவர்.

புறச்சந்தனுசாரியரில் மறைஞானசம்பந்தர் மௌனியாகவே இருந்தார். நூலெதுவும் பாடியருளவில்லை எனக் கூறுவர். ஆயின் சித்தாந்த நூலாகக் கருதப்படும் சதகமணிக்கோவை இவரால் அருளப்பட்டதாகக் கூறப்படும். மெய்கண்டதேவரும், அருணந்தி சிவாசாரியரும் உபாபதி சிவாசாரியருமே சாத்திரங்கள் அருளிச்செய்தனர். மெய்கண்டதேவரின் மாணவர் நாற்பத்தொன்மரில் மற்றெருவராகிய மனவாசகங்கடந்த தேவநாயனுரும்; இவர்களுக்கு முற்பட்ட காலத்தவர்களாகிய திருவியலூர் உய்யவந்த தேவநாயனுரும், திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனுரும் ஆகிய மூவரும் ஒவ்வொரு நூல் பாடியருளினர்.



| மெய்கண்ட சாத்திரங்கள் | | பாடியருளியவர் |
|---|---|---|
| 1. திருவுந்தியார் | — | திருவியலூர் உய்யவந்த தேவநாயனுர் |
| 2. திருக்களிற்றுப்படியார் | — | திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனுர் |
| 3. சிவஞானபோதம் | — | மெய்கண்ட தேவநாயனுர் |
| 4. சிவஞானசித்தியார் | } | அருணந்திசிவாசாரியார் |
| 5. இருபா இருபஃது | } | அருணந்திசிவாசாரியார் |
| 6. உண்மை விளக்கம் | — | மனவாசகங்கடந்த தேவநாயனுர் |
| 7. சிவப்பிரகாசம் | } | உமாபதிசிவாசாரியார் |
| 8. திருவருட் பயன் | } | உமாபதிசிவாசாரியார் |
| 9. வினுவெண்பா | } | உமாபதிசிவாசாரியார் |
| 10. போற்றிப்பஃறெடை | } | உமாபதிசிவாசாரியார் |
| 11. கொடிக்கவி | } | உமாபதிசிவாசாரியார் |
| 12. நெஞ்சுவிடுதூது | } | உமாபதிசிவாசாரியார் |
| 13. உண்மை நெறிவிளக்கம் | } | உமாபதிசிவாசாரியார் |
| 14. சங்கற்பநிராகரணம் | } | உமாபதிசிவாசாரியார் |

சித்தாந்த சாத்திரங்களில் முதலிலுள்ள இரண்டும் கி. பி. பன்னிரண்டாம் நூற்றுண்டிலும், அடுத்துள்ள மூன்றும் சமகாலத்தில் கி. பி. பதின்மூன்றும் நூற்றுண்டிலும், சித்தாந்த சாத்திர அட்டகம் (அட்டகம் – எட்டு நூல்) எனப்படும் நூல்கள் கி. பி. பதினுன்காம் நூற்றுண்டிலும் தோன்றின என்பர்.

சந்தானகுரவர் வரலாறு பின் விரிவாக உள்ளது. திருவியலூர் உய்யவந்த தேவநாயனுர் வடநாட்டினின்று தென்னுடு வந்து தங்கி, ஞானவிருந்தளித்த நல்லார். இவர் மும்மூன்று அடிகளே கொண்ட நாற்பத்தைந்து பாடல்களில் சித்தாந்த உண்மைகளைக் கூறினர். இவரது

சீடரின் சீடரே திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனுர். திருவுந்தியார்ப் பாடலுக்கு விளக்கம் கூறும் வகையில், நூறு பாக்களில் திருக்களிற்றுப் படியாரைப் பாடியருளியவர். இந்நூலை நடராசப் பெருமானது சந்நிதித் திருக்களிற்றுப் படியில் வைக்க, அந்த யானைக் கரம் இந்நூலை எடுத்துக் கூத்தரின் திருவடிக்கீழ் வைத்தமையால் திருக்களிற்றுப் படியார் எனப் பெயர் பெற்றது. இவ்விரு நூலும் மெய்கண்ட தேவருக்கு முன் தோன்றியவை.

மெய்கண்டதேவர் அருளிச்செய்த சிவஞானபோத நூல், தமிழிலே தோன்றிய தனி முதல் நூல் என்பர் சிலர். வடமொழியிலுள்ள இரௌரவ ஆகமத்தில் சிவஞானபோதம் என உள்ள பன்னிரு சூத்திரத்தின் மொழிபெயர்ப்பு நூலென்பர் ஒரு சிலர். சிவஞான போத நூல் சித்தாந்த சாத்திர நூல்களில் சிகாமணியாய் விளங்குவது. மிகத் திட்ப நுட்பமான முறையில் சைவ உண்மைகளைக் கூறுவது. மெய்கண்டதேவரே இந் நூலுக்கு வார்த்திகப் பொழிப்பும், உதாரண வெண்பாக்களும் சூர்ணிக் கொத்து என்னும் அட்டவணையும் இயற்றியருளினுர். இந் நூலைத் தம் மாணவர் நாற்பத்தொன்பதின் மருக்கும் போதித்தருளினுர். இந் நூலுக்குத் திருவாவடுதுறை யாதீனத்து மாதவச் சிவஞான முனிவர்கள் ஒரு சிற்றுரையும், மாபாடியம் என்னும் பேருரையும் எழுதியுள்ளார்கள். வேறு பல உரைகளும் இதற்கு உள.

**சிவஞானசித்தியார்:** இதனைத் தம் குருவின் ஆணைப்படி இயற்றியருளியவர் அருணந்தி சிவாசாரியர். சிவஞான போதத்திற் கூறப்பட்ட உண்மைகளை மிக விரிவாக அளவை நூற், பிரமாணங்கள் காட்டி விளக்கிக் கூறுவதாயுள்ள சிறந்த நூல் இதுவே. சிவத்துக்கு மேல் தெய்வமில்லை; சிவஞானசித்திக்கு மேல் நூலில்லை என்ற பழமொழி இந்நூலின் சிறப்பைக் காட்டும். இருபா இருபஃது என்பதும் இவரால் அருளப்பட்டதே.

மெய்கண்டதேவரின் மாணவரில் மற்றொருவராகிய மனவாசகங் கடந்த தேவநாயனுர், நடராசப் பெருமானுடைய உண்மைத் தத்துவத்தை விளக்கிக் கூறிய ஐம்பத்துநான்கு பாடல் கொண்ட சிறு நூல் உண்மை விளக்கம் என்பது.



உமாபதி சிவாசாரியர் அருளிச் செய்த நூல்களில் சிவப்பிரகாசம், திருவருட்பயன், சங்கற்பநிராகரணம் என்பன சிறந்த நூல்கள். இவை சிவஞானபோதம் முதலிய நூல்களின் கருத்தையே மேலும் தெளிவு படுத்திக் கூறும் நூல்களாகும்.

**மெய்கண்டசாத்திரங்களுட் கூறப்படுவன:** மெய்கண்ட சாத்திரங்கள் இறைவன் ஒருவன் உளன் என்றும்; அவன் சிவனே என்றும்; அவனை அடைந்து இரண்டறக் கலந்து பேரின்பம் அநுபவிப்பதற்காக உயிர்கள் எண்ணிறந்தன உள என்றும்; அவ்வுயிர்கள் அங்ஙனம் நல்வாழ்வு பெறுவதற்காக இறைவனுலே தோற்றுவிக்கப்பட்ட தநு, கரண, புவன, போகங்கள் உள என்றும், ஆன்மாக்களை அநாதியே பற்றி நிற்கும் ஆணவ மயக்க நீக்கத்தின் பொருட்டுத் தநு கரணம் முதலியவற்றோடு திரோதான சத்தி ஆன்மாவைப் பொருந்தி ''விடிவாம்—அளவும் விளக்கு'' என நின்று துணை புரியும் எனவும், இவ்வுதவிகளையெல்லாம் தமது ஒப்பற்ற (சிற்சக்தியாகிய) பேரருளினுலே வழங்கியருளுகின்ற இறைவனை நன்றியறிதலுடன் மனம், மொழி, மெய்களினுல் வழுத்திச் (சிவபுண்ணியங்களாகிய) சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் படிகளிலே முறைதவருமல் நிற்றலினுல் அவ்வான்மாக்கள் ''தாடலை'' போல் அத்துவித முத்தி பெற்று உய்யும் எனவும் முடிந்த முடிபாக அறுதியிட்டுரைப்பனவாம்.

## (ஆ) மெய்கண்ட சாத்திரநூல் விளக்கம்

### 1. திருவுந்தியார்

இது சிவஞானபோதத்திற்கு முற்பட்ட நூல். இதனைச் செய்தவர் திருவியலூர் உய்யவந்த தேவநாயனுர். இந்நூல், சிவஞானபோதத்தைப் போலச் சித்தாந்தக் கருத்துக்களைக் கோவைபடக் கூறுது, அவ்வப்போது ஆசிரியர்களுக்குத் தோன்றிய உணர்ச்சி அனுபவத்தைக் கூறும் 45 செய்யுட்களையுடையது. ஆயினும், இவ்வனுபவப்பாடல்கள், சமய சாத்திரங்கள் போலவே, கடவுள்-உயிர்-உலகம் என்னும் மூன்று பொருள்களின் இலக்கணத்தையும், பயன்களையும், பயன் அடையும் நெறிகளையும் விளக்குவனவாகும்.

### 2. திருக்களிற்றுப்படியார்

இதுவுஞ் சிவஞானபோதத்திற்கு முற்பட்ட நூல். இதனைச் செய்தவர் மேற்சொன்ன உய்யவந்த தேவநாயனுர்மாணவர்க்கு மாணவர்.

இவர் திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனுர் என்னும் பெயர் கொண்டவர். இந்நூல் நூறு வெண்பாக்களை உடையது. திருவுந்தியாரின் கருத்தைச் செம்மையாக விளக்குவது. இது பொன்னம்பலத்திலுள்ள திருக்களிற்றுப்படிகளில் வைக்கப்பட்டுப் பாராட்டப் பட்டதாதலின் 'திருக்களிற்றுப்படியார்' எனக் காரணப்பெயர் பெற்றது. இந் நூலில், 63 நாயன்மார் வரலாறுகளிலிருந்தும் உதாரணங்கள் தந்து வல்வினை, மெல்வினை என்பன விளக்கப்பட்டுள்ளன. திருக்குறட்பாக்கள் சிலவற்றை மேற்கோளாகக் கொண்டு அவற்றின் பொருளை விளக்குஞ் செய்யுட்கள் இன்பம் பயப்பன.

### 3. சிவஞானபோதம்

இது மேற்சொன்ன 14 சாத்திரங்களில் தலை சிறந்தது. சித்தாந்த உண்மைகள் கோவைபடச் செய்யப்பட்ட செந்தமிழ் நூல். திருவெண்ணெய் நல்லூர் – மெய்கண்ட தேவரென்னும் வேளாள அறிஞர் அருளியது; உரைநடைப் பகுதியுஞ் செய்யுட் பகுதியும் உடையது. உரைநடைப் பகுதி மேற்கோள்களையும், ஏதுக்களையும் உடையது; செய்யுட்பகுதி 12 சூத்திரங்களாகவும் 81 வெண்பாக்களாகவும் உள்ளது. இப் பன்னிரண்டு சூத்திரங்களும் ரௌரவ ஆகமத்திலுள்ள 12 வடமொழிச் சூத்திரங்களின் மொழிபெயர்ப்பு என்பது டாக்டர், இரமணசாத்திரி போன்ற ஒருசார் அறிஞர் கருத்து. மறைமலையடிகள், திரு. கா. சுப்பிரமணியம்பிள்ளை போன்ற அறிஞர்கள் அது முதல் நூலே என்று கருதுகின்றனர். தென்னிந்திய சைவசித்தாந்த மகா சமாஜத்தின் தலைவராக விளங்கிய சைவப்பெரியார் ம. பாலசுப்பிரமணிய முதலியார், சிவஞானபோதம் மொழிபெயர்ப்பன்று என்பதற்கு 120 காரணங்கள் காட்டி 1949இல் சிறு நூல் ஒன்றை வெளியிட்டுள்ளார்.

### 4. சிவஞானசித்தியார்

சிவஞானசித்தியாரையும் அடுத்துவரும் இருபா இருபஃது என்னும் நூலையும் அருளியவர் மெய்கண்டார் முதல் மாணவராகிய அருள்நந்தி சிவாசாரியர் ஆவர். சிவஞானசித்தியார் என்னும் நூல் சிவஞான போதத்தின் வழி நூல்; பரபக்கம், சுபக்கம் என்னும் இரண்டு பெரும் பிரிவுகளை உடையது. சிவஞான போதத்துள் அவையடக்கம் கூறிய ஒரே பாட்டினை அடிப்படையாகக் கொண்டு பரபக்கந் தோன்றியது. சுபக்கம், சிவஞானபோதத்தின் 12 சூத்திரங்களின் பொருளை 12 அதிகாரங்களில் விரித்து விளக்குவது.



சுபக்கத்தில் சிவஞானபோதப் பொருளே விரித்துரைக்கப்படுதலின், அதுபற்றிய விபரம் இங்கு தேவையில்லை. இப்பகுதி 328 செய்யுட்கள் கொண்டது. சித்தியாரின் பெருமையை, "சிவனுக்குமேல் தெய்வமில்லை, சித்திக்கு விஞ்சிய நூலில்லை" என்னும் பழமொழியாலுந் தாயுமானவர் பாராட்டுரையாலும் நன்குணரலாம்.

### 5. இருபா இருபஃது

இது, தம் ஞான – குருவாகிய மெய்கண்டாரை முன்னிலையாக்கி வினவுதல் போலவும், அவை விடைகூறுதல் போலவும் சித்தாந்தக் கருத்துக்களை 20 செய்யுட்களில் கூறும் நூல். ஆணவத்தின் எட்டு இயல்பும், மாயையின் ஏழு இயல்பும், கர்மத்தின் ஆறு இயல்பும் இதன்கண் கூறப்பட்டுள. சைவத் திருமுறைகளுள் விளங்கும் அருட்தொடர்களாகிய "கண்பாரார் கண்ணுதலாய் காட்டக்காலே" "உன்னிலுண்ணும் உண்ணுவிடில் விட்டிடும்" என்பவற்றிற்கு விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. "இருநிலனுய்த் தீயாகி" என்று தொடங்கும் அப்பர் திருத்தாண்டகத்திற்கும் "ஆட்பாலவர்க்கருளும் ஆதிமாண்பும்" என்னுந் திருஞானசம்பந்தர் திருப்பாசுரத்திற்கும் பொருள் விளக்கம் பாராட்டத்தகும் முறையிற் செய்யப்பட்டுள்ளது. இச் சிறு நூல் மெய்கண்டாரது பெருஞ்சிறப்பினை அறிவிக்கும் பெருமையுடையது.

### 6. உண்மை விளக்கம்

இது மெய்கண்ட தேவரது மற்றொரு மாணவரான திருவதிகை மனவாசகங் கடந்தார் என்பவர் அருளியது. 53 வெண்பாக்களையுடையது; இது முப்பத்தாறு தத்துவங்களையும், ஆணவம், இருவினை என்பவற்றின் இயல்பையும், கடவுளின் இயல்பையும், ஐந்தெழுத்தின் உண்மையையும், தம் ஆசிரியரிடத்துத் தமக்கு விளக்கும்படி வினவ, ஆசிரியர் விடையளித்தது போலச் செய்யப்பட்ட நூலாகும். முத்தியிலும் மூன்று பொருளாகும் இறை, உயிர், உலகம் உண்டு என்று விளக்கும் பெருமையுடையது இந்நூல்.

## உமாபதி சிவாசாரியர் அருளிய எட்டு நூல்கள்

### 1. சிவப்பிரகாசம்

இது சிவஞான போதத்திற்குச் சார்பு நூலாகும். இதன் பாயிரத்துள் திருக்கயிலாய பரம்பரை ஆசிரியர்கள் இன்னுரென்பதும், சைவ நூல்களின் இயல்பும், தீட்சை வகைகளும் சுருக்கமாகவும்

விளக்கமாகவும் ஓதப்பட்டுள்ளன. நூலின் அவையடக்கத்தில் நூல்களை ஆராய்ந்து உண்மை தெரியும் முறை நன்கு விளக்கப்பட்டுள்ளது. பழமை பற்றி ஒன்றை நன்றென்றும், புதுமை பற்றி ஒன்றைத் தீதென்றுங் கொள்ளுதல் தவறு என்பது ஆசிரியர் கருத்து.

இந்நூல் நூறு விருத்தங்களையுடையது. இதில் சைவ சித்தாந்த அத்வைத நிலை—உடலும் உயிரும், கண்ணொளியும் கதிரொளியும், உயிரறிவும், கண்ணொளியும் போல இரண்டறக் கலத்தல் என்று விளக்கப்பட்டுள்ளது. ஆணவம், கன்மம், வினைப்பயன் வரும் வழிகள், மாயையின் பிரிவுகள் நன்கு விளக்கப்பட்டுள்ளன. பல சமயத்தாரின் முத்திபேதங்கள் வகுத்துக்கூறி, அவற்றிற்கு மேலதாய்ச் சித்தாந்த முத்தி விளங்கும் முறைமை உணர்த்தப்பட்டுள்ளது.

## 2. திருவருட்பயன்

இது குறள் வெண்பாக்களால் ஆயது; பத்து அதிகாரங்களையுடையது. ஒவ்வோர் அதிகாரத்தும் பத்துக் குறள்கள் உண்டு. இறைவனது இயல்பு கூறும் முதல் அதிகாரம் பதிமுது நிலை என்னும் பெயருடையது. ஏனைய அதிகாரங்களின் பெயர்களும் இவ்வாறே அவை கூறும் பொருளின் இயல்பை விளக்குந் தன்மையன. அவை உயிரவை நிலை, இருள்மல நிலை, அருளது நிலை, அருளுரு நிலை, அறியும் நெறி, உயிர் விளக்கம், இன்புறு நிலை, ஐந்தெழுத்தருள் நிலை, அணைந்தோர் தன்மை என்பன.

## 3. வினாவெண்பா

இது பதின்மூன்று பாக்களால் ஆகியது. இஃது, ஆசிரியர் தம் குலகுருவாகிய மறைஞானசம்பந்தரிடம் சாத்திரவுண்மைகளைக் கேட்டுத் தெளியும் முறையில் அமைந்தது. இருளும், ஒளியும் ஓரிடத்தில் கூடல் அரிது என விதந்து, தன்பால் இறைவன் நின்ற வியப்பை அறிவிக்கும் பாடலும், காண்பான், காட்சி, காட்டப்படும் பொருள் என்னும் மூவகை உணர்ச்சியை நீத்தவர், முத்தி நிலையை அடைவர் எனக் குறிக்கும் திருப்பாட்டும் நுட்பமுஞ் செறிந்தவை.

## 4. போற்றிப் பஃறொடை வெண்பா

இது, உயிர் தொழிற்படும் முறைமையை உணர்த்தும் வாயிலாகத் தமக்குச் சிவஞானம் நல்கிச் சிவாநுபவம் ஈந்த குருவைப் பஃறொடை வெண்பாவினால் வாழ்த்திய நூலாகும். இறைவனது பரநிலையும், அவனது பொது நிலையாகும் ஐந்தொழில் நடத்தும் திறமும், உயிர்களை மறைத்து நிற்கும் ஆணவத்தின் இயல்பும், அதனை ஒழிக்கவேண்டி



இறைவன் சேர்க்கும் மாயை காரியமாகும் உடற்கருவிகள், போகங்கள், உலகங்கள் இவற்றின் பேருதவியும், உயிர்கள் கர்ப்ப வாசத்திலும் உலகிலும் துன்புறும் துன்ப நிலைகளும், பிறகு வினைக்கு ஈடாக நேரும் மறுமைப் பயன்களும், பின்னைப் பிறவியில் கூடிய இருவினையொப்பு முதலிய பக்குவ நிலைகளும், இறைவன் மூவகை உயிர்கட்கு அருளுந் திறமும், உயிர்கள் சிவஞானம் பெற்றுச் சரியை முதலிய நெறிகளில் ஒழுகி அடைந்த சிவப்பேற்றின் நிலையும், "நாமே பிரமம்" என்பதன் இழிவும், சைவசித்தாந்த முத்திப் பெருநிலையும் முறையாக நன்கு விளக்கப்பட்டுள்ளன.

## 5. கொடிக்கவி

இது மிகச் சிறிய நூல். 4 வெண்பாக்களால் ஆகியது. ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம் என்ற பகுதி இன்புறத்தக்கது. ஐந்தெழுத்தின் நுட்பம் இறுதி வெண்பாவில் குறிக்கப்பட்டுள்ளது. இது தில்லையிற் கொடியேறும் பொருட்டுப் பாடிய நூலாதலின் 'கொடிக்கவி' எனப் பெயர் பெற்றது.

## 6. நெஞ்சுவிடு தூது

இஃது ஆசிரியர் தமது உள்ளத்தை மறைஞானசம்பந்தர்பால் மாலை வாங்கும்படி தூதுவிடு முகத்தால் பல நூல்களின் பொருள் முடிபையும் விளக்குவது ; கலி வெண்பாவினால் ஆகியது ; 129 கண்ணிகளை உடையது. தசாங்கம் விரித்துரைக்கும் பகுதி, படித்து இன்புறத்தக்கது. ஞானாசிரியன் பாச நீக்கம் செய்யும் திறத்தினை விளக்கும் பகுதியும், கத்தும் சமயர் புன்னெறிகளில் விழாது செல்லுந் திறமும் குறிப்பிடத்தக்கவை.

## 7. உண்மைநெறி விளக்கம்

இது தத்துவ ரூபம், தத்துவக் காட்சி, தத்துவ சத்தி, ஆன்ம வடிவம், ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்னும் பத்துக் காரியங்களை இனிது விளக்கும் நூல்; இத் தசகாரியம் பற்றிய குறிப்புக்கள் முன்சொன்ன சிவப்பிரகாசத்தில் உள்ளன. அவற்றின் விரிவே இந் நூலாகும்.

## 8. சங்கற்ப நிராகரணம்

இது அகச் சமயங்கள் பலவற்றின் கொள்கைகளைக் கூறி, அவற்றைச் சித்தாந்தப் பார்வையால் மறுக்கும் நூல். சிவஞானசித்தியார் பரபக்கமும் இந்நூலும் சித்தாந்த சைவத்தின் வேறான சமயக் கொள்கை வேறுபாடுகளை அறிதற்கு மிகவும் பயன்படுகின்றது; நிமித்த காரண பரிணாமவாதி சங்கற்பத்தில் அப்பர், சம்பந்தர், திருப்பதிகங்கள், திருவாசகம், திருவிசைப்பா, காரைக்கால் அம்மையார் அற்புதத் திருவந்தாதி எடுத்தாளப்பட்டன. சைவசித்தாந்த நிலையே பல்லாற்றானும் மிகச் சிறந்தது என்பதை இச்சிறு நூல் நன்கு விளக்குகிறது.

# 4. சைவ சாதனைகள்

விபூதியும் உருத்திராக்கமும் முக்கியமான சைவசமய சின்னங்களாகும். இவை எமது அஞ்ஞானத்தைப் போக்கி, தீமைகளினின்றும் எம்மைப் பாதுகாத்து இறைவனையும் அவனது பெருங் கருணையையும் நினைவூட்டும் சாதனங்கள். பிரதானமாக நீராடியவுடனும், பூசை வழிபாடுகள் செய்யும் நேரங்களிலும் இவற்றை நாடோறும் பக்தி சிரத்தையுடன் தரித்தல் வேண்டும்.

## (அ) திருநீறு (விபூதி)

சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடுஞ் சமயம் சைவம் எனப்படும். சைவ சமய ஒழுக்கங்களில் இன்றியமையாதது சிவசின்னங்களில் ஒன்றாகிய திருநீறு அணிதலாகும். திருநீற்றுக்கு விபூதி, பசிதம், பசுமம், இரட்சை, ஷாரம் என்ற பெயர்களும் உண்டு.

தன்னைத் தரித்தவர்களுக்கு மேலான செல்வத்தைக் கொடுத்தலினால் விபூதி எனவும், ஒளியைக் கொடுப்பதினால் பசிதம் எனவும், பாவங்களை எரித்து நீறாக்குவதனால் பசுமம் எனவும், தன்னைத் தரித்த ஆன்மாக்கள் எல்லாவற்றையும் இரட்சிப்பதனால் — காப்பதனால் இரட்சை எனவும், உயிர்களது மலத்தை நீக்குதலால் ஷாரம் எனவும் பெயர் பெறுகின்றது.

குற்றமற்ற பசுவின் சாணத்தை நெருப்பினாலே சுடுவதனால் உண்டாகும் நீறே தூய திருநீறாகும். திருநீறு வெண்மை நிறமானது. வெள்ளை நிறத் திருநீறு அணியத்தக்கதுமாம். ஏனைய நிறத் திருநீறு அணியத் தகாது. வெண்மை நிறம் தூய்மைக்கு அடையாளம். வெள்ளை நிறத் திருநீற்றை அணிவதனால் எமது அகமும் புறமும் தூய்மை அடைகின்றன.

இங்கே நீறாக்க எடுத்துக்கொள்ளும் சாணம் ஆன்மாவையும், சாணத்தில் உள்ள அழுக்குகள் ஆன்மாவோடு உள்ள மலங்களையும், நெருப்பு திருவருளையும், எரித்தல் திருவருள் பதிதலையும், எரித்தபின் வந்த வெண்ணீறு மலங்கள் நீங்கத் தூய்மையடையும் ஆன்மாவையும் குறிக்கும் என்பர் பெரியோர்.



திருநீறு இருவகையாகத் தரிக்கப்படும். ஒன்று உத்தூளனமாக அணிதல். பரவிப் பூசுதலையே இப்பெயர் கொண்டழைப்பர். இரண்டாவது வகை திரிபுண்டரம் எனப்படும். திருநீற்றை நீரிற் குழைத்து மூன்று குறியாகத் தரிப்பதனையே திரிபுண்டரம் என்பர். சமய தீட்சை பெற்றோர் மாத்திரமே இவ்வாறு தரிக்கத் தகுதியுடையவர்கள். இவ்வாறு தரிக்கும்பொழுது கீழ்வரும் விதிகள் கவனிக்கப்பட வேண்டியனவாகும். குறிகள் வளையாதும், இடையறாதும், ஒன்றையொன்று தீண்டாதும், அகலாதும், ஒவ்வோர் அங்குல இடைவெளியிருத்தல் போன்றவையே அந்நியதி விதிகளாகும். திரிபுண்டரமாக அணிதற்குரிய உறுப்புக்கள் உச்சி, நெற்றி, மார்பு, கொப்பூழ், முழந்தாள்கள், புயங்கள், முழங்கைகள், மணிக்கட்டுக்கள், விலாப் புறங்கள், முதுகு, கழுத்து என்னும் பதினாறுமாம்.

திருநீறு அணியும்பொழுது உத்தம திக்குக்களான வடக்கு முகமாகவேனும், கிழக்கு முகமாகவேனும் இருந்துகொண்டு தரித்தல் வேண்டும். அதனைத் தரிக்கும்போது சிவபெருமானைத் தியானித்துப் பரமாணுவளவாயினும் நிலத்திலே சிந்தாவண்ணம் அண்ணாந்து "சிவ சிவ" என்று சொல்லிக்கொண்டு, வலக்கையின் நடுவிரல் மூன்றினாலும் தரித்தல் வேண்டும். தரையிலே சிந்தப்பெற்றால், சிந்திய நீற்றை எடுத்துவிட்டு அவ்விடத்தைச் சுத்திசெய்தல் வேண்டும்.

திருநீறு தரிக்கப்பெற வேண்டிய காலங்களாவன; சந்தியாகாலம் மூன்றும் (காலை, உச்சி, மாலை), சூரியோதயம், சூரிய அஸ்தமனம், நித்திரைக்கு முன்னும் பின்னும், பல்துலக்கிய உடனும், நீராடிய உடனும், பூசைக்கு முன்னும் பின்னும், உணவுக்கு முன்னும் பின்னும், தம் கடமைகளைச் செய்யச் செல்லும்போதும், சிறப்பு நிகழ்ச்சிகளின் போதும் கட்டாயமாகத் திருநீறு அணிதல் வேண்டும்.

அக்கினியில் எரித்தெடுத்த தூய வெண்ணீற்றைப் புதிய பாத்திரத்திலேயிட்டு, நறுமலர்கள் தூவிப் பாத்திரத்தின் வாயைத் தூய துணியினாலே கட்டிப் பாதுகாத்தல் வேண்டும். அணிவதற்கு வேண்டிய திருநீற்றை மட்டும் பட்டுப்பையிலேனும், சம்புடத்திலேனும் வைத்திருக்கலாம். திருநீற்றைச் சிவமாகவும், திருநீறு வைத்திருக்கும் பையைச் சிவாலயமாகவும் மதிக்க வேண்டும்.

குரு, சிவனடியார் முதலியோர் திருநீறு தந்தால், அமைதியாக அடக்கத்துடன் அவர்களை வணங்கி, இரு கைகளையும் நீட்டி வாங்கி அணிதல் வேண்டும்.

திருநீற்றுக்கு மேலே சந்தனமேனும், குங்குமமேனும் அணிதலாகாது. திருநீற்றுக்குக் கீழே புருவ நடுவில் அவற்றைத் தரிக்கலாம். திருநீறு அணியாதவர் முகம் சுடுகாட்டுக்குச் சமமாகும். "நீறில்லா நெற்றி பாழ்" என்பதும் இதனை ஒட்டியதே என்பதனைத் தெரிந்து கொள்ளவும்.

திருநீற்றின் மகிமை ஆளுடைய பிள்ளையார் அருளிய திருநீற்றுப் பதிகத்தில் விரிவாகவும், மற்றையோர் பாடல்களில் பரவலாகவுங் கூறப்பட்டுள்ளது.

ஞானக்கினியினாலே சுடப்பட்ட பசுமல நீக்கத்தால் விளங்குஞ் சிவத்துவப் பேற்றின் அறிகுறியே திருநீறாகும். திருநீறணிவதனால் முத்தியும், சிவஞானமுங் கைகூடுமென அருள் நூல்கள் கூறுகின்றன. "முத்தி தருவது நீறு", "போதந் தருவது நீறு", "சித்தி தருவது நீறு", "சுந்தரமாவது நீறு", "தேசம் புகழ்வது நீறு" என்னுஞ் சம்பந்தர் திருவாக்குகளால் இதனை யாம் உணரலாம்.

ஒருவன் திருநீறு அணியும்பொழுது அத்திருநீறு படிகின்ற இடமெல்லாம் சிவலிங்கமாகின்றதெனச் சைவ நூல்கள் கூறுகின்றன.

## (ஆ) உருத்திராக்கம்

**உருத்திராக்க மகிமை:** உருத்திராக்கம் என்பது உருத்திரனது கண் எனப் பொருள்படும். திரிபுரத்தசுரர்களாலே தமக்கு ஏற்பட்ட துன்பங்களைப் பற்றித் தேவர்கள் சிவபிரானிடம் முறையிட்டபோது, சிவபிரானது மூன்று கண்களினின்றும் சிந்திய மணியே உருத்திராக்கம் என்பர். எனவே, ஆன்மாக்களிடம் இறைவன் கொண்டுள்ள பெருங் கருணையைச் சதா நினைவூட்டும் சாதனமாக உருத்திராக்கம் விளங்குகின்றது. இதனை அணிதல் அவரது திருவருட் பேற்றிற்கு அறிகுறி. பத்தினிப் பெண்களுக்குத் திருமாங்கலியம் எங்ஙனம் புனிதமான ஆபரணமாக விளங்குகின்றதோ, அங்ஙனமே சிவனடியார்களுக்கு உருத்திராக்கம் போற்றி அணிய வேண்டிய புனிதச் சின்னமாகத் திகழ்கின்றது. உண்மையடியார்களைச் சைவநெறியினின்றும் பிறழாமற் காக்கும் இரட்சையாகவும் இது விளங்குகின்றது.

**உருத்திராக்க வகைகள்:** ஒரு முகம் தொடக்கம் பதினாறு முகம் வரை கொண்ட மணிகள் உண்டு. ஒவ்வொருவகை மணிக்கும் ஒவ்வொரு அதி தேவதை கூறப்படுகின்றது. பொன்னிறம், கருநிறம், கபில நிறம் ஆகிய நிறங்களில் உருத்திராக்க மணிகள் உள்ளன; ஒரே இன மணிகளாலான மாலைகளே அணியத்தக்கன.



உருத்திராக்கத்தின் மறுபெயர்கள் கண்டி, அக்கு, கண்மணி, சிவமணி, தாழ்வடம், திருஅடையாளம் போன்றவையாகும்.

உருத்திராக்கம் அணிந்தார் பெறும்பேற்றைச் சம்பந்தப் பெருமான் கீழ்க்காண் பாடலில் விளக்குகின்றார்.

நெக்கு ளார்வ மிகப்பெரு கிந்நினைந்
தக்கு மாலைகொ டங்கையி லெண்ணுவார்
தக்க வானவ ராத்தகு விப்பது
நக்க னாம நமச்சி வாயவே.

முறையாக உருத்திராக்கம் அணிந்து இறைவனிடம் அன்பு பூண்டார்க்கு உடல் நலமும், செல்வ வளமும், நெடுவாழ்வும், இன்ப வாழ்வும் இப்பிறப்பில் பெருகும். மறு உலகில் ஆண்டவன் அடியிணை எய்தி மாறா இன்பம் துய்த்து மகிழ்வர்.

**உருத்திராக்க தாரணம்:** சந்தியாவந்தனம், சிவபூசை, செபம், தேவார திருவாசக பாராயணம், புராணபடனம், சிவாலய தரிசனம் போன்ற சாதனைகள் செய்யும் காலங்களில் உருத்திராக்கம் தரித்தல் அவசியம். உறங்கும்போதும், மலசலங் கழிக்கும்போதும், ஆசௌச காலத்திலும் தரித்தலாகாது. ஆசாரமற்றோரும் தரித்தலாகாது. சிகை, சிரம், காது, மார்பு, தோள்கள், கைகள் ஆகியவை உருத்திராக்கம் தரித்தற்குரிய இடங்கள். எத்தனை முகங்கொண்ட மணிகளை எவ்வெவ் விடங்களில் அணியலாம் என்றும், ஒவ்வொரு அங்கத்திலும் எத்தனை மணிகள் கொண்ட மாலைகள் அணியலாம் என்றும், ஒவ்வோர் இடத்திலும் தரிக்கும் மாலை எந்த அளவினதாய் இருக்கவேண்டுமென்றும் விதிகள் உண்டு. செபம் செய்ய உபயோகிக்கும் மாலை 108 அல்லது 54 மணிகளைக் கொண்டதாயிருக்கும். செபமாலை மனத்தை இறைவனிடம் செலுத்தும் சிறந்த சாதனமாகும். "சிவம் செய்தல்" என்னுஞ் சொல்லே மருவி "செபஞ் செய்தல்" என வழங்குவதாகவும் கூறுவர்.

**குறிப்பு:** *பரமேசுவர பல்லவன் சிறந்த சிவபக்தன். கி. பி. 670—685 வரை ஆட்சி புரிந்தவன். தன் நாட்டில் பல சிவன் கோவில்களைக் கட்டியவன். 'கூரம்' என்ற ஊரில் கல்லால் சிவன்கோவில் கட்டியவன். தமிழ்நாட்டில் கல்லால் கட்டப்பட்ட முதல் கோவில் இதுவே எனக் கருதுகின்றனர். இப்படியான சிறப்பு வாய்ந்த

மன்னன் சைவர்களினது போற்றலுக்குரிய இன்னோர் சிறப்புக்கும் உரியவனுகின்றுன். **உருத்திராக்க** மணிகளைக் கொண்டு சிவலிங்க வடிவாக அமைக்கப்பட்ட முடியைத் தலையில் தரித்திருந்தமையே அதுவாகும்.

பல துறைகளிலும் தமிழ் சைவம் ஆகியவற்றின் வளர்ச்சிக்காகக் கோடிக் கணக்கான ரூபா பெறுமதியுள்ள அறக்கட்டளைகளை ஏற்பாடு செய்திருக்கும் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம், உருத்திராக்க மணிகளை வாங்கிச் சிவ அடியார்க்கு அளிப்பதற்குப் பயன்படுத்தும் வகையில், ஐம்பதினுயிரம் ரூபா அறக்கட்டளை ஒன்றை 21-2-1955இல் 'காஞ்சிபுரத்தில் திருக்கச்சியேகம்பன் உருத்திராக்கத் தேவார நிதி' என்ற பெயரில் ஏற்பாடு செய்திருப்பது இங்கு குறிப்பிடத்தக்க பெருமைக்குரிய செய்தியாகும்,

## (இ) சமய தீட்சை

**தீட்சையின் கருத்தும் வகைகளும்:** "தீட்சை" என்பது இறைவன் குருவினிடமாக நின்று ஞானத்தைக் கொடுத்துப் பாசத்தைக் கெடுக்கும் கிரியை என்ற கருத்துள்ள "தீக்ஷா" என்ற வடசொல்லிலிருந்து வந்ததே. சைவசமயத்திற் பிரவேசிப்பதற்கும், அதன் வெவ்வேறு படிகளிற் புகுவதற்கும் அருகதையளிப்பது தீட்சையே. ஒருவர் சைவாசாரத்தை மேற்கொள்ள அதிகாரமளிக்கும் தீட்சை "சமய தீட்சை" எனப்படும். இது சரியாமார்க்கத்தாருக்கு உரியது. சிவபூசை முதலியவற்றைச் செய்வதற்கும், சிவாகமங்களை ஓதுவதற்கும், யோக சாதனைகளை மேற்கொள்வதற்கும் அதிகாரமளிப்பது **விசேஷதீட்சை** எனப்படும். இது கிரியா மார்க்கத்தாருக்கும் யோக மார்க்கத்தாருக்கும் அளிக்கப்படுவது. ஞானமார்க்கத்தாருக்கு அளிக்கப்படுவது நிர்வாணதீட்சை எனப்படும்.

**எழுவகைத் தீட்சை முறைகள்:** அளிக்கப்படும் முறைக்கேற்பத் தீட்சையானது நயனம், பரிசம், மானசம், சாத்திரம், மந்திரம், யோகம், ஔத்திரி என எழுவகைப்படும். குரு சிவமாக நின்று தமது அருட்பார்வையால் சீடனின் ஆணவமலத்தைக்கெடுத்தல் நயனதீட்சை என்றும், தமது கரத்தால் சீடனைத் தொட்டு அவனது மாயாமலத்தைப் போக்குதல் பரிசதீட்சை என்றும், சீடனது மனதிற் பிரவேசித்து ஆன்ம போதத்தை நீக்கிச் சிவபோதத்தை உண்டாக்குதல் மானச தீட்சை என்றும் கூறப்படும். தனது முட்டைகளை மீன் தன் பார்வையாலும், கோழி பரிசத்தாலும், ஆமை எண்ணத்தாலும் பொரிக்கச் செய்வதை இவற்றிற்கு முறையே உதாரணமாகக் கூறுவர். வேதாகம



உண்மைகளை விளக்குதல் **சாத்திர தீட்சை** ஆகும். திருவைந்தெழுத்து முதலிய மந்திரங்களை முறைப்படி உபதேசிப்பது **மந்திர தீட்சை.** குரு சீடனின் இதயத்திற் பிரவேசித்து ஆன்மாவைச் சிவத்தோடு சேர்த்தல் **யோகதீட்சை** எனப்படும். ஓமத்தோடு செய்யப்படுவது **ஔத்திரிதீட்சை** ஆகும். இவற்றுள் ஔத்திரிதீட்சை மேலும் இருவகைப்படும். குண்ட மண்டலங்களுடன் ஓமம் முதலிய கிரியைகளாற் செய்யப்படுவது கிரியாவதி எனவும், குண்டமண்டலங்களையும் கிரியைகளையும் மான சீகமாகச் செய்வது ஞானவதி எனவும் வழங்கும். இவை முறையே புறத்தொழில்களால் வழிபடுவதையும் ஒக்கும்.

**மூவகை ஆன்மாக்களுக்கும் உரிய தீட்சை முறைகள்:** நயனம் முதலிய எழுவகைத் தீட்சைகளும் சகலருக்கு உரியவை. இவற்றுள் நயனம், பரிசம், மானசம் ஆகியவையே பிரளயாகலருக்குச் செய்யப்படுபவை. இவற்றை இறைவனே நேர்நின்று உணர்த்துவான். குருவை ஆதாரமாகக் கொண்டு சகலருக்குச் செய்யப்படும் தீட்சை ஆதாரதீட்சை எனவும், ஏனையோருக்கு இறைவனே நேரடியாகச் செய்யும் தீட்சை நிராதாரதீட்சை எனவும் வழங்கும்.

**குறிப்பு:** தீட்சை பெறுதலை உபதேசம் பெறுதல் என்றும் கூறப்படும். தீட்சை பெற்றோரே சைவர் என்று கூறத் தகுதியுடையோர். தீட்சை பெறாதோர் அருள்நூல்களில் தொடுவதற்கு அருகதையற்றவர்களாம். அந்தணர் செய்யும் பூணூல் சடங்கு ஏனையோரது தீட்சைக்குச் சமமாம். அந்தணர் காலை மாலை ஆகிய இரு வேளைகளிலும் சந்தியாவந்தனம் செய்வதுபோல், இவ்விரு வேளைகளிலும் தீட்சை பெற்ற சைவர் செய்யும் வழிபாட்டுமுறை அநுட்டானம் எனப் பெயர்பெறும். சைவக் கோலத்தைக் காட்டும் அடையாளம் அநுட்டானமேயாம். அநுட்டானத்தில் சிவசூரிய வணக்கமும், சிவகாயத்திரி செபமும், ஆசாரியர் உபதேசித்த தூல பஞ்சாட்சர மந்திரமாகிய 'நமசிவாய' என்ற திருவைந்தெழுத்துச் செபமும் அடங்கியுள்ளன. இவற்றுள் பஞ்சாட்சரசெபம் மிக முக்கிய அங்கமாகும். குருமூலம் இதன் விரிவு அறியப்படவேண்டுமாதலின் அதனை இங்கு விளக்கிச் சொல்லாது விடுகின்றோம்.

சமயதீட்சை பெறுதற்குரிய வயது ஏழு, ஐந்து, பதினொன்று முதலான ஒற்றெண்களாம். தகுதியான சிவாசாரியார்மூலம் புண்ணியநாட்களில் தீட்சைபெறல் நன்று. இதனை அநுட்டித்து எல்லாப்பாடசாலைகளிலும் ஆண்டுக்கொருமுறை சமயதீட்சை நடைபெற்று வருமாயின் சமய ஆசார நெறிமுறை பரவுவதுடன், சிவஞான அறிவும், சிவ அநுட்டானப் பொலிவும் பெருகி சைவமென்னும் பயிர் தானே தழைத்தோங்கும்

திருத்தொண்டுகள் இருதரப்படும். சிவதீட்சை பெறுது செய்வது பொதுச் சிவபுண்ணியம் எனப்படும். சிவதீட்சை என்னும் அங்கத்துடன் செய்வது சிறப்புச் சிவபுண்ணியம் எனப்படும். சிறப்புச் சிவபுண்ணியத்தை அடைவதற்குப் பொதுச் சிவபுண்ணியம் உதவியாயிருக்கும். ஆதலால் சிவதீட்சை பெற்று ஆலயத்திலும், மற்றும் இடங்களிலும் திருத்தொண்டு செய்வது உத்தமோத்தமமாகும்.

## (ஈ) குருலிங்க சங்கம வழிபாடு

**குருவின் சிறப்பு:** ''குரு'' என்றால் பாசத்தை நீக்குபவர் அல்லது அஞ்ஞானம்' என்னும் இருளை அகற்றுபவர் என்பது பொருள். தீட்சை அளித்தவரும், கல்வி போதிப்பவரும் குரு ஆவார். சைவ நெறி தழைத்தோங்கத் தேவார திருவாசகங்களையும், மெய்கண்ட சாத்திரங்களையும் அருளிய சமயகுரவர்களும் சந்தான குரவர்களும் போற்றி வழிபடுதற்குரிய குருமார்களே. வாழ்க்கையில் பரிபக்குவம் ஏற்பட்டதும் பிறவியை ஒழிக்க ஞானசாரியராக வருபவர் ஞானகுரு எனப்படுவர். யாம் அறியாமல் எமது உள்நின்று நடத்தும் திருவருட் சத்தியே, எமது பக்குவ நிலையில் யாம் கண்டுணர்ந்து வழிபடவும், எம்மை வழிப்படுத்தவும் மானிடப் போர்வையில் குருவாக வந்து எம்மை ஆட்கொள்கின்றது. சகலராகிய எம்மனோர்க்கு இறைவன் நேராக வராமல், குருவை அதிட்டித்து நின்றே அருள் செய்கின்றான். எனவே குருவே எமது கண்கண்ட தெய்வம் என்பதில் ஐயமில்லை. குருவின் அருளாலேயே இறைவனை அடைய முடியும்.

**குரு வழிபாடு:** மன, மொழி, மெய்களால் வணங்குதற்குரிய சிவ சொரூபமாக இருப்பதோடு குருவானவர் வாழ்வில் பின்பற்றுதற் குரிய சிறந்த இலட்சியமாகவும், ஆன்மிகத் துறையில் சந்தேகங்களைப் போக்கி நல்வழிப்படுத்தும் வழிகாட்டியாகவும் விளங்குகின்றார். குரு விடம் ஞான நூல்களைக் கேட்கும்போது அடக்கத்துடனும், பக்தி யுடனும் இருந்து, கவனம் முழுவதையும் சொல்லப்படும் விடயத்திற் செலுத்திக் கேட்க வேண்டும். குருவுக்குச் செய்யும் சேவை மிகச் சிறந்த திருத்தொண்டாகும். குருவின் உபதேசப்படி ஒழுகுதல் அவர்க்குச் செய்யும் வழிபாடுகளுளெல்லாம் முதன்மையானது. அவரவருடைய குருவை உள்ளன்போடு வழிபடுவதுடன், சமய குரவர், சந்தானகுரவர் ஆகியோருக்கும் குருபூசை செய்து வருவது அவசியம். நாயன்மார்களுள் திருமூலர், மங்கையற்கரசியார், குலச்சிறையார், அப்பூதியடிகள் ஆகியோர் குருவழிபாட்டால் வீடுபேறடைந்தோருட் சிலராவர். சந்தானகுரவர் முதலானோர் குருவழிபாட்டினாலேயே உயர் பதம் எய்தியவர்கள். தங்கள் குருவின்பால் தாங்கள் கொண்டிருந்த பக்தியையும் பெருமதிப்பையும் தங்கள் நூல்களிலும் அவர்கள் வெளிப்படுத்தியிருப்பதைக் காணலாம்.



**இலிங்க வழிபாடு:** சிவலிங்கம் சிவபெருமானின் அருவுருவத் திருமேனி. அது ஞானசோதி வடிவானது. பீடம் சத்தியையும், இலிங்கம் சிவத்தையும் குறிப்பது. சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு மார்க்கத்திலுள்ளவர்களும் திருக்கோயிலில் எழுந் தருளியிருக்கும் சிவலிங்கம் முதலிய திருமேனிகளை அவரவர் பக்கு வத்திற்கேற்ற முறையில் வழிபடுதற்குரியவர். சரியையாளர் இறைவனது உருவத் திருமேனிகளைச் சிவனெனக் கொண்டு வழிபடுவர். கிரியையாளர், அருவமாகிய பரம்பொருளே இலிங்கம் முதலிய திருவுருக் கொண்டருளினார் என்று தெளிந்து மந்திரத்தினால் சிவலிங்கத் தில் சிவபெருமானைப் பதித்து வழிபடுவர். யோகிகள் தமது உள்ளத்தில் நிலைத்திருக்கும் இறைவனே சிவலிங்கத் திருமேனியிலிருந்து பூசை கொண்டருள்வன் எனத் தெளிந்து வழிபடுவர். ஞானிகள் அன்பினால் வழிபடுவர். இவர்களுள் சரியையாளருக்கு வெளிப்படாது நின்றும், கிரியையாளருக்கும் யோகிகளுக்கும் அவர்கள் விரும்பிய வடிவாய்த் தோன்றி நின்றும், ஞானிகளுக்கு அவர்களது அன்பே தாமாகி எப்போதும் வெளிப்பட்டு நின்றும் சிவபெருமான் அருள் செய்வார். நாயன்மாருள் சேரமான் பெருமான், சாக்கியநாயனார், கலிக்காமர், பூசலார் முதலானோர் இலிங்க வழிபாடு செய்து வீடு பேறடைந்தவர்.

**இலிங்க வகைகள்:** சிவலிங்கம் பரார்த்தலிங்கம் அல்லது தாவர லிங்கம் எனவும், ஆன்மார்த்தலிங்கம் அல்லது இட்டலிங்கம் எனவும் இருவகைப்படும். யாவரும் வழிபடுவதற்காகத் திருக்கோயில்களில் நிலையாகத் தாபிக்கப்படுவது பரார்த்தலிங்கம் அல்லது தாவரலிங்கம். தானே தோன்றியதாயின் இது சுயம்புலிங்கம் எனப்படும். தாபிக்கப் பட்டதாயின் தாபித்தோருக்கேற்பப் பெயர்பெறும். விநாயகர் முதலிய கணர்களால் தாபிக்கப்பட்டது காணலிங்கம்; தேவர்களால் தாபிக்கப்பட்டது தைவிகலிங்கம்; இருடிகளால் தாபிக்கப்பட்டது ஆரிடலிங்கம்; மானிடரால் தாபிக்கப்பட்டது மானுடலிங்கம். பரார்த்தலிங்கத்தில் சிவபெருமான்சங்காரகாலம்வரை சாந்நித்தியரா யிருந்து ஆன்மாக்களுக்கு அனுக்கிரகம் செய்வார். ஆதிசைவ மரபில் உதித்து, மூவகைத் தீட்சையும் ஆசாரிய அபிடேகமும் பெற்று, வேதாகமங் கற்று வல்ல பண்டிதர்களே பரார்த்தலிங்கத்திற்குப் பூசை, திருவிழா முதலியன செய்தற்குரியோர் ஆவர். இனி, விசேட தீட்சை பெற்றவர்கள் தாமே சிவலிங்கத் திருமேனியைத் தீண்டி வழிபட்டு இன்புற வேண்டும் என்ற விருப்பத்தால், தமது விசேட தீட்சாகுருவிடமிருந்து பெற்று, அவரது உபதேசப்படி பூசிக்கும் சிவ லிங்கம் ஆன்மார்த்தலிங்கம் அல்லது இட்டலிங்கம் எனப்படும். அது சுவர்ணலிங்கம், படிகலிங்கம், இரத்தினலிங்கம், சைலலிங்கம் எனப் பலவகைப்படும். ஆன்மார்த்த பூசை ஆயுட்காலம் முழுதும் செய்தற் குரியது. அங்கவீனம், பிணி முதலியன இல்லாதவர்களாயும், சிவபூசா

விதிகளையறிந்து அனுட்டிக்க வல்லவராயும் உள்ளவர்களே முற்கூறிய இலிங்கங்களைப் பிரதிட்டை செய்து வழிபடுவதற்குரியவர்கள். ஏனையோர், பூசித்தவுடன் ஆற்றிலேனும் குளத்திலேனும் விடப்படும் சணிகலிங்க பூசையே செய்தற்குரியவர். சணிகலிங்கம் என்பது மண், அரிசி, அன்னம், ஆற்றுமணல், கோமயம், வெண்ணெய், உருத்திராக்கம், சந்தனம், சர்க்கரை, மா முதலியவற்றுள் ஒன்றால் சிவலிங்க வடிவாய் அமைத்துப் பூசிக்கப்படுவது.

சங்கம வழிபாடு: சிவனடியார் திருக்கூட்டம் சங்கமம் எனப்படும். சிவபெருமானிடம் மெய்யன்பு பூண்டொழுகுவோர் சிவனடியார் ஆவர். அவர்கள் சிவபெருமானை நினைத்தாலும், அவரைப்பற்றிக் கேட்டாலும், அவரது தெய்வத் திருமேனிகளைக் கண்டாலும் தம்வசமிழப்பர்; சிவபெருமானுக்குத் திருத்தொண்டு புரிந்தும், அவரது புகழ் பாடியும், திருவைந்தெழுத்தை ஓதியும் இன்புறுவர்; சிவபெருமானை நினைக்கச் செய்யும் சிவசின்னங்களணிந்த திருமேனியுடையவராக இருப்பர்; அடியார்க்குரிய பாவனை, செயல், வேடம் இவற்றையுடைய எவரும் சிவமாகக் கருதி வழிபடுதற்குரியவரேயாவர். சிவனடியார்களைக் காணச் செல்லுங்கால் கையில் யாதேனும் கொண்டு செல்லுதலும், அதனை அவர்முன் வைத்து வணங்கலும், அவர் அனுமதியுடன் இருந்து அவர் கூறும் நல்லுரைகளைக் கேட்டலும் முறையாகும். நமது இல்லத்துக்கு வரும் அடியாரை எதிர்கொண்டு வரவேற்று, இன்சொல் கூறி, ஆசனத்திருத்தி உபசரித்து வணங்கி, அவர் செல்லுங்கால் வழியனுப்பி வருதல் வேண்டும். நாயன்மாருள் திருநீலகண்டர், இயற்பகையார், சிறுத்தொண்டர், இளையான்குடிமாறனார் முதலியோர் சிவனடியார்களை வழிபட்டு வீடுபேறு எய்தியவர்களாவர்.

சங்கம வழிபாட்டின் சிறப்பு: ''அடியார் நடுவுளிருக்கும் அருளைப் புரியாய்'' என்று வேண்டுகின்றார் மணிவாசகப்பெருமான். ''ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனுங் கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகில் அவர் கண்டீர் நாம் வணங்குங் கடவுளாரே'' என்கிறார் அப்பர் பெருமான். சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருத்தொண்டத்தொகையில் ஒவ்வொரு நாயன்மாரையும் விதந்தோதி, அவர்களுக்குத் தாம் அடியாரெனக் கூறியதோடு, அப்பாலும் அடிசார்ந்த அடியார்க்கெல்லாம் தம்மை அடியாரெனவும் கூறிக்கொள்கிறார். சிவபிரானிடம் உள்ள அன்பு, அவரது அடியாரிடமும் பரவுவதால், அவர்மேலுள்ள அன்பு மேலும் வளர்ந்து உறுதிப்படுத்துகின்றது.

சிவனடியார் சங்கமம் எமது உள்ளத்திலுள்ள கீழ்த்தர எண்ணங்களையகற்றி, உயர்தர எண்ணங்களை உண்டாக்குகின்றது. உலகப் பற்றை நீக்கித் தெய்வப்பற்றை வளர்க்கின்றது; சிவனடியார்களுக்குச் செய்யும் திருத்தொண்டும், வழிபாடும் உள்ளத்தை விரைவில் தூய்மைப்படுத்திப் பத்தியையும் வைராக்கியத்தையும் வளர்க்க உதவுகின்றன.



## (உ) சைவ நாற்பாதங்கள்

சிவபெருமான் திருவடியை அடைதற்குரிய நான்கு மார்க்கங்களைச் சைவ நாற்பாதங்கள் என்பர். சைவ நன்னெறிகள், சைவ நாற்படிகள், சிவ புண்ணியங்கள் என்பன சைவ நாற்பாதங்களின் மறுபெயர்கள்.

சைவ நாற்பாதங்களாவன சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. இவை முறையே தாச மார்க்கம் (அடிமை நெறி), சற்புத்திர மார்க்கம், சக மார்க்கம், சன்மார்க்கம் எனவும் பெயர் பெறும்.

சரியை முதலிய நான்கும் உபாயச் சரியை, கிரியை, யோகம், ஞானம் எனவும், உண்மைச்சரியை, கிரியை, யோகம், ஞானம் எனவும் இருவகைப்படும். புகழ் முதலிய உலகப் பயனை நோக்கிச் செய்யும் சிவ புண்ணியங்கள் உபாயச் சரியை முதலியன. பத்தி காரணமாகச் செய்யும் சிவ புண்ணியங்கள் உண்மைச் சரியை முதலியன.

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களுள், சரியை இன்றேல் கிரியையும், கிரியை இன்றேல் யோகமும், யோகமின்றேல் சிவஞானமும், சிவஞானமின்றேல் சிவன் திருவடிப் பேறும் கைகூடா. ஆதலால் இவை நான்கும் முறையே ஒன்றற்கொன்று தொடர்பாய்ப் படிபோல் ஏற்றம் பெற்றுச் செல்வன. அரும்பாய், மலராய், காயாய், கனியாகிப் பயன் தருவன.

விரும்புஞ் சரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்புமலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே.

— தாயுமானவர்

### சரியை

ஆன்மாக்கள் இறைவனது உருவத் திருமேனிகளைத் தமக்குப் புறத்தே வணங்கிச் சிவாலயத்துக்கும் சிவனடியார்களுக்கும் திருத்தொண்டு செய்தல் சரியை வழிபாடு எனப்படும்.

இச் சரியை வழிபாடு சரியையிற் சரியை, சரியையிற் கிரியை, சரியையில் யோகம், சரியையில் ஞானம் என நால் வகைத்து.

சிவாலயத்திலே சிவபெருமானுக்கும், அவர் அதிட்டித்து நின்றருளும் குரு சங்கமம் ஆகியோருக்கும், செய்யும் திருத்தொண்டுகள் சரியையிற் சரியையாம். திருவலகிடுதல், திருநந்தவனம் வைத்தல் முதலியன சிவபெருமானுக்குச் செய்யும் திருத்தொண்டுகள். குரு சங்கமம் ஆகியோருக்குச் செய்யுந் திருத்தொண்டுகளாவன சிவாலயத்திலே அவரை உபசரித்தலும், அவர் ஏவிய பணிகளைச் செய்தலுமாம். (குரு—தீட்சாகுரு, போதக குரு, வித்தியாகுரு என மூவகை. சங்கமம்—சிவனடியார்.)

மூர்த்தி ஒருவரைத் தமக்குப் புறத்தே பூசித்தல் சரியையிற் கிரியை எனப்படும்.

உருத்திரமூர்த்தியைத் தம் மனத்திலே தியானித்தல் சரியையில் யோகம் ஆகும்.

சரியையில் யோகம் என்னும் நிலையிலே நிகழும் தியான பாவனையின் உறைப்பானதோர் அநுபவ உணர்வை அடைதல் சரியையில் ஞானமாகும்.

சரியை வழிபாட்டினாலே வரும் பயன் சிவசாலோக முத்தியடைதலாம். சிவசாலோக முத்தியாவது சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் சிவலோகத்திலே இன்புற்று வாழ்தல். (சா+லோகம்—ஒரே உலகம்) இம்முத்தி அபர முத்தி யெனவும், பதமுத்தியெனவும் பெயர் பெறும்.

## கிரியை

இறைவனது அருவுருத் திருமேனியை (சதாசிவனை—சிவலிங்கத்தை) அகத்தும் புறத்தும் பூசித்தல் கிரியை வழிபாடு ஆகும்.

இக் கிரியை வழிபாடு கிரியையிற் சரியை, கிரியையிற் கிரியை கிரியையில் யோகம், கிரியையில் ஞானம் என நான்கு வகைத்து.

மலர், திருமஞ்சனம், தூபம், தீபம், சந்தனம், திருவமுது முதலிய பூசைக்கு வேண்டிய பொருட்களை அமைத்துக்கொள்ளுதல் கிரியையிற் சரியையாகும்.

ஐவகைச் சுத்திபண்ணி, புறத்திலே உள்ள சிவலிங்கத்தில் சிவபெருமானைப் பாவனை செய்து வெளிப்படுத்திப் பூசை செய்தல் கிரியையிற் கிரியை எனப்படும். (பூதசுத்தி, தானசுத்தி, திரவியசுத்தி, மந்திர சுத்தி, இலிங்க சுத்தி என்பன ஐவகைச் சுத்திகள்.)



கிரியையில் யோகம் எனப்படுவது பூசை, ஓமம், தியானம் என மூன்று இடம் வகுத்துக்கொண்டு அகத்திலே செய்யப்படும் அந்தரியாகமாம் (மனசிலே செய்யும் பூசை).

கிரியையில் யோகம் என்ற நிலையிலே நிகழும் அந்தரியாக உறைப்பிலே தோன்றுவதோர் அநுபவ உணர்வை அடைதல் கிரியையில் ஞானம் எனப்படும்.

கிரியை வழிபாட்டினாலே பெறும் பயன் சிவசாமீப முத்தியாம். சிவசாமீப முத்தியாவது மைந்தற்குரிய உரிமை போலச் சிவபெருமானுக்குச் சமீபமாக இருந்து இன்பம் அநுபவித்து வாழ்தல். (சாமீபம்—சமீபம்—அண்மை) இம்முத்தி அபரமுத்தியெனவும், பதமுத்தியெனவும் படும்.

## யோகம்

சிவபெருமானை அகத்தே பூசித்தல் யோக வழிபாடாம். அது மனத்தை விடயங்களின் வழியிலே போகாவண்ணம் நிறுத்திச் சிவத்தைத் தியானித்து, பின்பு தியானிப்போனாகிய தானும் தியானமும் தோன்றாமல், தியானப் பொருளாகிய சிவன் ஒன்று மாத்திரமே விளங்கப்பெற்றுச் சமாதி நிலை யடைதலாகும்.

யோக வழிபாடு யோகத்திற் சரியை, யோகத்திற் கிரியை, யோகத்தில் யோகம், யோகத்தில் ஞானம் என நால்வகைத்து.

யோகத்திற் சரியை, இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம் என்னும் நான்கினையும் உடையது. இயமம் ஆவது கொல்லாமை, வாய்மை, கள்ளாமை, இரக்கம், வஞ்சனையில்லாமை, பொறையுடைமை, கலங்காமை முதலிய தருமங்களாம். நியமம் ஆவது தவம், தேவபக்தி, பூசை, ஞானசாத்திரம் கேட்டல், செபம், விரதம் முதலியனவாம். ஆசனமாவது பத்மாசனம் முதலிய எட்டு வகை இருக்கைகளாம். பிராணாயாமம் ஆவது பிராணவாயுவைத் தடுத்து நிறுத்தும் பயிற்சியாம்.

பிரத்தியாகாரமும் தாரணையும் யோகத்திற் கிரியை எனப்படும். பிரத்தியாகாரம் ஆவது மனத்தை ஐம்புலன் வழிச் செல்லாமல் தடுத்தல். தாரணையாவது மனத்தை ஒரு தானத்தில் நிறுத்துதல்.

யோகத்தில் யோகமாவது தியானமாம்; யோகத்தில் ஞானமாவது மனத்தைப் பரம்பொருளோடு ஐக்கியப்படுத்தி நிறுத்துதலாம்.

யோகத்தினால் வரும் பயன் சிவசாரூப முத்தியடைதல், சிவசாரூப முத்தியாவது சிவபெருமானையொத்த வடிவமுடையோராய் இன்பம் அநுபவித்து வாழ்தல். இம் முத்தி அபரமுத்தி யெனவும், பரமுத்தி யெனவும் படும். (சாரூபம்—ஒத்த உருவம்.)

### ஞானம்

பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள் உண்மையை அறிவிக்கும் ஞான நூல்களைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டை கூடுதல் ஞானத்தில் ஞான வழிபாடு எனப்படும்.

ஞான வழிபாடும் ஞானத்திற் சரியை, ஞானத்திற் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் என நால்வகைத்தாம்.

ஞான நூல்களைக் கேட்டல் ஞானத்திற் சரியை. கேட்டவற்றைச் சிந்தித்தல் ஞானத்தில் கிரியை. சிந்தித்தவற்றைத் தெளிதல் ஞானத்தில் யோகம். நிட்டை கூடுதல் ஞானத்தில் ஞானம். அது உள்ளத்தில் இன்பொடுங்கத் தூங்குதலாம்.

ஞான வழிபாட்டின் பயன் சாயுச்சிய முத்தி பெறுதலாம். சாயுச்சிய முத்தியாவது சிவபெருமானோடு தாடலை போல வேறறக் கலந்திருந்து பேரின்பம் அநுபவித்தலாம். இது பரமுத்தி யெனவும், அத்துவித முத்தியெனவும், சாயுச்சிய முத்தியெனவும் படும்.



## (ஊ) விரதங்கள்

எமக்கு எல்லா நலன்களையும் எப்பொழுதும் தந்துகொண்டிருக்கின்ற இறைவனை மறவாது நினைந்து, வாழ்த்தியும், வணங்கியும் இருத்தலே உயிரினத்தின் கடமையாகும். பகுத்தறிவற்ற பிற உயிரினத்திற்கு அது இயலாதாயினும், பகுத்தறிவு படைத்த மனித இனத்திற்கு அஃது இன்றியமையாதது. எனினும், உலகியல் சூழல்களால் அக் கடமையை இயற்ற இயலாத நிலையில் இருப்பதால், குறிப்பிட்ட சில நாட்களிலேனும் மக்கள் அக் கடப்பாட்டில் நிற்றல் வேண்டும். அந் நாட்களே விரத நாட்களாகும். விரதம் — தவம் — நோன்பு என்பன ஒரு பொருட் சொற்கள்.

மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு, உணவை விடுத்தேனுஞ் சுருக்கியேனும் மனம், வாக்கு, காயம் என்னும் மூன்றினாலும் கடவுளை விதிப்படி மெய்யன்போடு வழிபடுதல் விரதமாகும். இஃது ஆன்ம ஈடேற்றங் கருதிச் செய்யுஞ் சாதனை ஆகும். விரதம் ''நோன்பு'' என்றுங் கூறப்படும். பெரியோர் கூறும் புண்ணியம் ஏழினுள் ஒன்றான தவம் விரதம் அநுட்டித்தல். விரதம் அநுட்டிப்பதனால் மனம் புத்தி முதலிய உட்கருவிகள் தூய்மை அடையும். இதனால் ஞானம் — நல்லறிவு கைகூடும்.

### சிவ விரதங்கள்

சிவராத்திரி விரதம், பிரதோஷ விரதம், சோமவார விரதம், திருவாதிரை விரதம், உமாமகேசுர விரதம், கேதார விரதம், கலியாணசுந்தர விரதம், சூல விரதம், இடப விரதம் என எட்டாகும்.

### சிவராத்திரி

'இராத்திரி' என்பது இருட்காலம் என்பது யாவரும் அறிந்தது. எனினும், உண்மையான இருட்காலம், என்பது இறைவன் உலகம் முழுவதையும் ஒடுக்கிநிற்கும் காலம். இதனை ''சர்வசம்மாரகாலம்'', ''பிரளய காலம்'', ''ஊழிமுடிவு'' என்று பலவாறாகக் கூறுவர். இரவில் ஒளியின்றி உயிர்களின் நடமாட்டமில்லாது எங்கும் அமைதி நிலவுவதுபோல், இந்த ஊழி ஒடுக்க காலத்தில் பஞ்ச பூதங்களும், தநு, கரண, புவன போகங்களும் ஒன்றுமேயில்லாது உயிர்கள் செயலற்றுக் கிடப்பனவாம். ஆகவே அப்பொழுது அமைதியே நிலவும். இந்தப் பேரிருளில் தனித்து நிற்பவன் சிவபெருமான் ஒருவனேயாம்

நாம் நாள்தோறும் காண்கின்ற இரவு அனைத்துயிர்க்கும் உரிய சாதாரண இராக்காலம். ஆயின் உலக ஒடுக்க நிலையாகிய இரவு சிவனுக்கே உரிய சாதாரண இராக்காலமாகும். இதனாற்றான் இவ் விரவு "சிவராத்திரி" எனப் பெயர் பெற்றுள்ளது.

ஊழி முடிவில் ஒடுங்கிய உலகத்தை மீளத் தோற்றுவித்தற்காக இறைவன் சோதி வடிவான இலிங்கமாய் நின்று "இலளிதாதேவி" என்னும் பெயரோடு சத்தியைத் தோற்றுவிக்க, அத்தேவி இலிங்கப் பிரானை வணங்க, அவர் இலிங்கோற்பவராகத் தோன்றி, உலகின் மறு தோற்றத்தின் பொருட்டுப் பிரமா முதலியோரைப் படைத்துச் சிருட்டித் தொழிலை ஆரம்பிப்பார். இதனையே மாசிமாதத்துச் சதுர்த்தசித் திதியில் வரும் இரவும், அன்று இரவு மூன்றாம் சாமம் நடைபெறும் இலிங்கோற்பவ பூசையும் எடுத்துக்காட்டுகின்றன. சிவனிடத்தில் அன்பு பூண்டொழுகுவோர்க்கு அன்றைய நாள் சிறந்த நோன்பு நாளாகும்.

விரத முறை: சைவசமயிகள் யாவராலும் அநுட்டிக்கப்பட வேண்டிய விரதம் சிவராத்திரி விரதமாகும். மாசிமாதத்துத் தேய்பிறைச் சதுர்த்தசித்திதியில் சிவபெருமானைக் குறித்து அநுட்டிப்பது சிவராத்திரி விரதம். இந்நாளில் உபவாசம் இருப்பதோடு இரவு முழுவதையும் நித்திரையின்றிச் சிவபூசையிலும், சிவ வழிபாட்டிலும் செலவு செய்தல் வேண்டும். இரவில் நான்குசாமப் பூசைகளும் அவ்வக் காலங்களில் செய்தல் உத்தமம். இன்றேல் ஒருகாலத்திற் சேர்த்தேனும் செய்தல் வேண்டும். இது மத்திமம் ஆகும். நான்கு சாமமும் பூசை செய்வோர் முதற் சாமத்திற் பாலாலும், இரண்டாம் சாமத்திற் தயிராலும், மூன்றாம் சாமத்தில் நெய்யாலும் நான்காம் சாமத்தில் தேனாலும் பெருமானுக்கு அபிடேகம் செய்யக் கடவர். நான்குசாமப் பூசைகளிலும் வில்வத்தால் அர்ச்சிப்பது மேலான பலனைக் கொடுக்கும். இக்காலங்களில் விநாயகர்க்கும், சண்டேசுரர்க்கும் பூசை செய்தல் வேண்டும். சிவபூசை இல்லாதோர் நான்கு சாமமும் சிவாலய தரிசனம் செய்வதோடு, பஞ்சாட்சர செபம், சிவபுராணம் படித்தல், கேட்டல் முதலியவற்றில் இரவைக் கழித்தல் வேண்டும். உபவாசம் இருக்க இயலாதோர் நீரேனும் பாலேனும் உண்டு கொள்ளலாம். இரவு முழுவதும் இந்நாளில் நித்திரை விழிக்க முடியாதவர் பதினாலாவது நாழிகையில் வரும் இலிங்கோற்பவ காலம் வரையிலாயினும் நித்திரை ஒழித்தல் வேண்டும். இவ் இலிங்கோற்பவ காலத்தில் செய்யும் தரிசனமும் பூசையும் பெரும்பலன் நிறைந்தன. இறைவனின் திருவுளம் பற்றிய காலம் இதுவாகும்.



உபவாசம் மேற்கொண்டோர் அடுத்தநாட் காலையிலே நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு சூரியோதய ஆறு நாழிகைக்குள்ளே சிவனடியாரோடு பாரணம் பண்ணல் வேண்டும். பாரணம் பண்ணிய பின் பகலிலே நித்திரை செய்யவொட்டாது. (பாரணம்—உபவாசத்திற்குப் பின் உட்கொள்ளும் உணவு.)

சிவராத்திரி விரத பலன் பாவநீக்கமும், உலகம் எல்லா நலன்களும் பெற்றுச் செழித்தலுமேயாம்.

## சிவராத்திரியில் நான்குசாமப் பூசை விதி முறைகள்

| சாமம் | மலர் | பத்திரம் |
|---|---|---|
| 1ஆவது | தாமரை, அலரி | வில்வம் |
| 2ஆவது | சண்பகம், தாமரை | துளசி, வில்வம் |
| 3ஆவது | செங்கழுநீர், ஆத்தி, பிச்சி | முட்கிளுவை, வில்வம், அறுகு |
| 4ஆவது | நந்தியாவர்த்தம் | விளா |

| சாமம் | பழம் | தூபம் | ஓதும் வேதம் |
|---|---|---|---|
| 1ஆவது | வில்வம் | சாம்பிராணி | இருக்கு |
| 2ஆவது | பலா | சந்தனக்கட்டை | யசுர் |
| 3ஆவது | மாதுளம் | குங்குலியம் | சாமம் |
| 4ஆவது | நானாவித பழங்கள் | கர்ப்பூரம் | அதர்வம் |

## பிரதோஷ விரதம்

ஒவ்வொரு வளர்பிறை தேய்பிறை இரண்டிலும் 13ஆம் திதியாகிய திரயோதசித் திதியில் சூரிய அத்தமனத்திற்கு முன் ஒன்றரை மணி நேரமும், பின் ஒன்றரை மணி நேரமும் உள்ள காலம் பிரதோஷ காலம் எனப்படும். இக்காலத்தில் சிவபெருமானைக் குறித்து இவ் விரதம் அனுட்டிக்கப்படும். ஐப்பசி, கார்த்திகை, சித்திரை, வைகாசி ஆகிய மாதங்களில் ஒன்றில் வரும் சனிப்பிரதோஷத்தில் தொடங்கி இவ்விரதத்தை அனுட்டிக்கத் தொடங்கலாம். பகலில் உணவை விடுத்து, பிரதோஷ காலம் தொடங்குவதற்கு முன்பே நீராடி, சிவபூசை முடித்துச் சிவாலய தரிசனம் செய்து பிரதோஷகாலம்

கழிந்தபின் சிவனடியாரோடு உணவு கொள்ளல் வேண்டும். பிரதோஷ காலத்தில் சிவாலயத்தில் வலம்வந்து இடபதேவரையும் சண்டேசுரரையும் கும்பிடுதற்கு விசேட முறை உண்டு. பிருதிவியிலுள்ள தீர்த்தங்களெல்லாம் பிரதோஷ வேளையில் சிவதரிசனத்தின் பொருட்டு நந்திதேவரை வந்தடைவதாகப் புராணங்கள் கூறுவதனால், இந்நேரத்தில் நந்திதேவரது இரண்டு கொம்புகளுக்கும் இடையால் சிவதரிசனஞ் செய்தல் மிகவும் உத்தமமென அருள் நூல்கள் கூறுகின்றன.

இறைவன் தீர்த்தங்களின் வடிவாய் இருந்து உயிர்களது வினையைப் போக்கி, அவைகட்கு நலஞ் செய்பவன். அப்படியான தீர்த்தங்கள் நந்திதேவரிடம் பிரதோஷ வேளையில் வந்திருக்கும்போது அவருக்கூடாகச் சிவதரிசனஞ் செய்பவர்கள் அத்தீர்த்தத்தில் நீராடிச் சிவதரிசனஞ் செய்பவர்களாகின்றனர். இத் தீர்த்தத்தைத் தாண்டி வழிபடுவோர், தாங்கள் செய்த பாவத்தைத் தீர்த்தத்தில் கழுவி உயிரைத் தூய்மை செய்துகொள்வர்.

பல இடங்களில், பல காலங்களில் சென்றாடிப் பயன்பெறுதற்குரிய புண்ணிய தீர்த்தங்களின் பலன்களை, ஓர் இடத்தில் ஒரே பொழுதில் எல்லோரும் மானசீகமாக ஆடிப் பெறுதற்பொருட்டு, பிரதோஷப் பொழுதில் புண்ணிய வடிவான நந்தியம் பெருமானடியில் ஒன்றுதிரண்டு வர வைத்திருப்பது இறைவனது பேரருட் கருணைக்கோர் எடுத்துக்காட்டாகும். இப்படியான சிறந்த விரதத்தை விதிப்படி நோற்போர் மேன்மையான சித்திகளை எய்துவர். பிரதோஷகாலத்தில் செய்யும் ஆலய பிரதட்சணத்தைச் *சோமசூத்திரப் பிரதட்சணம் என்பர்.

உணவு உண்டல், உறங்கல், எண்ணெய் தேய்த்தல், நீராடல், நூல்களைப் படித்தல் முதலியன பிரதோஷ காலத்தில் தவிர்க்கப்படல் வேண்டும்.

பிரதோஷ விரத தரிசன பலன்: கடன், வறுமை, நோய், பயம், பாவம் முதலானவற்றின் நீக்கம்.

## திருவாதிரை விரதம்

மார்கழியில் வரும் திருவாதிரை நட்சத்திரத்தோடு கூடிய நன்னாளில் அனுட்டிப்பது திருவாதிரை விரதம். இந்த விரதம் சிவபெருமானுக்கு மிகவும் உகந்தது. இதனையொட்டியே சிவபெருமானை ஆதிரையின் முதல்வன் என்றும், ஆதிரையான் என்றும் கூறுவர். மார்கழித் திங்கள்

* இடபதேவரைத் தரிசித்து, அங்கு நின்றும் இடமாகச் சென்று சண்டேசுரரைத் தரிசித்து, சென்ற வழியே திரும்பி வந்து மீண்டும் இடபதேவரைத் தரிசித்து, அங்கு நின்றும் வலமாகச் சென்றும் வடதிசையைச் சேர்ந்து கோமுகையைக் கடவாது முன் சென்ற வழியே திரும்பி வந்து இடபதேவரைத் தரிசித்து, அங்கு நின்றும் இடமாகச் சென்று சண்டேசுரரைத் தரிசித்து, அங்கு நின்றும் திரும்பி கோமுகை வரையும் சென்று திரும்பிவந்து சண்டேசுரரைத் தரிசித்து அங்கு நின்றும் திரும்பி வந்து இடபதேவரைத் தரிசித்துப் பின்பு சிவலிங்கப்பெருமானை வணங்குதலாம்.



திருவாதிரை நாளன்று நடராசருக்குச் சிறப்புக்கள் நடைபெறும். அவற்றுள் சிதம்பரத்தில் நடப்பது மிகுந்த சிறப்புடையது. இவ்விரதம் சிதம்பரத்திலிருந்து அனுட்டிப்பது உத்தமோத்தமம். அங்கு ஆருத்ரா தரிசனம் செய்வதற்காக அநேகர் செல்வர். 'ஆருத்ரா' என்பது ஆதிரையைக் குறிக்கும் சொல். இவ்விரதத்தில் உபவாசம் இருத்தல் மேலாம்.

'சங்கரசங்கிதை' என்னும் வடமொழி நூலின் உபதேச காண்டத்தில் இவ்விரத மகிமை கூறப்பட்டுள்ளது. கச்சியப்பசிவாசாரியாருடைய மாணாக்கராகிய கோனேரியப்ப முதலியார் தமிழில் இதனை மொழிபெயர்த்துள்ளார்.

## தேவி விரதம்

வெள்ளிக்கிழமை, ஐப்பசி உத்தரம், நவராத்திரி என மூன்றும்.

## நவராத்திரி விரதம்

சூரியன் கன்னி இராசியில் செல்வது புரட்டாதி மாதமாகும்; இப் புரட்டாதி மாதம் வளர்பிறைப் பிரதமை முதல், நவமி முடிய வரும் ஒன்பது நாளும் கும்பத்திலே பூசைசெய்து தேவியை அனுட்டிக்கும் விரதமாம். இதில் வரும் அட்டமிக்கு மகா அட்டமி என்றும், நவமிக்கு மகா நவமி என்றும் பெயர். இதனால் இதை மகாநோன்பு அல்லது மகர் நோன்பு என்று சொல்லிக் கொண்டாடுவர். இது தேவி உபாசகர்களால் சிறப்பாகக் கொண்டாடப்படும் விரதமாகும். இந்த ஒன்பது இரவுகளிலும், முதல் மூன்று நாட்களிலும் வீரத்தை வேண்டித் துர்க்கையையும், அடுத்த மூன்று நாட்களிலும் செல்வத்தை வேண்டித் திருமகளையும், இறுதி மூன்று நாட்களும் கல்வியை வேண்டிக் கலைமகளையும் நினைந்து பூசித்து விரதம் அனுட்டிப்பர். நோன்பு நோற்பவர்கள் பிரதமையில் எண்ணெய் முழுக்காடி நோன்பைத் தொடங்க வேண்டும். இவ்விரதம் அனுட்டிப்போர் முதல் எட்டு நாளும் ஒருபோது உணவு உட்கொண்டு, ஒன்பதாவது நாளான மகாநவமியில் உபவாசம் இருத்தல் உத்தமம். இந்நோன்பு நாட்களில் அபிராமி அந்தாதி, குமரகுருபரர் சகலகலாவல்லிமாலை போன்ற பாடல்கள் சிறப்பாகப் பாராயணம் செய்யத்தக்கன. ஒன்பது நாள் இரவு பூசைகளும் முடிந்த பத்தாவது நாள் விஜயதசமி விழா நடைபெறும். இந்நாள் புதிதாக வித்தைகள் தொடங்குவதற்குரிய நன்னாளாகும். பெரும்பாலும் சிறுவர்களுக்கு விஜயதசமியிற்றான் ஏடு தொடக்கல் நடைபெறும். நவராத்திரி காலப் பூஜைக்குரிய சிறப்பு மலர்கள் கோங்கும், மகிழமுமாம். சிறப்பு நிவேதனப் பொருட்கள் வடை, தேன்குழல், எள்ளுருண்டை முதலியனவாம். விரதபலன் சகல சௌபாக்கிய சம்பத்துகளும் பெறுதலாம்.

## விநாயகர் விரதங்கள்

வெள்ளிக்கிழமை, விநாயக சதுர்த்தி, விநாயக சட்டி என மூன்ருகும்.

## விநாயக சதுர்த்தி விரதம்

மாதந்தோறும் வரும் வளர்பிறைச் சதுர்த்தித் திதி விநாயகர் விரதத்திற்குச் சிறந்த நாளாகும். ஆவணிமாத வளர்பிறைச் சதுர்த்தியில் அனுட்டிக்கப்படும் விநாயக சதுர்த்தி விரதம், மற்றும் விரத பலனிலும் பார்க்கக் கூடுதலான பலனை நல்கும் எனச் சமய நூல்கள் சாற்றுகின்றன. அந்நாளில் இளம்பிறைச் சந்திரனைப் பார்த்தலாகாது. பகலில் உபவாசம் இருந்து ஆலய தரிசனம் செய்தபின், இரவில் கொழுக்கட்டை, மோதகம் முதலியன விநாயகருக்கு நிவேதித்து உண்ணலாம். இந்நோன்பு நோற்பவர் விநாயகரை அறுகம் புல்லால் அர்ச்சிப்பது அளவிறந்த பலனைக் கொடுக்கும்.

## சுப்பிரமணியர் விரதம்

இளமையும், நீங்கா அழகுமுடைய முருகப்பெருமானின் திருப்பெயர்களுள் ஒன்று சுப்பிரமணியர். அப்பெருமானை நினைந்து நோற்றற்குரிய நோன்புகள் மூன்று. அவையாவன வெள்ளிக்கிழமை விரதம், கார்த்திகை விரதம், கந்தசட்டி விரதம் என்பனவாகும்.

## வெள்ளிக்கிழமை விரதம்

சுக்கிரவாரம் என்ருல் வெள்ளிக்கிழமை என்பது பொருள். வெள்ளிக்கிழமை விரதமாவது ஐப்பசி மாதத்து முதலாவது வெள்ளிக்கிழமை தொடங்கி, வெள்ளிக்கிழமை தோறுஞ் சுப்பிரமணியக் கடவுளைக் குறித்து அனுட்டிக்கும் விரதமாகும். இவ்விரத நாளில் உபவாசமிருத்தல் உத்தமம். அதற்கு இயலாதவர்கள் இரவிலே பழம் முதலியன உட்கொள்ளலாம். இதற்கும் இயலாதோர் ஒருபொழுது பகலில் உணவு கொள்ளலாம். இவ்விரதம் மூன்று ஆண்டுகளுக்கேனும் அனுட்டித்தல் வேண்டும். இவ்விரதத்தை முடிவு செய்யும் போது, விரதமிருக்குஞ் சாந்திக்கிரியைகளுடன் முடித்தல் வேண்டும். இக்கிரியை "உத்தியாபனம்" எனக் கூறப்படும். விரதபலனை அடையும் பொருட்டுச் செய்யும் கிரியை இதுவாகும். ஐப்பசி மாதத்துக் கடைசி வெள்ளிக்கிழமை உத்தியாபனஞ் செய்து கொள்ளுதற்கு உகந்த நாள் ஆகும்.



## கார்த்திகை விரதம்

கார்த்திகை மாதத்துக் கார்த்திகை நட்சத்திரம் முதலாகத் தொடங்கி, மாதந்தோறும் வரும் கார்த்திகை நட்சத்திரத்தில் சுப்பிரமணியக் கடவுளைக் குறித்து நோற்கும் விரதம் கார்த்திகை விரதமாகும். கிருத்திகை எனவும் இது கூறப்படும்.

கார்த்திகை நட்சத்திரத்திற்கு முதல் நாளாகிய பரணியில் ஆசாரமாக இருந்து, ஒருபோது உண்டு, மறுநாள் (கார்த்திகை நாள்) முருகனை முறைப்படி பூசைசெய்து வழிபாடாற்றி உபவாசமிருந்து, அடுத்த நாளாகிய ரோகிணியில் பாரணை செய்தல் உத்தமம். இது கைகூடாதவர் பழம் முதலியன இரவில் உட்கொள்ளக்கடவர். இவ் விரதம் பன்னிரண்டு வருடங்கள் அனுட்டித்தல் வேண்டும்; அரிச்சந்திரன், அந்திமான், சந்திமான் ஆகியோர் இவ்விரதத்தை அனுட்டித்துச் சித்திகள் அடைந்ததாக வரலாறு கூறுகின்றது. (அந்திமான்—சந்திமான் இடையெழு வள்ளல்கள்.)

## கந்தசட்டி விரதம்

ஐப்பசி மாதம் அமாவாசைக்கு அடுத்த பிரதமை முதற் சட்டி ஈருகிய ஆறு நாளும் அநுட்டிக்கும் விரதம் இதுவாகும். ஒவ்வொரு நாளும் காலையில் நீராடி முருகப்பெருமானை வழிபட்டு, சிறிதளவு நீர்மட்டும் அருந்தி உபவாசம் ஆறு நாளும் இருந்து, ஏழாம்நாள் சிவனடியார்களுடன் பாரணை செய்வது இவ்விரதத்திற்கு நியமமாகும். இதற்கு இயலாதவர் முதலைந்து நாளும் ஒருபொழுது உண்டு, சட்டியில் உபவாசஞ் செய்யக் கடவர். இவ்விரதம் ஆறு ஆண்டுகள் அனுட்டித்தல் வேண்டும். திருச்செந்தூர் போன்ற முருகன் திருத்தலங்கள் இந் நோன்பிற்குச் சிறந்தனவாம். ஈழத்திலும் மாவிட்டபுரம், நல்லூர், செல்லச்சந்நிதி, கொழும்பு கொம்பனித்தெரு அருள்மிகு சிவசுப்பிரமணியசுவாமி கோவில் போன்ற இடங்களில் சிறப்பாக இந்நோன்பு நோற்கப்பட்டு வருகின்றது.

பிரதமையில் சிவபெருமானது நெற்றியிலிருந்து தெறித்த பொறிகள் ஆறும் சரவணத்தில் ஆறு குழந்தைகளாகி, கிருத்திகைமுத லறுவரும் பாலூட்ட வளர்ந்து, உமாதேவியார் எடுக்க ஆறு திருமுகமும், பன்னிரண்டு திருக்கையுமுடைய ஒருருவாய் எழுந்தருளிய நாள் இக் கந்தசட்டி நாளாகும். சூரபதுமனை முருகன் சங்காரஞ் செய்த நாளும் இதுவேயாம். கந்தபுராண உபதேச காண்டத்தில் இவ் விரதம் பற்றிய செய்திகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. தேவர்கள் இவ்விரதத்தை நோற்றுப் பயன் பெற்றதாகவும் இந்நூல் கூறும்.

மறைகளின் முடிவால் வாக்கால் மனத்தினுல் அளக்கொ ணுமல்
நிறைவுடன் யாண்டு மாகி நின்றிடும் நிமல மூர்த்தி
அறுமுக உருவாய்த் தோன்றி அருளொடு சரவ ணத்தில்
வெறிகமழ் கமலப் போதில் வீற்றிருந் தருளி ஞனே.

**குறிப்பு :**

விரதம் அநுட்டிப்பவர் அவ்விரத நாட்களில் தவிர்க்க வேண்டியனவும், செய்யவேண்டியனவுமான கடமை விவரங்கள் :

காமம், கோபம் முதலிய குற்றங்கள் எல்லாவற்றையும் பற்றறக் களைதல் வேண்டும். தவருது வைகறையிலே நித்திரை விட்டெழுதல் வேண்டும், புண்ணிய தீர்த்தத்தை அடைந்து திருநீறு, வில்வ மரத்தடி மண், தருப்பை, கோமயம், திலம் என்பவைகளைச் சிரசிலே வைத்து, கையிலே பவித்திரம் சேர்த்துச் சங்கற்பஞ் சொல்லி நீராட வேண்டும். தியானம், செபம், பூசை, ஆலய தரிசனம், பிரதட்சணம், திருமுறைப் பாராயணம் முதலியன சிறப்பாகச் செய்தல் வேண்டும். திருக்கோயிலிலே இயன்றமட்டும் நெய்விளக்கு ஏற்றல், திருமஞ்சனத் அபிஷேகம்) திர வியம், நெய்வேத்தியத் திரவியங்கள் கொடுத்தல் வேண்டும். நோன்பு அழித்து உணவு அருந்தும்போது சிவனடியார் ஒருவரோடாயினும் உணவு கொள்ளல் வேண்டும். கோமயத்திலே மெழுகப்பட்ட தரையிலே இரவில் கடவுளைச் சிந்தித்துக்கொண்டு அதிசுத்தராய் நித்திரைசெய்தல் வேண்டும். மறுநாள் வைகறையில் எழுந்துவிடல் வேண்டும். உபவாச விரத நாளிற்கு முதல்நாள் ஒருபொழுது மாத்திரம் உணவுகொள்ளல் வேண்டும். உபவாச விரத நாளுக்கு அடுத்தநாள் காலையில் *நித்திய கருமம் இரண்டும் முடித்துக்கொண்டு மாகேசுர பூசை செய்து சூரியன் உதித்து ஆறு நாழிகையுள்ளே சுற்றத்தாரோடு பாரணம் பண்ணல் வேண்டும். பாரணம் பண்ணியபின் பகலிலே நித்திரை செய்யாது சிவத்தியானத்துடன் சிவபுராணங்களைக் கேட்டுக்கொண்டிருத்தல் வேண்டும். குறித்த ஒரு நோன்பை அநுட்டித்துவரும் ஒருவர், விதிப்படி அந்த நோன்பை உத்தி யாபனம் செய்தல் வேண்டும். தொடங்கிய விரதத்தை இடையே விடுவோ ரும், உத்தியாபனம் செய்யாதோரும் விரதபலனை அடையமாட்டார்.

**நீராடாதும், திருநீறு அணியாதும் மாகேசுர பூசைக்கோ அன்றி விரதத்திற்கோ உணவு பாகம் பண்ணுதல் சமய ஆசாரத்திற்கு ஒழுங் கற்ற செயலாகும். இது குளிக்கப் போய்ச் சேறு பூசுவதற்கு ஒப் பாகும் என்பர் பெரியோர்.**

*மலசலங் கழித்து தந்தசுத்தி செய்தலும் நீராடி அனுட்டானம் அல்லது சந்தியா வந்தனம் செய்தலும்.*

# 5. சமயாசாரியர் வரலாறுகள்

## (அ) திருஞானசம்பந்தமூர்த்தி நாயஞர்

சோழ நாட்டிலே, சீகாழிப் பதியிலே, அந்தணர் குலத்தில் கௌணியர் கோத்திரத்தையுடைய சிவபாதவிருதயருக்கும் மனைவியார் பகவதியாருக்கும் தவப்புதல்வராய் அவதரித்தவர் திருஞானசம்பந்த மூர்த்தி நாயஞர். இவர் மூன்றும் வயதிலே தந்தையாருடன் தோணி யப்பர் திருக்கோயிலுக்குப் போய், தந்தையார் திருக்குளத்திலே மூழ்கி நீராடும்பொழுது அவரைக் காணுமல், "அம்மே அப்பா" என்று அழ, சிவபெருமான் உமாதேவியாரோடு தோன்றி, உமாதேவியா ரைக்கொண்டு (ஞானப்) பாலூட்டுவித்து ஆட்கொண்டமையால் ஆளுடையபிள்ளையார் என்றும், திருஞானசம்பந்தர் என்றும் திருப்பெயர் வழங்கப்பெறுவாராயினர். "உனக்கு எச்சில் மயங்கப் பாலூட்டியவர் யார்?" எனத் தந்தையார் கடிந்தபொழுது, "தோடுடைய செவியன்" என்றெடுத்துத் தேவாரத் திருப்பதிகம் பாடியருள, தந்தையாரும் அடியார் பிறரும் ஆச்சரிய வசத்தராய் அகமகிழ்ந்தனர்.

மற்றைநாள் தந்தையார் தோளிற் சுமந்துசெல்லத் திருக்கோலக்கா என்னும் திருத்தலத்தையடைந்து, "மடையில் வாளை" என்ற திருப் பதிகத்தைப் பாடியருளி, இறைவன் பொற்ருளம் அருளப்பெற்றனர்.

சிலநாளின்பின் திருநீலகண்ட யாழ்ப்பாண நாயஞர் தம் மனைவி யார் மதங்கசூளாமணியுடன் நாயஞரைக் கண்டு வணங்கி அவரது அநுமதி பெற்று, அவர் அருளிச் செய்யும் தேவாரங்களை யாழிலே அமைத்து வாசிக்குந் திருப்பணியை மேற்கொண்டார்.

நாயஞர் அதன்பின் பல திருத்தலங்களையும் தரிசித்துத் தேவாரத் திருப்பதிகங்களைப் பாடிக்கொண்டு சிதம்பரத்தையடைந்து நடராசப் பெருமானைத் தரிசித்து "கற்றுங்கெரியோம்பி", "ஆடிஞய் நறுநெய் யொடு பால்" என்னும் திருப்பதிகங்களைப் பாடியருளினர்.

தந்தையாராற் சுமந்துசெல்லப்பட்டுத் திருத்தலயாத்திரைசெய்து வந்த நாயஞர், அங்ஙனம் செல்வதை விரும்பாமல் திருவரத்துறை என் னுந் திருத்தலத்துக்கு நடந்துசென்ருர். அதனுற் கால் நோவ, மாறன்

பாடி என்னும் பதியிலே தங்கினர்; திருவரத்துறைப் பெருமானது திருவருளால் அந்தணர்கள் கொண்டுவந்து கொடுத்த முத்துச்சிவிகை, முத்துக்குடை, முத்துச்சின்னம் என்பவற்றைப்பெற்று, இறைவன் திருவருளை வியந்து, ''எந்தையீசன் எம்பெருமான்'' என்னும் திருப்பதிகத்தைப் பாடி; சிவிகையிலே திருத்தல யாத்திரை செய்வாராயினர்.

மீண்டும் சீகாழிக்கு வந்து, உபநயனம் செய்யப்பெற்றபோது, அங்கு வந்திருந்த அந்தணர்க்குத் திருவைந்தெழுத்தின் பெருமையை விளக்கி, ''துஞ்சலும் துஞ்ச லிலாத போழ்தினும்'' என்ற திருப்பதிகத்தைப் பாடியருளினர்.

சீகாழியில் இருக்கும் நாளில் திருநாவுக்கரசுநாயனர், இவரைக் காண விரும்பி வந்து தரிசித்து நண்பராய் மீண்டார்.

பின்னர் தலயாத்திரை செய்யப் புறப்பட்ட நாயனர், திருப்பாச்சிலாச்சிரமத்தையடைந்து கொல்லிமழவன் மகளை வருத்திய ''முயலகன்'' என்னும் நோயை, ''துணிவளர் திங்கள்'' என்னும் திருப்பதிகம் பாடி நீக்கியருளினர்.

திருச்செங்குன்றூருக்கெழுந்தருளிச் சுவாமி தரிசனஞ் செய்திருக்கும் நாளிலே அங்கு பரவிய குளிர் சுரத்தை, ''அவ்வினைக்கிவ்வினை'' என்னும் பதிகம் பாடிப் போக்கியருளினர்.

திருவாவடுதுறையில் எழுந்தருளி இருந்தபொழுது தம்மைக் காணவந்த தந்தையார் செய்யவிருக்கும் வேள்விக்குப் பொன் கொடுக்க விரும்பி, ''இடரினும் தளரினும்'' என்னும் பதிகம் பாடி இறைவனிடம் பொன் பெற்றுக் கொடுத்தருளினர்.

திருத்தருமபுரம் என்னும் திருத்தலத்தை அடைந்து, திருநீலகண்டத்து யாழ்ப்பாண நாயனரது வேண்டுகோளின்படி திருப்பதிக இசை யாழிலே அடங்காவகையை யாவரும் உணர ''மாதர் மடப்பிடியும்'' என்றெடுத்து யாழ்முரிப் பதிகம் பாடியருளினர்.

திருச்சாத்த மங்கை என்னும் பதியை அடைந்து, திருநீலநக்க நாயனரது விருந்தினராய்ச் சிலநாளிருந்து பின் திருச்செங்காட்டங்குடியை அடைந்து சிறுத்தொண்ட நாயனரால் உபசரிக்கப்பெற்றார்.

பின்னர் திருமருகலுக்கெழுந்தருளி, ''சடையாய் எனுமால்'' என்னும் திருப்பதிகம் பாடி இறந்த வாணிக னுயிர்பெற்றெழச் செய்து திருமணமுஞ் செய்துவைத்தருளினர்;



திருப்புகலூருக்குச் சென்று சுவாமிதரிசனஞ்செய்து, முருகநாயனரது திருமடத்திலே, எழுந்தருளி இருக்கும் நாளிலே, திருநாவுக்கரசு நாயனரும் அவ்விடம் வந்து சேர, இருவரும் பல தலங்களுக்கும் யாத்திரைசெய்து வணங்கிப் பதிகம்பாடிக்கொண்டு திருவீழிமிழலையை அடைந்தனர்.

திருவீழிமிழலையிலே பஞ்சம் உண்டாக, அடியவர்களுக்கு அன்னதானஞ் செய்தற்பொருட்டு இறைவனிடம் படிக்காசு பெற்று, அது வாசி தீரவேண்டி, ''வாசி தீரவே காசு நல்குவீர்'' என்று பதிகம் பாடியருளினர்.

பின் திருநாவுக்கரசு நாயனருடன் வேதாரணியத்தை (திருமறைக்காட்டை) அடைந்து, வேதங்களாற் பூட்டப்பெற்ற திருக்கதவைத் திருநாவுக்கரசு நாயனர் திறக்கப் பாடியருளியபின், அது திறக்கவும் அடைக்கவும் தக்கதாக அமையுமாறு, ''சதுரம் மறைதான்'' என்னும் பதிகம் பாடி அடைத்தருளி, அங்குச் சிலகாலம் சுவாமி தரிசனஞ் செய்திருந்தார்.

அந்நாளிலே, மதுரையில் இருந்து மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் அனுப்பிய வேண்டுகோளை ஏற்று, நாயனர் அங்குப் புறப்பட்டபோது அப்பர் தடுத்தருள, ''வேயுறு தோளிபங்கன்'' என்னும் பதிகம் பாடி அவரை உடன்படவைத்தனர்.

பின்னர் மதுரையை அடைந்து, மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் எதிர்கொண்டு வணங்கி அழைக்க, திருவாலவாய்ப் பெருமான் எழுந்தருளிய திருக்கோயில் எங்குளது என வினவி, அவர் காட்ட அப்பெருமான்மீது, ''மங்கையர்க்கரசி'' என்னும் பதிகத்தைப் பாடியருளினர். அந்தத் திருமடத்திலே நாயனர் எழுந்தருளியிருத்தலைப் பொறுமல் சமணர் மடத்துக்குத் தீ வைத்தபோது, ''செய்யனே திருவாலவாய் மேவிய'' என்னும் பதிகத்தைப் பாடியருள, அத்தீ பாண்டியன்பால் வெப்புநோயாய் அமைந்து வருத்தியது. அந்நோய் சமணரது மருந்து மந்திரங்களால் நீங்காமல் அதிகரிக்கவே மங்கையர்க்கரசியாரின் வேண்டுகோளின்படி அதனை நீக்கியருளும்படி நாயனர் அரண்மனைக்கு எழுந்தருளினர். சமணர் சமயவாதம் புரிதற்பொருட்டு ஆர்ப்பரித்தெழுந்தனர். மங்கையர்க்கரசியார் அதைக் கண்டு அஞ்சினர். அவரது அச்சத்தை நீக்கியருளும் பொருட்டு, ''மானினேர்விழி மாதராய்'' என்னும் பதிகத்தைப் பாடியருளினர்; பின் பாண்டியனுக்குத் திருநீறு சாத்தி, ''மந்திரமாவது நீறு'' என்று

பதிகம் பாடியருள வெப்புநோய் நீங்கிற்று. வாதம்புரிய முற்பட்ட சமணருடன், ''தளிரிளவளரொளி'' என்ற பதிகமெழுதிய ஏட்டைத் தீயிலிட்டுப் பச்சையாய் எடுத்து அனல்வாதமும், ''வாழ்க அந்தணர்'' என்ற பதிகம் எழுதிய ஏட்டை ஆற்றிலிட்டு எதிரேறச் செய்து புனல்வாதமும் புரிந்து, சமணரை வென்று, சைவசமயத்தின் பெருமையை நிலைநாட்டியருளினர். பாண்டியன் மனக்கோட்டமும் கூனும் நிமிர்ந்து சைவனுனன். மக்களும் மீண்டும் சைவராயினர். அரன் நாமமே எங்கும் சூழ்ந்தது. சைவத்துறை எங்கும் விளங்கிற்று. பூத பரம்பரை பொலிந்தது.

நாயனர் பாண்டி நாட்டில் உள்ள தலங்களைத் தரிசித்துக் கொண்டு சோழநாட்டுக்குப் புறப்பட்டு, அந்நாட்டுத் தலங்களைத் தரிசித்து வரும்போது, காவிரிக்கரைக்கு எதிரில் உள்ள திருக்கொள்ளம்பூதூருக்குப் போக விரும்பினர். அடியாருடன் ஓடத்திலே ஏறி அதனைச் செலுத்துவோர் ஆரும் இன்மையால், ''கொட்டமே கமழும்'' என்று பதிகம் பாடியருள, அது தானுக ஓடிக் கரை சேர்ந்தது.

அரசன் நாமத்தை ஓதியபடி அடியார்கள் புடைசூழப் போதி மங்கை என்ற இடத்தை அடைந்தபொழுது, புத்தர் தலைவனை புத்தநந்தி என்பவன் எதிர்த்தெழுந்தான். நாயனருடன் வந்த அடியார் ஒருவர் நாயனரது பஞ்சாக்கரப் பதிகப் பாடலான 'புத்தர் சமண கழுக்கையர்' என்ற பாடலைப் பாட, அவன் தலையிலே இடி இடித்தது. அவ் வடியாரே ஏனைப் புத்தரோடு வாதிட்டுச் சென்றுர்.

பின் நாயனர் திருப்பூந்துருத்தியை அடைந்தார். அங்கே அப்பர் சுவாமிகள், நாயனரது சிவிகை தாங்குவோருடன் தாமும் சேர்ந்து தாங்கிவர, அதனை அறிந்த நாயனர் சிவிகையினின்றும் இறங்கினர். இருவரும் ஒருவரை ஒருவர் வணங்கி மகிழ்ந்து அவ்வூரிற் சிலநாளிருந்தனர்.

திருப்பூந்துருத்தியினின்றும் புறப்பட்ட நாயனர் சீகாழிக்கு மீண்டும் வந்து, பின் தொண்டைநாட்டுத் தலங்களைத் தொழுது, திருவோத்தூருக்குச் சென்று, அங்குள்ளோரது வேண்டுகோட்படி, ''பூத்தேர்ந்தாயன'' என்று பதிகம்பாடி ஆண்பனைகளைப் பெண் பனைகளாக்கியருளினர்.

திருமயிலாப்பூரை அடைந்து, சிவநேசச்செல்வர் மகள் பூம்பாவையின் வெந்த எலும்பையும் சாம்பரையும், ''மட்டிட்டபுன்னை'' என்னும் பதிகம்பாடி மீண்டும் உயிர்பெற்றெழும்படி செய்து சீகாழிக்கு மீண்டார்.



நாயனர் அப்பொழுது பதினறு வயதடைந்திருந்தமையால், தந்தையார் திருமணநல்லூரில் வாழ்ந்த நம்பியாண்டார் நம்பி மகளை மணமகளாகத் தேர்ந்து திருமண நிகழ்ச்சிகளை நடத்தினர். நாயனர் அக்கினியை வலம்வரும்போது சிவத்தியானம் மேலிடத், திருக்கோயிலுக்குப் புறப்பட்டார். மணப்பெண்ணும் சுற்றத்தாரும் அவருடன் சென்றனர். அங்கே நாயனர் 'நல்லூர்ப் பெருமணம்' என்ற பதிகத்தைப் பாடியருள, இறைவனருளால் ஒரு சோதி தோன்றியது. யாவரையும் சோதியுட்புகுமாறு அசரீரி கூறிற்று. நாயனர், ''காதலாகி'' என்ற பதிகத்தைப் பாடி மணமகளுடனும் மணங்காண வந்தவர்களுடனும் சோதியுட்புகுந்து சிவபதமடைந்தார். திருஞானசம்பந்தமூர்த்திநாயனரின் குருபூசைத் தினம், வைகாசி மூலம்.

## (ஆ) திருநாவுக்கரசு நாயனர்

திருமுனைப்பாடி நாட்டிலே, திருவாமூரிலே, வேளாள மரபிலே, புகழனுருக்கும் அவர் மனைவியார் மாதினியாருக்கும் மகளாகத் திலகவதியாரும், மகனுக மருணீக்கியாரும் அவதரித்தனர். மருணீக்கியாரின் தமக்கையாரான திலகவதியார் மணப்பருவம் அடைந்தபொழுது, கலிப்பகையாரை அவருக்கு மணஞ்செய்வதெனப் பெற்றோர் தீர்மானித்திருந்தனர். சிலகாலஞ் செல்லப் பெற்றோர் சிவபதமடைந்தனர். மணமகனை கலிப்பகையாரும் யுத்தகளத்திலே இறந்தார். திலகவதியார் தம்பியார் பொருட்டு உயிர் தாங்கி இருந்து திருவதிகைப் பெருமானுக்குத் தொண்டுசெய்து வாழ்ந்தார்.

தமக்கையாரது பாதுகாப்பிலே வாழ்ந்த மருணீக்கியார் இளமையிலேயே கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கினர். அவருடைய மனம் துறவு நெறியில் நாட்டங்கொண்டது. அதனல், பாடலிபுரமென்னும் திருப்பாதிரிப்புலியூரிலிருந்த சமணப் பள்ளியிலே சேர்ந்து சமணத் துறவியானர். சமண நூல்களைக் கற்றுப் பாண்டித்தியமடைந்து பௌத்தர்களை வாதில் வென்று, தருமசேனர் என்னும் பெயரோடு சமணசமய குருவாய் விளங்கினர்.

திலகவதியார் தம்பியாரின் நிலைகண்டு வருந்தி, அவரை மீண்டும் சைவசமயியாக்கியருள வேண்டுமெனத் திருவதிகைப் பெருமானிடம் விண்ணப்பித்து வந்தார். பெருமானுடைய திருவருளால் தருமசேனருக்குச் சூலைநோயுண்டாயிற்று. தமது மருந்தினுலும் மந்திரத்தினுலும் அந்நோய் நீங்காமைகண்ட சமணர், அவரைக் கைவிட்டனர். தருமசேனர் தமக்கையாரைத் தம்மிடம் அழைக்க முயன்றும் அது கைகூடாமற் போகவே, அவரிடம் வந்து வணங்கித் தம்மைக் காத்தரு

ளும்படி வேண்டினர். திலகவதியார் அவருக்கு விபூதி சாத்தி, அவ் உடல்நோயை மாத்திரமன்றி உயிர் நோயையும் நீக்கியருளவல்ல வைத்தியநாதரான சிவபெருமானை வணங்கும்படி உபதேசித்து, திருவதிகை வீரட்டானேசுவரர் சந்நிதிக்கு அழைத்துச் சென்றார்.

மருணீக்கியார், பெருமானது சந்நிதியை அடைந்தமாத்திரத்திலே, பாடும் வல்லமையுண்டாக, ''கூற்றாயினவாறு'' என்று தொடங்கித் தேவாரத் திருப்பதிகம் பாடி வணங்கினர். அவரது சூலைநோய் நீங்கிற்று. அவர் இறைவனாலே ''திருநாவுக்கரசு'' என்னும் திருப்பெயர் சூட்டப்பெற்றார். சூலைநோய் தந்து தம்மையாட்கொண்ட இறைவனின் பெருங்கருணையை எண்ணியெண்ணி மனமுருகிய அவர் அப் பெருமான் எழுந்தருளியிருக்கும் திருத்தலந்தோறும் சென்று வணங்கித் தேவாரப்பதிகம் பாடி வருவாராயினர்.

தருமசேனர் சைவராய்த் திருநாவுக்கரசு என்னுந் திருப்பெயரோடிருத்தலை அறிந்த சமணர், அவரை அழைத்துத் தண்டிக்குமாறு தம் அரசனாகிய மகேந்திரப் பல்லவனை வேண்டினர். அரசன் நாயனாரை அழைத்துவரும்படி மந்திரிமாருக்குப் பணித்தான். மந்திரிமார் நாயனாரிடம் வந்து அரசனாணையை விண்ணப்பித்தபொழுது, அதனை மதியாத நாயனார், ''நாமார்க்கும் குடியல்லோம்'' என்னும் திருத்தாண்டகத்தைப் பாடி மறுத்தருளினர். பின்னும் அவர்கள் பணிந்து வேண்டி ''இறைவனருளால் ஆவன ஆகுக'' என்றெண்ணி மகேந்திர பல்லவனிடம் சென்றார்.

அங்கே சமணர்கள் அரசனது உடன்பாட்டோடு நாயனாரைச் சுண்ணாம்பறையிலே (ஏழுநாள்) அடைத்துவைத்தபொழுது ''மாசில் வீணையும்'' என்ற பதிகம்பாடி ஒருனமுமின்றி விளங்கினர்; நஞ்சுகலந்த பாற்சோற்றை உண்பித்தபொழுது ''நஞ்சுண்ட பெருமானது அடியார்க்கு நஞ்சும் அமுதாம்'' என உண்டு, அதனாலும் ஊறுபடாதிருந்தார்; யானையை ஏவியபொழுது ''சுண்ணவெண் சந்தனச் சாந்தும்'' என்று பதிகம் பாட, அவ்யானை அவரைப் பணிந்து சென்றது. கல்லோடு கட்டிக் கடலிலே போட்டபொழுது, ''சொற்றுணை வேதியன்'' என்னும் பதிகம் பாட, கல்லே தெப்பமாக மிதந்து நாயனாரை திருப்பாதிரிப்புலியூர்த் திருக்கோயிலின் பக்கத்திலே கரைசேர்ந்தது. நாயனாரிடத்து விளங்கிய சைவசமய மகிமையை உணர்ந்த பல்லவ மன்னன் சைவசமயத்தைத் தழுவினன். சைவசமயமே மெய்யென உணர்ந்த காடவன் என்பவனும் பாடலிபுரத்துச் சமணர்களது பள்ளிகளையும் பாழிகளையும் அழித்து, அவற்றின் கற்களைக் கொண்டு திருவதிகையிலே ''குணரத வீச்சரம்'' என்னும் கோயிலைக் கட்டினன்.



நாயனார் பின் பல தலங்களையும் தரிசித்துக்கொண்டு திருப்பெண்ணாகடத்தை யடைந்து, திருத்தூங்கானை மாடத் திருக்கோயிலிலே ''பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம்'' என்னும் பதிகம் பாடித் தமது உடம்பிலே சூலக்குறியும் இடபக்குறியும் பொறிக்கப் பெற்றார்.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரது பெருமையை அறிந்த நாயனார், அவரைத் தரிசிக்க விரும்பிச் சீகாழிக்குச் சென்று அவரடி பணிந்த பொழுது, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் அவரைத் தூக்கி ''அப்பரே'' என்றழைத்து அன்பு பாராட்டி வணங்கப் பெற்றார்.

பின்னர் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருடன் சென்று சீகாழி, திருக்கோலக்கா என்னும் தலங்களைத் தரிசித்து வணங்கினர். சம்பந்தப் பிள்ளையாரிடம் விடை பெற்றுப் பல தலங்களையும் தரிசித்து வணங்கிக்கொண்டு திருச்சத்திமுற்றம் என்னும் தலத்தை யடைந்து, ''கோவாய் முடுகி'' என்னும் பதிகம் பாடித் தமது தலைமேல் திருவடி சூட்டியருளுமாறு வேண்டினர். அவரது வேண்டுகோள் திருநல்லூர் சேர்ந்தபொழுது நிறைவேறிற்று.

திங்களூரில் இருந்த அப்பூதியடிகள் திருநாவுக்கரசுநாயனாரின் மகிமையைக் கேள்வியுற்று, அவர்மேல் அளவிறந்த அன்பினராய், அவர் பெயராலே தான தருமங்கள் செய்துவந்தார். அங்கு எழுந்தருளிய அப்பர் சுவாமிகள் அவரது அன்புடைமையை அறிந்து, அவரது இல்லத்திலே திருவமுது செய்ய உடன்பட்டார். அமுதளித்தற்கான வாழைஇலை அரியச் சென்ற தம் புதல்வன் பாம்பு கடித்திறக்கவும் அதன் பொருட்டு வருந்தாமல், அப்பூதியடிகளும் மனைவியாரும் நாயனாரை அமுது செய்தருளுமாறு வேண்டினர். அங்கு நிகழ்ந்ததைத் திருவருளாலுணர்ந்த நாயனார், ''ஒன்று கொலாம்'' என்னும் பதிகம் பாடி விடத்தாலிறந்த புதல்வனை உயிர்பெற்றெழச் செய்தருளினர்.

நாயனார் அங்கிருந்து புறப்பட்டு, தலயாத்திரை செய்துவரும் போது, திருப்புகலூரிலுள்ள முருகநாயனாரின் திருமடத்திலே சம்பந்தப் பிள்ளையாரை மீளவும் சந்திக்கப் பெற்றார். பின் அவருடன் சேர்ந்து திருவீழிமிழலையை அடைந்து அங்குப் பஞ்சத்தால் அடியார் உணவின்றி வருந்துவதை நீக்கும்பொருட்டு இறைவனை வேண்டிப்

படிக்காசு பெற்று அன்னதானஞ் செய்தருளினர். வேதாரணியத்தை யடைந்து சம்பந்தப் பிள்ளையாரது வேண்டுகோட்படி, "பண்ணினேர் மொழியாள்" என்ற பதிகம் பாடி, வேதங்களாலே பூட்டப்பட்டிருந்த திருக்கதவைத் திறக்கும்படி செய்தருளினர். இருவரும் நேர் வாயிலிற் சென்று மறைக்காடரைத் தரிசித்தபின், அப்பர் கேட்டுக் கொண்டதற்கிணங்க, சம்பந்தப் பிள்ளையார் அத்திருக்கதவு (அடைக்கவும் திறக்கவும் தக்கதாக) அடைக்கப் பாடியருளினர்.

பல தலங்களையும் தரிசித்துப் பதிகம் பாடிக் கொண்டு தென் கயிலையான திருக்காளத்தியை அடைந்த அப்பரடிகளுக்கு, இமய மலையை அடுத்துள்ள வடகயிலையைத் தரிசிக்கும் விருப்பம் உண்டாயிற்று. அதனல் காசி முதலிய வடநாட்டுத் தலங்களையும் தரிசித்துக் கொள்ள வடகயிலையை நோக்கி நடந்தார், மலைச்சாரலிலே நெடுந் தூரம் நடந்து கால்கள் புண்பட்டுத் தளர்வெய்தினவாயினும், மனந் தளராமல் தவழ்ந்தும் உருண்டும் சென்ருர். அவரது துன்பத்தை நீக்கியருளத் திருவுளம் கொண்ட பெருமான் தாம் திருக்கயிலையில் வீற்றிருந்தருளும் திருக்கோலத்தைத் திருவையாற்றிலே காட்டியருளுவாரெனவும், அங்குள்ள வாவியிலே மூழ்கித் திருவையாற்றை அடையுமாறும் பணித்தருளினர். நாயனர் அவ்வாவியிலே மூழ்கித் திருவையாற்றை அடைந்து கயிலைக் காட்சியைத் தரிசித்தார்.

திருநாவுக்கரசு நாயனர் மீண்டும் திருஞானசம்பந்தப் பெருமானைச் சந்தித்துக் கொண்டு பாண்டிநாட்டை யடைந்து பல தலங்களைத் தரிசித்து வணங்கித் திருப்புகலூருக்கு வந்து, அங்கே ஒவ்வொரு நாளும் உழவாரத் திருத்தொண்டு செய்து வருவாராயினர். இறைவன் நாயனரது பற்றற்ற தன்மையை உலகினருக்குக் காட்டும் பொருட்டு அவர் புல் பூண்டுகளைச் செருக்கும் இடந்தோறும் பொன்னும் மணியும் தோன்றச் செய்தருளினர். நாயனர் அவற்றை வெறுங் கற்களாக மதித்துப் புறத்தே எறிந்தார்.

இங்ஙனம் திருத்தொண்டு செய்திருந்த நாயனர் ஒரு தினம் இறைவன் திருவடி சேரவேண்டு மென்னும் விருப்பம் மீதூர, "எண்ணுகே னென்சொல்லி எண்ணு கேனே" என்று தொடங்கித் திருப்பாட்டின் இறுதிதோறும், "உன்னடிக்கே போதுகின்றேன் பூம் புகலூர் மேவிய புண்ணியனே" என்று பாடித் திருவடிநீழலை அடைந்தார். திருநாவுக்கரசு நாயனர் முத்தியடைந்த தினம் சித்திரைச் சதயம்.



## (இ) சுந்தரமூர்த்தி நாயனர்

திருக்கயிலாயத்திலே சிவபெருமானுக்குப் பூமாலை தொடுத்தல் முதலிய திருத்தொண்டுகள் செய்துகொண்டிருந்த ஆலாலசுந்தரர் ஒருநாள் பூவெடுக்கப் பூங்காவிற்குப் போனபோது, அவ்விடத்திலே பூக்கொய்துகொண்டிருந்த அநிந்திதை, கமலினி என்னும் உமையம்மையாரின் சேடியரிடத்திலே விருப்புற்று நின்றமையாலும், அம் மாதர்களும் இவரிடத்திலே மனங்கொண்டமையாலும், அவர்களைப் பூமியிலே பிறக்கும்படியும் அவர்களது விருப்பம் நிறைவுற்றதும் மீண்டும் கைலையை அடைந்து தொண்டு செய்யும்படியும் இறைவன் அருள்செய்தார். அதனல் ஆலாலசுந்தரர் திருமுனைப்பாடி நாட்டிலே திருவாரூரிலே சடையனர் என்னும் ஆதி சைவ அந்தணருக்கு இசை ஞானியாரிடத்திலே அவதரித்து நம்பியாரூரர் என்னும் திருப்பெயர் பெற்ருர்.

நம்பியாரூரரை அந்நாட்டரசராகிய நரசிங்கமுனையர் கண்டு, சடையனரிசைவுடன் கொடுக்கத் தமக்குப் புத்திரராகப் பெற்றுத் தமது குலத்திற்குரிய வில்வித்தை முதலியவற்றையும் அந்தணர் குலத்துக்குரிய வேதாகம சாத்திரங்களையும் கற்பித்துச் சிறப்புடன் வளர்த்தார்

பெற்ருேரும் நரசிங்கமுனையரும் நம்பியாரூரர் மணப்பருவம் எய்தியபோது புத்தூர்ச் சடங்கவி சிவாசாரியரின் மகளை மணமகளாக நிச்சயித்து மணவினை நடாத்தத் தொடங்கினர். நம்பியாரூரர் மணக்கோலத்தோடு மணமகளில்லத்திலே மணவறையிலே இருந்தார். அப்பொழுது சிவபெருமான் கிழப் பிராமண வடிவந் தாங்கி வந்து திருமணம் நிறைவேருதபடி ஆவண ஓலை காட்டி வழக்காடித் தடுத்து, நம்பியாரூரரைத் தமது அடியவராகக் கொண்டார்.

அடிமைகொண்ட சிவபெருமான் அவரைத் திருவெண்ணெய் நல்லூருக்கு அழைத்துச் சென்ருர். அங்கே "நீ நம்மோடு வன் சொற்களைச் சொல்லி வன்ருெண்டன் என்ற பெயரைப் பெற்றனை. ஆவண ஓலை காட்டியபொழுது என்னைப் "பித்தன்" என்ருய்; பித்த னென்றே தொடங்கி என்னைப் பாடு. பாடலே நீ எனக்குச் செய்யும் அர்ச்சனையாம்" என்று இறைவன் அருள்செய்ய, வன்ருெண்டர் 'பித்தா பிறைசூடி" என்ற தேவாரப் பதிகத்தைப் பாடியருளினர்.

பின்னர், தலயாத்திரை செய்து திருவதிகைப்பதியை அடைந்தார். அது திருநாவுக்கரசர் அருள்பெற்ற திருத்தலமாதலால் அங்கே கால் மிதித்துச் செல்ல அஞ்சி, அத்தலத்தின் புறத்திலே உள்ள சித்த வட மடத்திலே தங்கி அன்றிரவு துயில்கொண்டபொழுது இறைவன் அவருக்குத் திருவடி தீட்சை செய்ய, ''தம்மானை அறியாத சாதியார் உளரே'' என்றெடுத்துப் பதிகம் பாடியருளினர்.

நம்பியாரூரர் தில்லைப்பதியை அடைந்து சுவாமி தரிசனஞ் செய்தபொழுது சிவபெருமான், ''சுந்தரா நம்மை ஆரூரிலே வணங்க வருக'' என்று அருள்புரிந்தார்.

சுந்தரமூர்த்திநாயனர் திருவாரூரை அடைந்து சுவாமிதரிசனஞ் செய்து திருப்பதிகம் பாடிக்கொண்டு அங்கே தங்கியிருந்தார். அங்கே கமலினி என்பவர் பரவையார் என்னும் பெயரோடு உருத்திர கணி கையர் குலத்திலே அவதரித்து இறைபணி செய்து வந்தார். ஒரு நாள் சுந்தரரும் பரவையாரும் திருக்கோயிலிலே ஒருவரையொருவர் கண்டு முன்னைத் தொடர்பால் விருப்புற்று இறைவனருளால் மணஞ் செய்தனர். திருமணக் கோலத்துடனிருந்த நாயனரிடத்திலே இறைவன் ''நாம் உனக்குத் தோழரானோம். நீ கொண்ட மணக் கோலத்துடன் எப்பொழுதும் இருப்பாய்'' என்று அருள் செய்தனர். அன்று தொடக்கம் தம்பிரான் தோழர் என்னுந் திருப்பெயர் அவருக்கு வழங்குவதாயிற்று.

பரவையர் மாளிகையிலே தங்கியிருந்த சுந்தரர் திருவாரூர்த் தியாகராசப்பெருமானை நாள்தோறும் தரிசித்து வணங்கிப் பதிகம் பாடி வருநாளில், ஒருநாள் அத்திருத்தலத்திலே தேவாசிரியர் மண்ட பத்திலிருந்த அடியார்களை வணங்கி, ''தில்லைவாழந்தணர்தம்'' என்று தொடங்கும் திருத்தொண்டத் தொகையைப் பாடியருளினர். மேலும், தம் பொருட்டுக் குண்டையூர்க் கிழாருக்கு இறைவன் கொடுத்தருளிய நெல்மலையை ''நீளநினைந்தடியேன்'' என்னும் பதிகம் பாடி இறைவனருளால் திருவாரூரிலே சேர்ப்பித்தார்.

திருநாட்டியத்தான் குடியிலே வாழ்ந்த கோட்புலிநாயனர் ஒரு முறை சுந்தரரை அழைத்து உபசரித்துத் தம் புதல்விகளாகிய சிங்கடி, வனப்பகை என்போரை அடிமை கொண்டருளுமாறு வேண்ட, நாயனர் அவர்களைத் தம் மக்களாக ஏற்றுச் சிறப்பித்துப் பாடி யருளினர். இதனல் சிங்கடியப்பன், வனப்பகையப்பன் என்னுந் திருப் பெயர்களும் இவருக்கு உண்டாயின.



பரவையார் பங்குனி உத்திர விழாச் செலவுக்குப் பொன் வேண்ட, அதன் பொருட்டுத் திருப்புகலூரை அடைந்த நாயனர், செங்கட்டி களைப் பொன்கட்டிகளாகப் பெற்று ''தம்மையே புகழ்ந்து'' என்னும் பதிகம் பாடியருளினர்.

திருமுதுகுன்று நோக்கித் தலயாத்திரை செய்தபொழுது, நாயனு ருக்கு வழிகாட்டிச் சென்ற இறைவன் அவரைக் கூடலையாற்றூருக்கு அழைத்துப்போய் மறைந்தருள, ''வடிவுடை மழுவேந்தி'' என்னும் பதிகம் பாடியருளினர்.

பின்னர் திருமுதுகுன்றூரைத் தரிசித்துப் பன்னீராயிரம் பொன் பெற்று, அங்குள்ள மணிமுத்த நதியிலிட்டுத் திருவாரூர்த் திருக்குளத் திலே பரவையாரோடு போய்த் தடவியபோது அது கிடைக்கப் பெருமை கண்டு, ''ஆற்றிலிட்டுக் குளத்திலே தடவுகிறீரா'' என்று பரவையார் நகைக்க, ''பொன் செய்த மேனியினீர்'' என்னும் பதிகம் பாடி அப்பொன்னைத் திருக்குளத்திலே எடுத்தார்.

மேலும் தலயாத்திரை செய்து வந்த நாயனர் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனர் அவதரித்த சீகாழிப் பதியைக் காலால் மிதிக்க அஞ்சி அப்பதியை வலம் வந்து வணங்கித், திருக்கருகாவூருக்குப் போகும் போது பசியினல் வருந்த, இறைவன் வழியிலே தண்ணீர்ப் பந்தல் அமைத்துப் பொதிசோறும் தண்ணீரும் கொடுத்து மறைந்தருளினர். நாயனர் இறைவனின் பெருங் கருணையை வியந்து, ''இத்தனை யாமாற்றை அறிந்திலேன்'' என்று பதிகம் பாடியருளினர்.

திருக்கச்சூர்த் திருத்தலத்தைத் தரிசித்த பின் உணவின்றிப் பசி யோடிருந்த நாயனருக்கு இறைவன் பிச்சையெடுத்து அன்னங் கொடுத்தருளினர். நாயனர் அதனை வியந்து, ''முதுவாயோரி கதற'' என்றெடுத்துப் பதிகம் பாடித் துதித்தார்.

சுந்தரமூர்த்திநாயனர் பல திருத்தலங்களையும் தரிசித்துக்கொண்டு திருவொற்றியூருக்கு எழுந்தருளினர். அந்நாளில், நாயிறு என்னும் ஊரிலே நாயிறுகிளார் என்பவருக்கு அநிந்திதையார் புத்திரியாராக அவதரித்துச் சங்கிலியார் என்னும் பெயர் பூண்டு திருவொற்றியூர்ப் பெருமானுக்குத் திருத்தொண்டு செய்து வந்தார். அவரை நாயனர் கண்டு விருப்புற்று, இறைவனருளியபடி அவரைப் பிரிவதில்லை என்று சபதம் செய்து கொடுத்து மணஞ்செய்திருந்தார்.

சில நாட்செல்ல, திருவாரூர்ப் பெருமானைத் தரிசிக்க விரும்பித் தாம் செய்த சபதந் தவறிப் புறப்பட்டுத் திருவொற்றியூர் எல்லையைக் கடந்ததும், நாயனாரது கண்ணிரண்டும் குருடாயின. அவர் அடியார் வழிகாட்டத் திருவெண்பாக்கத்தை அடைந்து ''கோயில் உள்ளீரோ'' என்று பதிகம்பாட, இறைவன் ''உளோம் போகீர்'' என்று ஊன்றுகோல் கொடுத்தருளினார்.

திருக்கச்சியேகம்பத்தை அடைந்து இறைவனருளால் இடக்கண் பார்வை பெற்று, ''ஆலந்தானுகந் தமுதுசெய்தானை'' என்னும் பதிகம் பாடியருளினார். பின் திருத்துருத்தி என்னும் தலத்திலே தீர்த்தமாடி உடல் நோய்கள் நீங்கப்பெற்றார்.

திருவாரூரை அடைந்து ''மீளா அடிமை'' என்றெடுத்துப் பதிகம் பாடி, வலக்கண் பார்வையும் பெற்றார். பின்னர் பரவையாரிடத்திலே எம்பெருமானைத் தூதாக அனுப்பி அவரூடல் தணித்து அங்கு சிலநாள் எழுந்தருளினார்.

ஏயர்கோன் கலிக்காம நாயனார் என்பவர், சுந்தரர் இறைவனைத் தூதனுப்பியது தகாது என்று சுந்தரர்பாற் கோபித்திருந்தார். அவரைச் சுந்தரருடன் நட்புப் பூணும்படி செய்தருளத் திருவுளங் கொண்ட இறைவன், அவருக்குச் சூலநோயைக் கொடுத்தருளினார். அது தீர்க்கும் பொருட்டுச் சுந்தரர் அவரிடம் செல்லுதலும் அதனை விரும்பாத கலிக்காமர் உடைவாள் கொண்டு தம் வயிற்றைக் கிழித்திறந்தார். அது கண்ட சுந்தரர் தாமும் அவ்வாறிறக்கத் துணிந்து வாளை எடுத்தலும், இறைவனருளாற் கலிக்காமர் உயிர்பெற்றெழுந்து சுந்தரரைத் தடுத்து நண்பராயினர்.

பின்னர் சேர நாட்டரசரான சேரமான் பெருமாள் நாயனார், சுந்தரரிடம் வந்து வணங்கி நட்புப் பூண்டனர். சேரமான் தோழரான சுந்தரர் சேரமானுடன் மலை நாட்டுக்குப் புறப்பட்டார். வழியிலே, சேரமான் பெருமாள் திருவையாற்றைத் தரிசிக்க விரும்பி நாயனாரிடம் விண்ணப்பித்தார். அப்பொழுது காவேரி ஓடஞ் செல்லமுடியாதபடி பெருக்கெடுத் தோடிற்று. நாயனார், ''பரவும் பரிசொன் றறியேன்'' என்று பதிகம் பாடியருள ஆறு பிரிந்து வழிவிட்டது. திருவையாற்றைத் தரிசித்து வட நாட்டுக்குப் போய் மீளவும் சேரமானைக் காணும் பொருட்டுப் புறப்பட்டார்.

நாயனார் செல்லும் வழியிலே திருப்புக்கொளியூரிலே பல ஆண்டுகளுக்கு முன் முதலையால் விழுங்கப்பட்ட பிராமணச் சிறுவனை முதலை வாயினின்றும் மீட்டுக் கொடுத்தருளினார்.



பின் சேரமானிடஞ் சென்று திருவஞ்சைக்களத்துப் பெருமானைத் தரிசித்திருந்தார். ஒருநாள் கயிலை நாதரின் ஆஞ்ஞைப்படி தேவர்கள் கொண்டுவந்த வெள்ளையானையிலேறிச் சேரமான் பெருமானை நினைத்தபடி திருக்கயிலைக்குப் புறப்பட்டார். அதனை உணர்ந்த சேரமான் பெருமாள் குதிரையிற் சென்று சுந்தரரோடு சேர்ந்து கயிலையை அடைந்தார். அங்கே நாயன்மாரிருவரும் சிவகணங்களுக்குத் தலைவராயினர். சிலகாலஞ் செல்ல பரவையாரும் சங்கிலியாரும் உமையம்மையார்பாலடைந்து சேடியராயினர். சுந்தர மூர்த்தி நாயனாரின் குரு பூசைத்தினம் ஆடிச்சோதி.

## (ஈ) மாணிக்கவாசக சுவாமிகள்

பாண்டி நாட்டிலே திருவாதவூரிலே ஆமாத்தியப் பிராமண குலத்திலே சம்புபாதாசிரயர் என்பவருக்குச் சிவஞானவதியார்பால் சற்புத்திரர் ஒருவர் அவதரித்தார். பெற்றோர் அவருக்குத் திருவாதவூரர் என்னுந் திருநாமந் தரித்தார்கள். அவர் இளமையிலேயே சகல கலைகளையுங் கற்று அறிவொழுக்கங்களில் சிறந்து விளங்கினார். அவரது மகிமையை அறிந்த அரிமர்த்தன பாண்டியன் அவரை அழைத்து முதன் மந்திரிப் பதவி நல்கித் 'தென்னவன் பிரமராயன்' என்னும் பட்டமும் வழங்கினான்.

வாதவூரர் முதன் மந்திரிக்குரிய கடமைகளைக் குறைவின்றிச்செய்தாராயினும் இறைவனை அடைந்து பேரின்பம் அனுபவிக்கும் வேட்கை உடையவராய் 'கூத்தினர் தம்மை வேறு கோலம் வேறாகுமாபோல்'' வாழ்ந்து வந்தார்.

ஒருநாள் அரிமர்த்தன பாண்டியன் திருவாதவூரரை அழைத்து, அளவற்ற திரவியத்தைக் கொடுத்து, அதற்குக் குதிரைகள் வாங்கி வரும்படி கூறினார். அவர் அதன்பொருட்டுப் புறப்பட்டுச்செல்லும் வழியிலே திருப்பெருந்துறை என்னுந் திருத்தலத்தை அடைந்தார். அங்கே சிவபெருமான் அவருக்கு அருள் செய்யும்பொருட்டு ஒரு குருந்தமர நீழலிலே அடியார் புடைசூழக் குருமூர்த்தமாய் எழுந்தருளியிருந்தார். திருவாதவூரடிகள் அப்பரமாசாரியரைக் கண்டு திருவடிகளிலேவீழ்ந்து வணங்கி, தமக்கு ஞானோபதேசஞ் செய்தருளும்படி பிரார்த்தித்தார். பரமாசாரியர் அவருக்குத் தீட்சைசெய்தருள, அவர் 'அனலிடைப் பட்ட நெய்போல மனமுருகிப் பரமாசாரியரை வணங்கிப் பழுதில்லாத சொற்களாகிய மணிகளை அன்பாகிய இழையினாற் கோத்துத் திருவாசகமாகிய பாமாலையைச் சூட்டினார். அதனாற் பரமாசாரியர் அவருக்கு ''மாணிக்கவாசகர்'' என்னுந் திருநாமஞ்சூட்டியருளினார். மாணிக்க

வாசக சுவாமிகள் தமது ஆபரணங்களையும் பாண்டியன் கொடுத்த திரவியத்தையும் பரமாசாரியரது திருமுன்னிலையிலே வைத்து வணங்கினார். பரமாசாரியர் அவைகளைச் சிவ புண்ணியங்களுக்கு உபயோகமாகும்படி செய்தருளினார்;

சுவாமிகள் இவ்வாறிருத்தலை ஏவலர் மூலம் அறிந்த பாண்டியன் அவரை உடனே வருமாறு திருமுகமெழுதி அனுப்பினன். மாணிக்கவாசக சுவாமிகள் அத்திருமுகத்தைப் பெற்றுப் பரமாசாரியருக்குக் காட்டினார். பரமாசாரியர் பாண்டியனுக்குக் கொடுக்கும்படி மாணிக்க மணி ஒன்றை அவரிடங் கொடுத்து, குதிரைகள் ஆவணி மாதத்து மூல நட்சத்திரத்திலன்று வரும் என்று பாண்டியனுக்கு அறிவிக்கும்படி கட்டளையிட்டருளினார்' சுவாமிகள் அரசனிடம் போய் அவ்வாறே கூறித் தமது கடமைகளை முன்போலச் செய்து வந்தார்.

சிலநாட்கள் செல்ல, அரிமர்த்தன பாண்டியன் திருப்பெருந்துறையிலும் அதற்கு அயலிடங்களிலும் குதிரைகள் வாராமையை அறிந்து கோபங் கொண்டு மாணிக்கவாசக சுவாமிகளைச் சிறையிலிட்டு வருத்தினன். சுவாமிகள் சிவபெருமானைத் தியானித்தார். அன்பர்க்கு இரங்கியருளும் பெருமான் ஆவணி மூலநாளிலே காட்டிலுள்ள நரிகளைக் குதிரைகளாக்கி மதுரைக்குக் கொண்டு வந்தருளினார். பாண்டியன் குதிரைகளின் வரவு கண்டு மகிழ்ந்து மாணிக்கவாசக சுவாமிகளைச் சிறையினின்றும் நீக்கி, அவரையும் அழைத்துப்போய் அக்குதிரைகளை ஏற்றுப் பந்தியிலே கட்டுவித்தான்.

அன்றிரவு அக்குதிரைகளெல்லாம் நரிகளாகிப் பந்தியில் நின்ற குதிரைகளையுங் கடித்துக்கொன்று நகரெங்கும் ஊளையிட்டுத் திரிந்தன. அதனாற் கோபங் கொண்ட பாண்டியன் "இஃதெல்லாம் திருவாதவூரரின் சூழ்ச்சியே" என்று எண்ணி, அவரை மீளவும் சிறையிலிட்டு வருத்தினன்.

அடியார்க்கெளியவரான சிவபெருமான் மாணிக்கவாசகர் படுந் துன்பத்தை நீக்கியருளவும், வந்தியென்னும் செம்மனச் செல்வியாரின் சிவபக்தியை உலகத்தாருக்குக் காட்டியருளவும் திருவுளங்கொண்டு, வைகையைப் பெருகும்படி செய்தருள, அது மதுரையை அழிப்பது போலக் கரைபுரண்டு பாய்ந்தது. பாண்டியன் சோமசுந்தரப் பெருமானை வணங்கி முறையிட்டும் வைகையின் பெருக்குத் தணியவில்லை. அதனால், தான் மாணிக்கவாசக சுவாமிகளுக்குத் துன்பஞ் செய்தமையே வைகைப் பெருக்குக்குக் காரணமென்றறிந்து அவரைச் சிறை நீக்கி வைகைப்பெருக்கை வற்றச்செய்து கரையை அடைப்பிக்குமாறு



வேண்டினன்; சுவாமிகள் சிவபெருமானைத் தியானிக்க வைகையின் பெருக்கு வற்றியது; அவரின் ஆணைப்படி நகரமக்கள் நதிக்கரையிலே தத்தமக்கு அளந்துவிடப்பட்ட பங்குகளை அடைத்தனர்.

சிவபெருமானிடத்திலே பேரன்புடையவரும், பிட்டு விற்றுச் சீவனஞ் செய்பவருமான வந்தியென்னும் மூதாட்டியாரின் பங்கு மட்டும் அடைக்கப்படாமற்கிடந்தது. இம்மூதாட்டியார், தம்பங்கை அடைக்க ஆளில்லையே என்று சோமசுந்தரக் கடவுளிடம் முறையிட, பெருமான் கூலியாளராய் வந்து அவரளித்த பிட்டையே கூலியாகப் பெற்றுக் கரையை அடைப்பவர்போலச் சென்று ஆடியும் பாடியும் குதித்தும் சிரித்தும் விளையாடிக் கொன்றை மர நிழலிலே நித்திரை செய்தார். வந்தியம்மையாரின் பங்கு அடைக்கப்படாமலிருப்பதைக் கண்ட பாண்டியனின் காரியதரிசி ஒருவன் அப்பெருமானுக்குப் பிரம்பினலடித்தான். அவ்வடி எல்லாச் சீவராசிகள் மேலும் பட்டது. பெருமான் உடனே மறைந்தருளினார். அடிபட்ட பாண்டியனும் வாசகரும் இறைவனின் திருவிளையாடலையறிந்து துதித்தனர். பாண்டியன் ஆட்சிப்பொறுப்பை ஏற்று நடாத்துமாறு வாசகரை வேண்டினன். அவர் அதற்கு உடன்படாமல், எல்லாத் தொடர்புகளையும் துறந்து, பாண்டியனிடம் விடைபெற்று, மீண்டும் திருப்பெருந்துறையை அடைந்து பரமாசாரியரைச் சேவித்து உபதேசம் பெற்றிருந்தார்.

ஒருநாள் பரமாசாரியர், அடியவர் எல்லோரையும் திருப்பெருந்துறையிலே இருக்குமாறு பணித்து மறைந்தருளினார். சிலநாட் செல்ல இறைவனருளால் அங்குள்ள தடாகத்திலே ஒரு சோதி தோன்ற, வாசகருடன் இருந்த அடியாரெல்லோரும் அதனுட்புகுந்துசிவலோகஞ் சேர்ந்தனர். வாசகர் இறைவனாணைப்படி திருவுத்தரகோசமங்கை, திருவிடை மருதூர், திருவண்ணாமலை, திருக்கழுக்குன்றம் முதலிய திருத்தலங்களைத் தரிசித்துத் திருவாசகம் பாடிக்கொண்டு சிதம்பரத்தை அடைந்தார்.

மாணிக்கவாசக சுவாமிகள் சிதம்பரத்தில் எழுந்தருளியிருந்த நாளிலே, சோழதேசத்துச் சிவபக்தர் ஒருவர் தலயாத்திரை செய்து இலங்கைக்கு வந்தார். அவர் அடிக்கடி "பொன்னம்பலம் நீடூழி வாழ்க" என்று சொல்லித் திரிந்தார். அவர் அப்படிச் சொல்வதை அறிந்த புத்த அரசர், அவரை அழைத்துச் சிதம்பரத்திலுள்ள பொன்னம்பலத்தின் சிறப்பை அறிந்தான்; சிதம்பர சிவாலயத்தை அழித்து அங்கே பௌத்தாலயம் அமைக்க விரும்பினன்; அதனால் பௌத்த குருமாரோடும் தன் ஊமைப் புதல்வியோடும் சிதம்பரத்துக்குப் போய்த் தில்லைவாழந்தணர்களைச் சமயவாதஞ் செய்ய அழைத்தான்;

தில்லைவாழந்தணர் இறைவன் அருளியபடி, மாணிக்கவாசக சுவாமி களைப் பௌத்தருடன் வாதம் புரியும்படி வேண்டினர். சுவாமிகள் அதற்கிணங்கிப், பௌத்தர்களுடன் வாதிட்டு அவர்களை ஊமைகளாக் கியும், ஊமைத்தன்மை நீக்கியும் வென்றதுமன்றி, அவர்கள் வினவிய வினாக்களுக்குப் பௌத்தஅரசன் மகளான ஊமைப்பெண்ணைக்கொண்டு விடையும் சொல்லுவித்தார். (இந்த வினாவிடைகளை, சுவாமிகள் திருச் சாழலிலே அமைத்துப் பாடியருளியிருக்கின்றார்கள்.) பௌத்தரெல் லாரும் சைவ சமயத்தின் உண்மையை உணர்ந்து சைவராயினர்.

சிவபெருமான் மாணிக்கவாசக சுவாமிகளின் திருவாசகத்தை எல்லோருக்கும் அறிவித்தருளவேண்டும் என்னும் பெருங்கருணையினால் ஒருநாள், பிராமண வேடத்தோடு அவரிடம் வந்து, திருவாசகத்தை யும் திருக்கோவையாரையும் சொல்லச்செய்து, ஏட்டிலே எழுதித் தமது கைச்சாத்திட்டு, அவ்வேட்டுப் பிரதியைக் கனகசபை வாயிற் படியில் வைத்தருளினர். மறுநாள், பூசை செய்ய வந்த அந்தணர் அவ் வேட்டுப் பிரதியைக் கண்டு வியந்து, அடியார் எல்லாருக்கும் சொல்லி அவர்களையும் அழைத்துக்கொண்டு, மாணிக்கவாசக சுவாமிகளிடம் சென்று, அதன் பொருளைக் கூறுமாறு வேண்டினர்கள். சுவாமிகள் அவர்களைப் பொன்னம்பலத்துக்கு அழைத்துப்போய்த் தம் நூலுக்குப் 'பொருள் இவரே' என்று நடராசப் பெருமானைச் சுட்டிக் காட்டி அவர்களெல்லோருங் காணக் கனகசபையுட் புகுந்து பெருமானோடு இரண்டறக் கலந்தார். மாணிக்கவாசகசுவாமிகளின் குரு பூசைத் தினம் ஆனி மகம்.

## சமயாசாரியர் முத்தி அடைந்த நாள்

சித்திரைச் சதயம் அப்பர் சிறந்தவை காசி மூலம்
அத்தரைப் பணிசம் பந்தர் ஆனிமா மகத்தி லந்தம்
முத்தமிழ் வாத வூரர் முதியநல் லாடி தன்னில்
சுத்தமாஞ் சோதி நாளில் சுந்தரர் கயிலை சேர்ந்தார்.

## சமயாசாரியர் வயசு

அப்பருக் கெண்பத்தொன் றருள்வாத வூரருக்குச்
செப்பிய நாலெட்டில் தெய்வீகம் — இப்புவியில்
சுந்தரர்க்கு மூவாறு தொன்ஞான சம்பந்தர்க்
கந்தம் பதினா றறி.

# 6. சந்தானாசாரியர் வரலாறுகள்

## (அ) மெய்கண்ட தேவர்

திருமுனைப்பாடி நாட்டிலே திருப்பெண்ணாடகம் (திருக்கடந்தை) என்னுந் திருப்பதியிலே அச்சுதகளப்பாளர் என்னும் சைவ வேளாளர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் சிவபெருமானிடத்தும் சிவனடியா ரிடத்தும் மெய்யன்பு பூண்டவர். கல்வி அறிவொழுக்கங்களிற் சிறந்த வர்; பெருஞ் செல்வர். எனினும், புத்திரப்பேறில்லாத குறையுடைய வராயிருந்தார்.

அவர் ஒருநாள் திருத்துறையூருக்குப் போய், தம் குலகுருவான சகலாகம பண்டிதர் என்பவரிடம் தமது குறையைத் தெரிவித்தார்.

சகலாகம பண்டிதர் இறைவனைப் பூசித்து, தேவாரத் திரு முறைக்கு மலரிட்டு வணங்கி, அத்திருமுறையிலே கயிறு சாத்தும் படி அச்சுதகளப்பாளருக்குக் கூறியருளினர். அச்சுதகளப்பாளர் அத் திருமுறையை வணங்கித் திருக்கயிறு சாத்தியபொழுது,

"பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவ ரையுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே."

என்னுந் திருவெண்காட்டுத் திருப்பதிகப் பாடல் வந்தது. சகலாகம பண்டிதர் அதன் பொருளை விளக்கி, அத்திருப்பதிகத்தின் மேன்மையை யும், அத்திருப்பதியிலுள்ள திருக்குளங்களிலே முழுகி இறைவனை வழிபடும் முறைமையினையும் அறிவுறுத்தித் திருவெண்காட்டுக்குப் போகும்படி ஆணையிட்டருளினர்.

அச்சுதகளப்பாளர் அங்ஙனமே மனைவியாருடன் திருவெண் காட்டையடைந்து வழிபட்டு வந்தார். ஒருநாள் இறைவன் அவரு டைய கனவிலே தோன்றி, "அன்பனே, உனக்கு இப்பிறவியில் மக்கட் பேறு அரிதாயினும், எமக்கு மிகவும் விருப்பமுடையதாயும் மெய்யன் போடு தன்னை ஓதுவார்க்கு எல்லாப் பேறுகளையுந் தருவதாயுமுள்ள தேவாரத் திருப்பதிகத்தையே உண்மையாக நம்பி வந்து வழிபாடு செய்கின்றாய். ஆதலின், அத் தேவாரங்களைப் பாடிய ஞானசம் பந்தன்போலவே அத்தேவாரங்களின் மெய்ப்பொருளை விளக்கி மெய்ந்

நெறியாகிய சைவ சித்தாந்தத்தை நிறுவவல்ல நற்புதல்வன் ஒருவனை நாம் உமக்குத் தந்தோம்', என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினார். அதனால், அச்சுதகளப்பாளரும் மனைவியாரும் மிக்க மகிழ்ச்சியுடையராய், திருவெண்காடரை வழிபட்டு வருவாராயினர். சில காலஞ் செல்ல மனைவியார் இறைவனருளாலே திருவயிறு வாய்க்கப் பெற்று புதல்வர் ஒருவரைப் பயந்தார். தந்தையார் அப்புதல்வர் திருவெண்காடரின் அருளினால் அவதரித்தமையால், அவருக்குத் திருவெண்காடர் என்றே திருப்பெயரிட்டார். பின்பு மனைவியாரோடும் அருமைப் புதல்வரோடும் இறைவனை வணங்கி விடைபெற்றுத் திருப்பெண்ணாகடத்தை அடைந்தார்.

திருவெண்காடரின் நன்மாமனார் ஒருவர் திருவெண்ணெய் நல்லூரில் வாழ்ந்து வந்தார். அவர் ஒருநாள், திருப்பெண்ணாகடத்துக்கு வந்து திருவெண்காடரைப் பார்த்து, பெருமகிழ்வெய்தி, அவரைத் தம் இல்லத்துக்கு எடுத்துச் சென்று அன்போடு வளர்த்து வருவாராயினார்.

அங்கே அவர் இரண்டாண்டு நிறைவுற்று மூன்றாம் வயதை எய்தியபொழுது, மெய்ஞ்ஞானத்தை உணரும் பக்குவ நிலை உடையவராய் விளங்கினார். அக்காலத்தில், பொதிய மலையிலிருந்த அகத்திய முனிவரைக் காணும் பொருட்டு திருக்கயிலையினின்றும் புறப்பட்டு வந்த பரஞ்சோதி முனிவர், திருவெண்காடரைக் கண்டு, அவரது பரிபக்குவ நிலையை அறிந்து அவருக்குச் சைவசித்தாந்த மெய்ப்பொருளை உணர்த்தி, ''மெய்கண்டார்'' என்னுந் திருப்பெயரையும் சூட்டியருளினார்.

பின்பு மெய்கண்டதேவர் திருவெண்ணெய் நல்லூரிலுள்ள பொல்லாப்பிள்ளையாரின் திருமுன்பு நிட்டைகூடிச் சைவசித்தாந்த உட்பொருளைத் தியானித்து உணர்ந்து தெளிந்து, தமிழிலே சிவஞான போதம் என்னும் சித்தாந்த முழுமுதல் நூலை அருளிச் செய்தார். தம்மையடைந்த தகுதிவாய்ந்த மாணவர்களுக்கு அந்நூற்பொருளை உபதேசித்து வந்தார்.

ஒருமுறை மெய்கண்டதேவர் தம் மாணவர்களுக்கு ஆணவமல இயல்பு பற்றி உபதேசித்துக்கொண்டிருக்கும்போது, அச்சுதகளப்பாளரின் குருவான சகலாகம பண்டிதர் அவரிடம் வந்தார்; தாம் வந்தது கண்டும் தம்மிடம் மெய்கண்டதேவர் ஒன்றும் பேசாததனால் உள்ளச் செருக்கோடு ''ஆணவமல வடிவம் எவ்வாறிருக்கும்?'' என்று வினவினார்; மெய்கண்டதேவர் வினவினவரையே சுட்டிக் காட்டி



னார். அக்குறிப்பு விடையின் பொருளுணர்ந்து தம் அறியாமை நீங்கப் பெற்று அவரை வணங்கி, தமக்கு மெய்ப்பொருளை உணர்த்தியருளும்படி வேண்டி அவருக்குச் சீடரானார்.

மெய்கண்டதேவர் அவருக்கு ''அருணந்தி சிவம்'' என்னும் தீட்சா நாமஞ் சாத்தி, சிவஞானபோதப் பொருளை உபதேசித்தருளினார்.

அருணந்தி சிவாசாரியர், மனவாசகங்கடந்தார், சிற்றம்பல நாடிகள் முதலான நாற்பத்தொன்பது சீடர்களுக்கு ஞானோபதேசஞ் செய்து, சிவநல்வினை இயற்றிய மெய்கண்டதேவர் சிலகாலம் நிட்டை கூடியிருந்து, ஒரு ஐப்பசி மாதத்துச் சோதிநாளிலே முத்திபெற்றனர்.

## (ஆ) அருணந்தி சிவாசாரியர்

சோழதேசத்து நடு நாட்டிலுள்ள திருத்துறையூரிலே முப்பொழுதும் திருமேனி தீண்டும் ஆதிசைவ மரபிலே, சைவசித்தாந்தந் தழைத்தோங்குமாறு ஒருவர் திருவவதாரஞ் செய்தருளினார். அவர் சமய, விசேட, நிருவாண தீட்சைகளும் ஆசாரிய அபிஷேகமும் பெற்று, வேத சிவாகமம் முதலிய ஞான நூல்களை ஓதியுணர்ந்து, சகலாகம பண்டிதர் என்னும் சிறப்புப் பெயருடையவராய் விளங்கினார்,

அவர் தமது. ஆணைவழி நின்று அச்சுதகளப்பாளர் பெற்ற மெய்கண்டதேவரின் மகிமைகளைக் கேள்வியுற்று, அவரைத் தரிசிக்க விரும்பித் திருவெண்ணெய் நல்லூரை அடைந்தார். அப்பொழுது மெய்கண்டதேவர் ஆணவத்தின் இயல்புகள்பற்றித் தம் மாணவர்களுக்கு உபதேசஞ்செய்துகொண்டிருந்தார். அங்குவந்த சகலாகம பண்டிதர், தம் வரவுகண்டும் தம்முடன் மெய்கண்டதேவர் ஒன்றும் பேசாதிருந்தமையால், மனச்செருக்கோடு அவர் முன் நின்று, ''ஆணவத்தின் வடிவம் எவ்வாறிருக்கும்?'' என்று வினவினார். மெய்கண்டதேவர் அதற்கு விடையாக அவரையே சுட்டிக்காட்டியதன்மூலம், ''இப்படியிருக்கும்'' என்று குறிப்பால் உணர்ந்தருளினார். அதனால் செருக்கு அகன்ற சகலாகம பண்டிதர் மெய்கண்டதேவரின் மகிமையை உணர்ந்து வணங்கி, தம்மைச் சீடராக 'ஏற்று ஞானோபதேசஞ் செய்தருளும்படி பிரார்த்தித்தார்.

சகலாகம பண்டிதரின் பக்குவநிலையைக்கண்ட மெய்கண்டதேவர், அவருக்குச் சிவஞான போதத்தை உபதேசித்து, ''அருணந்தி சிவம்'' என்னும் தீட்சாநாமஞ்சாத்தி, ''நீர் இச்சிவஞானபோத நூற்பொருளை

விரித்துப் பிற்காலத்தாருக்கு இனிது விளங்குமாறு ஒரு நூல் செய்வீராக'' என்று பணித்தருளினர்.

மெய்கண்டதேவரின் ஆணையைச் சிரமேற்கொண்ட அருணந்தி சிவாசாரியர், சிவஞானபோதம் சித்திப்பதற்கு வழிசெய்யும் சிறந்த வழிநூலான சிவஞான சித்தியாரையும், இருபா இருபஃது என்னும் மற்றொரு சைவசித்தாந்த நூலையும் அருளிச்செய்தார்.

பின்னர் சிவஞான போதத்தையும் தாம் அருளிச்செய்த சித்தாந்த நூல்களையும் மறைஞானசம்பந்தர் முதலான தம் சீடர்களுக்கு உபதேசித்திருந்து, ஒரு புரட்டாதி மாசத்துப் பூர நட்சத்திரத்திலே சிவபெருமானது திருவடி நிழலெய்தினர்.

## (இ) மறைஞான சம்பந்தர்

அருணந்தி சிவாசாரியரின் மாணவருள் ஒருவரான மறைஞான சம்பந்தர் திருப்பெண்ணாகடத்திலே, பிராமண குலத்திலே அவதரித்தவர். வேதங்களையும் சிவாகமங்களையும் சிவஞானபோதம், சிவஞான சித்தியார், இருபா இருபஃது என்னும் சைவசித்தாந்த நூல்களையும் நன்கு கற்றுணர்ந்து ஞானியாய் விளங்கியவர். இதனால் மறைஞான சம்பந்தர் என்னும் திருப்பெயர் வழங்குவதாயிற்று. இவர் உமாபதி சிவாசாரியர் முதலிய சீடர்களுக்கு ஞானோபதேசஞ் செய்தருளிச் சிதம்பரத்தைச் சார்ந்த திருக்களாஞ் சேரியிலே சிலகாலம் மௌன விரதம் பூண்டிருந்து ஒரு ஆவணி மாதத்து உத்தரத் திருநாளிலே சிவபதம் அடைந்தார். இவர் யாதொரு நூலையேனும் அருளிச் செய்யவில்லை எனக் கூறுவர், ஆயின், சித்தாந்த நூலாகக் கருதப்படும் சதகமணிக்கோவை இவரால் அருளப்பட்டதாகச் சிலர் கருதுகின்றனர்.

## (ஈ) உமாபதி சிவாசாரியர்

உமாபதி சிவாசாரியர் தில்லைவாழந்தணர்களுள் ஒருவர்; சிதம்பரத்தைச் சார்ந்த கொற்றவன் குடியில் வாழ்ந்துவந்தமையால் கொற்றங்குடி முதலியார் எனவும் படுவர். இவர் வேத சிவாகமங்களையும் மெய்கண்டதேவர் அருணந்தி சிவாசாரியர் ஆகியோர் அருளிய சைவசித்தாந்த நூல்களையும் கற்றுத் தெளிந்தவர். தமிழிலே புலமையுடையவர்; சிவ பத்தியிலும் அடியார் பத்தியிலும் சிறந்தவர்.

ஒருநாள் இவர் சிதம்பர நடராசப் பெருமானுக்குப் பூசைசெய்த பின் சிவிகையிலே ஏறித் தீவர்த்தி முதலான விருதுகளோடு தமது இருப்பிடத்துக்குச் சென்றார், அப்பொழுது இவரது ஆடம்பரத்தைக் கண்ட மறைஞான சம்பந்தர் தம் மாணவரிடத்திலே, ''பட்ட கட்டையிற் பகற்குருடு போகின்றது பாருங்கள்'' என்று குறிப்பாகக் கூறியருளினர். மெய்ஞ்ஞானத்தை உணரும் பக்குவநிலை அடைந்தவரான உமாபதி சிவாசாரியர் அவ்வார்த்தையைக் கேட்ட மாத்திரத்திலே, அதன் குறிப்புப்பொருளை உணர்ந்து சிவிகையை விட்டிறங்கி, மறைஞானசம்பந்தரை வணங்கினர். பின்னர் அவரிடத்திலே ஞானோபதேசம் பெற்றுச் சீடரானர்.



உமாபதி சிவாசாரியரின் அதிதீவிர பக்குவ நிலையை உலகினர்க்குக் காட்ட விரும்பிய மறைஞான சம்பந்தர், ஒரு நாள் உமாபதி சிவாசாரியருடன் நெசவாளர் இருக்குமிடத்தையடைந்து, அங்குள்ளவர் ஒருவரிடம் நெசவுக்கு வைத்திருந்த கூழை வாங்கிப் பருகினர். அவர் அருகே மிகுந்த பக்தி உடையவராய் நின்ற உமாபதி சிவாசாரியர் தம் குருவின் முழங்கை வழியாக ஒழுகிய கூழைப் பிரசாதமாகக்கொண்டு இரு கையாலும் ஏந்திப் பருகினர்.

உமாபதி சிவாசாரியரின் இச்செயலை அறிந்த தில்லைவாழ்ந்தணர்கள், அவரது உயர்ந்த மனநிலையை உணராமல் அவரைப் பழித்தது மாத்திரமன்றி, நடராசப்பெருமானுக்கு அவர் பூசை செய்யாதபடி தடையுஞ் செய்தனர். அதனால், உமாபதி சிவாசாரியார் கொற்றவன் குடியிலே போய்த் தங்கியிருந்தார்.

அந்நாளில், சிதம்பரத்திலே நிகழ்ந்த கொடியேற்ற விழாவில் இறைவனருளாற் கொடி ஏறுமல் தடைப்பட்டது. உமாபதி சிவாசாரியர் அங்கு இல்லாமையாலேயே அது தடைப்பட்டதென்பதை அறிந்த தில்லைவாழந்தணர், அவரிடம் சென்று வணங்கி, அவரை அழைத்து வந்தனர். உமாபதி சிவாசாரியர் நடராசப் பெருமானை வணங்கிக் கொடிக்கவி பாடியருள, ஏறுது நின்ற கொடி ஏறிற்று. இதனுல், உமாபதி சிவாசாரியரின் மகிமையைத் தில்லைவாழந்தணர் உணர்ந்து, அவரிடத்திலே பக்தியுடையவர்களாய் ஒழுகினர்.

உமாபதி சிவாசாரியர் பாடியருளிய கோயிற்புராணம் என்னும் நூல் அரங்கேற்றமுருமற் பேடகத்துள்ளே இருந்தது. அதனை அரங்கேற்றுவித்தருளத் திருவுளங்கொண்ட இறைவன், தில்லைவாழந்தணரின் கனவிலே தோன்றி, தாம் உமாபதியாரின் பேடகத்துட் பூட்டப்பெற்றிருப்பதாகத் திருவாய் மலர்ந்தருளினர், தில்லைவாழந்தணர்கள் பேராச்சரியமடைந்தவர்களாய் உமாபதி சிவாசாரியாரிடம் தாம் கண்ட கனவைக் கூறினர். அவர் இறைவனது திருவருளை வியந்து

பேடகத்தைத் திறந்து, கோயிற் புராண ஏட்டுப் பிரதியை எடுத்து; அதுவே அங்கு பூட்டப்பெற்றிருந்தது என்று காட்டினர். தில்லை வாழந்தணர் இறைவனது திருவருட் குறிப்பை உணர்ந்து அக்கோயிற் புராணத்தை அரங்கேறச் செய்தனர்.

பெற்றான் சாம்பான் என்னும் சிவபத்தர் ஒருவர் உமாபதி சிவாசாரியரின் சிவபூசை, மாகேசுர பூசைகளுக்குத் தேவையான விறகை நாள்தோறும் கொடுத்து வந்தார். ஒருநாள் அவர் விறகு கொண்டுவரக் காலம் தாழ்ந்தமையால் அமுது சமைக்கக் காலம் தாழ்ந்தது. உமாபதி சிவாசாரியர், அங்ஙனம் காலம் தாழ்ந்ததற்குக் காரணமென்னவென்று தம் மாணவரை வினவினர். சாம்பான் என்பவரது விறகு உரிய நேரத்தில் வராமையே காரணமென்று மாணவர் கூறினர். விறகு தருபவர் மறுநாள் வந்தவுடன் தமக்குத் தெரிவிக்கும்படி உமாபதி சிவாசாரியர் மாணவர்க்குப் பணித்தார்.

பெற்றான் சாம்பானர் மறுநாள் விறகு கொண்டு வருவதற்கு முன், இறைவன் பெரியார் வடிவந்தாங்கி வந்து, அவரிடம் ஒரு சீட்டைக் கொடுத்து, உமாபதி சிவாசாரியரிடம் அதை அளிக்கும்படி கூறியருளினர். அவர் விறகு கொண்டு போனபோது மாணவர்கள் வரவை உமாபதி சிவாசாரியருக்கு அறிவித்தனர். உமாபதி சிவாசாரியர் "நீர் யாவர்?" என்று வினவ, அவர் பெரியவரிடமிருந்து பெற்ற சீட்டைக் கொடுத்தார். அந்தச் சீட்டிலே பின்வரும் திருப்பாடல் இருந்தது.

அடியார்க் கெளியன்சிற் றம்பலவன் கொற்றங்
குடியாற் கெழுதியகைச் சீட்டுப்—படியின்மிசைப்
பெற்றான் சாம்பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து
முத்தி கொடுக்க முறை.

இத் திருப்பாடலைப் படித்த ஆசாரியர் இறைவன் திருவருளை வியந்து பெற்றான் சாம்பனுக்கு நயனதீட்சை செய்து முத்தி கொடுத்தருளினர். சாம்பனரது சுற்றத்தாரும் மனைவியாரும் அதனுண்மையை உணராதவராய் அரசனுக்கு முறையிட்டனர். அரசன் அவர்களை அழைத்துச் சென்று சிவாசாரியரை வினவியபொழுது, அவர் அத்தீட்சையின் மேன்மையை விளக்கி அவர்கள் முன்னிலையிலே, பக்குவமெய்திய ஒரு முல்லைச்செடிக்கு நயனதீட்சை மூலம் முத்தி கொடுத்தருளினர். யாவரும் உண்மையை உணர்ந்து உமாபதி சிவாசாரியரை வணங்கிச் சென்றனர்.



இறைவன் திருவருளால் இவ்வற்புதங்களைச் செய்தருளிய உமாபதி சிவாசாரியர் சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினா வெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மை நெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம் என்னும் சைவசித்தாந்த அட்டகங்களையும், கோயிற்புராணம், சேக்கிழார் புராணம், திருத்தொண்டர் புராண சாரம், திருமுறைகண்ட புராணம், திருப்பதிகக் கோவை, பௌட்கராகம் வியாக்கியானம் முதலிய நூல்களையும் அருளிச் செய்தனர்.

இவரது மாணவர் நமச்சிவாயத் தேவர் முதலியோராவர். இந் நமச்சிவாயத் தேவரே திருவாவடுதுறை ஆதீனத்தைத் தாபித்து, அவ்வாதீனத்தின் முதற் குருவாய் (சந்நிதானமாய்) விளங்கியவர்.

உமாபதி சிவாசாரியர் முத்தியடைந்த தினம் சித்திரை அத்தம்.

"சித்திரை யத்தம் உமாபதி ஆவணித் திங்கடனில்
உத்திரஞ் சீர்கொள் மறைஞான சம்பந்தர் ஓதுகன்னிச்
சுத்தமெய்ப் பூரம் அருணந்தி ஐப்பசித் சோதிதனில்
வித்தக மெய்கண்ட தேவர் சிவகதி மேவினரே"

# 7. சமயாசாரியர் — சந்தானாசாரியர் அட்டவணை

## (1) சமயாசாரியர்

| திருப்பெயர் | திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் 1 | திருநாவுக்கரசு நாயனர் 2 | சுந்தரமூர்த்தி நாயனர் 3 | மாணிக்கவாசக சுவாமிகள் 4 |
|---|---|---|---|---|
| 1. மறு திருப் பெயர்கள் | ஆளுடையபிள்ளையார், காழி வேந்தர், கவுணியர்கோன், சண்பயர்காவலன், முத்தமிழ் விரகர், பரசமயகோளரி, பாலறுவாயர், சிவஞானக் கன்று, சைவசிகாமணி, | வாகீசர், ஆளுடைய அரசர், தாண்டகவேந்தர், உழவாரப் படையாளி, அப்பர், மருணீக்கியார். | நம்பியாரூரர், திருநாவலூரர், ஆளுடைய நம்பி, வன்றொண்டர், தம்பிரான் தோழர், சேரமான் தோழர், திருமணக் கோலப் பெருமான், திருந் தொண்டத்தொகையாளி, சிங்கடியப்பன், வனப்பகையப்பன் | திருவாதவூரடிகள், மணிவாசகர், கோவை வேந்தர், ஆளுடைய அடிகள், |
| 2. நாடு | சோழநாடு | திருமுனைப்பாடி நாடு | திருமுனைப்பாடிநாடு | பாண்டி நாடு |
| 3. ஊர் | சீகாழி | திருவாமூர் | திருநாவலூர் | திருவாதவூர் |
| 4. குலம் | வைதிகப் பிராமணர் | வேளாளர் | சிவப்பிராமணர் | ஆமாத்தியப்பிராமணர் |
| 5. தந்தையார் | சிவபாதவிருதயர் | புகழனர் | சடையனர் | சம்புபாதாசிரியர் |
| 6. தாயார் | பகவதியார் | மாதினியார் | இசைஞானியார் | சிவஞானவதியார் |
| இல்லாள் | தோத்திரபூரணி | — | பரவை — சங்கிலி | — |
| 7. முதல் அருள் பெற்ற தலம் | திருப்பிரமபுரம் | திருவதிகை வீரட்டானம் | திருவெண்ணெய் நல்லூர் | திருப்பெருந்துறை |
| 8. முதற் பாடிய பதிகம் | "தோடுடைய செவியன்" | "கூற்றாயினவாறு..." | "பித்தா பிறை சூடி" | |
| 9. ஒழுகிய நெறி | கிரியை | சரியை | யோகம் | ஞானம் |
| 10. அடைந்தமுத்தி | சாமீபம் | சாலோகம் | சாரூபம் | சாயுச்சியம் |
| 11. விளங்கிய அற்புதங்கள் | மூன்றும் வயதிலே உமாதேவியாரிடம் திருமுலைப் பால் உண்டது. | சமணர்களாலே ஏழு நாள் சுண்ணாம்பறையிலே பூட்டப்பட்டிருந்தும் வேகாது பிழைத்தது. | செங்கற்கள் பொன்னாகப் பெற்றுக்கொண்டது. | சிவபெருமானே நரியைக் குதிரையாக்கிக் கொண்டு வரும்படிக்கும் மண் சுமந்து அடிபடும்படிக்கும் நடந்து கொண்டது. |
| | சிவபெருமானிடத்திலே பொற்றாளமும் முத்துப்பல்லக்கும் முத்துச் சின்னமும் முத்துக் குடையும் முத்துப்பந்தரும் உலவாக்கிளியும் பெற்றது. | சமணர் கொடுத்த நஞ்சு கலந்த பாற்சோற்றை உண்டுஞ் சாகாது பிழைத்தது. | சிவபெருமான் கொடுத்தருளிய பன்னீராயிரம் பொன்னை விருத்தாசலத்திலுள்ள ஆற்றிலே போட்டுத் திருவாரூரிலுள்ள குளத்திலெடுத்தது. | புத்தர்களைத் தருக்கத்தில் வென்று ஊமைகளாக்கிப் பின் ஊமை தீர்த்துச் சைவர்களாக்கியது. |
| | வேதாரணியத்தில் திருக்கதவு அடைக்கப் பாடியது, | சமணர் விடுத்த கொலையானையினால் வலஞ்செய்து வணங்கப்பட்டது. | காவிரியாறு பிரிந்து வழிவிடச் செய்தது, | பிறவி தொட்டு ஊமையாயிருந்த ஒரு பெண்ணை ஊமை தீர்த்துப் புத்தர் வினவிய வினக்களுக்கு விடை சொல்லும்படி செய்தது. |
| | பாலை நிலத்தை நெய்தல் நிலமாகும்படி பாடியது. | சமணர் கல்லிற் சேர்த்துக் கட்டிச் சமுத்திரத்திலிட்டவும் அக்கல்லே தோணியாகக் கரையேறினது. | முதலை விழுங்கிய பிராமணப் பிள்ளையை அம் முதலை வாயினின்றும் அழைத்துக் கொடுத்தது. | தம்முடைய திருவாசகத்தையும் திருக்கோவையாரையும் சிவபெருமானே எழுந்தருளி வந்துஎழுதும்படி பெற்றுக்கொண்டது. |
| | பாண்டியனுக்குக் கூனையும் சுரத்தையும் போக்கியது | சிவபெருமானிடத்திலே படிக்காசு பெற்றது. | வெள்ளை யானையில் ஏறிக்கொண்டு திருக் கைலாசத்துக்கு எழுந்தருளியது. | எல்லாருங் காணக் கனக சபையினுள்ளே புகுந்து சிவத்தோடு கலந்தது. |
| | சமணரெதிரே தேவாரத் திருவேட்டை அக்கினியிலிட்டுப் பச்சையாய் எடுத்தது. | வேதாரணியத்திலே திருக்கதவு திறக்கப் பாடியது. | | |
| | வைகையிலே தேவாரத் திருவேட்டை இட்டு எதிரேறும்படி செய்தது. | விடத்தினுலிறந்த பிராமணப் பிள்ளையை உயிர்ப்பித்தது. | | |

| திருப்பெயர் | திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் 1 | திருநாவுக்கரசு நாயனுர் 2 | சுந்தரமூர்த்தி நாயனுர் 3 | மாணிக்கவாசக சுவாமிகள் 4 |
|---|---|---|---|---|
| | புத்த நந்தியின் தலையிலே இடிக்கச் செய்தது.<br>ஆற்றிலே தாமும் அடியாரும் ஏறிய ஓடத்தைத் திருப்பதி கத்தினுலே கரை சேர்த்தது. ஆண்பனைகளைப் பெண்பனைக ளாக்கியது.<br>இறந்த பெண்ணினது எலும் பைப் பெண்ணுக்கியது,<br>விடத்தினுலிறந்த செட்டியை உயிர்ப்பித்தது.<br>தமது திருக்கல்யாணந் தரி சிக்க வந்தவர்கள் எல்லாரை யுந் தம்மோடு அக்கினியிலே புகுவித்து முத்தியிலே சேர்த் தது.<br>சிவபெருமானிடத்திலே படிக் காசு பெற்றது. | காசிக்கு அப்பால் ஒரு தடா கத்திலுள்ளே முழுகி, திருவை யாற்றிலே ஒரு வாவியின் மேலே தோன்றிக் கரையேறி னது. | | |
| 12. சம காலத்தில் வாழ்ந்த நாயன் மார் | திருநாவுக்கரசர், அப்பூதியடிகள், சிறுத்தொண்டர், திருநீலநக்கர் திருநீலகண்ட யாழ்ப்பாணர். குங்குலியக் கலயர், குலச்சிறையார் நின்றசீர்நெடுமாறர், மங்கையர்க் கரசியார். | சம்பந்தர், அப்பூதியடிகள், சிறுத் தொண்டர், நீலநக்கர், முருகநாய ஞர், திருநீலகண்ட யாழ்ப்பாணர், குங்குலியக்கலயர், குலச்சிறையார், நின்றசீர் நெடுமாறர், மங்கையர்க் கரசியார். | விறன்மிண்டர், பெருமிழ லைக் குறும்பர், ஏயர்கோன் கலிக்காமர், சோமாசிமாறர், சேரமான் பெருமாள், நரசிங்க முனையரையர், கோட் புலியார், சடையனுர், இசை ஞானியார், மானக்கஞ்சாறர் | |
| 13. அவராற் பாடப் பெற்ருேர் | சண்டேசுரர், கண்ணப்பர், கோச் செங்கட் சோழர், நீலநக்கர், முருகநாயனுர், சிறுத்தொண்டர், மங்கையர்க்கரசியார், குலச்சிறை யார், தில்லைவாழந்தணர், இராவ ணன், இராமர். | சம்பந்தர், அப்பூதியடிகள், கோச் செங்கட் சோழர், சாக்கியர், இரா வணன், இராமர். | ஏனை நாயன்மார்அனைவரும் (திருத்தொண்டத் தொகை யில்...)<br>இராவணன், இராமர் | சண்டேசுரர், கண்ணப்பர், மண்டோதரி, இராவணன். |

| திருப்பெயர் | திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் 1 | திருநாவுக்கரசு நாயனுர் 2 | சுந்தரமூர்த்தி நாயனுர் 3 | மாணிக்கவாசக சுவாமிகள் 4 |
|---|---|---|---|---|
| 14. பாடிய பதிகத் தொகை | 16000 | 49000 | 38000 | — |
| 15. (அ) இன்றுள்ள பதிகத் தொகை | 384 | 312 | 100 | 51 |
| (ஆ) இன்றுள்ள பாடங்கள் | 4137 | 3066 | 1036 | திருவாசகம் 658<br>திருக்கோவையார் 400 |
| 16. திருமுறை வகுப்பு | முதலாம் இரண்டாம் மூன்றும் திருமுறைகள் | நான்காம் ஐந்தாம் ஆறுந் திருமுறைகள் | ஏழாந் திருமுறை | எட்டாந் திருமுறை. |
| 17. இறுதியாகப் பாடிய பதிகம் | "காதலாகி" | "எண்ணுகேனென்சொல்லி" | "தானெனை முன்.." | — |
| 18. முத்தி பெற்ற திருத்தலம் | திருப்பெருமண நல்லூர் | திருப்புகலூர் | திருவஞ்சைக்களம்-(திருக் கயிலை, நொடித்தான்மலை) | தில்லைச் சிற்றம்பலம் |
| 19. முத்தியடைந்த வயது | 16 | 81 | 18 | 32 |
| 20. முத்தியடைந்த தினம் | வைகாசி மூலம் | சித்திரைச் சதயம் | ஆடிச் சோதி | ஆனி மகம் |
| 21. காலம் | கி. பி. 7ஆம் நூற்றுண்டு | கி. பி. 7ஆம் நூற்றுண்டு | கி. பி. 9ஆம் நூற்றுண்டு | கி. பி. 9 நூ. அல்லது 3 நூ |
| 22. நாயனுர் வரலாறு கூறும் நூல்கள். | பெரியபுராணம். பதினோராந் திருமுறைப் பிரபந்தங்கள், சீகாழித் தலபுராணம். ஆச்சாபுரத் தலபுராணம். | பெரியபுராணம் | பெரிய புராணம், திருநாவலூர்ப் புராணம், திருவாரூர்ப் புராணம், பேரூர்ப் புராணம், திருத்துருத்திப் புராணம், அவிநாசிப் புராணம். | திருவிளையாடற் புராணம் திருவாதவூரடிகள் புராணம் திருப்பெருந்துறைப் புராணம் திருவுத்தரகோசமங்கைப் புராணம் |

| | மெய்கண்ட தேவர் | அருணந்தி சிவாசாரியர் | மறைஞானசம்பந்தர் | உமாபதி சிவாசாரியர் |
|---|---|---|---|---|
| ஊர் | திருப்பெண்ணாகடம்(கடந்தை) | திருத்துறையூர் | திருப்பெண்ணாகடம் | கொற்றவன் குடி |
| குலம் | வேளாளர் | ஆதி சைவர் | பிராமணர் | தில்லைவாழந்தணர் |
| வேறு திருப்பெயர் | சுவேதனப்பெருமாள் திருவெண்காடர் | சகலாகமபண்டிதர் | | கொற்றங்குடி முதலியார், கொற்றங்குடியடிகள் |
| குரு | பரஞ்சோதி முனிவர் | மெய்கண்டதேவர் | அருணந்தி சிவாசாரியர் | மறைஞான சம்பந்தர் |
| சீடர் | அருணந்தி சிவாசாரியர், மனவாசகம் கடந்தார், சீகாழிச் சிற்றம்பல நாடிகள் முதலான 49 மாணவர் | மறைஞான சம்பந்தர் | உமாபதி சிவாசாரியர் | |
| விளங்கிய அற்புதங்கள் | — | — | | பெற்றான்சாம்பானுக்கு முத்திகொடுத்தருளியமை, முள்ளிச்செடிக்கு முத்தி கொடுத்தருளியமை, சிதம்பரத்திலே ஏறாதுநின்ற கொடியைக் கொடிக்கவி பாடி ஏறச்செய்தருளியமை, கோயிற் புராணத்தை அரங்கேற்றச் செய்தமை, |
| அருளிச்செய்த நூல்கள் | சிவஞானபோதம் | சிவஞான சித்தியார் இருபா இருபஃது | | சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினா வெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம், கோயிற் புராணம், பௌட்கராகம விருத்தி, சேக்கிழார் புராணம், திருமுறை கண்ட புராணம், திருப்பதிக்கோவை, சிவநாமக் கலிவெண்பா. |
| முத்திபெற்ற தினம் காலம் | ஐப்பசிச் சுவாதி 13 நூ. | புரட்டாதிப் பூரம் 13 நூ. | ஆவணி உத்தரம் 13 நூ. | சித்திரை அத்தம் 14 நூ. |

# 8. திருக்கோவில் விளக்கம்

## வழிபாட்டு முறை

முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானை வழிபடுஞ் சமயம் சைவ சமயம் எனப்படும். சிவபெருமானை வழிபடுபவர்கள் சைவ சமயிகள் எனப்படுவர். சைவ சமயிகளுக்கு ஆலய வழிபாடு மிகவும் இன்றியமையாதது. சிவபெருமான் எழுந்தருளி அருள்புரியும் இடம் கோயில் எனப்படும்.

இத்தகைய கோயில்களுக்கு நாள்தோறுஞ் சென்று முறைப்படி வழிபாடு செய்தல் வேண்டும். நாள்தோறுஞ் செல்ல முடியாதவர்கள் வெள்ளிக்கிழமைகளிலும், வேறு விரத நாட்களிலுமாவது தவறாது சென்று தரிசனஞ் செய்தல் வேண்டும். திங்கட்கிழமை, செவ்வாய்க்கிழமை, வெள்ளிக்கிழமை, பிரதோஷம், பூரணை, அமாவாசை, திருவாதிரை, கார்த்திகை, மாசப்பிறப்பு, சூரியகிரகணம், சந்திர கிரகணம், சிவராத்திரி, நவராத்திரி, விநாயகர் சதுர்த்தி, கந்தசட்டி என்பன சிவாலய தரிசனத்திற்குரிய சிறப்பான புண்ணிய காலங்களாகும்.

கோயில் பரிசுத்தமான இடம். ஆதலால் அங்கு செல்வோர் தம் உடலையும், உள்ளத்தையுந் தூய்மையாக வைத்திருத்தல் வேண்டும். உடலிலுள்ள அழுக்கு உள்ளத்தையும் அழுக்காக்குவதோடு ஆலயத்தின் புனிதத்தையுங் கெடுக்கும். ஆசௌசம் உடையவரும், அசுத்தமான பொருளைத் தீண்டியவரும், நீராடாதவரும், ஆசாரமில்லாதவர்களாவர். ஆகையால் இவர்கள் கோயிலுக்குள்ளே செல்லுதல் தகாது.

**திருக்கோயில் வழிபாட்டு முறை:** கோயிலுக்குச் செல்வோர் உணவு கொள்ளுமுன்னரே நீராடி, தோய்த்து உலர்ந்த ஆடைகளைத் தரித்து, விபூதியும் உருத்திராக்கமும் அணிந்து, சந்தியாவந்தனம் முதலியன முடித்துச் சிவநாமங்களை உச்சரித்துக்கொண்டு மெல்லமெல்ல நடந்து செல்ல வேண்டும்.

திருக்கோயிலைச் சமீபித்ததும் கை கால் கழுவி, ஆசமனம் பண்ணி, தூலலிங்கமாகிய கோபுரத்தைத் தரிசித்து வணங்கி, சிவநாமங்களை உச்சரித்துக்கொண்டு உள்ளே செல்லுதல் வேண்டும். அங்கே கொடித்தம்பத்தையும் பலிபீடத்தையும் நந்திதேவரையும் வணங்கிக் கொடித்தம்பத்திற்கு இப்பால் ஆண்கள் அட்டாங்க வணக்கமும், பெண்கள் பஞ்சாங்க வணக்கமும் செய்தல் வேண்டும். அட்டாங்க வணக்கமாவது: தலை, கையிரண்டு, செவியிரண்டு, மோவாய், புயங்களிரண்டு என்னும் எட்டு

உறுப்புக்களும் நிலத்திலே பொருந்தும்படி வணங்குதலாகும். இங்ஙனம் வணங்கும்போது பூமியிலே சிரசை வைத்து மார்பு பூமியிற் படும்படி வலக்கையை முன்னும், இடக்கையைப் பின்னும் நேரே நீட்டி, பின் அம்முறையே மடக்கி, வலப்புயமும் இடப்புயமும் மண்ணிலே பொருந்தும்படி கைகளை அரையை நோக்கி நீட்டி, வலக்காதை முன்னும், இடக்காதைப் பின்னும் பொருந்தச்செய்தல் வேண்டும். பஞ்சாங்க வணக்கமாவது தலை, கையிரண்டு, முழந்தாள் இரண்டு என்னும் ஐந்து உறுப்புக்களும் நிலத்திலே பொருந்த வணங்குதலாம். இவைதவிரத் திரயாங்கவணக்கமும் செய்யப்படுதல் உண்டு. திரயாங்க வணக்கமாவது சிரசிலே இரண்டு கைகளையும் குவித்து வணங்குதலாம். இது ஆண், பெண் இருபாலாருக்கும் உரியது. இவ்வணக்கங்களும், வீதிவலம் வருதலும் ஒருதரமேனும், இருதரமேனும் செய்தல் குற்றமாம். மூன்றுதரமாயினும் ஐந்து தரமாயினும் ஏழு தரமாயினும் ஒன்பதுதரமாயினும் பன்னிரண்டு தரமாயினும் செய்தல் வேண்டும்.

கொடித்தம்பத்திற்கு இப்பால் வணங்கிய பின் இரண்டு கைகளையும் குவித்துத் திருவைந்தெழுத்தை உச்சரித்துக்கொண்டு, கால்களை மெல்லமெல்ல வைத்துக் குறைந்தது மூன்றுதரமாயினும், கூடியது இருபத்தொருதரமாயினும் வீதிவலம் வருதல் வேண்டும். அங்ஙனம் வந்து மீண்டும் சந்நிதியிலே வணங்குதல் வேண்டும். ஆலயத்திலுள்ள மூர்த்திகளை வணங்குங்கால் முன்பு துவாரபாலகரை வணங்கிப் பின்பு திருநந்திதேவரை வணங்கி, "பகவானே உம்முடைய திருவடிகளை அடைந்து அடியேன் உள்ளே புகுந்து சிவபெருமானைத் தரிசித்துப் பயன் பெறும் பொருட்டு அநுமதி தந்தருளும்" என்று பிரார்த்தித்துக்கொண்டு உள்ளே போய், முன் விக்கினேசுவரரைத் தரிசித்தல் வேண்டும். பின் சிவலிங்கப்பெருமான் சந்நிதியையும் உமாதேவியார் சந்நிதியையும் அடைந்து அர்ச்சனை செய்வித்து விபூதி வாங்கித் தரித்துக்கொள்ள வேண்டும். அதன்பின் முறையே சபாபதி, (நடராசர்) தட்சணாமூர்த்தி, சோமாஸ்கந்தர், சந்திரசேகரர், சுப்பிரமணியர் முதலியோரையும் சமயகுரவர் நால்வரையும் வணங்குதல் வேண்டும். வணங்கும்போது இரண்டு கைகளையும் மார்பிலேனும் சிரசிலேனும் குவித்துக்கொண்டு, தேவார திருவாசகம் போன்ற திருமுறைகளை மனங்கசிந்துருகி ஓதுதல் வேண்டும். விக்கினேசுவரரைத் தரிசிக்கும்போது முட்டியாகப் பிடித்த இரண்டு கைகளினாலும் நெற்றியிலே மூன்றுமுறை குட்டி, வலக்காதை



இடக்கையினாலும், இடக்காதை வலக்கையினாலும் பிடித்துக்கொண்டு மூன்றுமுறை தாழ்ந்து எழுந்து கும்பிடுதல் வேண்டும். இப்படிக் குட்டுவதனால் அவ்விடங்களிலுள்ள நரம்புகளில் அமிர்தம் சுரப்பதாகவும், தாழ்ந்தெழுவதினால் அவ்வமிர்தம் உடல் முழுவதும் செல்வதாகவும் பெரியோர் கூறுவர். இவ்வணக்கம் தோப்புக்கரணம் அல்லது தோப்புக் கண்டம் என வழங்கும்.

இறுதியாகச் சண்டேசுரரைத் தரிசித்துக் கும்பிட்டுத் தோத்திரஞ் செய்து மூன்றுமுறை கைகொட்டிச் சிவதரிசன பலனைத் தந்தருளுமாறு பிரார்த்தித்து, வலப்பக்கமாக வந்து சிவசந்நிதியை அடைந்து, இடபதேவருடைய கொம்பின் நடுவாகச் சிவலிங்கப்பெருமானைத் தரிசித்துப் பலிபீடத்திற்கு இப்பால் மும்முறை வணக்கஞ் செய்து எழுந்து, அமைதியான ஓரிடத்தில் இருந்து திருவைந்தெழுத்தை இயன்றமட்டும் உருச்செபித்துக்கொண்டு சிவ சிந்தனையோடு அமைதியாக வீட்டிற்குச் செல்லுதல் வேண்டும்.

**திருக்கோயிலிலே செய்யத்தகாத குற்றங்கள்:** ஆசாரமில்லாது போதல், கால்கழுவாது போதல், எச்சில் உமிழ்தல், மலசலங் கழித்தல் மூக்குநீர் சிந்துதல், பாக்குவெற்றிலை உண்டல், போசனம் பண்ணுதல், ஆசனத்திருத்தல், நித்திரை செய்தல், கால்களை நீட்டிக்கொண்டிருத்தல், மயிர்கோதி முடிதல், சூதாடுதல், சிரசிலே ஆடை தரித்துக் கொள்ளல், தோளிலே சால்வை இட்டுக்கொள்ளுதல், பாதரட்சை இட்டுக்கொள்ளுதல், விக்கிரகத்தைத் தொடுதல், நிருமாலியத்தைக் கடத்தல், தூபி, கொடித்தம்பம், பலிபீடம், இடபம், விக்கிரகம் என்னும் இவற்றின் நிழலைமிதித்தல், வீண்வார்த்தை பேசுதல், சிரித்தல், சண்டையிடுதல், விளையாடுதல், சுவாமிக்கும் பலிபீடத்திற்கும் இடையே வணங்குதல், திரையிட்டபின் வணங்குதல், அபிடேக காலத்திலும் நிவேதன காலத்திலும் வணங்குதல், முற்பக்கத்தும், பிற்பக்கத்தும் வணங்குதல், திருவிளக்கு அணையக் கண்டும் தூண்டாதிருத்தல், திருவிளக்கு இல்லாதபோது வணங்குதல், மருட்பாக்களை ஓதுதல் முதலியனவாம்.

**திருக்கோயில் வழிபாட்டால் வரும் பலன்கள்:**

1. திருவீதியை வலம்வருவதனால் ஆன்மாவில் தங்கியிருக்கும் பாவங்கள் தேய்ந்து சிவ வியாபகம் உண்டாகும்.

2. நிலத்தில் வீழ்ந்து வணங்குவதனால் ஆன்ம தற்போதம் நீங்கி, எண்குணம் விளங்கச் சிவத்தோடு அத்துவிதக்கலப்பு உண்டாகும்.

3. காலையில் திருவீதியை வலம் செய்வதால் நோய் நீங்கும். உச்சிப் பொழுதில் வலம் வந்தால் விரும்பிய சித்தி உண்டாம். சாயங் காலத்தில் வலம் செய்வதால் சர்வ பாவநீக்கம் உண்டாம். அர்த்த சாமத்தில் வலம் செய்வதனுல் வீடுபேற்றுச் சித்தி உண்டாம்.

4. அங்கப்பிரதட்சணம் செய்வதனுல் தீவினைகள் எல்லாம் நீங்கப் பெற்று முத்தி சித்தியாகும்.

5. **அர்ச்சனை செய்வித்தல்:** ஆன்மாவைப் பிடித்திருக்கும் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களையும் அழித்தற் பொருட்டு அவற்றின் இயல்பைக் குறிக்கும் நிவேதனப் பொருட்களை இறைவன் திருவடியில் வைத்து, ஞானுசாரியராகிய அர்ச்சகரினுல் ஓதப் படும் வேதமந்திரங்களினுல் திருவருட்சத்தி தோன்றி இவற்றை அழிக்க, நிவேதனப் பொருட்களில் சிவஞானம் தோன்றும், அந்த ஞானப்பிரகாசத்தில் சிவத்தைக் காணலாம். அர்ச்சனைப் பொழுதில் காட்டப்படும் கர்ப்பூரதீபக் காட்சி இதனைக் குறிப்பதே யாம். இவ்வாறு திருவருள் பதிக்கப்பட்ட நிவேதனப் பொருட் களையே பிரசாதமாக வழங்குவர். அப்பிரசாதத்தை யாம் வாங்கி அணிவதனுலும், உட்கொள்வதனுலும் எம்மில் திருவருளைப் பதித்துக்கொள்கின்றேம் என்பது பொருளாம்.

6. **சிவாசாரியரை வணங்கி விபூதி பெறுதல்:** இறைவனிடமிருந்து திருவருளைப் பெறுதலுக்குச் சமமாம்.

* **திருக்கோயிலிலே செய்யத்தகும் சிவபுண்ணியத் திருத்தொண்டுகளும் பலன்களும்!**

1. **திருவலகிடுதல்:** திருச்சந்நிதியிலும், திருவீதியிலுமுள்ள குப்பை களை மெல்லிய துடைப்பத்தினுல் கூட்டி ஒதுக்குவது திருவல கிடுதல் எனப்படும். இது செய்வோர் காமம், வெகுளி, மயக்கம், பொய் ஆகிய மனமாயைகளை நீக்கிப் பரிசுத்தர்களாய் விளங்குவர்.

2. **திருமெழுக்கிடுதல்:** கோபம் முதலிய செத்தைகளை ஒருங்கே நீக்கி, தத்துவஞானம் என்னும் நறுஞ் சாணத்தைக்கொண்டு, அன் பென்னும் சலத்தோடு கலந்து திருமெழுகிடுபவர் மனக்கோயிலில் சிவலிங்கம் தோன்றப்பெறும்.



3. **அருட்பா ஓதல்;** சிவபெருமானது திருமேனி நாதவுருவானதென்று சுருதி கூறுகின்றது. அவ்வுண்மையை விளக்கவே அவரின் திரு முன்னிலையில் அருட்பாக்கள் பாடப்படுகின்றன. இது செய்வோர் உண்மைஞானம் விளங்கப்பெற்று முத்தியடைவர்.

4. **தூபந்தாங்குதல்:** ஆணவமல நீக்கத்தைப் பெறுவர்.

5. **திருவிளக்கேற்றுதல், தீபந்தாங்குதல்:** சிவஞானத்தைப் பெறுவர்.

6. **சாமரை இரட்டுதல்:** மல நிவாரணமும் திருவருட்செல்வமும் அடைவர்.

7. **குடை பிடித்தல்:** ஆஞ்ஞாசக்கரத்தையும் பலத்தையும் அடைவர்.

8. **வாகனந்தாங்குபவர்:** கணநாதராய் திருக்கைலாயத்தை அடைந்து இன்புற்றிருப்பர்.

**முக்கிய குறிப்பு:**

* பகல் 15—நாழிகை (12 மணி) யாகிய உச்சிவேளைக்குப்பின் சூரியன் மறைவதற்குமுன் தரிசிக்கச் சென்ருல், மேற்கே (சூரியன் இருப்பதனுல்) காலை நீட்டி வணங்கக்கூடாது. ஆகையால் அட்டாங்க பஞ்சாங்க வணக்கஞ் செய்யாமல், நின்றபடி இரண்டு கைகளையும் குவித்து உச்சிமேல் வைத்துக்கொண்டு வணங்குதலாகிய திரயாங்க வணக்கமே செய்து தரிசனஞ் செய்தல் வேண்டும். சூரிய கிரகணம், மாதசங்கிராந்தி (மாதப்பிறப்பு), மற்றும் புண்ணியகாலங்கள் பிற் பகலில் நேரும்போது ஆலய தரிசனம் பிற்பகலில் செய்ய நேரிடும் என அறிக.

* வீதிவலஞ் செய்யும் பிரகாரத்திலே (ஆவரணத்திலே) தூபியின் நிழலேனுங் கொடிமரத்தின் நிழலேனும் இருந்தால், அவற்றை மிதியாமற் செல்லுதல் வேண்டும். அஃது இயலாதபோது அந் நிழலில் மூன்று கூறுகள் தலைப்பக்கத்திலே நீக்கி, எஞ்சிய ஏனை இரண்டு கூறுகளுள்ள இடத்திலே செல்லல் வேண்டும். ஆனுல் சுவாமி உற்சவங் கொண்டருளுங் காலத்திலே சுவாமியுடன் செல்லும் பொழுது அந் நிழலிருப்பினும் அவ்வாறு நீக்காது செல்லலாம். அபிடேக நிவேதன காலத்திலே உட்பிரகாரத்திலே பிரதட்சணம், வணக்கம், தோத்திரம், செபம் முதலானவை செய்தல் ஆகாவாம்.

* பிரமசாரிகள் வலமாகவும், கிருகஸ்தரும், வானப்பிரஸ்தரும் வலம் இடம் ஆகிய இரு முறையினுலும், சந்நியாசிகள் இடமாகவும் பிரதட்சணஞ் செய்யக்கடவர். பிரதட்சணஞ் செய்யும் பிராகாரத்தில் உள்ள பலிபீடத்தையும் இடபத்தையும் சேர்த்துப் பிரதட்சணஞ் செய்தல் வேண்டும். குறுக்காகச் செல்லக்கூடாது.

# 9. திருவுருவ வழிபாடு

## (பொது அறிவு)

தன்னை விரும்பி வழிபடுவோருக்குத் தன்னருட் காட்சியைக் கொடுக்கும்பொருட்டு இறைவன் உறையும் இடங்கள் திருக்கோயில்களாகும். சைவசமயத்தில் திருக்கோயில் வழிபாடு என்பது சமய ஒழுக்கத்துக்கு நிறைவுதரும் ஒரு அங்கமாகும். ''வழிபாடு'' என்ற சொல் ''தொழுதல்'' என்ற பொருளிலேயே பெரும்பாலும் இன்று வழங்கப்படுகின்றது. காட்டிய வழியில் பின்பற்றி நடத்தலே 'வழிபடுதல்' எனப்படும். அதனுல் ஆலயங்கள் தூலமாயும், சூக்குமமாயும் காட்டும் வழிகளில் நடப்பதே—அவற்றைப் பின்பற்றி ஒழுகுவதே உண்மை வழிபாடு என்று பெயர் பெறும்.

மனிதனுக்கு ஆன்மீக அறிவை ஊட்டி வளர்ப்பதற்காக அமைக்கப்பட்ட ஆலயங்களில், அவனது அறிவு, இச்சை, செயல் ஆகிய மூன்றிற்கும் நிறைவு தரும் மூவகை முறைகள் இருப்பதைக் காணலாம். ஆலய அமைப்பு முறை, ஆராதனை முறை, தரிசன முறை என்பனவே அவையாகும்.

ஆலயக் கட்டடங்கள்—அதன் பல அங்கங்கள்—மண்டபங்கள்—பிராகாரங்கள் முதலியனவும், அங்குள்ள திருவுருவங்கள் (விக்கிரகங்கள்) அவற்றிற்குரிய இடங்கள், யந்திரங்கள், பிரதிட்டைகள் முதலியனவும், அவை அமைக்கப்பட்டிருக்கும் விதங்களும் ஆலய அமைப்பு முறையைச் சார்ந்தனவாம்.

அர்ச்சகர் ஆலயங்களில் செய்யும் பூசை முறைகள்—கிரியைகள் ஆராதனை முறையதாம். ஆலயத்தில் அடியார்கள் சென்று வழிபடும் முறை தரிசனம் எனப்படும்.

இம்மூன்று முறைகளும் தனித்தனியே அறிகுறிப்பொருள், அருள் நெறிப்பொருள், அநுபவப் பொருள் என மூவகைப் பொருள்களைக் கொடுப்பனவாம்.

அறிகுறிப்பொருள் அடியார்களுடைய அறிவைப் பெருக்குவது, அருள்நெறிப்பொருள் அடியாருடைய இச்சையைப் பண்படுத்துவது; அநுபவப் பொருள் அடியார்க்கு மன அமைதியையும், சாந்தியையும் ஆன்ம வளர்ச்சியையும்—முன்னேற்றத்தையும் அளிப்பதாம்.

## திருவுருவம்

திருக்கோயில் திருவுருவ வழிபாடு தனி ஒரு மனிதனுக்கென உருவாகவில்லை. மக்கள் அனைவருஞ் சென்று வழிபடுவதற்காகத் தோன்றியவையே அவையாகும். மக்களின் எண்ணிக்கைத் தொகை பெரிது. ஆயின் அவர்களுள் பெரும்பாலானேர் அறிவு நிலையின் அடித்தளத்தையும் அணுகா—அறியா நிலையிலுள்ளனர். இந் நிலையிலுள்ளோர் எளிதாய் விளங்கி வழிபடும் முறைக்கு ஏற்ப அமைந்த சாதனங்களே சைவக்கோவிற் திருவுருவங்களாகும்.



குணங்குறியற்ற இறைவனைக் குணங்குறிகளால் வகுக்கும் எல்லைக்குள் வைத்துப் புறத்தோற்றங் கொடுத்து, எமது கட்புலனுக்குள் அடங்கச்செய்யும் முயற்சியின் விளைவே நாம் காணும்—வழிபடும் திருவுருவங்கள். உருவமற்ற இறைவன் ஆன்மாக்கள் உய்யும்பொருட்டு, அவர்கள்மீது உண்டான கருணை மேலீட்டால், அருள் பாலித்தற்காகக் காலத்திற்குக் காலம் உருக்கொள்கின்ருன். அப்படியாக அவன் பல வடிவங்களில் வந்து நின்று அருள்பாலிப்பதனுல் திருவுருவங்களும் பல திறத்தனவாகின்றன. பலதரப்பட்டவர்கள் நிலைக்கும், அவர்களது எண்ணங்களுக்கும், விருப்பங்களுக்கும் ஏற்றவாறு வழிபடுவதற்கு அமைவாக இத்திருவுருவங்கள் பலவகைப்பட்டு விளங்குவனவாகும். சாதாரண மனித அறிவால் உணர்ந்துகொள்ள முடியாத இறைவனை அறிய வகையறியாது தடுமாறும் பக்குவப்பட்ட *பெத்தான்மாக்களுள் விவேகமும், பக்குவமும், உடையவர்களது வழிபாட்டிற்கு உரியது சிவலிங்கத்திருமேனியாம். இப்படியான சிவலிங்கத் திருமேனியை உணரும் பக்குவம் இல்லாதவர்களது வழிபாட்டுக்கு உரிய திருவுருவம் கை, கால் முதலிய உறுப்புக்களுடன் கூடிய உருவத்திருமேனிகள் ஆகும் என்பது ஞானநூல் வல்ல பெரியோர் கருத்து.

தொன்று தொட்டே இத்திருவுருவ வழிபாட்டு முறை நம் சைவ சமயத்தில் நிலவி வருகிறது. பழம்பெரும் நாகரிக நகரங்களாக விளங்கி, இன்று அழிந்திருக்கும் மொஹஞ்சதாரோ, ஹரப்பா நகர அகழ்வாராய்வின்போது சிற்சில இடங்களிற் கண்டெடுக்கப்பட்ட தெய்வத் திருவுருவச் சிலைகளே இக்கருத்திற்குச் சான்ருகும். இவற்றின் விரிவை இந்நூலில் உள்ள 'சைவத்தின் தொன்மை', 'சிந்துவெளி நாகரிக காலச் சிவ வழிபாடு' என்ற பாடல்களிற் காணலாம்.

திருவுருவங்கள் இறைவனை நினைவு கூர்ந்து, மனதால் உணர்ந்து கொள்வதற்குத் துணை நிற்பதோடமையாது, அவன் பெருமையினை அறிவதற்கும் உதவியாக விளங்குகின்றன.

கணிதம் பயிலும் ஒருவன், குறியீடுகள் மூலமே தனது கணித அறிவை வளர்க்கின்ருன். குறியீடுகள் மூலமாக வளர்த்த கணித அறிவைக்கொண்டு பலதரப்பட்ட படிகளை ஒவ்வொன்ருகக் கடந்து, கற்பனைக்கோட்டையாக எண்ணிவந்த சந்திரமண்டலம்வரை மனிதன் போய்விட்டான். இது பற்றிக் கற்பனை கட்டுமுன்—இம்முடிபை யாருங் கண்ணுற் கண்டதில்லை. ஆனல் கற்பனையையே உண்மையாகக் காணுகிற நிலை கைகூடியபொழுது உலகமே அதிசயித்து உண்மையை உணர்ந்தது. இவ்வுண்மையின் அந்தத்தைக் காட்டப் பேருதவியாக விளங்கியவை கணிதக் குறியீடுகளேயாம். இதுபற்றித்திடமான ஒரு முடிவு காண்பதற்கு முன் நல்லநுகூலமான விளைவை நல்க உதவி வந்த

* பந்த நிலை உயிர்கள்

கணிதக் குறியீடுகளைப் பொய்யென்று வாதிடவோ அன்றிச் சொல்லவோ முடியுமா? முடியாது. புறக்கண் கொண்டு நாம் காணுந் திடமான உண்மை இதுவாகும்.

இதுபோலவே ஆன்மீக உலகில் அகக்கண் கொண்டு காண வேண்டிய இறைவனைக் காட்டும் ஆரம்ப நிலைக் குறியீடாக — அடையாளமாக விளங்குவது எமது ஆலயத் திருவுருவங்களும், அவற்றிற் காற்றும் வழிபாடுகளுமாகும். இவற்றின் இறுதி முடிவான நிலை பரம்பொருட்காட்சியான சிவாநுபவம். கணித சாத்திரத்தில் குறியீடுகள் பொருள் அல்ல; அவை உணர்த்துகின்ற இயற்கை உண்மைகளே பொருளாம். அதுபோலத் திருவுருவ வழிபாட்டிலும் திருவுருவம் பொருளன்று; அது குறியீடாக நின்று காட்டும் பேருண்மையே — எண்ணமே பொருள். திருவுருவ வழிபாட்டால் தங்கள் எண்ணத்தை நிறைவு செய்து இறைவனின் பேருண்மையைக் காட்டிச் சிவாநுபவப் பேறு பெற்றோர் எமது சமயத்தில் பலராவர். மார்க்கண்டேயர் போன்றவர் வாழ்க்கை வரலாறு இதற்குச் சான்றாகும்.

இன்னும், எமது சமய குரவர்கள் அறுபத்து மூவர்களுள் முப்பது பேர் திருவுருவ வழிபாட்டால் வீடு பெற்றோராவர். அவர்களுள் எறிபத்தர், கலயர், முருகர், கண்ணப்பர், ஆனாயர், சண்டேசுவரர், திருநாளைப்போவார், சேரமான் பெருமாள், சாக்கியர், தண்டியடிகள், பூசலார், கணம் புல்லர், புகழ்ச்சோழர், ஐயடிகள், காடவர்கோன் போன்றோர் குறிப்பிடத்தக்க சிலராவர்.

நாம் திருவுருவ வழிபாடு செய்கிறோம் என்றால், அவ்வழிபாடு நம் உள்ளத்திலிருந்து எழுந்து காணும் உருவத்தையும் கடந்து, அறிய முடியாத ஒரு பொருளைச் சென்று பற்றுகிறது என்பதை நாம் பூரணமாக நம்பி உணருதல் வேண்டும். இன்னும் திருவுருவத்தில் இறைவன் எழுந்தருளி இருப்பதாய் ஆரம்ப முதல் நினைந்து வழிபாடாற்றி வரவரத் திருவுருவமே இறைவனாயும், அதன்மேல் திருவுருவத்தைக் காணாது இறைவனையே அங்கு நேருக்கு நேராகக் காணுவதாகவும் அநுபவம் பிறக்கும் என்பதும் தெளிவாம்.

உருவ வழிபாட்டில் பலருடைய மனங்கள் — பார்வைகள் ஒருங்கு வந்து ஒரே பொருளில் குவிகின்றன, பலருடைய தூய சிந்தையிலிருந்து பிறக்கும் எண்ணங்கள் குவிந்து ஒருமுகப்படும்போது "எண்ணத்திற்கு ஆற்றல் உண்டு" என்று கூறுவதற்கு இசைய, அது பதியும் இடத்தில் தெய்வ சாந்நித்திய ஆற்றல் பிறக்கும்.



அவ்வாற்றல், அதனை நோக்கி வழிபடுவோரைத் தன்வயப் படுத்தித் தெளிந்த நல்லறிவூட்டும்; நன்மை பெருக நல்வாழ்வு பெறவுஞ் செய்யும். அப்படியானவர்களது உண்மையறிவானந்த அநுபோகப் பெருக்கில் கருவாகிப் பிறந்தவையே எமது சைவசமயக் கருவூலங்களாகிய தோத்திர சாத்திர நூல்களாவன.

இவ்வாறு பக்தியுடையவர் கிரியையில்லாது சிலையில் வணக்கஞ் செய்வதையும், அவர் மனம் அச்சிலையில் தெய்வம் இருக்கிறதென்று கருதுவதும், எங்கும் நிறைந்த இறைவன் அச்சிலையில் காட்சியாவதையும் உணர்த்துவதே தோத்திர நூலாகிய தேவாரத்தில், அப்பர் பெருமானது திருவாரூர்த் திருத்தாண்டகப் பதிகத்தில் வரும் "உயிராவணமிருந்து உற்றுநோக்கி உள்ளக் கிழியி னுருவெழுதி" என்ற பாடலாகும். (உள்ளக்கிழி — மனமாகிய படம் வரையுஞ் சீலை.) சரியை, கிரியை, யோகம் ஆகிய முத்திற நெறியாளர்களுக்கும் திருவுருவ வழிபாடு உரியதாகும். இதனை வலியுறுத்துகின்றது சைவ சாத்திர நூலாகிய சிவஞான சித்தியார்ப் பாடல் ஒன்று.

"திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனி தன்னைச்
  சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவா னங்கே
உருக்கோலி மந்திரத்தா லெனநினையு மவர்க்கு
  முளனெங்கு மிலனிங்கு முளனென் பார்க்கும்
விருப்பாய வடிவாகி *யிந்தனத்தி னெரிபோல்
  மந்திரத்தின் வந்துதித்து மிகுஞ்சுரப்பிக் கெங்கும்
உருக்காண வொண்ணாத பால்முலைப்பால் விம்மி
  ஒழுகுவது போல்வெளிப்பட் டருளுவனன் பர்க்கே"

என்பதே அப்பாடலாகும்.

ஆலயத்திலுள்ள திருவுருவச் சிலை, விக்கிரகம், பிம்பம், மூர்த்தி, பேரம், பிரதிமை போன்ற பல்வேறு சொற்களால் சிற்ப நூல்களில் குறிப்பிடப்படும். இவற்றுள் "விக்கிரகம்" என்ற சொல்லில் வரும் "வி" "விசேடம்" என்றும், "கிரகம்" "இடம்" என்றும் பொருள் படும். அஃதாவது கடவுள் விசேடமாக விளங்கும் இடம் என்பது பொருளாம். அண்டம் முழுவதிலும் பொதுவாக வியாபகமுடைய இறைவன், ஆலயங்களில் விசேடமாகவும், அதிலும் விக்கிரகங்களில் இன்னும் அதி விசேடமாகவும் விளங்குவான் எனச் சமய நூல்கள் கூறுகின்றன.

ஆலயங்களில் கல்லினால் அல்லது தாமிரத்தால்(உலோகத்தால்)செய்யப்பட்ட திருவுருவச் சிலைகள் வைக்கப்பட்டிருப்பதைக் காண்கிறோம்.

*இந்தனம் - விறகு.

கல்லாலமைந்தவை கற்சிலை அல்லது சிலாவிக்கிரகம் எனப்படும். இவை ஒவ்வொன்றும் ஆகம முறையில் அமைந்த அவற்றிற்குரிய கருவறைகளில் பிரதிட்டை செய்யப்பட்டு வழிபாடு செய்யப்படும். இத்திருவுருவங்களுக்குத்தான் நித்திய திருமஞ்சனமும் பூசையும் நடைபெறும். நைமித்திய பூசை வழிபாடும் இவற்றிற்குத்தான் நடைபெறும். தாமிரத்தால் வார்க்கப்பட்டு வைக்கப்பட்டிருக்கும் திருவுருவங்களுக்கு நாள்தோறும் திருமஞ்சனம் நிகழ்வதில்லை; பூசை மட்டுமே நடைபெறும்.

திருவுருவங்களை அமைக்குஞ் சிற்பி, அவ்வவற்றின் பிரமாணங்களுக்கு அமையவே சிலைகளை அமைக்கவேண்டும். இவற்றில் தவறுகள் ஏதேனும் நேரின், சிற்பி முதலாக அந்நாடு முழுவதற்குமே பெருங்கேடுகள் சூழும் எனச் சிற்ப ஆகமங்களும், சிற்ப நூல்களும், புராணங்களும் கூறுகின்றன.

திருவுருவங்களின் உயரம் பேராங்குலம், மானாங்குலம், மாத்திராங்குலம், தேகலப்தாங்குலம் என்ற நால்வகை விக்கிரக அளவு நூற் பிரமாணங்களுக்கு அமைந்ததாக இருக்கும். இதேபோன்று இவற்றின் சுற்றளவு அளக்கும் முறை; மானம், பிரமாணம், உன்மானம், பரிமாணம், உபமானம், இலம்பமானம் என ஆறு வகையாகும்.

இங்ஙனம் "ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்று மில்லார்க்கு ஆயிரந் திருநாமம் பாடி நாம் தெள்ளேணங் கொட்டாமோ" என்ற திருவாசக வாக்குப்படி, உருவம் ஒன்றின்றி எங்குமாய், எல்லாமாய் நிற்கும் பரமசிவத்திற்குச் சிவாலயங்களில் முதலுருவாகச் சிவலிங்கத்தையும், வழி உருவங்களாகத் தாண்டவர் (நடராசர்), தேவியார், தட்சணாமூர்த்தி, ஆகிய மூவரையும், சார்புருவங்களாக விநாயகர், சுப்பிரமணியர், காலவைரவர் போன்ற மூர்த்திகளையும் வகுத்து வைத்திருக்கின்றனர். இவருள் சிவம் அருவம் அல்லது அரூபம் என்றும், சிவலிங்கம் ரூபாரூபம் அல்லது அருவுருவம் என்றும், மற்றை இரு மூவரும் ரூபம் அல்லது உருவம் என்றும் கூறப்படுகின்றனர்.

உருவமற்ற பரமன் கொண்ட கோலங்களையெல்லாம் வழிபடும் வழக்கம் சைவத் தமிழர்களிடையே பெரும்பாலும் பண்டு தொட்டு இருந்து வரக்காண்கின்றோம். இவ்வுருவங்களை வழிபடும் தோறும், இவற்றுடன் தொடர்புகொண்ட நிகழ்ச்சிகளையும் வழிபடுவோர் நினைவு கூருகின்றனர். ஆன்மாக்கள் ஈடேறவேண்டி அவன் திருவிளையாட்டாக நிகழ்த்திய சம்பவங்கள், அவனது ஒவ்வொரு திருக்கோலப் பெருமையினையும் நினைவுறுத்துகின்றன. வெறும் சம்பவங்களைச் சித்திரிக்கும் இச்சிலைகள்



நாளடைவில் அச்சம்பவங்களை உணர்த்துவதை விட்டு, எம் அறிவு முதிர்ச்சிக்கு ஏற்ப, தம் அடிப்படையிற் புதைந்து கிடக்கும் பேருண்மைகளை உணர்த்துவனவாக மாறிவிடுகின்றன. உருவ அமைப்பு, அது சுட்டும் வரலாறு, உருவத்தின் திருக்கரங்களில் விளங்கும் படைக்கலங்கள், கைகள் காட்டும் முத்திரைகள், சிறப்பாக அபய வரதமாக அமைந்திருக்கும் கரங்கள், அவன் அணிந்திருக்கும் அணிகலன்கள் என்பவை உணர்த்தும் பொருள்கள் திருவுருவங்களை வணங்கும் போது வணங்குவோர் கருத்திற் பதிய வேண்டும். ஏனெனில் இவற்றின் தத்துவம் விளங்கி வழிபடுவது மேலான அருளை வழங்கும் என்பதற்காகவாம்.

இறைவன் ஊர்பேரற்றவன்; குணங்குறியும்-உருவமும் அற்றவன். ஆயின் ஆன்மாக்களிடம் பூண்ட அன்பினால் திருவுருவங்களில் உருவாகிக் காட்சி அளித்தருளுகின்றான் என்று முன்னரே இப்பாடத்தில் கூறப்பட்டுள்ளது. இக்காட்சி உருவங்கள் யாவும் கருணை வடிவானவையாம். இறைவனுக்கெனச் சிறப்பாக உரிய ஐந்தொழில்களை நிகழ்த்தி நிற்றலை அறுபத்து நான்கு கோணங்களினின்றும் படம் பிடித்துக் காட்டுபவை இத்திருவுருவங்களாகும்.

சிவாகம விதிப்படி கட்டடங்கள் அமைக்கப்பட்டு, மகாகும்பாபிடேகத்தினால் தெய்வப்பிரதிட்டை செய்யப்பட்டு நித்திய நைமித்தியக் கிரியைகள் செய்யப்பட்டு வருகின்ற ஆலயங்களில் வேதபாடம் செய்து வைக்கப்பட்டுள்ள *யந்திரங்களெல்லாம் அருட்கருவிகளாம். அவற்றைத் தம்மிடத்துக் கொள்ளாத உருவங்களெல்லாம் வெறுஞ் சிலைகளாம். அவை ஆராதனைக்கேற்ற மூர்த்திகள் ஆகமாட்டா. ஆலயங்களில் யந்திரமே உயிர்நாடியாக உள்ளது. அதுவே பூசைக்கு இன்றியமையாதது. அதன்மேலுள்ள திருவுருவம் (விக்கிரகம்) அருவப் பொருளை அறியமாட்டாத மனத்தின் கவர்ச்சிக்காகவும், மக்கள் மனத்தை ஒருமுனைப்படுத்துவதற்காகவுமே உதவுவது. அதனாற்றான் ஆன்மார்த்த பூசையில் பலர் சிலையின்றி வெறும் யந்திரத்தை மாத்திரம் வைத்துப் பூசை செய்யும் வழக்கம் இருந்துவருகின்றது. அன்றியும் இந்த யந்திரங்கள் அறிகுறியாகக் காட்டும் உண்மையும் ஒன்றுள்ளது. யந்திரம் முதலில் வரையப்படும்போது அது ஓர் உலோகத் துண்டாய்—வெறும் சடப்பொருளாகவே இருக்கும். பின் மந்திரம் முத்திரை பாவனைகளாலும், உரிய கிரியைகளாலும் அது பாடம் பண்ணப்படும்போது, இரும்புத்துண்டு காந்தமாவதுபோல, அச் சடப்பொருள் சிறிது சிறிதாக அருட் கருவியாதற்குரிய பக்குவம் பெற்றுக் கொண்டு வரும். இது சித்பிரகாச ஆவாகனம் எனப்படும். முடிவில் இத்தகட்டில் பூரண உருவேறி யந்திரதாபனமும், பிராணப் பிரதிட்டையும் செய்யப்படும்போது, அது முழுவதும் இறைவனது அருட்கருவியாக மாறிக்

* ஆலய திருவுருவங்களுக்கு அடியில் வைக்கப்பட்டிருப்பது.

கோடி சூரியப் பிரகாசம் பொருந்திய அநுக்கிரக சக்தியை நாற்புறமும் இரவும், பகலும் இடைவிடாது வீசிக்கொண்டே இருக்கும் என ஞானநூல் வல்லோர் கூறுவர். ஆலயங்களில் நடைபெறும் நித்திய ஆராதனைகளால் உண்டாகும் பயன்களில் ஒன்று அங்ஙனஞ் செலவாகும் சக்திக்கு ஈடுகொடுத்து அருளாற்றலை நிறைவு செய்தலாம். இஃது அன்றாடம் செய்யவேண்டிய அறிமுக ஆவாகனத்தால் நடைபெறும். ஆராதனை இல்லாத யத்திரங்கள் நாளாவட்டத்தில் சக்தி இழந்துவிடும். இதனால் மூர்த்திகரமும் இறங்கிவிடும் என்பது தெளிவாகும்.

ஆகம விதிகளின்படி அபிடேகங்கள் நடைபெறும் கோயில்களில் அங்கு பிரதிட்டை கும்பாபிடேகங்களின் போது பிம்பத்திலும், அதன் யந்திரத்திலும் சேமித்து வைக்கப்பட்டுள்ள தெய்வீக சக்திகளும், வசீகர அருள் அலைகளும் திருமஞ்சனத் திரவியங்களில் தோய்ந்துள்ள சக்திகளால் வீரியம் பெறுகின்றன. ஒவ்வொரு நேரப் பூசை முடிவிலும் சண்டேசுவரர் பூசையும், *விசர்ச்சனமும் செய்யப்படும்போது பிரசன்ன மூர்த்திகள் யாவரும் வெளியேறுவர். அந்நேரம் அங்கு திரண்டிருந்த அருள் முழுவதும் உலக நன்மையின் பொருட்டு நாற்புறமும் நாட்டிற் பரவும்.

## (1) சிவன்

சிவனுக்கெனச் சிறப்பாக உள்ள திருமேனிகள் மூன்று. †அருவம் உருவம், அருவுருவம் என்பனவே அவையாகும்.

---

* பூசையின்போது அழைக்கப்பட்ட தேவர்களுக்கு நன்றி கூறி விடை கொடுத்து அனுப்புதல்.

† "அன்றுந் திருவுருவங் காணாதே ஆட்பட்டேன்
இன்றுந் திருவுருவம் காண்கிலேன், —என்றுந்தான்
எவ்வுருவோன் நும்பிரான் என்பார்கட் கென்னுரைக்கேன்,
எவ்வுருவோ நின்னுருவ மேது".

— காரைக்காலம்மையார்

† "மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி
மயானத்தான் வார்சடையான் என்னி னல்லான்
ஒப்புடைய னல்லன் ஒருவ னல்லன்,
ஓரூர னல்லன் ஒருவம னில்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண் ணமும்
அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன்
இவனிறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே."

— அப்பரடிகள்



அருவத்திருமேனி ஊனக் கண்களுக்குப் புலப்படாதது; நுண்ணியது, அகக்கண்கொண்டு உள் நோக்கும் யோகிகள் நோக்கிற்கு மட்டும் எட்டுவது. அடுத்து கை, கால் முதலிய உறுப்புக்கள் இல்லாததனால் அருவமாகியும், கண்ணாற் பார்க்கும் பொழுதும், கையாற் தொடும் பொழுதும் உணரத் தக்கதனால் உருவமாகியும், இரு நிலைகளும் விரவப் பெற்றது. இதுதான் அருவுருவமாகும். இவ் அருவுருவத் தோற்றம் சிவனுக்கு மட்டுமே அமைந்ததாகும். இதுவே இலிங்கம் எனப்படும். சிவனுக்கு மட்டுமே சிறப்பாக இது உரியதனால் சிவலிங்கம் எனப்படுகிறது. மனம் வாக்குகளுக்கு எட்டாத இறைவனை வாழ்த்தி வணங்கும் பொழுதும், நினைக்கும் பொழுதும், அவனை உணர முற்படுவோருக்கு இலிங்கம் அவனைக் குறிக்கும் அடையாளமாக—அவனை உணர்த்தும் கருவியாக விளங்குகிறது.

இலிங்கம் உயரிய தத்துவங்கள் பலவற்றை உணர்த்தி நிற்பது. சிவாலயங்களில் இருக்கும் பிரதான திருவுருவம் சிவலிங்கமாகும். "லிங்கம்" என்பதில் வரும் "லிங்" லயம் அல்லது அடங்குதல் என்றும், "கம்" தோன்றுதல் என்றும் பொருள்படும். அஃதாவது உலகின் தோற்ற ஒடுக்கத்தைக் குறித்து நிற்கும் குறி அல்லது அடையாளம் *சிவலிங்கம் என்று கூறப்படும்.

---

* சைவர்களினால் தரிசிக்கப்படவேண்டிய பன்னிரண்டு சோதி லிங்கங்களின் இடமும் பெயரும்:

1. குயரத்தில் அரபிக்கடலோரமாக உள்ள சோமநாதலிங்கம்,
2. திருப்பருப்பதம் - ஸ்ரீ சைலம் மல்லிகார்ச்சுனலிங்கம்.
3. உச்சயின் (திருஅவந்தி) மாகாளலிங்கம்.
4. ஜபல்பூருக்கு அண்மையிலுள்ள நருமதை நதி தீரத்தில் ஓங்காரலிங்கம்.
5. வடநாட்டுக் காடமான் மலைக்கு மேலுள்ள திருக்கேதாரலிங்கம்,
6. டெக்கானிலுள்ள பீமசங்கரலிங்கம்.
7. வாரணாசியிலுள்ள (காசி) விசுவலிங்கம்
8. பஞ்சவடியிலிருந்து எட்டு மைல் தூரத்தில் கோதாவரி நதி உற்பத்தியாகுமிடத்திலுள்ள திரியம்பக லிங்கம்
9. சிதாபுரம் வைத்தியநாதலிங்கம்
10. தாருகாவனத்தில் நாகேச்வரலிங்கம்
11. சேதுவில் - இராமேசுவரலிங்கம்
12. சிவாலயத்தில் குச்மேசலிங்கம்.

இலிங்கம் உருவ அமைப்பு இல்லாதது. அருவுருவ வடிவுடையது. லிங்கம் சிவத்தையும், பீடம் சக்தியையும் குறிப்பது. ''சிவலிங்கம் ஞானமயமாகிய பிரணவரூபமாக உள்ளது என்று'' திருமூலர் திருமந்திரம் கூறுகிறது.

இலிங்கம் உருவ அமைப்பின்றி இருப்பது. அது எல்லா உலகங்களினதும், சராசரங்களினதும் தோற்றத்தைக் குறிக்கும். எந்த ஒரு உயிரும் (பிராணியும்) கருவின் தொடக்கத்தில் உருவமில்லாத கட்டியாகவே இருக்கும். எமது பூமியும், ஏனைய கிரகங்களும் விண்மீன்கள் முதலிய சகலமுந் தொடக்கத்தில் முட்டை போலவே தோற்றின. அதனுற்றுன் அவை அண்டங்கள் எனப்படுகின்றன. அண்டம்—முட்டையைக் குறிப்பது. இலிங்க வடிவம் அண்ட—முட்டை வடிவமே என்பது இங்கு குறிப்பிடத் தக்கதாகும்.

உருவமில்லாத இறைவன் ஆன்மாக்களுக்கு அருள்செய்யும் நோக்கமாகத் திருமேனி கொள்ளும்போது அருவுருவமாகிய உருவமுண்டாகும். அவ்வருவுருவைக் குறிப்பதே இலிங்கமாகும். அப்படியான சிவலிங்கத்தில் சிவபெருமான் சதாசிவமூர்த்தி வடிவினராகத் தியானித்துப் பூசிக்கப்படுவர். இச் சதாசிவத்திலிருந்தே ஈசானம் முதலிய ஐந்து திருமுகங்களும், மற்றும் அவயவங்களும் தோன்றும். ஈசானம், தற்புருஷம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் ஆகிய ஐந்து திருமுகங்களும் *ஐந்தொழில்களையுஞ் செய்யுந் திருவருளைக் குறிப்பனவாகும்.

சிவபெருமான் சிவலிங்கத்திலே சரியை வழிபாடு செய்வார்க்கு மறைந்து நின்று அருள் செய்வார். கிரியையாளர்க்கும், யோகிகளுக்கும் அவர்கள் பூசிக்கும்போது தோன்றி நின்று அருள் செய்வார். ஞானிகளுக்கு அவர் அன்பே தாமாய் எப்போதும் வெளிப்பட்டு நின்று அருள் செய்வார்.

இலிங்க வகைகள் : சிவலிங்கம் பரார்த்தலிங்கம் அல்லது தாவரலிங்கம் எனவும், ஆன்மார்த்தலிங்கம் அல்லது இட்டலிங்கம் எனவும் இரு வகைப்படும். யாவரும் வழிபடுவதற்காகத் திருக்கோயில்களில் நிலையாகத் தாபிக்கப்படுவது பரார்த்தலிங்கம் அல்லது தாவரலிங்கம் எனப்படும். தானே தோன்றியதாயின் இது சுயம்புலிங்கம் எனவும்படும். தாபிக்கப் பட்டதாயின் தாபித்தோருக்கேற்பப் பெயர்பெறும். விநாயகர் முதலிய கணர்களால் தாபிக்கப்பட்டது காணலிங்கம்; தேவர்களால் தாபிக்கப்பட்டது தைவிகலிங்கம்; இருடிகளால் தாபிக்கப்பட்டது ஆரிடலிங்கம்; மானிடரால் தாபிக்கப்பட்டது மானுடலிங்கம். பரார்த்தலிங்கத்தில் சிவபெருமான் சங்காரகாலம் வரை

* படைத்தல், காத்தல், அழித்தல், அருளல், மறைத்தல்.



சாந்நித்தியராயிருந்து ஆன்மாக்களுக்கு அனுக்கிரகம் செய்வார். ஆதிசைவ மரபில் உதித்து, மூவகைத் தீட்சையும் ஆசாரிய அபிடேகமும் பெற்று, வேதாகமங் கற்று வல்ல ஆசாரியர்களே பரார்த்த லிங்கத்துக்குப் பூசை, திருவிழா முதலியன செய்தற்குரியோர் ஆவர். இனி விசேட தீட்சை பெற்றவர்கள், தாமே சிவலிங்கத் திருமேனியைத் தீண்டி வழிபட்டு இன்புற வேண்டும் என்ற விருப்பத்தால், தமது விசேட தீட்சாகுருவிடமிருந்து பெற்று, அவரது உபதேசப்படி பூசிக்கும் சிவலிங்கம் ஆன்மார்த்தலிங்கம் அல்லது இட்டலிங்கம் எனப்படும். அது சுவர்ணலிங்கம், படிகலிங்கம், இரத்தினலிங்கம், சைலலிங்கம் எனப் பலவகைப்படும். ஆன்மார்த்த பூசை ஆயுட்காலம் முழுதும் செய்தற்குரியது. அங்கவீனம், பிணி முதலியன இல்லாதவர்களாயும், சிவபூசா விதிகளை மறந்திடாது அனுட்டிக்க வல்லவராயும் உள்ளவர்களே முற்கூறிய இலிங்கங்களைப் பிரதிட்டை செய்து வழிபடுவதற்குரியவர்களாவர். ஏனையோர், பூசித்தவுடன் ஆற்றிலேனும் குளத்திலேனும் விடப்படும் சணிகலிங்க பூசையே செய்தற்குரியவர். சணிகலிங்கம் என்பது மண், அரிசி, அன்னம், ஆற்றுமணல், கோமயம், வெண்ணெய், உருத்திராக்கம், சந்தனம், சர்க்கரை, மா முதலியவற்றுள் ஒன்றால் சிவலிங்க வடிவாய் அமைத்துப் பூசிக்கப்படுவது.



சிவபெருமானைச் சிறப்பாக அர்ச்சித்தற்குரிய காலங்கள் திருவனந்தற்காலம் ஆகிய மார்கழி, காலைச் சந்திக்காலமாகிய தை, உச்சிக்காலமாகிய சித்திரை; சாயரட்சைக் காலமாகிய ஆடி, அர்த்தசாம காலமாகிய ஐப்பசி என்னும் ஐந்து மாதங்களுமாம். இவற்றுள்ளும் திருவனந்தற் காலமாகிய மார்கழி மாதம் மிகவும் உத்தமமான காலமாகும். இம்மாதம் முழுவதும் விதிப்படி அர்ச்சிப்பதும், இம்மாதத் திருவாதிரை நாளில் மூலலிங்கத்திற்குச் சிறப்பாக நெய்யாலும், இளநீராலும் ஸ்நபன கும்பத்தாலும் திருமஞ்சனமாட்டித் திருவூஞ்சல் விழாச் செய்தல் மேலான பலனைக் கொடுக்கும் எனக் கூறுவர்.

சிவபெருமான் திருவருட் சக்தி வடிவமைந்த ஊஞ்சலின்மீதிருந்து ஆடுதல், ஆன்மாக்களுடைய பிறவித் துன்பங்களையும், பிறவிக்குக் காரணமாகிய பாசங்களையும் அறுத்து, ஆன்மாக்களை ஆட்கொண்டு திருவருள் வாயிலாகத் தம்முடன் கூட்டுதலைக் குறிப்பதாம், அத் திருவருளாகிய திருவடியே ஆன்மாக்களுக்கு உறைவிடமாம் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

சிவனது பூசைக்கு உதவும் மலர்கள் தாழம்பூ தவிர்ந்த மலர்களாம். சிவனது விரதங்களையும், அவற்றாலாகும் பலன்களையும் இந்நூலிலுள்ள ''சிவ விரதங்கள்'' என்ற பாடத்திற் காண்க.

குறிப்பு: எடுத்து வைத்து அலர்ந்த பூ, நிலத்தில் விழுந்து கிடந்த பூ, பழைய பூ, உதிர்ந்த பூ, அரும்பு, இரவில் எடுத்த பூ, கைச்சீலை, எருக்கிலை, ஆமணக்கிலை போன்றவற்றில் கொண்டுவந்த பூ, காற்றில் அடிபட்ட பூ, புழுக்கடி, எச்சம் — சிலந்தி நூல் — மயிர் என்பவற்றுடன் கூடிய பூ, மோந்த பூ, நீராடாதவர், சிவதீட்சை பெறாதவர் எடுத்த பூ முதலானவை அர்ச்சனைக்கு ஆகாத பூக்களாகும்.

## சிவமூர்த்தங்கள்:

சிவாலயத்திற் பல உருவத் திருமேனிகள் உள. அவையொவ்வொன்றும் உட்கருத்துக்களுடையதாயும், புராணக்கதைகட்கமைய அமைக்கப்பட்டதாயு மிருக்கின்றது. சிவபெருமான் அடியவர்கட்கு அருள் செய்யுமாறு அவர்கள் மனோபாவனைப்படியும், அவ்வருட் செய்கைக்கேற்றதுமான திருவுருவங்களைக் கொண்டவர். அவைகளிலிருபத்தைந்து ஆகம புராணங்களிற் கூறப்படுகின்றன. அவை: நடேசர், சந்திரசேகரர், உமாமசேகர், இடபாரூடர், கல்யாணசுந்தரர், பிட்சாடனர், காமாரி, காலாரி, திரிபுராரி, சலந்தராரி, மாதங்காரி, வீரபத்திரர், ஹரியர்த்தர், அர்த்தநாரீசுரர், கிராதர், கங்காளர், சண்டேசானுக்கிரகர், நீலகண்டர், சக்கரப்பிரதர், கயமுகானுக்கிரகர், சோமாஸ்கந்தர், ஏகபாதர், சுகாசீனர், தட்சணாமூர்த்தி, லிங்கோற்பவர் என்பன. இவைகளுள் விசேடமாக நடேசர் (சபாபதி), சந்திரசேகரர், சோமாஸ்கந்தர், தட்சணாமூர்த்தி, பிட்சாடனர் முதலிய வடிவங்களைத்தான் அதிகமாய் ஆலயங்களில் காணலாம். ஏனையவை எல்லாம் வைக்கப்படின் ஆலயம் பெரிதாகும். இந்த இருபத்தைந்து மூர்த்தங்களும் மகேசுவர மூர்த்தம் எனப்படும்.

## (2) நடேசர்

நடேசர் ஐந்தொழில்களைக் காட்டும் வடிவமாகும். அவரது அனவரத தாண்டவமே எல்லா உலகங்களின் அசைவுகட்கும், செயல்கட்கும் மூலகாரணம். எல்லாமியங்கும் வலிமை அந்த நாட்டியத்திலிருந்தே வருகின்றது. நடராசப் பெருமானே எல்லா நாட்டியங்களுக்கும் தலைவனாவான். அணு முதல் அண்டம் வரை இடைவிடாது அசைந்து கொண்டிருக்க முதற் காரணம் இந்த நடேசர் நாட்டியமே.

**தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற்**
**சாற்றியிடு மங்கியிலே சங்காரம் — ஊற்றமாய்**
**ஊன்று மலர்ப்பதத்தே யுற்ற திரோதமுத்தி**
**நான்ற மலர்ப்பதத்தே நாடு.**



நடேசரின் வடிவில் ஒரு திருக்கரம் உடுக்கை என்ற வாத்தியத்தைத் தாங்கியுள்ளது. அதிலிருந்து சத்தம் பிறக்கும். சத்தம் ஆகாயத்தில் உண்டாவது. ஆகாயம் பஞ்சபூதங்களில் முதலானதும் அவையெல்லாவற்றுள்ளும் மேன்மையானதுமாகும். ஆகாயத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து தேயுவும் (நெருப்பு), தேயுவிலிருந்து அப்புவும் (நீரும்), அப்புவிலிருந்து பிருதிவியும் (நிலமும்) பிறக்கின்றன. சத்தப் பிரபஞ்சத்தினின்றும் ஏனைய தோன்றி இவ்வுலகம் தோன்றியதென்பது மேற்கூறியவற்றால் விளங்கும், உடுக்கையின் ஓசை நாத தத்துவத்தைக் காட்டும். அதிலிருந்தே விந்து தொடக்கம் பிருதிவியீறான முப்பத்துஆறு தத்துவங்களும் பிறக்கும். அதனாலேயே ''தோற்றந் துடியதனில்'' எனப்பட்டது. இது இறைவனின் படைத்தல் தொழிலைக் குறிக்கும். ''தோயுந் திதியமைப்பில்'' காத்தற்றொழில் நடராசரின் அபயத்தைக் காட்டும் திருக்கரத்தால் விளங்கும். ''சாற்றியிடு மங்கியிலே சங்காரம்'' நடேசரின் இன்னொரு கரத்தில் அக்கினி காணப்படுகிறது. அது சர்வசங்காரத்தை (அழித்தலை)க் காட்டும். ''நான்ற மலர்ப்பதத்தே நாடு'' என்பது தூக்கிய பாதத்தை நாடுவாய் என்பதைக் காட்டுகின்றது. அதாவது தூக்கிய பாதத்தின் கீழடைவதே முத்தியாகும். அது அருளல். ஊன்றிய பாதம் முயலகனெனும் ஆணவத்தை மிதித்தடக்கி ஆன்மாவுக்கு மல மறைப்பை உண்டாக்கும்.

## (3) சந்திரசேகரர்

சந்திரசேகரராவது உமாதேவியாரை இடப்பாகத்தே கொண்ட போக வடிவம். சடையில் ஒற்றைப் பிறை விளங்கும். அதனாலேயே சந்திரசேகரர் எனப்பட்டார். கலைகள் தேய்ந்து வருந்திய சந்திரனுக்கு அபயங் கொடுத்த கோலம்தான் சந்திரசேகர வடிவம். ''வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க் கியாண்டு மிடும்பை யில'' என்னுந் திருக்குறள் வாக்கின்படி, இறைவனையடைந்தவர்க்குத் துன்பமேயில்லை யென்பதைக் குறிக்கும் வடிவம் இது. வருந்துமெவர்க்கும் புகலிடம் இதுவென்பதையே இவ்வடிவம் காட்டும். இறைவனைப் புகலிடமாகக் கொண்டவர்க்கு ''அஞ்சுவது யாதொன்றுமில்லை அஞ்சவருவதுமில்லை'' என்பதை சந்திரசேகரர் சடையிலணியப்பட்ட சந்திரனும் பாம்பும் காட்டும். ''பாம்பொடு திங்கள் பகைதீர்த் தாண்டாய்'' எனத் தேவாரங் கூறுகிறது. சந்திரன் அமிர்தம்; பாம்பு நஞ்சு. இறைவனுக்கு இரண்டும் சமம். அவனுக்கு விருப்பு வெறுப்பு இல்லை என்பதை அவனிவை இரண்டையும் அணிந்திருக்கும் சந்திரசேகர கோல மூலம் நாம் உணரலாம்.

## (4) சோமாஸ்கந்தர்

சர்வலோகங்களையும் தேராயமைத்து ஆரோகணித்து, முப்புரங்களையும் எரிக்கப் புறப்பட்ட கோலம் சோமாஸ்கந்தர் மூர்த்தமாகும். அதனாலேயே தேர்த்திருவிழாவுக்கு இத்திருவுருவ மூர்த்தியை எழுந்தருளச் செய்கின்றனர். இத்திருவுருவம் திருப்பாற்கடலில் யோக நித்திரை செய்யும் மகாவிஷ்ணுவின் மார்பிலெப்பொழுதும் எழுந்தருளியிருந்து அவராற் பூசிக்கப்படுவது. முசுகுந்தச் சக்கரவர்த்தியால் வருந்திப் பெற்றுவந்து பூசிக்கப்பட்டது. இவ்வடிவில் இறைவனும் இறைவியும் அவர்களுக் கிடையில் கந்தருமிருக்கக் காணலாம். கந்தர் இடையில் இருப்பது *சுத்தாத்துவித சித்தாந்திகளின் முத்தி நிலையைக் காட்டுகிறது. "தாயுடன் சென்று பின் தாதையைக் கூடி" எனும் பெரியோர் வாசகம் இதை விளக்குகிறது. ஆன்மா இறைவனின் சத்தியாகிய பெருங் கருணை வசப்பட்டு இறைவனை அடைந்து ஒருபுறம் இறைவனும், மறுபுறம் இறைவியுமிருக்க, வேறு ஒன்றையும் காணாது இறைவனையே சதா தரிசித்துத் தன்னை மறந்து நிற்கிறது. இறைவனும் இறைவியும் ஒன்று ஆகையால், இறைவனையே அன்றி வேறெதையும் அறியாது இறைவனில் ஒன்றுபட்டு நிற்கிறது திருவருள் பதிந்த ஆன்மா என்பதனையே இத்திருஉருவக் காட்சி நமக்கு உணர்த்துகின்றது.

முப்புரமெரித்தல் என்பது ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களையும் எரித்தலாம்.

"அப்பணி செஞ்சடை யாதி புராதனன்
முப்புரஞ் செற்றன னென்பர்கள் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புர மெய்தமை யாரறி வாரே"

எனும் திருமந்திரப் பாடல் இதை விளக்குகின்றது. இறைவன் ஆன்மாக்களின் மலத்தை நீக்கும் பொருட்டுத் தனு, கரணம், புவனம் முதலியவற்றை உண்டாக்கி, அவை மூலமாக மலத்தை நீக்குதல் என்பதை; சகல உலகினையும் தேராக்கி, அதில் சென்று முப்புரமெரித்தார் என்பதிலிருந்தும், அதனால் மூன்று மலங்களும் நீங்கப்பெற்ற ஆன்மா தேரில் வீற்றிருக்கும் சோமாஸ்கந்த மூர்த்தத்தில் கந்தரின் (முருகனின்) நிலையை அடைவதிலிருந்தும் வளங்குகிறது.

*இன்று நாம் போற்றும் சைவ சமயத்தவர் அடையும் முத்தி.



## (5) தட்சணாமூர்த்தி

குருவடிவம், சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் எனும் பிரம புத்திரர்களாகிய சீடர்களுக்கும், ஏனைய பக்குவ ஆன்மாக்களுக்கும் கல்லாலமரத்தின் கீழ் ஞான குருவாய் எழுந்தருளியிருந்து, ஞானோபதேசம் செய்யும் வடிவம் ஆகும்.

## (6) பிட்சாடனர்

பிட்சாடனப் பெருமான் ஆன்மாக்கள் செய்யும் செப தவ அநுட்டானங்களை ஏற்கும் வடிவம். கருமத்தாலேயே முத்தியடையலாம். அதற்குத் தெய்வாநுக்கிரகம் தேவையில்லையென வாதிட்டு இறைவனை வழிபடாது ஏனைய சகல நற்குண நற்செய்கைகளிலும் நின்ற தாருகாவன முனிவர்களை அடிமைகொண்டு, அவர்களைத் திருத்தித் தெய்வ வழிபாட்டிற் செலுத்தி உய்விப்பதற்காக இறைவன் கொண்ட திருவடிவமே இத்திருவுருவம் ஆகும்.

## (7) உமாதேவியார்

மகேசுவர மூர்த்தங்களைவிடத் தேவியின் உருவங்களும் ஆலயங்களில் உள. உமாதேவியார் சிவபெருமானுடைய அருட்சக்தி என்று கூறப்படுவர். உலகத்திலே பிள்ளைகளைப் பெற்று அன்புடன் வளர்த்துக் காத்துவருபவர் தாயார். இதுபோல ஆன்மாக்கள் உய்திபெறும் பொருட்டுப் படைத்தல், காத்தல் முதலிய ஐந்தொழில் நிகழ்ச்சிகளுக்குந் துணையாக உள்ள சிவசக்தியாகிய உமாதேவியார் அம்மை என்றும் உலகமாதா என்றும் போற்றப்படுகிறார். சத்தியாகிய் இறைவி பராசத்தி, சிற்சத்தி, இச்சாசத்தி, கிரியா சத்தி, ஞான சத்தி என்னும் ஐந்து சத்திகளாயும் நின்று இறைவனின் ஐந்தொழில்களை நடாத்துவதுடன், ஐந்தொழில்களும் (கிருத்திய முறைக்கு) ஏற்ப போகசத்தி, வீரசத்தி, கோரசத்தி, அதிகாரசத்தி போன்ற வடிவங்களாயும் நிற்பள்.

போகசத்தி பார்வதியம்மையார், வீரசத்தி துர்க்காதேவி, கோரசத்தி காளி, அதிகார சத்தி நாரயணமூர்த்தியை அதிட்டித்து நிற்கும் நாரயணி, அதிட்டித்து நிற்றல்-நிலைக்களமாகக் கொண்டு நின்று நடத்துதலாம்.

போக சத்தி சகல உலகங்களையும் ஈன்றளித்துக் காப்பாற்றி யநுக்கிரகிப்பவள். வீரசத்தி, மகுடாசுர சங்காரத்தில் ஈடுபட்ட கோலமாய் சகல வெற்றிகளுக்கும் இருப்பிடமாய் இருப்பவள். கோரசத்தி பயங்கரமான உருவமுடையவளாய் வினைகளை அழித்து ஆன்மாக்களை ஈடேற்றும் சங்கரியாவாள். அதிகார சத்தி துட்டரை அடக்கிச் * சிட்டரைப் பாதுகாத்து நிற்கும் திதித் தொழிலுடையவளாவாள்.

சிவலிங்க வடிவில் தியானித்துப் பூசிக்கப்படும் சதாசிவ மூர்த்தியின் சத்தி மனோன்மணி எனப்படுவாள். இச்சத்தி பக்குவான்மாக்களுடைய மலத்தை நீக்கி, சத்திநிபாதத்தை அருளி, அவ்வான்மாக்களைச் சிவத்தோடு சேர்ப்பவள். இவ் அம்மை நான்கு திருக்கைகளை உடையவள். ஒரு திருக்கையில் தாமரைப் பூவையும், மறு திருக்கையில் செபமாலையையும் தாங்கியுள்ளாள். மற்றிரு திருக்கைகளில் ஒன்றினால் அபயமும், மற்றதனால் வரதமும் காட்டுகிறாள். அபயம் காட்டும் கை வலக்கை. இது தம்மை அன்புடன் வழிபடும் அடியவர்களுக்கு உலகத் துன்பங்களை இட்டுப் பயப்பட வேண்டாம் என்று ஆறுதலை அளிக்கும் பாவனையில் அஞ்சேல் என்று காட்டுவதாக உள்ளது.

(அ+பயம்=அபயம்—பயத்தை நீக்குவது) அடுத்து வரத முத்திரை பொருந்தியது இடக்கை. இது ஞானமயமாகிய தம் திருவடியைக் காட்டி ''இதைத் தருவோம் பெற்றுக்கொள்'' என்ற குறிப்பினைக் காட்டி நிற்கும்.

சிவம் சத்தியோடு கூடி உலகப்படைப்பு முதலியன நிகழும்படி சங்கற்பித்தலே உலகத்தோற்றம் முதலிய நிகழ்ச்சிகளுக்குக் காரணமாகையால், அச்சங்கற்பமே சிவம் சக்தியோடு கூடியிருத்தல் எனவும், அச்சங்கற்பம் இல்லாமையே பிரிதல் எனவும் சைவச் சிறப்பு நூல்களாகிய சிவாகமங்கள் கூறும். நெருப்பில் சூடும், மலரில் மணமும், சூரியனில் ஒளியும் போலச் சிவபெருமான் கருணை வடிவான சத்தியுடன் பிரிவின்றி இருத்தலாகிய வல்லமையே சிவசத்தியாகிய அருட்சத்தியாகும். இச்சத்தியைப் பெண்பாலாகத் தம் இடப்பாகத்தில் இறைவன் வைத்த காரணத்தை,

'' தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பா லுகந்திலனேற் பேதாய் இருநிலத்தோர்
விண்பா லியோகெய்தி வீடுவர்காண் சாழலோ ''

என்ற மணிமொழியார் திருவாசகத்தால் அறிந்துகொள்ளலாம்.

* பெரியோர் - நல்லோர்



இத்தன்மையளான உமையம்மை; அங்கயற்கண்ணி, மீனாட்சி, காமாட்சி, இராசராசேசுவரி, புவனேசுவரி, மகேசுவரி, நாகேசுவரி, காளி, மாரி முதலிய பெயர்களுடனும் வேறுபல பெயர்களுடனும் சைவ உலகில் பிரசித்தமான கோயில்களில் இடங்கொண்டிருக்கின்றனள். இத்தகைய அம்மை வடிவங்களை வழிபடும் அன்பர்களுக்கெல்லாம் அருள்கொடுப்பவரும் உமாமகேசுவரராகிய சிவபெருமானே ஆவார். அவர் அம்மையானவள் தாங்கும் இத்திருவுருவங்களில் அதிட்டித்து நின்று அருளினைப் பாலிப்பார்.

'' உடையாள் நடுவுள் நீயிருத்தி'' என்ற திருவாசக அடியை ஆராயின் இதன் உண்மை தெளிவாகும்.

## அம்மையின் திருக்கோயிலை வழிபடும் முறை:

அம்மையாருக்குத் தனியாக உள்ள திருக்கோயிலுக்குச் செல்வோர், இதிற் கூறப்படும் முறையில் வழிபடுதல் ஆலய வழிபாட்டு ஒழுங்காகும்.

சிவசந்நிதிக்குச் செல்லும் ஆசார ஒழுங்கு முறையில் கோயிலினுள்ளே சென்று பலிபீடத்திற்கு இப்பாலே நான்கு முறை விழுந்து கும்பிட்டெழுந்து, இரண்டு கைகளையும் குவித்துக்கொண்டு நான்கு தரத்திற்குக் குறையாது இரட்டை எண்கள் வர வலஞ் செய்து, மீண்டுஞ் சந்நிதியை அடைந்து துவாரபாலகிகளைக் கும்பிட்டு, அநுமதி பெற்று உள்ளே புக வேண்டும். உள்ளே புகுந்து விக்கினேசுவரரைத் தரிசித்த பின் தேவி சந்நிதியை அடைந்து ஆதி சைவரைக் கொண்டு அர்ச்சனை செய்வித்து வணங்க வேண்டும். பின்னர் விபூதி, குங்குமம் முதலியன வாங்கித் தரித்துக்கொண்டு மகேசுவரி, வாமை முதலிய சத்திகளையும் விநாயகர், சுப்பிரமணியர் முதலான மூர்த்திகளையும் தரிசித்துச் சண்டேசுவரி சந்நிதியை அடைந்து கும்பிட வேண்டும். அங்கு கும்பிடும் போது மூன்று முறை கைகொட்டித் தேவி தரிசன பலனைத் தரும் பொருட்டுப் பிரார்த்தித்து வலம் வந்து தேவி சந்நிதியை அடைந்து நான்கு முறை வணங்கி எழுந்து, தனியாக ஓர் இடத்தில் அமைதியாக இருந்து தேவி மூலமந்திரத்தை இயன்ற மட்டுஞ் செபித்தல் வேண்டும். இவையாவும் முடிந்த பின்னர் அம்மையை மனதினில் நினைந்தபடி, சந்நிதியைப் பார்த்தபடியே தேவிக்குப் புறங்காட்டாது வெளியே வந்து வீட்டுக்குத் திரும்புதல் வேண்டும்.

சூரியன் கர்க்கடகத்தை அடைவது ஆடி மாதத்தில், இந்த ஆடிமாதத்தில் வரும் ஆடிப்பூரம் உமையம்மைக்குரிய நாளாகும். பெரும்பாலான

ஆலயங்களில் இந்நாளில் அம்மைக்குத் தேர்த் திருவிழா நடைபெறும். இந்நாள் பூசை நோன்புகள் சர்வசாந்தியையும், சகல சித்திகளையும், சுகத்தையும், புண்ணியத்தையும் கொடுக்கும் எனக் கூறுகிறது திருப்போரூர்ப் புராணம்.

அம்மையின் அர்ச்சனைக்கு அறுகும், நெல்லியும் தவிர்க்கப்பட்ட பத்திரங்களாகும்.

அம்மையையே வழிபடு (உபாசனை) கடவுளாகக் கொள்பவர்கள் சாக்தர் எனப்படுவர்.

## பொது

திருக்கோவில்களில் விநாயகர், வைரவர், வீரபத்திரர், சுப்பிரமணியர் என்னும் நான்கு சிவகுமாரர்களின் திருவுருவங்களும் உள. இந்நால் வரும் அடியார்கள் ஈடேறும் பொருட்டு இறைவன் கொண்ட கோலங்களாகும். முன்னர் கூறப்பட்ட இருபத்தைந்து மகேசுவர வடிவங்களும், இந்நான்கும் இறைவன் சுத்தமாயாதத்துவத்திற் கொண்ட வடிவங்களே. இறைவன் ஒருவரே அடியார் வேண்டுகோளுக்கேற்பப் பல கோலங்களோடு நின்று அருள் செய்பவர். தோற்றம் வேறுபடினும் உள் நிற்பது ஒன்றே. இவ்வடிவங்கள் எல்லாம் ஆன்மதத்துவமாகிய இருபத்து நாலாம் தத்துவத்தின் மேலுள்ள சுத்தவித்தியா தத்துவங்களில் எடுக்கப்படுவன. இறைவன் முப்பத்தாறு தத்துவங்களுக்கும் மேலானவர். தத்துவம் எல்லாம் சடப்பொருள்களே.

## (8) விநாயகர்

விநாயகர் சிவபெருமானது சக்தி அம்சமாகத் தோன்றிய ஒரு மூர்த்தமே. அதனால் இவர் சிவகுமாரர் என்றுஞ் சொல்லப்படுவர், ஆயின் இவர் சிவத்தின் வடிவினரேயன்றிச் சிவத்தின் வேறல்லர்.

உலகங்கள் முதற் தோன்றுதற்கு முதற் காரணமாயுள்ளது மகா மாயை அல்லது பிரணவம் எனப்படும். அதற்குத் தலைமையாய் இருக்கும் சிவசத்திக்கும் விநாயகர் என்று பெயர். தனக்கு மேலான ஒருவர், தலைவர் இல்லாதவர் என்ற பொருளை உணர்த்துவது விநாயகர் என்னும் பெயர். நாம் எடுக்கும் எக்கருமமும் இடையூறு இன்றி இனிது முடிதற் பொருட்டு விநாயகர் அருளை வேண்டி வணங்குதல் தொன்று தொட்ட மரபாகும். தம்மை அன்பால் வணங்கும் அடியவர்களுக்கு விக்கினங்களை (இடையூறுகளை) நீக்குங் கடவுளாதலின் விக்கினேசுவரர்



எனவும் இவர் போற்றப்படுவர். தன்னை அடைந்தோர்க்கு ஞானத்தினால் மோட்சத்தைக் கொடுக்கும் சிவசொரூபி என்றதனால் கணபதி என்ற பெயரும் பெறுவர். (க + ண + பதி = கணபதி; க—ஞானம்; ண — மோட்சம், பதி—தலைவர்). மேலும் மனித உடலின் மூலாதாரத்தில் அதன் அதிதெய்வமாக இருந்து குண்டலினி சத்தியை நடத்துபவராக இருப்பவர் கணபதி என்றும் யோகசாத்திரம் கூறும்.

விநாயகர் பிரணவ வடிவினர். பிரணவம் வட்டவடிவைக் குறிக்கும். இயற்கை அசைவுகளெல்லாம் வட்டமானவையே. வட்டத்துக்கு முடிவு இல்லை. வேறெந்த வடிவுக்கும் முடிவு உண்டு. இவர் பிரணவ வடிவினராக இருப்பது சகலமுந் தோற்றுவதற்கு முதற் காரணர் என்பதை விளக்கும். "கணபதி" என்ற பெயர் மூலப்பொருகள்களுக்குத் தலைவன் என்ற பொருளையும் உணர்த்துவதாகும். இப்பெயரும் முதற் காரணரென்பதை விளக்குகின்றது.

வேதமானது சிவபெருமானை முதல், இடை, கடைகளில் பிரகாசப்படுத்துகின்றது. அது முதலில் "ஓம்" என்று தொடங்குகின்றது. இந்த "ஓம்" பிரணவம் என்று சொல்லப்படுவது. இதன் வடிவமே விநாயகக் கடவுள். வேதத்தின் முதல் எழுத்து விநாயகரது சுத்தஞான வடிவம் என்பதை விநாயகரது திருவுருவமே உணர்த்துகின்றது. இதனையே "கைவேழமுகம்" என்று பெரியோர் கூறுவர். மேலும் "மூந்தை வேத முதலெழுத்தாகிய எந்தை" எனவும், "மூல மொழிப் பொருளா மெந்தை" எனவும் "தாரகப் பிரமமான மாக்கய முகத்து வள்ளல்" எனவும், கந்தபுராணம் கூறுவதும் இதனையேயாம். இது பற்றியே விநாயகரை முதலில் வழிபடும் மரபு போற்றப்பட்டு வருகின்றது. சிவபெருமான் அவருக்கு அருளிச் செய்ததும் இதுவே என உண்மை நூல்கள் கூறுகின்றன.

பிரணவத்தின் வரிவடிவம் முதற்பகுதி நட்சத்திர வடிவம் என்றும் இரண்டாம் பகுதி தண்டவடிவாக அமைந்திருப்பதாகவும் காமிக ஆகமம் கூறுவதாகக் கூறுவர். எனவே இவ்விரண்டு உறுப்புகளும் (0 + = — உ) கலந்த வடிவம் ஊமை எழுத்து என்றும், மூலமனு என்றும், பிள்ளையார் சுழி என்றும், மௌனாக்கரம் என்றும் கூறப்படும். இப்படிப் பலவாறாகக் கூறப்படும் பிள்ளையார் சுழியாகி "உ" என்னும் எழுத்து நாத விந்துக்களின் வரிவடிவாம். "உ" என்ற அடையாளத்திலுள்ள வட்டம் (0) விந்து—சத்தியையும், கோடு (–) நாதம் - சிவத்தையும், அதாவது சிவம் சத்தி ஆகிய இரண்டையும் அடக்கியுள்ளது. "மோனமே குறியாதா முதலெழுத் தருளிய" என்ற கந்தபுராணத்தாலும்,

"கண்டன வெலாமோன வுருவெளிய தாகவுங் கருதியஞ் சலிசெய்கு வாம்" என்ற தாயுமான சுவாமிகள் பாடலாலும் உணரப்படும்.

விநாயகர் பிரணவவடிவினர் என்பதைக் காட்டுவதற்காகவே மோதகம், தேங்காய், மாதுளம்பழம் முதலிய வட்டப் பொருட்கள் நிவேதிக்கப்படுகின்றன. இன்னும் அவர் சத்துவகுணத்தினராகையால் பால், தேன், சர்க்கரை, பருப்பு, அவல் முதலிய பதார்த்தங்கள் நிவேதிக்கப்படுகின்றனவாம்.

கயமுகாசுரன் என்பவனுற் செய்யப்பட்ட கொடுமைகளை அடக்கித் தேவர்களை மீட்டு, அவ் அசுரனை ஆட்கொள்ளுவதற்காக இறைவன் கொண்ட திருக்கோலமே விநாயகராவார்.

விநாயகர் யானை முகம், பருத்த தொந்தி, மூன்று திருக்கண், இரண்டு திருவடி, இருந்த பாவனை கயமுகாசுரனைக் கொல்ல முரித்த கொம்பும், அங்குசமும் (யானைத் தோட்டி) தங்கிய வலதுகைகள் இரண்டு, பாசமும் மோதகமும் தாங்கிய இடது கைகள் இரண்டு, துதிக்கை ஆகிய ஐந்து திருக்கைகள் கொண்ட திருக்கோலத்தில் பெருச்சாளி ஊர்தியில் (வாகனத்தில்) அமர்ந்திருத்தலையே தம் திருவுருவமாகக் கொண்டவர்.

இயற்கையான யானைக்குத் தொந்தி வயிறு இருப்பதில்லை. ஆயின் சகல அண்டங்களும், சராசரங்களும் ஓங்காரமென்னும் பிரணவத்துள் அடங்குவதால், அவ்வடிவினராகிய யானைமுகப் பிள்ளையாருக்குத் தொந்தி வயிறு (தாழி வயிறு) அமைந்திருப்பது இயல்பாகின்றது, திருக்கண்கள் மூன்றும் இச்சை, கிரியை, ஞானம் ஆகிய மூன்றையும் குறிப்பனவாம். பரஞானத்தால் எதனையும் காண வேண்டும் என்பதைக் குறிப்பது நெற்றிக்கண். அவர் தோற்றத்தில் காணும் விரிந்த காதுகள் அன்பர்கள் கூறுவதைக் கேட்கும் ஆவல் உடையவர் என்பதைக் காட்டுவதாகும்.

கயமுகசங்காரத்தின் பொருட்டு முரிக்கப்பட்டதாகிய ஒற்றைக்கொம்பை ஏந்தி நிற்பது ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களேயும் நீக்குபவர் தாம் என்பதை அடியவர்க்கு அறிவித்தற்காகவாம்.

ஆன்மாக்களை அநாதியே பந்தித்த ஆணவ மலமாகிய யானையைப் பாசமென்னும் கயிற்றுற் கட்டி அங்குசத்தால் அடக்கி, மறைத்தல் என்னுந் தொழிலைச் செய்பவர் தாம் என்பதை உணர்த்துவதற்காகவே பாசாங்குசங்களை ஏந்தியுள்ளார்.



ஆணவ வடிவமான கயமுகனுடைய சேனைகளைப் பாசத்தாற் கட்டி, கணிச்சியால் (கோடரியால்) அடக்கி, அவனது மலவலி கெட்டுப் பெருச்சாளி வடிவமாக வர, அவனுக்கு நீங்காத ஞானத்தைக் கொடுத்துச் சுத்தனுக்கித் தனது வாகனமாகும் பேற்றினைக் கொடுத்து அடிமை கொண்டதனுல், ஆணவம் என்ற மதங்கொண்ட யானையை அடக்கி ஆன்மாவை அடிமை கொண்டவர் இவர் என்பது இனிது விளங்கும்.

விநாயகரைப் பூசித்துப் பெறற்கரும் பேறுகளும், தெய்வப் புலமையும் பெற்ற பிற்காலத்து ஔவையார் பாடிய விநாயகர் அகவலில் வரும் "கோடா யுதத்தால் கொடுவினை களைந்து" என்ற அடியாலும் "கண்ணிலான வெங்கரி பிடித்தடக்கிக் கரிகினேற் குருகையுமாக்கும்" என்ற தணிகைப் புராணத் திருவாக்காலும் அறிந்து கொள்ளலாம்.

பிள்ளையாருக்குரிய நிவேதனப் பொருள்களாகிய அவல், பொரி, பெரியகடலை போன்றவை வறுபட்டு முளை இழந்த விதைகளைக் குறிப்பன. இவை விநாயகருக்கு நிவேதிப்பது விநாயகரை அண்டித் தம்மை அர்ப்பணிப்போருடைய வினைப்பயன்கள் வறுபட்டுப் பிறவித் துன்ப முளை இழந்து பேரின்பம் கிடைக்கும் என்பதைக் காட்டவேயாம்.

மேலும் அண்டங்கள் கோழி முட்டை வடிவின. முட்டைக்கு அண்டம் என்பது இன்னேர் பெயராகும். இப்பெருமானுக்குரிய இன்னெரு நிவேதனப் பொருளாகிய மாதுளம்பழப் பருப்பு ஒவ்வொன்றும் ஒவ்வொரு சிறு முட்டை வடிவான தனித்தனி அண்டமாகவும், நூற்றுக்கணக்கான அப்பருப்புகளை அண்டங்களாகக் கொண்ட மாதுளங்கனி ஒவ்வொன்றும் அகிலாண்டமாகவும் உருவகப்படுத்திக் கூறப்பட்டிருப்பது அறிந்து நினைந்து நினைந்து வியக்கத் தக்கதாகும்.

பத்தி நெறி, ஞான நெறி ஆகிய இரண்டிலும் மிக இன்றியமையாத சாதனம் மனத்தாழ்மை (பணிவு) ஆகும். "நான்" என்ற அகங்காரம் அற்ற நிலைமை இதுவாகும். மற்றெல்லா மூர்த்திகளுக்கும் நிலத்தில் விழுந்த இலைகளும், பூக்களும் உதவாதனவாகும். ஆயின் பிள்ளையார் விரும்புவது யாவரும் மிதித்து நடமாடும் புல்லாகிய அறுகாகும். தன்னை அண்டி வழிபடுவோர்க்கு எளிதில் வந்து இன்பம் விளைக்கும் பேற்றை அளிப்பர் என்பதைக் காட்டுவது இதுவாகும்.

அர்ச்சனை செய்யும் அறுகு, ஒரே காம்பில் மூன்று கவருடையனவாக இருத்தல் வேண்டும். இம் மூன்றும் ஊசி முனையாகவும் இருக்கும். அல்லது அடியில் ஒன்று சேர்ந்து இருக்கும். எடுத்த காரியங்களில் விக்கினமின்றி வெற்றிபெற விரும்புவோர் மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றையும் கூர்மைப்படுத்த வேண்டும் என்பதையும், இம்

மூன்றையும் ஒற்றுமைப்படுத்தி அடக்கமாக ஒரே சிந்தனையில் ( ஏகாக்கிரக சித்தம் ) வைத்திருக்கவேண்டும் என்பவற்றைக் குறிப்பன இதன் விளக்கம்.

பிள்ளையாரை வழிபடும்போது மூன்றுமுறை குட்டிக் கீழே குந்தி எழுவதும், மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றையும் குட்டி அடக்கி ஆள்வதையே குறிக்கும், குலைந்துபோன முப்புரிநூல் ஊசிக்காதுக்குள் புகாததுபோல. சிதறுண்ட மனமொழி மெய்கள் காரியசித்தி கொடாமல் விக்கினங்களை உண்டுபண்ணி விடுவனவாம்.

துளசி . தவிர்ந்த மலர்கள் விநாயகர் பூசைக்கு உகந்தனவாம். விநாயகர் விரதம்பற்றி இந்நூலிலுள்ள " **விரதங்கள்** " என்ற பாடப் பகுதியில் கூறப்பட்டுள்ளனவற்றைப் பார்த்துத் தெரிந்து கொள்ளவும்.

## வைரவக் கடவுள்

**வை**ரவக் கடவுள் சத்துவ குணத்தில் தாமத குணத்தர். அவர் சங்காரருத்திரரெனப்படுவர். சகல தத்துவ சம்பந்தங்களையும் சங்கரித்து ஆன்மாக்களை ஈடேற்றுங் கோலமே அவரது வடிவம். அவரது உருவம் சுத்த நிர்வாணமாயிருக்கும். அவ்வுருவத்துக்கு உடை தரிப்பதேயில்லை. உலகப் பற்றை விடினும், உடற் பற்றை விடல் சிறிது கடினம். உடல் பற்று இருந்தால் உடையில்லாதிருக்க முடியாது. அந்தப் பற்றினையும் விடு என்பதே அவருடைய வடிவம் காட்டுவது. வினை விழும்போதுதான் உடற் பற்று அழியும். அவைகளை அழிக்குங் கோலம் தன் கோலமாகையால், தாமதகுணத்தைக்காட்டும் கோரவடிவை யுடையவராக இருக்கின்றார். பிரம விஷ்ணு முதலிய தேவர்கள் இறைவனை மறந்து தருக்குற்ற காலத்தில், அவர்களைத் திருத்துவதற்காகக் கருணை கொண்டு, கருணையிற் கோபவடிவாய்ச் சென்று, பிரமனது ஒரு சிரசை நகத்தாற் கிள்ளி ஏனைய தேவர்களின் இரத்தத்தை அவர்களின் தருக்கடங்கும் வரையும் கவர்ந்து, அவர்களை ஆட்கொண்ட கோலம் வைரவ மூர்த்தம் ஆகும்.

சிவத்தினின்றும் தோன்றிய காரணத்தால் இவர் சிவகுமாரர் எனப் படுவர். ஆயினும் சிவத்தின் வேறாகாத சத்தி வடிவமே அவர் ஆவர்.

இவரது வாகனம் வேதவடிவாகிய நாய் ஆகும். அவரை வணங்கும் போது எங்களுடைய அகந்தையை நீக்கிக் காத்தருளும்படி வேண்டுதல் செய்கிறோம்.



வைரவக் கடவுளைப் பின்பற்றும் பரிவராங்களும், சிறு தெய்வங்களும் வைரவ நாமமுடையன. அவைகள் பல வைரவ நாமங்களோடு சிறு கோவில்களில் வைக்கப்படுகின்றன. அவைகளாலியன்ற நன்மைகளை அவைகள் தாமே செய்வதாயினும். இறைவனருளே அங்கும் நிற்கும் என்பது தேற்றம்,

இரவு *பள்ளியறை மூடியவுடனே வைரவருக்கு வழிபாடியற்றி அவருடைய பரிவாரங்களாகிய வேதாள கணங்களுக்குப் பலிபோடப் படுகின்றது.

" **ஊரின் பாதுகாப்புப் பொருட்டும், பிணிநீக்கத்தின் பொருட்டும், துன்ப நீக்கத்தின் பொருட்டும் பாயாசன்னத்தால் பலி சமைக்கவேண்டும் என்பது ஆகம வாக்கியம்,** அதன் பின்னர் பள்ளியறை முத்திராதண்டம் வைரவரிடம் ஒப்படைக்கப்படுகிறது. முத்திரதண்டத்தை வைத்திருப்பதால் வைரவர் ஆலயக் காவலாளர் என்றும், அவர் துடியாயுள்ள ஆலயங்களில் திருடருக்கு உயிராபத்து என்றும் கூறப்படும். அவரிடம் ஒப்படைக்கப்படுவது முத்திரைக் கோலேயன்றி, ஆலயத் திறவுகோல்கள் அல்ல. முத்திரைகள் பூட்டுக்களுக்கு கவசமே அன்றி வேறல்ல. அதனால் ஆலயத்துக்குக் காந்தக் கவசமாக உள்ள சூக்கும நிலையை இராக்காலங்களில் வலி மீறி நிற்கும் அசுரர்கள் பாதியாமல் பாதுகாப்பதே வைரவர் வேலை எனக் கொள்வது முறையாகும்.

ஆகவே காலையில் ஆலயத் திருக்கோவில் பூசை அருட்பணிகள் தொடங்குமுன் முத்திரைக் கோலைக் கைக்கொண்டுள்ள அவருடைய அநுமதி இன்றியமையாததாகின்றது. அதனால் ஆகமங்களிலும் † சேத்திரபாலர் அநுஜ்ஞையே ( திருவுள்ளம் பற்ற வேண்டுதல் ) காலையில் செய்ய வேண்டிய முதற் கிரியையாக விதிக்கப்பட்டுள்ளது. அவரை ஆராதித்து அவரிடமிருந்து முத்திரைக் கோலைப் பெற்றுப் பள்ளியறையைத் திறந்த பின்னரே மூர்த்திகள் சாந்நித்தியம் பெறுவர். பரிவார தேவதைகள் தொழிற்படுவர். அருட்தொழிலும் தொடங்கும். ஆலயமும் ஆராதனைக்குத் தகுதி பெறும்.

---

* காலையில் பள்ளியறைத் திறப்பு சிவமும் சத்தியும் பிரிந்து தொழிற்படுவதால் உண்டாகும் தோற்றத்தையும், இரவு பள்ளியறை மூடுதல் சத்தியானது சிவத்தில் ஒடுங்கும்போது ஏற்படும் லயத்தையும் குறிப்பிடுவன.

† சேத்திரம் — திருக்கோயில், பாலர் — காவல் செய்பவர், வைரவக்கடவுளின் மறு பெயர்.

வைரவக் கடவுளின் தோற்றம் செஞ்சடையும், முக்கண்ணும், நீல நிறத் திருமேனியும், சூலம்—பிரமகபாலம், — பாசம் — உடுக்கு ஆகியவை களைத் தரித்த நான்கு திருக்கைகளும்; வச்சிர தந்தங்களும், கோபக் குறிப்போடு கூடிய சிரிப்பும், வேதமாகிய நாய் வாகனமும் கொண்ட கோரமூர்த்தமாகும்.

வைரவ விரதங்கள் மங்கலவார விரதம், சித்திரைப் பரணி விரதம், ஐப்பசிப் பரணி விரதம் என மூன்றாகும். தைமாசத்து முதற் செவ்வாய்க் கிழமை தொடக்கம் ஒவ்வொரு செவ்வாயும் வைரவக் கடவுளைக் குறித்து அனுட்டிக்கும் விரதம் மங்களவார விரதமாகும். சித்திரை மாத பரணி நட்சத்திரத்தில் வைரவரைக் குறித்து அநுட்டிப்பது சித்திரைப் பரணி விரதமாகும்.

ஐப்பசிப் பரணி நட்சத்திரத்திலே வைரவக்கடவுளைக் குறித்து அநுட்டிக்கும் விரதம் ஐப்பசிப் பரணி விரதமாகும்.

வைரவக்கடவுளின் பூசைக்குரிய பூக்கள் நந்தியாவர்த்தம் தவிர்ந்த ஏனைய பூக்களாம். இவருக்கு நிவேதனமாக வடைமாலை சாத்துவது வழக்கம்.

ஆலயத்துள் கடைசியாகச் செய்யப்படும் நிர்மல வைரவருடைய தரிசனம் ஆன்மாவின் விடுதலையைக் குறிப்பிடுவது. அதன் பின்னர் அடியார்கள் வெளியே வந்து கொடிமரத் தண்டை அமைதியாக இருந்து செபம் செய்யவேண்டும். ஈற்றில் விழுந்துவணங்கி வீட்டுக்குப் புறப்பட வேண்டும். அடியார்கள் புற உலகில் புகவும், மேட்டுநீர் பள்ளத்தை நோக்கி விரைந்தோடுவதுபோல அவரிடம் தோய்ந்திருக்கும் அருள் மணமும் வேகமாக வெளியே ஈர்க்கப்படும். அங்ஙனம் குளிர்காற்றில் அகப்பட்ட வெந்நீர் போன்று அதன் வேகம் விரைவாக விரயமாகிப் போகாமல் தம்மிடம் ஒடுங்கி நின்று வெகுநேரம் வேலை செய்யும் பொருட்டே கொடிமரத்தண்டை தியானமும் கவச மந்திரமும் விதிக்கப்பட்டுள்ளன. சுடு நீரை வெந்நீர்க் குப்பியில் (Thermos Flask) அடைத்துச் சேமிப்பது போன்றது. உண்மையான பக்தியுடன் ஆலயம் தொழும் அடியார்களுடைய உடம்புகளைச் சுற்றி ஒரு அருளொளிப் பிரபா மண்டலம் அங்கு ஏற்படும். அவர்கள் வெளிவரும்போது அதன் ஒளியில் ஈடுபட்டுத் திளைத்து நிற்கும் பூதகணங்கள் (Nature Spirits) அவரோடு கூடவே வரும். அவரை விடை கொடுத்து ஆலயத்துள் அனுப்புவதற்காகவே வெளிவாயிலில் வந்து அடியார்கள் சிறிது நேரம் அமர்ந்து அவர்களை வழியனுப்பிக்கொள்ளும்படி ஆகமங்களில் விளக்கப்பட்டுள்ளன. அந்த அமர்வு இப்போதும் நடைபெறுகின்றது. ஆனால், அது இக்காலத்தில் பழம், சுண்டல் போன்றவை உண்பதற்கேயன்றி மேற்கூறிய காரணம் கொண்டல்ல என்பதும், அதன் காரணம் அறியப்படாது இருப்பதும் இங்கு குறிப்பிடத்தக்கதாகும்.



## (10) முருகக்கடவுள்

முருகன் தமிழ்க் கடவுள்; தமிழர் கடவுள். பழந்தமிழ் நூல்கள் நிலத் திணை நான்கு பகுதிகளாகப் பிரித்து, ஒவ்வொரு பகுதிக்கும் உரிய கடவுளரையும் குறித்துள்ளன. அதன்படி, மலையும் மலைசார்ந்த பகுதியுமான குறிஞ்சிநிலக் கடவுள் முருகன் ஆவார். அதனால் முருகனைக் குறிஞ்சிக்கிழவன், மலைகிழவோன் எனத் தமிழ் நூல்கள் கூறும்.

" முருகு " என்ற சொல் இளமை, மணம், அழகு தெய்வம் என்றெல்லாம் பொருள்படும். இதற்கு முருகன் "என்றும் இளையோன்" எனப் பாராட்டப்பட்டுள்ளதே சான்றாகும். முருகன் பற்றிய வரலாற்றைப் பழந்தமிழ் நூல்கள் ஒருவாறு கூறுகின்றன. கந்தபுராணமாய பிற்கால நூல் பிறிதொருவாறு கூறுகின்றது.

இப்போது யாவராலும் கொள்ளப்படும் வரலாறு கந்தபுராணமாகிய நூலில் கூறப்பட்ட வரலாறே. அது, சூரபதுமன் முதலிய அசுரர்களின் கொடுமைகளுக்கு ஆற்றாத தேவர்கள் சிவபிரானிடம் முறையிட, அவர் தமது அபேதமுகத்தோடு கூடிய ஆறு திருமுகங்களினின்றும் ஆறு தீப்பொறிகளைத் தோற்றுவித்தனர். அவரது ஆணைப்படி அந்த ஆறு பொறிகளை வாயுவும் தீயும் ஏந்திச் சென்று கங்கையில் விட்டனர். கங்கை தன் பக்கலில் இருந்த சரவணப் பொய்கையில், கடப்பமர நிழலில் அப் பொறிகளை விட்டது. அப்போது ஆறு பொறிகளும் ஒரு குழந்தை உருவம் கொண்டன. தேவர்களின் கட்டளைப்படி கார்த்திகை மாதர் அறுவரும் தாம் தாம் அக்குழந்தைக்குப் பால் கொடுக்க விரும்பினர். அம்மாதர்களை மகிழ்விக்க அந்த ஒரு குழந்தை ஆறு குழந்தைகளாகத் திகழ, அவர்கள் அக்குழந்தைகட்குப் பால் ஊட்டினர். பின்னர் சிவன் உமையுடன் கங்கைக்கு வந்து, குழந்தைகளைத் தேவிக்குக் காட்டத் தேவி ஆறு குழந்தைகளையும் ஒன்று சேர்த்துக் கையால் எடுத்தணைக்க,* ஆறு திருமுகங்களும் பன்னிரண்டு திருக்கரங்களும் கொண்ட ஒரு குழந்தையாக உருவெடுத்துப் பொலிந்தார் முருகக்கடவுள்.

---

* "அருவமும் உருவு மாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகிக்
கருணைகூர் முகங்க ளாறுங் கரங்கள்பன் னிரண்டுங் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங்கு உதித்தனன் உலகம் உய்ய."

—கந்தபுராணம்

இவர் ஒரு குழந்தையாகச் சேர்க்கப்பட்ட காரணத்தால் **கந்தன்** என்றும், அக்கினியின் கரத்தால் ஏந்தப்பட்டதால் **அக்கினி பூ** என்றும், கங்கையில் வளர்ந்தமையால் **காங்கேயன்** என்றும், சரவணப் பொய்கையில் தோன்றியதால் **சரவணபவன்** என்றும், கார்த்திகைப்பெண்களிடம் பாலுண்டமையால் **கார்த்திகேயன்** என்றும், கடப்பமர நிழலில் பள்ளி கொண்டதால் **கடம்பன்** என்றும், விசாகநாளுக்குரியராகத் தோன்றியதால் **விசாகன்** என்றும், ஆறு முகத்துடன் விளங்கியதால் **ஆறுமுகன் சண்முகன்** என்றும், இளமையும் அழகும் கொண்டு திகழ்ந்ததால் **முருகன்-குமரன்** என்றும், மருவும் அடியவர் மனதில் உறைவதால் **குகன்** என்றும், இனிமையான பேரின்பத்தில் மேலான ஞானவிருப்பினைத் தன் அடியவர்க்கு அருள்பவன் ஆனபடியால் **சுப்பிரமணியன்** என்றும், பிரணவப் பொருளைச் சிவபெருமானுக்கு உபதேசித்தமையால் **சிவகுரு-சாமிநாதன்–குருமூர்த்தி** என்றும், சிவபெருமான் ஆணைப்படி, தேவர்களுக்குச் சேனுபதியாய்ப் போருக்குச் சென்று [1] சூரனை [2] வேலாயுதத்தால் அழித்தபடியால் **தேவசேனாபதி** என்றும், **வேலாயுதன்** என்றும் பெயர் பெற்றார். இத்துடன் மாயமாக நின்ற சூரனை வேல்கொண்டு பிளந்தபோது அவன் பெற்ற இறவா வரமெனும் பலத்தால் சேவலும் மயிலுமாக வந்து முருகனை எதிர்த்தான். அச்சமயம் முருகப்பெருமான் அவற்றுக்கு அருள் நோக்கம் செய்ய அவையும், [3]ஞானநிலை பெற்றன. அதனால் சேவல் முருகனுக்குக் கொடியானது. மயில் அவர்தம் வாகனமாயது. ஆகவே முருகன் **சேவற் கொடியோன்** என்றும், **மயில்வாகனன்–மயூரன்** என்றும் பெயர் பெற்றதாகப் புராணங்கள் கூறுகின்றன.

---

1. முனைப்பு உயிரைத் தன் பக்கம் இருத்தி வைக்கின்றது. உயிரை முனைப்பில் இருந்தும் மீட்க ஆண்டவன் அருள்புரிகின்றான். இரண்டிற்கும் போர் நிகழ்கிறது. ஆணவமுனைப்பிற்கும் அருளுக்கும் நடக்கும் போரே சூரன் போர் என்ப.

2. போரில் திருவருள் உயிரில் பதியப் பதிய ஞானசத்தியாகிய அறிவாற்றல் மேலோங்கும். அஃது எழுந்து பாயும்போது ஆணவ முனைப்பு அழிந்துபடும் அங்கு எஞ்சி நிற்பது ஞானசத்தியே; அதுவே முருகனது வேல் என்ப.

3. "போயின அகந்தை போதம் புகுந்தன வலத்த தான
தூயதோர் தோளுங் கண்ணுந் துடித்தன புவன மெங்கு
மேயின பொருள்கண் முற்றும் வெளிப்படு கின்ற விண்ணோர்
நாயகன் வடிவங் கண்டேன் நற்றவப் பயனீ தன்றோ."

—கந்தபுராணம்



முருகப்பெருமான் செந்நிறத்தவர்; சிவந்த ஆடையர்: ஆதலால் சேயோன் எனப் பெயர் பெற்றவர். இவருக்கு உகந்த மலர்கள் கடம்பு, வெட்சி, குரா, கூதளம், காந்தள் என்பனவாகும்.

இவருக்கு உகந்தவை என்று கொள்ளப்படுபவை இசை, குறிஞ்சி நிலம், தேன், தினைமா, வாசனைப்புகை, குரவைக் கூத்து, தமிழ் என்பனவாகும், அத்துடன் திருமுருகாற்றுப்படை, திருப்புகழ், கந்தரந்தாதி, கந்தரலங்காரம், கந்தரநுபூதி, திருவகுப்பு ஆகிய ஆறு நூல்களும் இவருக்கு உகந்தவை என்று கொள்ளப்படுபவை ஆகும்.

திருமுருகாற்றுப்படை முருகனுக்கு அதிகமாகத் தித்தித்தது என்று அருணகிரியார் கூறியுள்ளார். "வள்ளியின் கன்னலும் அமுதும் தேனும் கைக்கும் தீஞ்சொல்லைக் கேட்பதை விட்டு திருமுருகாற்றுப் படையின் தமிழைச் செவி தாழ்த்திக் கேட்டார் முருகன்" என்று சீகாளத்திப்புராணம் செப்புகிறது.

"உருக்கம்நல் விழுக்குலம் ஒழுக்கம் இலரேனும்
திருப்புகழ் படிப்பவர் மனத்தினில் இருப்பன்"

என முருகவேள் கூறுவதாகத் தனிப் பாடல் ஒன்றில் காணக்கிடக்கிறது.

முருகனுக்குச் சிறப்பாக அமைந்த படை வேலாயுதம். இது ஞான சத்தி எனப்படும்.

முருகனின் தேவியர் தெய்வயானை, வள்ளி எனப்படுவர். தெய்வயானை கிரியா சத்தியைக் குறிப்பது. வள்ளி இச்சா சத்தியைக் குறிப்பது. யான், எனது என்ற அகந்தை அற்ற அடியவர்களிடம் முருகன் தானே வந்து அருள்புரிவான் என்ற தத்துவத்தை விளக்குவது வள்ளி திருமணமாகும்.

மயில் ஆகிய வாகனம் ஆணவத்தையும், கொடியாகிய கோழி சிவ ஞானத்தையும் குறிப்பன. முருகன் ஆன்மாவின் ஆணவத்தை அடக்கும் அடையாளமாகவே மயிலை வாகனமாகக் கொண்டுள்ளார். ஆணவமாகிய மயிலைக் கீழ் அடக்கி, அதன் மீது அமர்ந்து, திருவருளாகிய சிவஞானத்தைக் கொடுத்து ஆன்மாக்களை உயர்பதம் அடையச் செய்பவர் தாம் என்பதைக் குறிக்கும், சிவஞானம் என்ற கோழியை வெற்றிக்கொடியாகப் பிடித்துள்ளமை. மேலும் கோழி கூவுவதன் பொருள்; கொக்கு + அர + கோ = கொக்கரக்கோ. கொக்கு — மாமரம் — சூரபத்மன்; அர — அறுத்த; கோ — அரசன், மாமரமாய் நின்ற சூரனை அறுத்துத் தேவர் துயர் நீக்கிய அரசர்க்கரசனாகிய முருகன்.

ஆறுமுகம் பிரணவத்துடன் கூடிய அஞ்செழுத்தின் (பஞ்சாக்கரத்தின்) அறிகுறி யென்றும் வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு, மேல், கீழ் என்னும் ஆறினும் நிறைந்து நிற்கும் சிதாகாச வடிவத்தை அறிவுறுத்துவ தென்றும், அறு சமயப் பொருளை விளக்குவதென்றும், வேறு பல நுட்பங்களை உளங்கொண்டதென்றும் சொல்லப்படுதல் காணலாம்.

சிவம், சத்தி ஆகிய இரண்டும் ஒன்றுபடும் சித்தப்பிரமநிலையே சுப்பிரமணியம் என்று சொல்லப்படுவதிலும் ஆறுமுக உண்மை உண்டு. (சிவபெருமானது ஐந்து முகமும், சத்தியினது ஒருமுகமும் சேர்ந்த ஒன்றே ஆறுமுகம் என்பாரும் உளர்.) ஆறாவது முகம் அதோமுகம் என்று சொல்லப்படும். ஐம்புலனும் ஒன்றப்பெறும் சான்றோரிடம் விளங்கும் (சிற்சத்தி) ஆறாவது அறிவுக்குப் பொருளாவதே அதோ முகம் எனப்படும். ''அஞ்சுமுகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும்'' என்று நக்கீரர் கூறியது இந்த அதோமுகத்தையேயாம்.

பரம்பொருள் சச்சிதாநந்த (உண்மை—அறிவு, ஆநந்தம்) மயமாய் இருப்பதைத் தாய், தந்தை, சேய் என்று புராணம் கூறும். சத் என்ற உண்மையைச் சிவம் என்றும், சித் என்ற அறிவைச் சத்தி என்றும், ஆனந்தம் என்ற இன்பத்தைக் குகன் என்றும் கூறி, இம்மூன்றும் ஒன் றிணைந்த இவ்வுண்மையை உலகோர்க்கு உணர்த்துவதே சோமாஸ்கந்த மூர்த்தமென்பர்.

இயற்கை முதல்வனாகிய முருகன் ஆறுமுகங் கொண்டது, வேல் தாங்கியது, சூரனைத்தடிந்தது, இருதேவியாரைக் கொண்டது என்ற வரலாறுகளில் உள்ள உண்மைகளை நக்கீரர் திருமுருகாற்றுப்படை, குமாரதந்திரம், கந்தபுராணம், திருப்புகழ், சுப்பிரமணிய பராக்கிரமம், குமரகுருபரசுவாமிகள் பாடல், சிதம்பரசுவாமிகள் பாடல், பாம்பன் குமர குருதாச சுவாமிகள் பிரபந்தம் முதலியவற்றில் காணலாம்.

தமிழ் வேதமாகிய தேவாரத்தில் ''சமரசூரபன்மாவைத் தடிந்த வேல் குமரன்'' என்றும், ''நம் செந்தில்மேய வள்ளி மணாளன்'' என்றும், ''நம் கடம்பனை'' என்றும், ''முருகனது பெருமைபகர் முதுகுன் றடை வோமே'' என்றும், ''தழைமயில் ஏறவன் தாதை யோதான்'' என்றும், 'மாயச்சூ ரன்றறுத்த மைந்தன் தாதை'' என்றும், ''சாவணத்தான் கைதொழுது சாருமடி சார்ந்தார்க் கெல்லாஞ் சரணமடி'' என்றும், 'பொன்னானை மயிலூர்தி முருகவேள் தாதை'' என்றும் பலவாறாகச் சிறப்பித்து முருகன் போற்றப்பட்டுள்ளார்.

முருகனைத் தமிழாற் பாடத் தமிழ்வேதம் அருளியவர் அருணகிரி நாதர் ஆவார். அவரருளிய முருகன் தமிழ் வேதங்களே திருப்புகழ்,



கந்தரநுபூதி, கந்தரலங்காரம் ஆகியனவாகும், இப்பாடல்களால் அவனைப் பாடிப் போற்றி ஏத்தி வழிபட்டு நலம் பல பெற்றோர் எண்ணிறந்தோர் ஆவார். இன்றும் இந்த நம்பிக்கையுடையோர் குறைகளை முருகன் களைந்து வருகின்றான். மன உறுதிக்கும், நம்பிக்கைக்கும் ஏற்ற அளவிற்றான் குறைகள் களையப்படும் என்பது தெளிவாகும். உறுதி இன்றி ''முருகா'', ''முருகா'' என்று உரக்கப்பாடி, எத்தனை தடவை போற்றினும் குறைகள் நீக்கப்படமாட்டா.

முருகன் மெய்யடியார்கள் வழிபாட்டினை ஏற்றருள்புரியும் பேரருட் குணத்துடன் வீற்றிருக்கும் பழம் பெரும் படை வீடுகளாவன: திருப் பரங்குன்றம், திருச்செந்தூர், திருவாவினன்குடி (பழனி), குன்றுதோ றாடல், திருவேரகம் (சுவாமிமலை), பழமுதிர் சோலை ஆகிய ஆறுமாம். இன்று இவருக்குரிய சிறப்புத் தலங்களாகக் கருதப்படுவன கைலைச் சாரலில் கந்தமாதனம், திருத்தணிகை, வள்ளிமலை, சென்னைக் கந்த கோட்டம், காஞ்சி குமரகோட்டம், திருப்போரூர், மயிலம், திருவிடைக்கழி, சிக்கல், *எட்டிக்குடி, வயலூர், விராலிமலை, குன்றக்குடி, பிரான்மலை, கழுகுமலை, வள்ளியூர், திருமலை, இலஞ்சி, திருச்செங்கோடு, மருதமலை, சென்னிமலை, கன்னடப் பிரதேசத்து சுப்பிரமணியம், ஈழத்துக் கதிர் காமம், மண்டூர், நல்லூர், மாவிட்டபுரம், செல்லச்சந்நிதி போன்றன வாகும்.

சிவனே இளையோனாக வந்து முருகனாகத் திகழ்கின்றான் என்பது புராணம். இதனை ''சூர்முதலை இறுப்ப அரனே இளையோன் ஆனவாற் றால்'' என்ற தணிகைப் புராணமும், ''அறுமுகன் அவனும் யாமும் பேதகம் அன்றாய்'' என்ற கந்தபுராணமும் வலியுறுத்துகின்றன.

முருகவேளுக்குரிய மந்திரம் ஆறு எழுத்து—சடாட்சரம் எனப்படும். குமாராய நம என்பதுதான் ஆறெழுத்து எனக் கூறுவர் நச்சினார்க்கினியர், இஃதன்றி சரவணபவ என்ற ஆறெழுத்து என்றும் கூறப்படும்.

சூரியன் இடபராசியில் வரும் வைகாசி மாச விசாக நட்சத்திரநாள் முருகனுக்கு உகந்த நாள். இந்த நாளில் மண்டல பூசை செய்து வில்வச் சமித்தினால் ஓமஞ் செய்து ஸ்நபகும்பபூசை புரிந்து, கஸ்தூரி, பச்சைக் கர்ப்பூரம் முதலிய பரிமளத் திரவியங்களுடன் பனிநீரும் சேர்க்கப்பட்ட நறுமணப் பொருட்களால் பூசித்து மூலவருக்குத் திரு

* இது திருமறைக் காட்டுச் (வேதாரணியம்) சிவாலய அறக்கட்டளைக்குட்பட்ட திருக்கோவிலாகும். திருமறைக்காட்டின் அறக்காப்பாளர்களாக இன்றும் இருந்து வருபவர்கள் யாழ்ப்பாணத்து வரணி, கரணவாய்ச் சைவர்களாவர். இவ்வுரிமை வரணித் தில்லைநாதத் தம்பிரான் சுவாமிகள் காலத்தில் கிடைத்ததாகும்.

மஞ்சனஞ் செய்தல் மேலாம். இந்நாள் முருகப்பெருமானுக்கு மெய் யன்போடு பூசை செய்வோரடையும் பலன் சாயுச்சியமாகும். இவற்றின் விரிவு குமாரதந்திரத்தில் உண்டு. இதனை ஒட்டியே பெரும்பாலான முருகன் கோயில் தீர்த்தோற்சவங்கள் இந்நாளில் நடைபெற்று வரு கின்றன.

சிவகிரி சத்திகிரி என்னும் மலைகளைக் காவடியாக எடுத்துவந்த இடும் பனை ஆட்கொண்டு, அதுகாரணமாகப் பால் காவடி முதலியன எடுக் கும் ஆன்மாக்களது பிரார்த்தனைகளை முருகன் ஏற்கின்றனன். கா+ அடி = காவடி, சரண் புகுந்தோரைக் காக்குஞ் சேவடி என்பது பொருள்.

முருகன் ஆடிய நடனங்கள் குடை, துடி என இரண்டாம்.

முருகப்பெருமானைச் சைவ சமயத்தவர்கள் சற்குரு பாவனையில் வணங்குவர். முருகனையே வழிபடு தெய்வமாகக் கொள்வோர் கௌமாரர் எனப்படுவர்.

முருகன் விரதங்கள் பற்றிய விரிவை இந்நூலில் உள்ள சுப்பிர மணியர் விரதங்கள் என்ற பகுதியில் பார்க்கவும்.

# 10. சைவ சித்தாந்த தத்துவம்

எமது சைவ சமயத்தின் பொதுப்பிரமாண நூல் வேதம்; சிறப்புப் பிரமாண நூல் சிவாகமம் என்பர். அந்தச் சிவாகம நூல்கள் கூறுஞ் சாரமான உண்மையைப் பிழிந்தெடுத்துக் கூறும் நூல்களே சித்தாந்த சாத்திரங்கள். இவை மெய்கண்ட சாத்திரங்கள் எனவும் அழைக்கப் படும்.

வேதம் பசு. அதன் பால் ஆகமம் அதிற் கடைந்தெடுத்த நெய் சித்தாந்தம் எனவும்; வேதம் ஒரு கற்பகதரு, அதில் உயர்ந்தோங்கிய உச்சிக்கிளை வேதாந்தம், அதிற் பழுத்த நறுங்கனியே சைவ சித்தாந்தம் எனவும் கூறுவர் அறிந்தோர்.

வேதாந்த நூல்களில் இரு வேறு கொள்கைகள் உண்டு. ஒன்று சற்பிரபஞ்சவாதம், மற்றையது நிஷ்பிரபஞ்சவாதம். இறைவனும் உயிர்களும் மலங்களும் உள்ள பொருள்கள் என்பது சற்பிரபஞ்சவாதி கள் கொள்கை. இறைவன் ஒருவனே உள்ள பொருள். ஏனைய எல்லாங் கடலிலே தோன்றுந் திரைநுரைக் குமிழி போல வெறும் தோற்றமே யாம். இவை உண்மையில் பொருளல்ல என்பது நிஷ்பிரபஞ்சவாதிகள் கொள்கை. இவ்விரண்டு வகைகளில் சைவபரமாக உள்ளவை சற்காரிய வாதக் கோட்பாடுடைய உபநிடதங்களேயாம். குறித்த சற்காரிய வாதக் கோட்பாடுகளை அத்திவாரமாகக் கொண்டவையே சிவாகமங் களும், மெய்கண்ட சாத்திரங்களுமாம்.

பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களையும் உள்ள பொருள்க ளென நிலைநாட்டி, அவற்றின் இயல்புகளை விளக்குவதே சற்காரிய வாதம். இதுவே சைவ சித்தாந்தம். சைவ சித்தாந்தம் கூறும் முப்பொருள்களின் இயல்பையும் நோக்குவாம்.

## (அ) பதி

அனைத்துலகுக்கும் உயிர்களுக்கும் தனி முதல்வனுயிருப்பவன் எவனோ, அவனே பதியாம். அவ்விறைவனது இயல்பு சொரூபலக்கணம், தடத்தலக்கணம் என இரு வகையாகும்.

சொரூபலக்கணம்: உருவம், குணம், குறி, செயல் எவையும் இல்லாததாய், நிமலமாய், ஒன்றாய், என்றுமுள்ளதாய், உயிர்களுக்

குள்ளுணர்வாய், விகாரமில்லாததாய், எல்லைக்குள் அடங்காததாய், நித்தியானந்தமாய்; என்றும் எவற்றையும் விட்டு நீங்காததாய், எல்லாவற்றுக்கும் புகலிடமாய், சிறியதிற் சிறியதாய், பெரியதிற் பெரியதாய் விளங்குவதே பரசிவத்தின் சொரூபலக்கணமாகும். இவ்வியல்புகளையெல்லாம் அடக்கித் தன்வயமுடைமை, இயற்கைஉணர்வு முற்றுமுணர்தல், தூய உடம்பினனாதல், இயல்பாகவே பாசமின்மை, பேரருளுடைமை, வரம்பிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என எண்குணங்களுடையான் என்பர். அவற்றையும் சுருக்கி, சச்சிதானந்தமூர்த்தி என்றுங் கூறுவர். என்றுமுள்ள அறிவே வடிவான ஆனந்தமூர்த்தியாயிருப்பது இறைவனது இயற்கையாகும்.

**தடத்தலக்கணம்:** பேரருளாளனும் அநாதிமுத்தனுமான சிவபிரான், அநாதியே பாசபந்தத்தோடு கிடக்கும் ஆன்மாக்களை, அப்பந்தத்தினின்றும் விடுவித்து உய்விக்கவேண்டுமென்ற கருணையால் அவ்வுயிர்களின் பொருட்டு ஐந்தொழில்களையுஞ் செய்தருளுகின்றான். அந்த நிலையில் ஐந்தொழில்களையுஞ் செய்வதற்குரிய வகையில் தனது திருவருளையே திருமேனியாகக் கொண்டு, ஐவராய் நின்று, அவற்றை இயற்றும்போது, உருவும் – குணமும் – குறியும் – செயலும் – உடைய மூர்த்திகளாக இருப்பன். இதுவே இறைவனது தடத்த நிலையாகும்.

பரமபதியாகிய பரசிவத்தினது மேலாகிய கருணை பராசத்தி எனப்படும். அப்பராசக்தியினின்றும் இச்சாசத்தி, கிரியாசத்தி, ஞானசத்தி என்பன தோன்றும். பரமசிவன் அச்சத்திகளைப் பொருந்தி நின்று அருட்டிருமேனியாகக் கொண்டு, சுத்தமாயையோடு பொருந்தி வேதாகமம் முதலிய கலைகளைத் தோற்றுவிப்பான். அசுத்தமாயையினின்று உலகங்களைத் தோற்றுவிப்பான். உரியகாலம்வரை உலகை நிலை நிறுத்திக் காத்துப் பின்னுந் தோன்றி முறையே ஒன்றிலொன்று ஒடுங்கிவரச் செய்து, முடிவில் அனைத்தையும் தன்னிலே ஒடுங்குமாறு செய்து பரமபதியாக இருப்பான்.

இவ்வாறு இறைவன் கொள்ளும் திருமேனிகள் நிஷ்களம், நிஷ்கள சகளம், சகளம் என மூவகையாயுள. பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேஸ்வரன் ஆகிய நான்கும் சகளத்திருமேனிகள், ' உருவத்திரு மேனிகள்" சதாசிவம்—நிஷ்கள சகளத் திருமேனி. 'அருவுருவத் திருமேனி' அதற்கு மேலுள்ள சத்தியோடு கூடிய சிவம்–நிஷ்கள திருமேனி- 'அருவத் திருமேனி". இந்த மூவகைத் திருமேனிகளும் தடத்த நிலையாகும். இவற்றுக்கெல்லாம் மேலாகிய சுத்தபரசிவமே சொரூப நிலையாகும்.



பரிபூரணனான இறைவன் குறையொன்றும் இல்லாதவன். ஆதலால் தடத்தநிலையில் நின்று உலகைப் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளலாகிய ஐந்தொழில்களையும் தன்பொருட்டுச் செய்ய வேண்டியதும் இல்லை; அவற்றைச் செய்வதால் அவன் விகாரமடைவதுமில்லை; உயிர்களை உய்விக்கும் பெருங் கருணையாலேயே இவற்றைச் செய்கின்றான்; அகரவுயிர் ஏனைய எழுத்துக்கள் எல்லாவற்றிலுங் கலந்திருப்பது போலவும், வெந்நீரில் வெப்பம் போலவும் இறைவனும் எங்கும் எல்லாவற்றிலும் வியாபித்து அனைத்தையும் இயக்குபவன்; ஆன்மாக்களை மலம் நீக்கிச் சிவத்தன்மை அடையச் செய்யும் சத்தியோடு பிரியாதிருப்பவன்; பெருமை, நுண்மை, பேரருளுடைமை, பெறுதற் கருமைகளில் ஒப்பிலியாயுள்ளவன். ஐந்தொழிலும் செய்பவன்; அருவம், உருவம், அருவுருவம், அறிவுருவம் ஆகிய திருமேனிகளுடையான்; உணர்த்த உணரும் உயிர்கள் போலன்றி, இயல்பாகவே எல்லாம் அறிபவன்; அடியவர்பால் அறிவாய் நீங்காதிருப்பவன். விருப்பு வெறுப்பின்றி எவ்வுயிர்க்குஞ் சுகம் செய்வதால் சங்கரன் என்னும் நாமமுடைய சிவன், நண்ணினர்க்கு நல்லவனாயும், நண்ணாதவர்க்கு நல்லவனல்லன் போலவும் இருப்பவன்; பிறவிப்பிணிக்கு மருந்தாகிய இறைவன் உள்ள பொருளே. இதில் ஐயமில்லை. ஆதலால், இறைவனை அன்பு செய்து வழிபடுக எனத் திருவருட்பயன் பதியைப் பற்றிக் கூறும்.

## (ஆ) பசு

ஆன்மா, பாசத்தாற் கட்டுண்டிருத்தலால் பசு எனப்படும். ஆன்மா எண்ணில்லாதன: என்றுமுள்ளன. அநாதியே ஆணவமாகிய இருளால் மறைக்கப்பட்டிருப்பவை. ஆணவமுனைப்பால் இருவினை புரிவன. தாம்புரிந்த இருவினைப் பயனை அனுபவித்தற்கேற்ற உடம்பைஇறைவன் தரம்பெற்று பிறந்து பவவினையை நுகரும்போது புதுவினைகளையும் பெருக்கிப் பிறப்பிறப்பாகிய போக்குவரவைப் பொருந்துவன. இப்படி எண்ணிறந்த பிறவிகளை எடுத்து உழலும்போது கல்வி, கேள்வி, அறிவு பொருந்திச் சிவபுண்ணியங்கள் புரிவதாலே இருவினை ஒப்பும் மலபரிபாகமும் பொருந்தும் காலத்தில் திருவருள் பதியப் பெற்றுக் குருதீட்சை பெற்று, மெய்ஞ்ஞானம் விளங்குவதால் சிவகதி சேர்வனவாகும்.

இவ்வான்மாக்களில் முத்திபெற்றவையும் எண்ணில்லாதன. முத்தி பெற இருப்பவையும் எண்ணில்லாதன, முத்திபெற உள்ள உயிர்கள் மும்மலமுடைய சகலரும், ஆணவமும் கர்மமும் உள்ள பிரளயாகலரும்,

ஆணவம் ஒன்றே உடைய விஞ்ஞானகலரும் என மூவகையாம். நன விலே கண்டதைக் கனவிலே மாறுபடக் காணுதலால், ஆன்மாவுக்குச் சுதந்திரமில்லை. பிறரொருவரது ஆணைவழி நடப்பதாகும். ஐம்பொறி களின் துணைகொண்டு உணர்த்த உணர்வதால் ஆன்மாவுக்குத் தானே அறியும் ஆற்றல் இல்லை. குருடனுக்கு இருள், ஒளி, பொருள் என்பவற் றைப் பகுத்தறிய முடியாது. ஆன்மாவுக்கு உணர்த்த உணரும் தன்மை உண்டு. ஆகவே இறைவன் தனது அருளொளியால் அவற் றைப் படைத்து அறிவு பெறச் செய்கிறான். சத்தாகிய சிவம், அசத் தாகிய மலங்களைப் பொருந்தாது, அசத்தாகிய மலமும் ஒன்றையும் அறியமாட்டாது. சத்தைச் சாரும்போது சத்தாயும், அசத்தைச் சாரும்போது அசத்துப் போன்றும் இருப்பதால், ஆன்மா சதசத்து எனப்படும். ஆன்மா சார்ந்ததன் வண்ணமாயிருப்பது. இறைவனருள் காட்டாவிடின் கோட்டானின் கண்போல ஒளியையும் இருளாகவே காணும் எனத் திருவருட்பயன் கூறும்.

## (இ) பாசம்

இது ஆன்மாக்களைக் கட்டிய கயிறுபோலப் பற்றியிருப்பதால் பாசம் எனப்படும். இதனை மலம், பந்தம், தளை எனவும் அழைப்பர். பாசம் மூன்று வகை. அவை ஆணவம், கர்மம், மாயை எனப்படும். இவற்றை மும்மலம் என்பர்.

**ஆணவம்:** இது மூலமலம், சகசமலம், அருண்மலம் எனவும் சொல்லப்படும். செம்பிலே களிம்பும், நெல்லில் உமியும் போல ஆன்மா என்றுள்ளதோ, அன்றுமுதல் அதனோடு உள்ளது. ஆன்மாவின் அறிவை அணுவாயடக்கி மறையும்படி இருட்படலம் போல மறைத்து நிற்பதனால் இதனை ஆணவ இருள் என்று கூறுவர். ஆணவமலம் ஒன்று. அது பல சக்திகளை உடையதாய்ப் பல உயிர்களையும் பற்றி நிற்கிறது. இந்த ஆணவத்தின் செயலே யான் எனது என்னுஞ் செருக்காக ஆன்மாவில் விளங்குவது.

ஆன்மாவுக்குப் பிறவித்துன்பமும், அதற்குக் காரணமான மலமும், வீட்டின்பமும், அதனைக் கொடுக்கும் திருவருளும் ஆகிய இவற்றை இல்லை என்பது முடியாது. எல்லாவற்றையும் மறைத்துத் தன் மய மாக்கி இருள் போலக் கிடைக்கச் செய்வது இருண்மலமே. இருள் பிறபொருளை மறைத்தாலும், இருளாகிய தன்னையாவது காட்டும். ஆணவ இருளோ பிறவற்றை மறைப்பது போலவே, தன்னையும் காணவொட்டாது மறைக்கும், அதனால் அது இருளிலும் கொடியது. இஃது ஆன்மாவினுள் உள்ள சிவத்தைச் சாராது ஆன்மாவை மாத்



திரம் புறத்தே பற்றி உள்ளது. ஆணவம் பல ஆன்மாவோடு கூடி நின்றும், அவற்றால் அறியப்படாமல் மறைந்திருக்கிறது. ஆன்மா வுக்கு அறியும் தன்மையைத் தெரியவொட்டாது மறைப்பது ஆண வமே. சிலர் ஆணவம் என ஒன்றில்லை என்பர்; சிலர் அது ஆன்மா வின் குணமென்பர்; சிலர் அது ஆன்மாவை இடையிலே பற்றிய தென்பர்; இக்கூற்றுக்கள் பொருந்தா. ஏனெனில் ஆணவமில்லை யாயின் பிறவித் துன்பமுண்டாகாது. ஆன்மா பிறவித்துன்ப முறு தலால் அதன் காரணமான ஆணவமும் உள்ளதே. அது ஆன்மாவின் குணமாயின் குணத்தை நீக்கவே குணியாகிய ஆன்மாவும் அழியும். ஆணவம் நீங்கிய பின்னும் ஆன்மா இருத்தலால் ஆணவம் ஆன் மாவின் குணமுமன்று. அசத்தாகிய ஆணவம் தானே உயிரைப் பற்றாது, உயிரும் தானே அத்துன்பத்தைச் சேராது; இறைவனும் சேர்க்கமாட்டான். இடையிலே அது பற்றுமாயின் முத்திபெற்ற ஆன்மாவையும் பற்றவேண்டும்; அப்படிப் பற்றுவதில்லை; ஆகவே இக் காரணங்களால் அது இடையில் பற்றியதன்று. அநாதியாகவே உள்ளது எனத் திருவருட்பயன் கூறும்.

**கர்மம்:** மருத்துவன் நோயாளிக்குப் பரிகாரஞ் செய்து குணப் படுத்துவான். அது போலவே ஆணவ நோயுள்ள ஆன்மாவைக் குணப் படுத்தும் பொருட்டு வைத்தியநாதனாகிய இறைவன் உலகைப் படைத்து அங்கு பிறவியைத் தருகிறான். பிறவி எடுத்த உயிர் ஆண வத்தின் முனைப்பினாலே யான் எனது என்ற செவிக்கோடு நல்வினை தீவினைகளைப் புரிகிறது. இவ் இருவினைகளே கர்மம் எனப்படும். இந்த நல்வினை தீவினை இரண்டும் சிவநல்வினை, பசுநல்வினை, சிவத் தீவினை, பசுத்தீவினை என நான்காகப் பகுக்கப்படும். அவற்றுடன் வெறுவினை, பற்றில்லாதவினை என இரண்டும் சேர்த்து வினை ஆறுவகை எனவும் கூறுவர். வினை எல்லாம் இருவினையுள் அடங்கும். இவ்வினை பிறிதொருவகையால் பிராரத்தம், சஞ்சிதம், ஆகாமியம் என மூன்றாகக் கூறப்படும். பிராரத்தம் என்பது முன்பிறவிகளில் செய்த வினைகளினால் எடுத்த இவ்வுடம்பில் அனுபவிக்க என அளந்து தரப்பட்டது. இதனை விதி, ஊழ், தெய்வம், நியதி எனவும் கூறுவர். எடுத்த உடம்பில் பழ வினையை அநுபவிக்கும்போதே புதிய வினைகளையும் புரிகிறோம். அதுவே ஆகாமியம். இந்த ஆகாமியத்திலும் ஒரு பகுதி உடனுக்குடனே அனு பவத்துக்கு வரும். அதுவும் பிராரத்தமாய்க் கழியும். முன்னைப் பிற வியிற் செய்த வினைகளிலும், இப்பிறவியிற் செய்த வினைகளிலும் அனுபவத்துக்கு வராமல் ஏனைப் பிறவிகளுக்கு என எஞ்சிக்கிடக்கும் வினை சஞ்சிதமாகும். இவை, வரும் பல பிறவிகளில் பிராரத்தமாய் அனுபவத்துக்கு வரும். வினைகள் செய்யப்படும்போது மனம் வாக்குக் காயம் என்ற மூன்றாலும் செய்யப்படும். நினைப்பது சொல்வது செய்வது எல்லாம் வினைகளே. வினை அனுபவத்துக்கு வரும்போது

தெய்விகம், ஆன்மிகம், பௌதிகம் என மூவகையாய் வரும். பிறப்பு, இறப்பு முதலியன தெய்விகமாய் வருவன. புயல், மழை, பஞ்சம் முதலியன பௌதிகமாய் வருவன. விடந்தீண்டல் முதலானவை ஆன்மிகமாய் வருவன. ஆன்மாக்கள் தாந்தாம் முன்செய்த வினையைத் தாமே அனுபவிக்க வேண்டியன; தவிர்க்க முடியாத பல பிறவிகளை எடுத்து இருவினை புரிவதும், வினைப்பயன் அனுபவிப்பதுமாய் நிகழ்ந்துவரக் காலகதியில் ஆணவமும் மெலிந்து வலிகெட, இருவினைகளும் ஒழிய, சிவபுண்ணியத் தொடர்பால் திருவருள் குருவாகி வந்து தீட்சை செய்து ஆட்கொண்டு முத்தி நெறியில் சேர்க்கும்.

அறுவகை வினைகள் : சிவநல்வினையாவது சிவதொண்டும், சிவனடியார் தொண்டும் முதலியனவாம். சிவத்தீவினையாவது சிவனையும் சிவனடியாரையும் நிந்தை செய்தல் முதலாயின. பசு நல்வினையாவது உயிர்களுக்குச் செய்யும் பலவகை உபகாரங்கள். பசுத் தீவினையாவது உயிர்களுக்குச் செய்யும் பலவகை அபகாரங்கள். வெறுவினையாவது தும்முதல், கொட்டாவி விடுதல், துரும்பு கிள்ளுதல் போல்வன. பிறர் யாருக்கும் எவ்விதத்திலும் இன்ப துன்பங்கள் விளைவியாதவை வெறுவினைகளாம். பற்றில்லாத வினையென்பது இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் ஆகிய பக்குவ நிலை அடைந்தோர் "என்செயலால் ஆவதொன்றுமில்லை எல்லாம் அவன் செயலே", என்ற நிலையில் தம்வசமிழந்து திருவருள் செலுத்தச் செய்யும் வினைகளாம். இப்படிச் செய்யப்படும் பற்றற்றவினை, இருவினையில் எவ்வினையாயினும் அதன் பயன் செய்தோரைச் சாரா. அவற்றைத் திருவருளே வாங்கிக் கொள்ளும். "எடுத்துச் சுமப்பான்" என்று திருவருட்பயன் குறிப்பிடுவது இதனையேயாம். வெறு வினைக்குப் பயன் இல்லை. ஏனைய பசு நல்வினை தீவினைகளுக்கு உலகியலாகிய இன்பமும் துன்பமும் பயனாகும். சிவநல்வினை, தீவினைகளுக்குப் பதமுத்தி முதலியனவும், நரக துன்பம் முதலியனவும் பயனாக வருவனவாம்.

இவ்வாறு வினை செய்வதால் ஆணவம் மெலிவுறும்; வினைப்பயனை நுகர்வதால் கர்மமும் கழியும். இந்நிகழ்ச்சிகள் மாயாகாரியமாகிய உடம்பையும் உலகையும் பொருந்தி நின்று உயிர்களால் நிகழ்த்தப்படுவன.

மாயை : இறைவனுடைய அளவிறந்த சத்திகளில் மாயையும் ஒன்றாகும். இம்மாயையை இறைவனுடைய பரிக்கிரக சத்தி என்பர். இறைவனது அருட் சத்தியைத் தாதான்மிய சத்தி என்பர். தாதான்மிய சத்தி நெருப்பும் சூடும் போலப் பிரிவிலாத சத்தி. பரிக்கிரகசத்தி முருகனும் அவனுடைய ஊர்தியாகிய மயிலும் போல, வேண்டும்போது கையாளவும், வேண்டாதபோது பிரித்து



வைக்கவும் கூடிய சத்தி. இம்மாயை சுத்தம், சுத்தாசுத்தம், அசுத்தம் என மூவகையாம். சுத்தமாயை சிவதத்துவம் எனவும், சுத்தாசுத்த மாயை வித்தியாதத்துவம் எனவும், அசுத்த மாயை ஆன்மதத்துவம் எனவும் கூறப்படும். சுத்தாசுத்தமாயை மிச்சிரமாயை எனவும், அசுத்தமாயை பிரகிருதிமாயை எனவும் சொல்லப்படுகின்றன. இந்த மூவகை மாயாகாரியமாக அமைந்ததே உயிர் நிலையாகிய உடம்பு. இவ்வுடம்பைப்போல மாயாகாரியமாய் உள்ளதே உலகம். சிவதத்துவம் ஐந்தும், வித்தியாதத்துவம் ஏழும், ஆன்மதத்துவம் இருபத்துநாலும் ஆக முப்பத்தாறு தத்தவங்களைக் கொண்டது உடம்பு. இம் முப்பத்தாறு தத்துவங்களையும், தொண்ணூற்றாறு தத்துவமாக விரித்துக் கூறுவதுண்டு. இவ்வாறமைந்த உடம்பும் (தநுவும்), இவ்வுடம்பிலுள்ள கருவிகளும் (கரணமும்), வசிக்கும் உலகமும் (புவனமும்), இவ்வுடம்பில் நின்று உயிர் அனுபவிக்கும் சுக துக்க அனுபவங்களும் (போகமும்) ஆக நான்கு வடிவங்களாய் மாயை நின்று உயிர்களுக்கு உதவுகின்றது. சூரிய ஒளி வரும்வரை இருளில் நிற்பவனுக்கு விளக்குச் சிறிதளவு ஒளிதந்து உதவுவது போலவே, ஆணவ இருளில் நிற்கும் உயிர்களுக்குத் திருவருளாகிய பேரொளி வந்து சேரும்வரை மாயாகாரியங்களாகிய தநு, கரண, புவன, போகங்கள் சிறிதளவு அறிவு விளக்கம் செய்வன.

சிவ தத்துவம் ஐந்தாவன: நாதம், விந்து, சாதாக்கியம், ஈசுவரம், சுத்தவித்தை என்பன.

வித்தியாதத்துவம் ஏழாவன : காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை (மூலப்பிரகிருதி) என்பன.

ஆன்ம தத்துவம் இருபத்துநாலாவன: அந்தக்கரணம் நான்கு, தன்மாத்திரை ஐந்து, பொறி ஐந்து, கர்மேந்திரியம் ஐந்து, பூதம் ஐந்து என்பன.

அந்தக்கரணம் நான்காவன: மனம், புத்தி, சித்தம், அகங்காரம்.

தன்மாத்திரை (புலன்) ஐந்தாவன: சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன.

பொறி (ஞானேந்திரியம்) ஐந்தாவன; மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன.

கர்மேந்திரியம் ஐந்தாவன: நா, கை, கால், குதம், குறி என்பன.

பூதம் ஐந்தாவன: நிலம், நீர், தீ, வளி, வான் என்பனவாம்.

சுத்த மாயையாகிய சிவதத்துவங்கள் ஆன்மாவுக்கு மெய்யுணர்வு விளக்கத்துக்கு உபகாரமாய் நிற்பன.

சுத்தா சுத்தமாயையாகிய வித்தியா தத்துவங்கள் சமநிலையில் நின்று மெய்யுணர்வு விளக்கத்துக்கு உதவுவதோடு, வினைகளைச் செய்யவும் பயனை நுகரவும் தூண்டுவனவாய்ம் உதவும். அசுத்த மாயை ஆகிய ஆன்மதத்துவம் ஆணவத்தின் சார்பாய் அறியாமையை விடுவித்து வினைகளைப் பெருக்க உதவும்.

ஆன்மாவை அநாதியே பற்றியுள்ள ஆணவம், அருவமான சத்தியாய் மறைத்து நிற்கும். அதன் வலியால் ஆன்மா செய்யும் கர்மமாகிய இருவினைகளும் அருவமானவையே. அதன் பயனாகிய இன்ப துன்பங்களும் அருவமே. மாவை ஒன்றுதான் அருவமும் உருவமுமாகிய இரு நிலைகளிலும் நின்று உயிருக்கு உதவுவது. சிவதத்துவம் வித்தியாதத்துவங்களும், அந்தக்கரணங்களும், தன்மாத்திரைகளும் அருவமானவை. பூதங்களும், பொறிகளும், கர்மேந்திரியங்களும் உருவமானவை. மற்றும் உலகும் இன்ப துன்பங்களைத் தரும் பொருள்களும் உருவமாயுள்ளவை. மூலமலமான அழுக்கை நீக்குதற்குப் புதிதாய்ச் சேர்த்த அழுக்கே மாயமலம். ஆடையிலுள்ள அழுக்கை நீக்கச் சேர்த்த சவர்க்காரம் என்னும் அழுக்கைப் போல உள்ளது மாயை. ஆதலால் இது துணை மலம் எனப்படும். இது அழுக்குமாய், மூலமான அழுக்கை நீக்கும் சாதனமுமாயிருக்கிறது. அதனாலேதான் இது ஆன்மாவுக்கு ஆணவத்தின் சார்பாய் நின்று மெய்யறிவு பெறுதபடி மயக்குவதும், திருவருளின் சார்பாய் நின்று மெய்யறிவு பெற உதவுவதுமாகிய இரு செயல்களையும் புரிகிறது.

# 11. திருவருட் பயன்

சைவசமயத்தின் சிறப்புப் பிரமாண நூலாகிய சிவாகமக் கருத்தைத் தமிழிற் கூறும் நூல்கள் சித்தாந்த சாத்திரம் எனப்படும் மெய்கண்ட சாத்திரங்களாகும், அவை திருக்கைலாய பரம்பரைச் சந்தனாசாரியர்களால் அருளிச்செய்யப்பெற்றவை. அவற்றுள் முதனூலான சிவஞானபோதத்துக்கு விளக்கங் கூறுவதாய் வழிநூலாயமைந்தது சிவஞானசித்தியார்; சார்புநூலாய் உள்ளது சிவப்பிரகாசம். சிவப்பிரகாசம் முதலான எட்டு நூல்கள் உமாபதி சிவாசாரியர் அருளிச்செய்தவை. அவற்றுள் சிவப்பிரகாசத்துக்கு அடுத்துச் சிறப்பும் பெரும் பயனும் உள்ள நூல் திருவருட்பயனாகும். இந்நூலில் சைவசித்தாந்த உண்மைகள் மிகச் சுருக்கமாகவும், தெளிவாகவும் கூறப்படுகின்றன.

திருவருட்பயன் என்னும் இந்நூல் நாற்பாதத்திலும் இறுதியான ஞானபாதத்தார் அறியவேண்டிய பதி, பசு, பாச இயல்புகளையும், திருவருளாகிய குருவின் தீட்சையால் ஆன்மா முத்திபெறும் வழிவகையையும் விளக்கும். முதல் ஐந்து அதிகாரங்களிலும் திருவருளின் இயல்பையும், பின் ஐந்து அதிகாரங்களிலும் திருவருளின் பயனையும் கூறுகின்றது.

திருவருளுக்கு மூலகாரணனை பதியின் இயல்பு முதலாம் அதிகாரத்திலும் திருவருளைப் பெற்று உய்தற்குரிய உயிரியல்பு இரண்டாம் அதிகாரத்திலும், திருவருளின் துணையால் நீக்கப்படவேண்டிய பாசவியல்பு மூன்றும் அதிகாரத்திலும், திருவருளின் இயல்பு நாலாம் அதிகாரத்திலும், திருவருளே உருவாகிய குருவியல்பு ஐந்தாம் அதிகாரத்திலுமாக இங்ஙனம் முதலைந்து அதிகாரங்களும் திருவருள் பற்றிக் கூறும்.

குருவின் உபதேசவழி நின்று மெய்யுணரும்முறை ஆறும் அதிகாரத்திலும், அதனால் ஆத்மசொரூபத்தை அறிதல் ஏழாம் அதிகாரத்திலும், அவ்வழியே மெய்யுணர்வாகிய சிவபோதம் பெற்ற ஆன்மா சிவபோகத்தை அநுபவித்தல் எட்டாம் அதிகாரத்திலும், திருவருட்சக்திவடிவாய் முத்திக்கு வித்தாய் இருக்கின்ற பஞ்சாட்சர மந்திர இயல்பு ஒன்பதாம் அதிகாரத்திலும், முடிந்த பயனாகிய சீவன் முத்திநிலை பெற்றோர் தன்மை பத்தாம் அதிகாரத்திலுமாக இங்ஙனம் பின்னைந்து அதிகாரங்களும் திருவருளின் பயனைக் கூறும்.

உ
சிவமயம்

காப்பு

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ் சரக்கன்று காண்.

பொழிப்பு; நல்ல யானைக் கன்றாகிய விநாயகப் பெருமானை (நாம்) அடைந்து வழிபட்டால், பின்பு (நமக்கு) எந்தக் கலைஞானமும் கற்க வேண்டிய பண்டமன்று; (அவனருளால் எல்லா ஞானமும் எளிதிற் பெறுவோம்.)

குறிப்பு: குஞ்சரம்-யானை. சரக்கு-பண்டம். இனி கன்று நண்ணில் என்பதற்கு விநாயகப் பெருமான் எமது அன்புள்ளத்தில் எய்தி வீற்றிருந்தால் என்பது பொருள்,

## 1 ஆம் அதிகாரம்: பதிமுது நிலை

அஃதாவது அநாதியான இறைவனது பழம்பொருள் நிலை;

### பதியின் பொது இயல்பு

1. அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில்இறை நிற்கும் நிறைந்து.

பொழிப்பு: அகரமாகிய உயிரெழுத்து (ஏனைய எல்லா எழுத்துக்களிலும் கலந்திருந்து அவற்றை ஒலிப்பித்தல்) போலவே தன்னிகரில்லாத இறைவனும் எங்கும் எவற்றிலும் அறிவாகிக் கலந்து நிறைந்து நின்று இயக்குகின்றான்.

குறிப்பு: நிகரில் இறை-தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாத கடவுள், ஒப்பிலி, உணர்வால் உணர்தற்குரியன்.

### பதியும் அதன் சத்தியும்

2. தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தருஞ்சத்தி
பின்னமிலான் எங்கள் பிரான்.

பொழிப்பு: எங்கள் பிரானாகிய சிவன், (பதியாகிய) தனது (பாசபந்தமற்ற) நிலையை, நிலைபெறுடைய பசுக்கள் சேரும்படி உபகரிக்கின்ற திருவருட் சத்தியோடு என்றும் பிரியாதிருப்பன்.



குறிப்பு: தன்னிலை — சிவத்துவம்; சிவன் — பாசபந்தமுடைய பசு. அது பந்தமற்ற சிவத்துவத்தை அடைய வழிப்படுத்துவது சிவ சத்தி. அச்சத்தியும் சிவமும் என்றும் பிரிவின்றி, அபின்னமாய் இருக்கும். சிவசத்தியே ஐந்தொழிலாகிய உபகாரத்தால் பசுவின் பந்தமறச் செய்து, சிவத்துவமாகிய வீடு பெறச் செய்வதாம்; அதைத் திருவருள் என்றுஞ் சொல்வர்; சத்தி சிவசம்பந்தம் சூடும் நெருப்பும் போன்றது.

### பதியின் பெருமை

3. பெருமைக்கும் நுண்மைக்கும் பேரருட்கும் பேற்றின்
அருமைக்கும் ஒப்பின்மை யான்.

பொழிப்பு: இறைவன் பெருமையிலும் நுண்மையிலும் பேரருள் உடைமையிலும் பெறுதற்கருமையிலும் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவன்.

குறிப்பு: பெருமை — அண்டங்கள் அணுவாக அடங்கும் வியாபக நிலை. நுண்மை-அணுக்கள் அண்டமாய்த் தோன்றப் பரமாணுவிலும் நுட்பமாயிருத்தல். பேரருள் — எல்லையில்லா அருளுடைமை. பேற்றினருமை-அரும் பெருந் தவத்தாலன்றி அடையமுடியாமை. இவற்றில் இறைவன் தன்னொப்பாரும் தன்னின் மிக்காருமில்லாத தனிப்பெரு முதல்வன்.

### பதியும் ஐந்தொழில்களும்

4. ஆக்கி எவையும் அளித்தா சுடனடங்கப்
போக்குமவன் போகாப் புகல்.

பொழிப்பு: (உலகு உயிர் ஆகிய) எவற்றையும் படைத்தும், (விதித்த காலவரை வாழும்படி) காத்தும், (உரிய காலத்தில்) ஆணவ மலத்தோடு கேவலமாய்த் தன்னுள் அடங்கும்படி அழித்தும் (இங்ஙனம் முத்தொழிலையும்) நடத்தும் இறைவன் (உயிர்களுக்கு என்றும்) நீங்காத புகலாவான்.

குறிப்பு: ஆன்ம ஈடேற்றத்துக்காகவே ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகிய தொழில்களை ஆடலாக நடத்துகின்றான்; மகா சங்காரத்தில் ஆணவத்தோடு மாத்திரம் கேவலநிலையில் ஆன்மாவைத் தன்னுள்

ஒடுக்குவன். பின் மகாசிருட்டி ஆரம்பத்தில் அவ்வவற்றுக்குரிய மாயா கன்மங்களையுங் கூட்டி சகலாவத்தைப் படுத்திப் படைப்பான். உயிர்கள் எடுத்த உடப்புக்குரிய இருவினைப் பயனை நுகரும்வரை ஊட்டிக் காப்பான். ஆகவே எந்த நிலையிலும் உயிர்க்கு என்றும் ஆதாரம் இறைவனே.

### பதியின் மூவகைத் திருமேனிகள்

5. அருவும் உருவும் அறிஞர்க் கறிவாம்
உருவும் உடையான் உளன்.

பொழிப்பு: அருவமும் உருவமும் அருவுருவமும் அறிஞர்களுக்கு அறிவுருவும் ஆகிய திருமேனிகளை உடையானாய் (அவ்வவர் பக்குவத்திற்கேற்க நின்று அருள் புரிய) உளன் எம்மிறைவன்.

குறிப்பு: இறைவன் தனக்கே உரிய நித்த சுத்த சொரூப நிலையில் குறிகுணஞ்செயல் ஏதுமில்லா அருபியாக இருப்பன். உயிர்களுக்கு இரங்கி ஐந்தொழில் நடத்தும் பொருட்டு அருளே திருமேனியாகக் கொண்டு குணங்குறி செயலுடைய தடத்த மூர்த்திகளாவர். அவ்வகையில் பிரம விஷ்ணு உருத்திரன் மகேசுவரன் ஆகிய நால்வரும் உருவத் திருமேனியராவர். சதாசிவ மூர்த்தியாகிய சிவலிங்கம் அருவுருவத் திருமேனியாகும்; மெய்யுணர்ந்த ஞானிகளால் ஞானந்தானுருவாகக் காணநின்று அருள் புரிவன. இவ்வாறு உயிர்களின் பக்குவ நிலைக்கேற்ப நின்று வழிபாட்டை ஏற்று அருள்புரிவன்,

### பதியின் மேலானவர் இல்லை

6. பல்லா ருயிருணரும் பான்மையென மேலொருவன்
இல்லாதான் எங்கள் இறை.

பொழிப்பு: பலவாகிய அரிய உயிர்கள் (உடம்பை எடுத்துக் கருவி கரணங்களோடு கூடிநின்று அறிவிக்க) அறிகின்ற முறை பாலில்லாது, (அறிவிப்பானும் அறிதற்கருவிகளின் துணையும் இல்லாமலே) இயல்பாகவே முற்றும் அறியவல்ல முதன்மை உடையான் எம்மிறைவன்.

குறிப்பு: உயிர்கள் கருவிகளோடு பொருந்தி மேலொருவன் நின்று உணர்த்த உணர்வன காட்டுஞ் சூரியனும், காணும் கண்ணுமின்றி உயிர் ஒன்றையுங் காணமாட்டாது. இறைவனோ காட்டுவானுங் கருவியும் இல்லாமல் இயல்பாக முற்றும் அறிவான்; உயிர்களின் அறிவு சிற்றறிவு; சுட்டறிவு. ஒன்றை அறியும்போது பிறவற்றை மறந்து விடும். இறை அறிவு சுட்டிறந்த முற்றறிவு. உயிர்களுக்கு அறிவிப்பவனாகிய மேலொருவன் இறைவன். அவனுக்கு அறிவிப்பாரில்லை.



### பதி அன்புடையார்க்கு எளியார்

7. ஆனா அறிவாய் அகலான் அடியவர்க்கு
வானாடர் காணாத மன்.

பொழிப்பு: வானவராலும் அறியமுடியாத எம்மிறைவன், தன்னுடைய அடியவர்களுக்குக் கெடாத அறிவாகப் பொருந்தி என்றும் அவர்களை விட்டகலாதிருந்து அருள்புரிவான்.

குறிப்பு: வானாடர் - வானவர் - தேவர். ஆனா அறிவு - கெடாத அறிவு-குறையாத ஞானம். மன் – பதி; கடவுள்.

### பதியின் அத்துவித நிலை

8. எங்கும் எவையும் எரியுறுநீர் போல்ஏகம்
தங்குமவன் தானே தனி.

பொழிப்பு: வெந்நீரிலே வெப்பமானது எங்கும் ஒரேமாதிரிக் கலந்திருத்தல்போல, உலகெங்குமுள்ள எப்பொருளிலும் ஒரேமாதிரிக் கலந்து நிறைந்திருக்கும் இறைவன் (அவற்றால் தான் கட்டுண்ணாது) தன்னியல்பாகத் தனித்து நிற்பன்.

குறிப்பு: எரியுறுநீர்-வெப்பமூட்டிய நீர்; வெந்நீர். சூரியன் உலகிலுள்ள எல்லாவற்றையும் தன் சக்தியாலே ஈர்த்து இயக்கி எல்லாவற்றோடும் தொடர்புற்றிருந்தாலும், இவற்றால் தன்னிலை மாறாது தனித்திருத்தல் போலவே இறைவனும் எல்லாவற்றிலும் கலந்து நின்று இயங்கும் தொடர்புகொண்டிருந்தும் தான் தனித்தே இருப்பன்.

### பதி ஆன்மாக்களுக்கு நன்மை செய்பவர்

9. நலமிலன் நண்ணார்க்கு நண்ணினர்க்கு நல்லன்
சலமிலன் பேர்சங் கரன்.

பொழிப்பு: இறைவன் தன்னை அடையாதார்க்கு நல்லவன்போல இரான்; தன்னை அடைந்தவர்க்கு நல்லவனாகவே இருப்பான்; ஆயினும் (எவரிடத்தும் விருப்பு வெறுப்பு என்ற) விகாரமிலன், (எல்லார்க்கும் நன்மைகளையே செய்வதால்) அவன் பெயர் சங்கரன் ஆகும்.

குறிப்பு: நண்ணார்-அடைந்து வழிபடாதவர். நண்ணினர்-வழிபடுவோர். சலம்-விருப்பு வெறுப்பாகிய விகாரம். சம்+கரன்-சுகம் செய்பவன். ஆன்மா துன்பத்துக்கு ஏதுவான மலங்களில் இருந்தும் நீங்கி முத்தி பெறுதலாகிய சுகத்தைச் செய்பவன். சூரியன் ஒளி தருவதைக் குருடன் அறியான். நெருப்பு குளிரை நீக்கும் என்பதை அணுகாதவன் அறியான். அவ்வாறே இறைவனை அடைந்து வழிபடாதவர் அவனை நல்லவனாக அறியமாட்டார்.

### பதியை வழிபடுதலால் வரும் பயன்

10. உன்னுமுளது ஐயமிலது உணர்வாய் ஓவாது
மன்னுபவந் தீர்க்கும் மருந்து.

பொழிப்பு: (உயிர்களுக்கு) உள்ளுணர்வாய் நீங்காதிருந்து கொண்டே அவ்வுயிர்களில் நிலைபெற்றிருக்கிற பிறவியாகிய நோயைத் தீர்க்கும் மருந்தாகிய இறைவன் உள்ள பொருளே, இதில் ஐயமில்லை, (அவ்விறைவனை) தியானிப்பீராக.

குறிப்பு: பவம்-பிறப்பு-இவ்வுருவகத்தில் ஆன்மாவே நோயாளி, பிறவியே நோய். அதற்குத் திருவருளே மருந்து. வைத்தியநாதன் சிவபெருமானே, ஆதலால் நோயை நீக்க அவனை வழிபடுவதே வழியாம்.

## 2ஆம் அதிகாரம்: உயிரவை நிலை

அஃதாவது ஆன்மாவின் இயல்பு.

### ஆன்மாக்கள் எண்ணில்லாதன

1. பிறந்தநாள் மேலும் பிறக்கும்நாள் போலும்
துறந்தோர் துறப்போர் தொகை.

பொழிப்பு: உயிர்களில் பாசங்களைத் துறந்தோர் தொகை பிறந்த நாட்களின் எண்ணிக்கை அளவாம்; இனிப் பாசத்தை நீக்கி முத்தி



பெற உள்ளவற்றின் தொகை இனிமேல் பிறக்க உள்ள நாளின் எண்ணிக்கை அளவாம்.

குறிப்பு: ஆன்மாக்கள் பாசபந்தம் நீங்கி முத்திபெற்றனவும் இனி நீக்கி முத்திபெற உள்ளனவும் என இரு பிரிவினர்; ஆனால் அவை எண்ணிலடங்காத அளவின. பிறந்தநாள் – கழிந்த நாள்கள்.

### ஆன்மாக்கள் வகை

2. திரிமலத்தார் ஒன்றதனில் சென்றார்கள் அன்றி
ஒருமலத்தா ராயும் உளர்.

பொழிப்பு: (அந்த ஆன்மாக்களில் முத்திபெறாதவை) மூன்று மலங்களும் (ஆணவம், கர்மம், மாயை) உள்ள சகலரும், (அவற்றில் ஒன்றாகிய) மாயாமலம் மாத்திரம் நீங்கிய பிரளயாகலரும், ஒருமலம் (ஆணவம்) மாத்திரமே உடைய விஞ்ஞானாகலரும் என மூவகையினராய் உளர்.

குறிப்பு: திரி-மூன்று, முத்திபெறாத ஆன்மாக்கள் சகலர், பிரளயாகலர், விஞ்ஞானாகலர் என மூன்றுவகையின. ஒன்றதனிற் சென்றார்-பிரளயாகவர். ஒரு மலத்தார்—விஞ்ஞானாகலர். திரிமலத்தார்—சகலர்.

### மூவகை ஆன்மாக்களின் வேறுபாடு

3. மூன்றுதிறத் துள்ளாரும் மூலமலத் துள்ளார்கள்
தோன்றலர்தொத் துள்ளார் துணை.

பொழிப்பு: மூவகை ஆன்மாக்களும் மூலமலத்தோடு (ஆணவத்தோடு) பொருந்தியவர்கள்; துணைமலமாகிய மாயாமலம் உள்ள சகலர் தம்மை மலங்கள் தொத்தியிருப்பதை அறியார்.

குறிப்பு: மூலமலம்—ஆணவம், இது மூவகை ஆன்மாவிலும் உண்டு; துணைமலம்-மாயாமலம் இது சகலரிடம் மாத்திரம் உள்ளது. தொத்துமலம். தோன்றலர்—அறியார். துணை உள்ளார் தொத்துத் தோன்றலர் எனச் சொற்களைக் கூட்டுக. ஆடையிலுள்ள அழுக்கை நீக்கச் சவர்க்காரமாகிய புதிய அழுக்கையும் சேர்த்துப் பின் கழுவுவது போல்,

ஆன்மாவின் மூலமல அழுக்கை நீக்கப் புதிதாகச் சேர்த்த மலம் மாயை ஆதலால் துணை எனப்படும். ஆன்மா சிறிது அறிவைப் பெறத் துணை செய்வதும் மாயையாகும். சகலர் தாம் பாசபந்த முற்றிருப்பதை அறியார். எனவே பிரளயாகலரும் விஞ்ஞானகலரும் அதனை அறிவர் என்பதாம்.

## ஆன்மா தனக்கென வலிமையில்லாதது

4. கண்டவற்றை நாளுங் கனவிற் கலங்கியிடுந்
திண்டிறலுக்கு என்னே செயல்.

பொழிப்பு: தான் நனவிலே கண்ட அநுபவத்தை நாடோறும் கனவிலே மாறுபாடாகக் காணுகின்ற ஆன்மாவுக்கு என்ன சுதந்திரம் உள்ளது?

குறிப்பு: நனவு (விழிப்பு), கனவு, உறக்கம் என மூன்று அவத்தைகள் நமக்கு வருகின்றன; நனவில் இருக்கும்போது நம்மைச் சுதந்திரர் என்று எண்ணுகிறோம். ஆனால் கனவும் உறக்கமும் நமது எண்ணத்தை மீறி நமக்கு வருகின்றன. உறக்கத்தில் ஒன்றும் அறியாது கிடக்கிறோம். கனவிலோ, நாம் விழித்திருக்கும்போது கண்டதை மாறுபடக் கண்டு மருளுகிறோம். ஆதலால் ஆன்மாவுக்குச் சுதந்திரம் இல்லை. இறைவனே சுதந்திரன், அவனது ஆணைவழி நடக்கும் பரதந்திரரே உயிர்கள். திண்டிறல்-பெரிய வலிமையுடையது என்றது இகழ்ச்சிக் குறிப்பு-வலியற்ற ஆன்மா என்பதாம்.

## ஆன்மா தானாக அறியும் தன்மையில்லாதது

5. பொறியின்றி ஒன்றும் புணராத புந்திக்கு
அறிவென்ற பேர்நன் றற.

பொழிப்பு: கண்முதலான பொறிகளின் துணையில்லாமல் தானாக ஒன்றையும் அறியமாட்டாத ஆன்மாவுக்கு அறிவு என்ற பெயர் மிக நல்ல பொருத்தம்.

குறிப்பு: அறநன்று-மிகவும் நன்று; இதுவும் இகழ்ச்சிக் குறிப்பு. பொருத்தமற்றது என்பதாம். புந்தி, அறிவு என்பன ஆன்மாவுக்கு வழங்கும் பெயர்கள்; கண் முதலான அறிதற்கருவிகளின் துணை கொண்டு அறிவித்தால் அறியவல்லதே ஆன்மா; தானாக அறியாது அறிவிக்க அறியும் தன்மை இருப்பதால் ஆன்மாவை அறிவென்றும் சித்தென்றும் சொல்வர்.



## ஆன்மா உணர்த்த உணரும் தன்மையுள்ளது

6. ஒளியும் இருளும் உலகும் அலர்கண்
தெளிவி லெனில்என் செய.

பொழிப்பு: விழித்திருக்கும் கண்ணுக்கு சூரிய ஒளியும் இருளும் உலகத்துப் பொருள்களும் ஆகிய இவற்றைக் காணமுடியாவிடில், அக் கண்ணால் என்ன பயன்? அன்றியும் இவற்றால் அக்கண்ணுக்குத்தான் பயன் என்ன?

குறிப்பு: அலர்கண்-விழித்தகண், ஒளி இருள் பொருள் இவற்றை அறியாத கண் குருடு. குருடருக்காகப் படைக்கப்படவில்லை. இவற்றைக் காணும் பார்வை உடையவருக்காகவே படைக்கப்பட்டன. அதுபோலவே உயிர்களுக்கு அறியுந்தன்மை சிறிதுமில்லையாயின் உலகம் படைக்கப்பட்டதால் ஒரு பயனுமில்லை. உயிர்கள் அறிவிக்க அறியும் அறிவுடைமையாலேயே உலகம் படைக்கப்பட்டது. அவை உய்திபெற உபகரிக்கப்பட்டது.

## ஆன்மா சதசத்தாம் தன்மையுள்ளது

7. சத்தசத்தைச் சாராது அசத்தறியாது அங்கணிவை
உய்த்தல்சத சத்தாம் உயிர்.

பொழிப்பு: சத்தாகிய இறைவன், அசத்தாகிய பாசத்தைச் சாரவும் அறியவும் வேண்டுவதில்லை; அசத்தாகிய பாசம் தானாக எதையும் சாரவும் அறியவும் வல்லதன்று; எனவே அவ்விரண்டையும் சாருவதும் அறிவதும் (பொய்ச் சார்பாகிய பாசத்தை விட்டு மெய்ச்சார்பாகிய பதியைச் சார்வதும்) ஆகிய ஆன்மா சதசத்து எனப்படும்.

குறிப்பு: சத்து — உள்ளபொருள்; அசத்து – இல்பொருள். சதசத்து ஒருகால் உள்ளதும் ஒருகால் இல்லதும்போலக் காணப்படுவது. சித்து— அறிவுப்பொருள். அசித்து-அறிவில்பொருள். சிதசித்து—அறிவித்தால்

அறியும் பொருள், ஆன்மா சத்து அல்லது சித்து எனப்படும். பதியே யானால், அது இயல்பாக எல்லாவற்றையும் ஒருங்கு அறியவேண்டும். ஆனால் ஆன்மா அறிவிக்கும்போதே ஒவ்வொன்ருகச் சுட்டி அறியும்; அசத்தாகிய பாசமோ அறிவித்தாலும் அறியாது. ஆதலால் ஆன்மா சத்தாகிய பதியுமன்று; அசத்தாகிய பாசமுமன்று. எனவேதான் அது 'சதசத்து' எனப்படுகிறது. சூரிய ஒளியில் நட்சத்திரம் இல் பொருள்போல மறைந்தும், இருளில் உள்ள பொருள்போல விளங் குவதும் எப்படியோ, அப்படியே பதியோடு ஒப்பிடப் பசு இல்பொருள் போலவும், பாசத்தோடு ஒப்பிடப் பசு உள்ள பொருள்போலவும் தோன்றுதலாலும் சதசத்தாகிறது,

## ஆன்மா சார்ந்ததன் வண்ணமாம் தன்மையுள்ளது

8. இருளில் இருளாகி எல்லிடத்தில் எல்லாம்
பொருள்கள் இலதோ புவி.

பொழிப்பு: இருளில் கிடக்கும்போது இருள்போலவே இல்பொரு ளாகியும், ஒளியில் இருக்கும்போது ஒளிபோல உள்ள பொருளாகியும் தோன்றும் பளிங்கு முதலான பொருள்கள் உலகில் இல்லையா? (அது போலவே ஆன்மாவும் இருளாகிய பாசத்தோடு கூடியிருக்கும்போது பாசம்போல இல்பொருளாகியும், ஒளியாகிய திருவருளோடு கூடி யிருக்கும்போது ஒளிபோல உள்ள பொருளாகியும் தோன்றும் என்பதாம்.)

குறிப்பு: எல் – ஒளி – சூரியன்? இது பிறிது மொழிதலணி. பாசத் தோடு கூடியிருக்கும்போது இல்பொருள்போல மறைந்தும், திருவரு ளோடு கூடியிருக்கும்போது உள்ள பொருளாய் அறிவு விளக்கம் பெற் றும் ஆன்மா காணப்படுவதாலே அதனைச் 'சதசத்து' என்பது தகும், சிவன் திருவருளைச் சார்ந்துவிடின் சிவப்பிரகாசம் பெற்று விளங்கும்.

## ஆன்மா கடவுளை அறியாதபடி மலம் மறைக்கின்றது

9. ஊமன்கண் போல ஒளியும் மிகவிருளே
யாம்மன்கண் காணு தவை.

பொழிப்பு: இறைவனது திருவருட்கண் காட்டக் காணாத கண் களுக்குக் கோட்டானின் கண்ணைப்போலத் திருவருளாகிய ஒளியும் இருளாகவே தோன்றும்.



குறிப்பு: ஊமன் – கூகை – கோட்டான். அதற்குப் பகலில் கண் தெரியாது; இரவிலேதான் தெரியும். மன்கண் – இறைவனுடைய திருவருட்கண். பக்குவமடைந்த ஆன்மாவுக்குத் திருவருளாகிய கண் காட்டும்போதே அது திருவருளையும், சிவத்தையும் அறியும். அருள் காட்டாதபோது ஆன்மாவுக்கு அருள் இருளாகவே தோன்றும்; இருளாகிய பாசப் பொருள்களே ஒளியாகத் தோன்றும். இது கோட் டானின் கண்ணிலுள்ள குற்றம்போல ஆன்மாவின் பக்குவக் குறை வாகிய குற்றத்தால் வருவது.

## ஆன்மா திருவருளின் துணைகொண்டு மலத்தை நீக்குதல் வேண்டும்

10. அன்றளவும் ஆற்றும்உயிர் அந்தோ அருள்தெரிவது
என்றளவொன் றிலலா இடர்.

பொழிப்பு: அளவிட முடியாத பிறவித் துன்பத்தை அன்றுமுதல் இன்றுவரை அநுபவித்து வருகின்ற ஆன்மா, (அத்துன்பத்தை நீக்கும் மருந்தாகிய) திருவருளை அறிந்துகொள்ளுவதும் அதை அடைந்து பிற வித் துன்பத்தை நீக்குவதும் என்றுதானோ?

# 3ஆம் அதிகாரம்: இருண்மல நிலை

அஃதாவது இருள்போன்ற மூலமலமாகிய ஆணவத்தின் இயல்பு, அதனோடு தொடர்பு பற்றிக் கர்மமலம் மாயாமலம் பற்றியும் கூறப்படும்.

## பதி, பசு ஆகியவைகளைப் போல பாசங்களும் உள்ள பொருள்கள்

1. துன்றும் பவத்துயரும் இன்புந் துணைப்பொருளும்
இன்றென்பது எவ்வாறும் இல்.

பொழிப்பு: ஆன்மாவுக்கு தொடர்ந்துவரும் பிறவித் துன்பமும் இதற்குக் காரணமான மலங்களும், பிறப்பை ஒழித்த பேரின்பவீடும், அதற்குக் காரணமான திருவருளும் ஆகிய இவைகளை இல்லை என்பது எவ்வகை அளவையாலும் பொருந்தாது.

குறிப்பு: அளவைகள் காட்சி, அநுமானம், ஆகமம் என மூன்றும். பிறப்புத் துன்பமென்பது காட்சியாலறியப்படும். அதற்குக் காரணம் ஒன்று உண்டென்பது அநுமான ஆகம அளவைகளாலே துணியப் படும். பிறப்புத் துன்பமெனவே, பிறப்பொழித்தல் இன்பமென்பது தெளிவு. அதற்குக் காரணமும் உண்டென்பது அறியப்படும். எனவே ஆன்மாவும் மலங்களுஞ் சிவனருளும் உள்ள பொருள்களே. அவற்றை இல்லையென ஒரு நியாயமும் இல்லை.

## ஆணவ மலத்தின் இயல்பு

**3. இருளான தன்றி இலதெவையும் ஏகப்
பொருளாகி நிற்கும் பொருள்.**

பொழிப்பு: எப்பொருளையும் தன்மயமாக்கி ஒரே பொருளாகக் காட்டி நிற்கும் பொருள் இருளன்றி வேறில்லை.

குறிப்பு! இது பிறிதுமொழிதலணி: ஒளி எப்பொருளையும் பகுத் தறியும்படி காட்டும். இருள் எப்பொருளையும் தன்வயமாக்கி இருளே யாக்கிப் பகுத்தறிய முடியாதபடி மறைக்கும். இதுபோலவே ஆன்மா வைப் பற்றிய ஆணவ இருளும். அது தன்னையும் பிறவற்றையும் பகுத் தறிய முடியாதபடி தன்மயமாக்கி மறைந்து நிற்கும் என்பதாம்.

## ஆணவ மலத்தின் கொடிய தன்மை

**3. ஒருபொருளும் காட்டாது இருள்உருவங் காட்டும்
இருபொருளுங் காட்டாது இது.**

பொழிப்பு: இருள் வேறெப்பொருளையும் காணமுடியாதபடி மறைத்து நின்றாலும் தன்னுருவத்தையாவது காட்டும்; ஆனால் ஆணவ இருளோ பிறபொருள்களை மறைப்பதோடு தன்னையும் காட்டாது.

குறிப்பு: இருளிலே பிறபொருளைக் காணாவிடினும் இருளையாவது காணலாம். ஆணவத் தொடர்பானது ஆன்மா பிறபொருளையும் காணவிடாது; ஆன்மாவாகிய தன்னையும் காணவிடாது: இருண்மல மாகிய அதனியல்பையும் அறியவொட்டாது. ஆதலால் ஆணவம் இருளினும் கொடியது.



## ஆணவ மலம் ஆன்மாவோடு உள்ளது

**4. அன்றளவி உள்ளொளியோடு ஆவி யிடையடங்கி
இன்றளவும் நின்றது இருள்.**

பொழிப்பு: அநாதியாகவே தன்னுள்ளே ஒளியாகிய சிவத்தோடு இருக்கும் ஆன்மாவை மாத்திரம் பற்றிக்கொண்டு அதனை விட்டக லாது இன்றுவரை நிற்கின்றது ஆணவம்.

குறிப்பு: அனைத்துக்கும் ஆதாரமான சிவம், ஆன்மாவுக்கு உள் ளொளியாய் அநாதியாக இருக்கிறது. ஆணவமும் அநாதியே ஆன் மாவைப் பற்றி நிற்கிறது. ஆனால் சிவத்தைப் பற்றமாட்டாது: பற்றிய அவ்வாணவம் ஆன்மாவை மெய்யுணர்வு பெறவொட்டாது மயக்கி நிற்கிறது. உள்ஒளி — சிவம்.

## ஆணவ மலம் ஆன்மாவுக்குத் தன்னை வெளிப்படுத்தாது

**5. பலரைப் புணர்ந்தும் இருட்பாவைக்கு உண்டுஎன்றுங்
கணவர்க்குந் தோன்றாத கற்பு.**

பொழிப்பு: ஆணவமாகிய இப்பெண், பல ஆன்மாக்களாகிய கணவரைக் கலந்திருந்த போதிலும், என்றும் அவர்களுக்குத் தன் னுருவைக் காட்டாது மறைந்திருக்கும் உறுதி உண்டு.

குறிப்பு: இவ்வுருவகம் ஆணவத்தை ஒரு பெண்ணாகவும், அது கலந்திருக்கும் ஆன்மாக்களைக் கணவராகவும், ஆன்மாக்களுக்குத் தன்னைக் காட்டாது மறைக்கும் ஆற்றலைக் கற்பாகவும் கற்பனை செய் யப்பட்டது. ஆணவம் ஒன்றே. அது பல சக்திகளை உடையதாய்ப் பல ஆன்மாவையும் பற்றி மயக்கும்.

## ஆணவ மலம் ஆன்மாவுக்கு அஞ்ஞானத்தைக் கொடுப்பது

**6. பன்மொழிகள் என்உணரும் பான்மை தெரியாத
தன்மைஇரு ளார்தந் தது.**

பொழிப்பு: (ஆணவத்தின் இயல்பை விளக்க) பலவற்றைப் பேசு வதில் பயன் என்ன? (சுருங்கச் சொல்லில்) ஆன்மாவுக்கு மெய் யுணர்வு பெறுந்தன்மையைத் தெரியாதிருக்கும் நிலைமையைத் தந்தது ஆணவமே.

குறிப்பு: ஆன்மா மெய்யுணர்வு பெறவொட்டாது மயங்கிக் கிடக்கும்படி செய்வது ஆணவமே, இருளார்—என்றது இகழ்ச்சிக் குறிப்பு ஆணவம், ஆன்மாவுக்குள்ள, உணர்த்த உணரும் சிற்றறிவை யும் மயங்கச் செய்து நிற்பது இருண்மலமாம்.

## ஆணவ மலம் ஆன்மாவின் குணமன்று

7. இருளின்றேல் துன்பேன் உயிரியல்பேல் போக்கும்
பொருளுண்டேல் ஒன்றுகப் போம்.

பொழிப்பு: ஆன்மாவுக்கு ஆணவமாகிய குற்றம் இல்லையாயின் பிறவித் துன்பம் வருதற்குக் காரணம் என்ன? (பிறவித் துன்பம் தொடர்தலால் அதற்குக் காரணமாகிய ஆணவம் உள்ளதே) இனி அந்த ஆணவத்தை ஆன்மாவின் குணமென்று கொள்ளலாமெனில் (அதுவும் தவறு. ஏனெனில்) ஆணவத்தைப் போக்கும் பொரு ளொன்று (திருவருள்) அதனைப் போக்கும் போது (குணம் அழியவே குணமாகிய ஆன்மாவும்) ஒருசேர அழிந்துவிடும். (ஆதலால் ஆணவம் ஆன்மாவின் குணமன்று.)

குறிப்பு: ஆன்மாவின் வேறாய் ஆனால் அநாதியே ஆன்மாவோடு தொடர்ந்திருக்கும் பொருள் ஆணவம். அதனாலேயே ஆன்மா பிறவித் துன்பமடைகிறது, அன்றி, இது ஆன்மாவின் குணமன்று. நெருப்பின் குணம் சூடு, சூட்டை ஒழித்தால் குணியாகிய நெருப்பும் இல்லை.

## ஆணவ மலம் அநாதியாக ஆன்மாவுடன் உள்ளது

8. ஆசாதி யேல்அனைவ காரணமென முத்திநிலை
பேசாது கவ்வும் பிணி.

பொழிப்பு: ஆணவமானது ஆன்மாவை இடையிலே பற்றியதாயின் அதற்குக் காரணம் யாது? (காரணமின்றியே பற்றுமாயின்) முத்தி பெற்ற ஆன்மாவை (மீளவும்) பற்றுமல்லவா?

குறிப்பு: ஆசு, பிணி என்பன ஆணவத்தைக் குறிப்பன. ஆதி, ஒரு குறித்த காலத் தொடக்கத்தை உடையது, அப்படி ஆணவமானது ஆன்மாவை இடையிலே பற்றுதற்கு ஒரு காரணம் வேண்டும் ஒன்று. இறைவன் கூட்டலாம். அல்லது ஆன்மா கூடலாம், அல்லது ஆணவமே வந்து சேரலாம். கருணை உள்ள இறைவனுங் கூட்டான்; ஆன்மாவுந் தானே துன்பத்துள் சென்று கூடாது; ஆணவமோ அறிவற்ற சடம்; ஆதலால் அதுவாக வந்து சேரவும் மாட்டாது. எனவே ஆணவம் அநாதியே உள்ளது. ஆணவந் தானே சேருமெனில் முத்தி பெற்ற ஆன்மாவையும் பற்றலாமே. அப்படிப் பற்றியதில்லை. ஆதலால் அது இடையிட்டு வந்ததன்று.



## ஆணவத்தை நீக்கும் வழி

9. ஒன்று மிகினும் ஒளிகவரா தேல்உள்ளம்
என்றும் அகலாது இருள்.

பொழிப்பு: (மும்மலங்களில் துணைமலமெனப்படும்) ஒன்றாகிய மாயாமலத்தோடு – உடம்போடு—ஆன்மா கூடியபொழுதும் அறிவைப் பெறவில்லையாயின், அந்த ஆன்மாவை விட்டு எக்காலத்தும் ஆணவம் நீங்காது.

குறிப்பு: மாயா காரியமாகிய உடம்பை எடுத்து உயிர்களைப் பிறக்கச் செய்தது. ஆன்மாவுக்கு இயற்கையாயுள்ள அறியுஞ் சக்தியை வளர்த்து அறியாமைக் கேதுவாகிய ஆணவத்தை நீக்குவதற் கேயாம். பார்வை குறைந்தவன் கண்ணாடியின் துணைகொண்டு தெளி வாகப் பார்ப்பான். கண்ணாடியில்லையேல் காணமாட்டான். அவ்வாறே சிற்றறிவுடைய ஆன்மா உடம்பின் துணைகொண்டுதான் அறியமுடியும். கண்ணாடியணிந்தாலும் சூரிய ஒளியின்றிக் காணமுடியாது. அதுபோல உடம்போடு கூடி நின்றபொழுதும் ஆன்மா, திருவருள் காட்டும் போதுதான் காணமுடியும். எனவே உயிரை உடம்போடு கூட்டியது, அது அறிவு பெறுவதற்கு இறைவன் செய்த பேருபகாரமாகும்.

## மாயை, கன்ம மலங்களின் இயல்புகள்

10. விடிவா மளவும் விளக்கனைய மாயை
வடிவாதி கன்மத்து வந்து.

பொழிப்பு: மாயையானது வடிவம் முதலான நால்வகையாய் ஆன்மாக்களின் கர்மத்துக்கு ஏற்றவாறு அமைந்து, (அவ்வான்மாக்கள் திருவருளாகிய) விடிவைக் காணும் வரையில் விளக்குப்போல நின்று உதவும்.

குறிப்பு: வடிவாதி நான்கு-தநு, கரணம், புவனம், போகம் என்பன. ஆன்மா ஆணவ இருளில் ஒன்றுமறியாது கேவலமாய்க் கிடந்தது. இறைவன் படைப்புத் தொழிலால் மாயையாகிய உலகில் (புவனத்தில்) அறிவு செயல்களுக்குரிய கருவிகளோடு (கரணங்களோடு) கூடிய உடம்பை (தநுவை) எடுத்துப் பிறந்து இன்பதுன்பங்களை (போகங்களை) அநுபவிக்கச் செய்கிறன். அத் தநு கரண புவன போகங்கள் அவ்வவ்வான்மாவின் இருவினைகளுக்கேற்றபடி வெவ்வேறு விதமாகத் தரப்படும். விடிவாகிய சூரிய ஒளியைப் பெறும் வரையும் இருளில் சிறு விளக்குகள் நமக்குச் சிறிதே ஒளி தந்துதவும். அதுபோல ஆணவ இருளிலே கிடக்கும் ஆன்மாவுக்குச் சிவனருளாகிய சூரிய ஒளியைப் பெற்று மெய்யுணர்வு பெறும் வரையும் மாயாகாரியமாகிய நான்கும் சிற்றறிவைத் தந்துதவும். இதனுல் ஆணவத்தோடு தொடர்புடைய கர்ம மலம், மாயாமலங்களின் இயல்பும் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

## 4ஆம் அதிகாரம்: அருளது நிலை

### அஃதாவது திருவருட் சக்தியின் இயல்பு

### திருவருளின் பெருமை

1. அருளிற் பெரியது அகிலத்து வேண்டும்
பொருளிற் றலைஇலது போல்.

பொழிப்பு: இவ்வுலக வாழ்வுக்கு இன்றியமையாது வேண்டப்படும் பொருட் செல்வத்தினும் தலையானது வேறு எதுவும் இல்லாதவாறு போல, ஆன்மாவுக்கு (எக்காலத்தும் எவ்வுலகத்தும்) திருவருட் செல்வத்தினும் பெரிதாய செல்வம் பிறிதொன்றும் இல்லை.

குறிப்பு: அகிலம்-உலகம். பொருள்-பொருட் செல்வம். ஒருவனுக்குத் தேவையான எதையும் பெற்றுக்கொள்ள வேண்டப்படுவது பொருட் செல்வமே. அதனுலும் அது ஏனைய செல்வங்களிலும் தலையானதாகும். அது இல்லையேல் வேறு எதுவும் இல்லையாகிவிடும். அப்படியே ஆன்மாவுக்கு எக்காலத்தும் எவ்விடத்தும் நீங்காத் துணையாய் நின்று உதவும் திருவருட்செல்வம் எல்லாவற்றிலும் பெரியதாகும்.



### திருவருளின் செயல்

2. பெருக்கம் நுகர்வினை பேரொளியாய் எங்கும்
அருக்கனென நிற்கும் அருள்.

பொழிப்பு: சூரியனைப் போலவே திருவருளும், ஆன்மாக்கள் வினைகளைப் பெருக்குவதற்கும், வினைப்பயனை நுகர்வதற்கும் வழி செய்வதாய் அனைத்துயிரிலும் எங்கும் பேரொளியாக (அறிவுக்குள் அறிவாக) நின்று உதவும்.

குறிப்பு: சூரிய ஒளி எங்கும் பரந்து காணப்பட அதனுடைய துணை கொண்டே எல்லா உயிர்களும் விரும்பியபடி வேலை செய்து இன்ப துன்பங்களை அநுபவிப்பர். அதுபோலத் திருவருளாகிய பேரறிவொளி உயிர்களிற் கலந்து நின்று இயக்குவதாலேயே அவை நல்வினை தீவினைகளைப் புரிந்து சுகதுக்கங்களை அநுபவிக்கின்றன.

### திருவருள் இன்றி எதுவும் இயங்காது

3. ஊனறியா தென்றும் உயிரறியா தொன்றுமிது
தானறியா தாரறிவார் தான்.

பொழிப்பு: உடம்பு — சடம் — அறிவில்லது. ஆதலால் எக்காலத்தும் அறியமாட்டாது; உயிரும் (அறிவித்தாலன்றி) ஒன்றையும் அறியமாட்டாது. ஆதலால் திருவருளானது உடம்போடு உயிரைக் கூட்டி அறிவித்தாலறிவதல்லாமல் உயிர் தானுக அறியுமா?

குறிப்பு: ஆன்மா ஆணவ இருளால் மயங்கிக் கிடப்பதால் திருவருள் அறிவித்தாலன்றி எதையும் அறியாது.

### திருவருளை அறியாமைக்குக் காரணம்

4. பாலாழி மீனுளும் பான்மைத்து அருளுயிர்கள்
மாலாழி ஆழும் மறித்து.

பொழிப்பு: எங்கும் நிறைந்த திருவருளே ஆதாரமாக வாழும் உயிர்கள், அத்திருவருளை அறிந்து அநுபவியாது மாயமாகிய உலக

இன்பங்களையே மேலும் மேலும் நாடி நிற்றல், பாற்கடலில் வாழும் மீன் அதனை உண்ணாது வேறு இழிந்த பிராணிகளை உண்ணும் தன்மை போலும்.

குறிப்பு: பால் ஆழி — பாற்கடல், மால் ஆழி — மாயாகாரியமான உலக இன்பங்கள். ஆழும் — (அதையே பொருளென்று) மயங்கிக் கிடக்கும். மறித்து — மேலும் மேலும். பாலே சிறந்த உணவாயினும் அதனை உண்பதில்லைப் பாற்கடலில் வாழும் மீன். அதன் சிறப்பை அது அறியாது; வேறு அற்ப செந்துக்களையே தின்னும். எங்கும் நிறைந்து என்றும் உயிர்க்கு உறுதுணையாய் உதவும் சிறப்புடையது திருவருள். நீர்க்குமிழி போலத் தோன்றி மறைவன உலகத்துச் சிற்றின்பங்கள். திருவருட் பெருமையை அறியாத ஆன்மா அதை விட்டு அற்ப உலக இன்பங்களையே பொருளென்று மேலும் மேலும் தேடி அலைகின்றது. இந்த மயக்க அறிவாலே மீண்டும் மீண்டும் பிறவித் துன்பத்தில் ஆழுகின்றது.

## திருவருளே ஆன்மாவுக்குத் துணை

5. அணுகு துணைஅறியா ஆற்றோனில் ஐந்தின்
உணர்வை உணரா துயிர்.

பொழிப்பு: தன்னருகே வழிகாட்டியாக வருபவனின் துணையை உணராது செல்லும் வழிப்போக்கன் போலவும், தம்மைக் கருவியாகக் கொண்டு அறியும் உயிரின் தலைமையை அறியாத ஐம்பொறிகள் போலவும், தனக்கு உள்ளுணர்வாக நின்று உதவும் திருவருளின் உபகாரத்தை உயிர் உணராதிருக்கின்றது.

குறிப்பு: ஆற்றோன் — வழிப்போக்கன். ஐந்து—ஐம்பொறி. வழி நடப்போன் வழித்துணையாய் வருபவனின் உதவியை மறந்து தன் காரியத்தையே நினைப்பது போலவும்; ஐம்பொறிகளையும் கருவியாகக் கொண்டு அறிவது உயிரேயாகவும். பொறிகள் உயிரை மறந்து தாமே அறிவதாய் எண்ணுவ்து போலவும், தனக்குத் துணைவனும் நாயகனும் நின்று உபகரிக்கின்ற திருவருளை உயிரானது உணராதிருக்கின்றது. அதனாலே ஆன்மா தானே அனைத்தையும் அறிவதும் செய்வதுமாகக் கருதுகின்றது.



## திருவருளை ஆன்மா அறிவதில்லை

6. தரையை உணராது தாமே திரிவார்
புரையை உணரா புவி.

பொழிப்பு: தாம் வாழ்வதற்கு இத்தரையே ஆதாரம் என்பதை அறியாது தாமே தமக்கு ஆதாரமென்று செருக்குற்றுத் திரிபவரது குற்றத்தை ஆன்மாக்கள் அறியா.

குறிப்பு: இது பிறிதுமொழிதல் அணி. தரை — பூமி. புரை — குற்றம். புவி — உலகத்தவர் — ஆன்மா. பூமியே நமக்கு ஆதாரமாய் நமக்கு வேண்டிய அனைத்தையும் தந்து நம் பாரத்தைச் சுமக்கிறது. இதைச் சிலர் உணர்வதில்லை; தாமே தமது ஆற்றலால் வாழுவதாகத் தற்பெருமை பேசித் திரிவர். இது செருக்கென்னும் பெருங் குற்றமாம். இவ்வாறே உயிர்களும் தமக்கு என்றும் ஆதாரமாய் எல்லா உபகாரங்களையும் செய்து நிற்கும் திருவருளின் துணையை உணரா; தாமே தமக்கு ஆதாரம் எனச் செருக்குற்று வாழ்கின்றன, இது ஆணவ மறைப்பால் வரும் குற்றமாம். அதனாலே திருவருளின் துணையின்றித் தாம் வாழ முடியாதென்ற உண்மையை உணர்கிலர். இது, சூரிய ஒளியின் துணைகொண்டு கண்டுகொண்டும் தாமே கண்டதாக எண்ணுவதுபோன்ற நன்றி மறந்த செயலாகும்.

## திருவருளை அறியாதார் அடையும் பயன்

7. மலைகெடுத்தோர் மண்கெடுத்தோர் வான்கெடுத்தோர் ஞானத்
தலைகெடுத்தோர் தற்கேடர் தாம்.

பொழிப்பு: மலையிலிருந்து கொண்டே மலையைத் தேடுவோரும், நிலத்தில் வாழ்ந்துகொண்டே நிலத்தைத் தேடுவோரும், வான வெளியில் உலாவிக்கொண்டே வானைத் தேடுவோரும், ஞானமாகிய திருவருளோடு இருந்துகொண்டே அதனைத் தேடுவோரும், தம்மை மறந்து தம்மைத் தேடும் அறிவிலிகளாவர்.

குறிப்பு: மலையிலும் மண்ணிலும் வானவெளியினுள்ளும் இருந்துகொண்டே, அப்படிப் பொருள்களும் உண்டா? அவை நமக்கு ஆதாரமா? என்று ஒருவர் கேட்டால், அவரை அறிவினர் என்று யாரும்

சொல்லுவர்: மது முதலியவற்றால் களித்துத் தன்னையும் மறந்தவனே அப்படிப் பேசுவன், அவ்வாறே: 'திருவருளே எல்லா வகையாலும் நமக்கு ஆதாரம். நம்மாலாவது ஒன்றுமில்லை' என்பதைக் கண்டு கொண்டும், திருவருளாவது எது? என்று வினவுபவர் தற்கேடரான அறிவீனரேயாவர்.

### திருவருளை அறியாதார் நிலை

8. வெள்ளத்துள் நாவற்றி எங்கும் விடிந்திருளாம்
கள்ளத் திறைவர் கடன்.

பொழிப்பு: (திருவருளே தம்மை நடப்பித்து நிற்கவும் அதை மறந்து தாமே தம்மை நடத்திக்கொள்வதாய் எண்ணும்) கள்ளத் தலைவராகிய ஆன்மாவின் இயல்பானது, நன்னீர் வெள்ளத்தினுள் நின்றுகொண்டும் அதனைப் பருகாது தாகத்தால் நாவரண்டு நிற்பவர் தன்மை போலவும், எங்கும் விடிந்து ஒளி பிறந்த பின்னும் 'விடியவில்லையே, ஒளியைக் காணவில்லையே, எங்கும் இருளாயிருக்கிறதே' என்று மயங்குபவர் தன்மை போலவும் உள்ளது. இப்படி மயங்குவோர் சகலராகிய ஆன்மா வர்க்கத்தினர்.

குறிப்பு: முன்கூறியபடி மாயாமலம் உடையோர் தாம் மலங்களாலே பற்றப்பட்டிருப்பதையே அறியார். ஆதலால் திருவருளையும் அறியாதவராயே மயங்குகின்றனர். கள்ளத்திறைவர் — பெத்தான்மாக்கள்.

### திருவருளை அறியும் வழி

9. பரப்பமைந்து கேண்மினிது பாற்கலன்மேற் பூனை
கரப்பருந்த நாடும் கடன்.

பொழிப்பு: (ஞானநூற் பொருளாகிய) இத்திருவருளின் இயல்பை மனத்தை வேறு விடயங்களில் செல்லவொட்டாது தடுத்து அடங்கியிருந்து (குருவின் உபதேச வழியே) கேட்டுச் சிந்தித்துத் தெளிக; அடக்கமின்றி இருந்து கேட்பது, பாற்குடத்தின் மேலிருந்து பாலை உண்ணும் பூனையானது அதை உண்பதை விடுத்து (அயலில் ஓடும்) கரப்பான் பூச்சியை உண்பதற்குத் தாவிச் சென்றவாறு போலாய் விடும்.



குறிப்பு: பாற்குடத்தின் மீதிருந்து பாலுண்ணும் பூனை அதை விட்டுக் கரப்பான் பூச்சிமேல் தாவும்போது பாலையும் இழந்து கரப்பானையும் இழந்து தவிக்கும். அது போலவே குரு உபதேசத்தை அடங்கியிருந்து கேளாதவர் இரண்டுங் கெட்டவராய் விடுவர்.

### திருவருளை அறியாதார்க்கு முத்தி இல்லை

10. இற்றைவரை இயைந்தும் ஏதும் பழக்கமில்லா
வெற்றுயிர்க்கு வீடு மிகை.

பொழிப்பு: அநாதியாக இன்றுவரை திருவருளோடு சேர்ந்திருந்தும் ஒரு சிறிதும் அத்திருவருளை அறிந்துகொள்ளமாட்டாத இந்த வெற்றுயிருக்கு வீட்டின்பம் மிகையாகும்.

குறிப்பு: வெற்றுயிர் — அறிவில்லாத உயிர். இன்றுவரை உறுதுணையாய் நின்று எல்லா வகையாலும் உபகரித்துவரும் திருவருளின் இயல்பை உணருஞ் சத்தியற்ற ஆன்மாவுக்கு வீட்டின்பத்தைக் கொடுத்தாலும் அதை அநுபவிக்கும் சத்தியும் இல்லை. ஆதலால் வீடு மிகை எனப்பட்டது. அளவுக்கு மிஞ்சிய சுமையாகும். எத்தனை காலமானாலும் திருவருளை அறிந்து அதன் துணைகொண்டே அது தரவே வீட்டின்பத்தை ஆன்மா அடையமுடியும் என்பது வலியுறுத்தப் பட்டது;

## 5ஆம் அதிகாரம்: அருளுரு நிலை

அஃதாவது திருவருளே உருவாய் வரும் குருவின் இயல்பு.

### திருவருளே குருவாக வருகிறது

1. அறியாமை உண்ணின்று அளித்ததே காணும்
குறியாது நீங்காத கோ.

பொழிப்பு: (பக்குவமடையாத ஆன்மாவுக்கு) அறியாவண்ணம் (உயிருக்குயிராய் நின்று ஐந்தொழில்களால்) உபகரித்தலைச் செய்து வந்த திருவருள்தானே, (பக்குவமடைந்த ஆன்மாவுக்கு) வெளியே கண்டறியக்கூடியவண்ணம் (ஊரும் பெயரும் உருவும் செயலுமுடைய)

குருவடிவாக வந்து உபகரிப்பதாய் (அபக்குவ நிலையில் அருவாயும் பக்குவ நிலையில் உருவாயும் பொருந்தி) எக்காலத்தும் நீங்காது நின்று அருள்புரியும் மேலான பொருளாகும்.

குறிப்பு : அறியாப் பருவத்தும் அறியும் பருவத்தும் குழந்தையைப் பேணும் தாய்போலவே, திருவருளும் ஆன்மாவை அறியாப் பக்குவத்தில் அறியாத அருவாயும் அறியும் பக்குவத்தில் அறியும் உருவாயும் (குரு வடிவாயும்) நீங்காதே நின்று உபகரிக்கும்.

### திருவருள் குருவாக வருவதற்குக் காரணம்

2: அகத்துறுநோய்க் குள்ளினை ரன்றி அதனைச்
சகத்தவரும் காண்பரோ தான்.

பொழிப்பு : வீட்டிலுள்ள ஒருவருக்கு உற்ற நோயினை அவ்வீட்டில் அவரோடு உடனுறைபவர் அறிவாரேயன்றி அந்நோயினை (அவ்வீட்டுக்கு வெளியில்) ஊரில் வாழ்பவர்களும் அறிந்துகொள்ள முடியுமா? (அறியமாட்டார்).

குறிப்பு: இது பிறிதுமொழிதல் அணி. அகம்–வீடு. உள்ளினர்–வீட்டினுள்ளிருப்போர். சகத்தவர் – (வீட்டாரல்லாத) ஊரவர். ஒரு வீட்டிலுள்ளவருக்கு உற்ற நோயை அவ்வீட்டிலுடனுறையும் ஒருவரே அறிவார்; பிறர் அறியார். அதுபோல உடம்பாகிய வீட்டினுள் வசிக்கும் உயிருக்குள்ள மலநோயினை அவ்வுயிர்க்குள்ளுயிராய் உடனுறையும் திருவருளே அறியவும் பரிகரிக்கவும் வல்லதன்றிப் பிறரால் இயலாது. எனவே அத்திருவருளே நோயின் இயல்பறிந்து உரிய காலத்தில் குருவாகவந்து நோய்தீர்க்கும் என்பதாம்.

### திருவருளே குருவாக வருதலை ஆன்மாக்கள் அறிவதில்லை

3. அருளா வகையால் அருள்புரிய வந்த
பொருளார் அறிவார் புவி.

பொழிப்பு: (பக்குவமடையாத ஆன்மாவுக்கு) அது அறியாத வண்ணமே (ஐந்தொழிலாகிய) அருளைச் செய்துகொண்டிருந்தது போலவே, (பக்குவங் கண்டபொழுது) குருவடிவாகி அருள்புரியவந்த திருவருளின் இயல்பைக் (குரு உபதேசம் பெற்றவர் அறிவதன்றி) இவ்வுலகில் பிறரும் அறிவாரோ? (அறியார்).



குறிப்பு: இவ்வதிகாரத்து முதற்குறளின் பொருளை இதனோடு பொருந்த நோக்குக. "அருபரத் தொருவன் அவனியில் வந்து குருபரனாகி அருளிய பெருமையை" என்ற திருவாசகப் பகுதியும் இக்கருத்தையே கூறும்.

### குரு உருவை அறியாமைக்குக் காரணம்

4. பொய்யிருண்ட சிந்தைப் பொறியிலார் போதமாம்
மெய்யிரண்டும் காணார் மிக.

பொழிப்பு: பொய்யாகிய உலக இன்பங்களையே பொருளென்று (ஆணவமறைப்பால் கருதும்) அறியாமைமிக்க உள்ளமுடைய நல்விதியில்லாதோர். ஞானமாகிய திருவருளின் அருவடிவினையும், அதுவே உருக்கொண்டுவரும் குருவடிவினையும் சிறிதும் அறியார்.

குறிப்பு: பொய் – தோன்றியழியும் உலகத்துச் சிற்றின்பம். இருண்ட—இருண்மலத்தால் அறியாமை குடிகொண்ட. பொறியிலார்–நல்வினைப்பேறில்லாதவர். பொறி–ஊழ்–விதி. போதம்–ஞானம்–திருவருள். ஆம்மெய்–அதுவே உருக்கொண்டுவரும் குருவடிவம். ஆணவமறைப்பால் அறிவிழந்து உலக இன்பங்களில் ஈடுபடுவதால் ஆக்கம்பெறும் ஊழில்லாதவர் – தீவினையாளர். அவர் திருவருளே ஞானமும் குருவுமாம் என்பதனை அறியார்.

### குரு உரு வருதலின் காரணம்

5. பார்வைஎன மாக்களைமுன் பற்றிப் பிடித்தற்காம்
போர்வையெனக் காணார் புவி.

பொழிப்பு: காட்டிலுள்ள மிருகங்களைப் பிடிப்பதற்குப் பயன்படுத்தப் பழக்கிவைத்திருக்கும் பார்வை மிருகம்போலவே, உலகத்து மக்களைத் தீட்சைவழியால் தன்வசப்படுத்துவதற்குத் திருவருள் தாங்கிவரும் மானிடப் போர்வையே குரு என்பதை உலகினர் அறியார்.

குறிப்பு: மானைக்காட்டி மானைப்பிடிப்பது வேட்டையாடுவோர் வழக்கம். அப்படிப் பழக்கிவைத்திருக்கும் மான் பார்வை எனப்படும். மனிதரை மனித உருவில்வந்து ஆட்கொள்ளுவதுதான் நம்மை வசமாக்க எளிய வழி. ஆகவே திருவருள் மானிட உருவமாகிய போர்வையைப்

பூண்டு பார்வைபோல வந்து மக்களை ஆட்கொள்ளுகிறது. இவ்வுண்மையைத் தீட்சைபெற்ற சீடனன்றிப் பிறர் அறியார்.

### குருவே மலத்தைக் கெடுக்க வல்லவர்

6. எமக்கென் எவனுக்கு எவைதெரியும் அவ்வத்
தமக்கவனை வேண்டத் தவிர்.

பொழிப்பு: எவன் எந்தச் சாத்திர வித்தையைக் கற்றுத் தேர்ந்துள்ளானோ, அந்த அந்தச் சாத்திரவித்தைகள் கற்க விரும்புவோருக்கு அவன் குருவாக வேண்டப்பட்டு அவனிடமே கேட்டறியவேண்டுதலால் 'எமக்குக் குரு எதற்கு' என்ற கேள்வியைத் தவிர்வாயாக.

குறிப்பு: சிலர் "நாமே சாத்திரங்களைப் பயின்று அறிவுபெற்று இறைவனை அறியலாமே; இதற்குக் குரு எதற்கு" என்று கேட்பர். இது தவறாகும். ஏனெனில், எவன் எதை அறிந்தவனோ அவனிடமே அதைக் கேட்டறிவதே உலகியல்பு. அவ்வகையால் சிவத்தை நன்கு அறிந்தது திருவருளேயாதலால் அத்திருவருளாகிய குருமூலமே நாம் சிவத்தைப்பற்றி அறியமுடியும். வேறு வழி இல்லை. ஆதலால் அக்கேள்வியை வினவுதலை விடவேண்டியதே முறையாம்.

### குரு மலத்தை நீக்கும் முறை

7. விடநகுலம் மேவினும்மெய்ப் பாவகனின் மீளும்
கடனிலிருள் போவதிவன் கண்.

பொழிப்பு: ஒருவனைப்பற்றிய (பாம்பு) விடமானது நகுலந்தானே முன்னேவந்து (பார்த்துப்பரிசித்து) நின்றாலும் அவனைவிட்டு நீங்காது; ஆனால் (தனது மந்திரஜப சாதனையால்) தன்னை மெய்யாகவே நகுலமாகப் பாவித்துக்கொண்டு (பார்த்தல், பரிசித்தல்) செய்யும் மாந்திரீகனாலேயே விட்டுநீங்கும்; இத்தன்மை போலவே ஆன்மாவைப்பற்றிய (விடம்போலுள்ள) ஆணவமும், (தன்னைச் சிவனாகவே பாவனை செய்துகொண்டு தீட்சைசெய்யும்) குருவின் தீட்சைக்கிரமத்தாலேயே ஆன்மாவை விட்டகலும்.

குறிப்பு: நகுலம் – கீரி. பாவகன் – பாவிப்பவன் – மாந்திரிகன். ஒருவனைப் பற்றிய பாம்பு விடத்தை, நகுலபாவனையோ கருட



பாவனையோ செய்யும் மாந்திரிகனே போக்குவான். நகுலமோ கருடனோ முன்னின்றாலும் நீக்கமுடியாது. அப்படியே ஆன்மாவோடு உடனிருக்கும் திருவருளால் ஆன்மாவின் மலம் நேராகப் போக்கப் படுவதில்லை. தன்னைத் திருவருளாக (சிவமாக)ப் பாவிக்கும் குருவின் தீட்சையாலேதான் நீக்கப்படும்.

நகுலமானது, ஆதிபௌதிக நகுலம், ஆதிதைவிக நகுலம், ஆதியான்மீக நகுலம் என மூவகையாம். உலகில் நாம் காணும் கீரி பௌதிக நகுலம். அதற்கு அதிதெய்வமாயிருப்பது தைவிக நகுலம். நகுலமந்திரவடிவாயிருப்பதும் மந்திர செபஞ் செய்பவனுக்கு அவனிடமாய் நின்று அருள்புரிவதும் "ஆதி ஆன்மீக நகுலம்" எனப்படுஞ் சிவசத்தியாகும். யாதொரு தெய்வத்தை வணங்கினாலும், அத்தெய்வமாய் நின்று அருள்வது சிவமே என்பது சைவசமயத் துணிபு. ஆகவே மாந்திரிகனது பாவனையால் அவனிடம் விளங்கிநின்று விடத்தை நீக்குவது ஆதி ஆன்மிக நகுலமாகிய சிவசத்தியே.

### திருவருள் மூவகை ஆன்மாக்களுக்கும் அருளும் முறை

8. அகலத்தரும் அருளை ஆக்கும்; வினை நீக்கும்
சகலர்க்கு வந்தருளும் தான்.

பொழிப்பு: ஆணவம் மாத்திரமுடைய விஞ்ஞானகலரில் பக்குவருக்கு அவர்களது அறிவுக்கறிவாய் நின்று ஆணவமலம் நீக்கும்படியான அருளைச் செய்யும்; பிரளயாகலரில் பக்குவருக்கு உருவத் திருமேனி தாங்கிவந்து கர்மத்தோடு ஆணவத்தை நீக்கியருளும்; சகலரில் பக்குவருக்குக் குருவடிவாக வந்து தீட்சைமுறையால் மும்மலங்களையும் ஒருங்கே நீக்கியருளும்.

குறிப்பு: திருவருள் மூவகை ஆன்மாக்களிலும் பக்குவமுடையவர்களுக்கு எவ்வாறு மலநீக்கமும் மெய்ஞ்ஞான உணர்வும் நல்கி முத்தி பெறச் செய்யுமென்பது கூறப்பட்டது.

### குரு சிவமேயாவர்

9. ஆரறிவார் எல்லாம் அகன்ற நெறியருளும்
பேரறிவான் வாராத பின்.

பொழிப்பு: எல்லா மலப்பற்றுகளும் நீங்கிய நிலையாகிய முத்தி நெறியை உபதேசித்தருளும் பேரருளறிவு வடிவினராகிய சிவபெருமானே (திருவருளே) பக்குவமறிந்து வந்து அருள் புரியாவிடின், யார்தான் முத்திநெறியை அறியவும், ஒழுகவும், முத்திபெறவும் வல்லார்? (ஒருவருமில்லை).

குறிப்பு: எல்லாம் அகன்றநெறி – எல்லாப்பற்றும் நீங்கிய மெய்ஞ் ஞானியர் செல்லும் முத்திநெறி. பேரறிவாளன் – அருள்ஞான உருவினனை இறைவன் – திருவருள். மூவர்க்கும் முறையே அறிவாய் நின்றும் உருவத்திருமேனி காட்டியும் குருவடிவாக வந்தும் அருளாவிடின் எவரும் முத்திநெறியைச் சாரமாட்டார் என்பதாம்.

## குரு இன்றிப் பதிஞானம் தோன்றாது

10. ஞானம் இவனொழிய நண்ணியிடும் நற்கலனல்
பானு ஒழியப் படின்.

பொழிப்பு: நல்ல சூரியகாந்தக்கல் இல்லாமலே சூரியனால் (பஞ்சில்) தீப்பற்றவைக்கப்படுமாயின், குருவின்றியே இறைவனால் (திருவருளால்) சீடனிடம் ஞானம் உதிப்பிக்கப்படும். (எனவே சூரியகாந்தக் கல் நடுநின்று தீயைப் பற்றுவிப்பதுபோலவே குருவும் நடுநின்று ஞானத்தை உதிப்பிப்பன் என்பதாம்).

குறிப்பு: நற்கல் – நல்ல சூரியகாந்தக் கல். அனல் - தீ. பானு– சூரியன். 'பானு ஒழிய' என்பதில் 'ஒழிய' என்பதை 'நற்கல்' என்பதோடு சேர்த்து 'நற்கல் ஒழிய' எனக்கொண்டு பொருள் கொள்க. நற்கல் என்றது கல்லின் இன்றியமையாமையையும் குருவின் இன்றியமையாமையையும் உணர்த்தியது.

இங்கு காட்டிய உவமையும் பொருளும் ஆகியவை ;

| உவமானம் | (உவமேயம்) பொருள் |
|---|---|
| சூரியன் (ஒளி) | சிவம் (திருவருள்) |
| சூரியகாந்தக்கல் | குரு |
| பஞ்சு, தீப்பற்றுதல் | சீடன், ஞானம்பெறல் |

என மும்மூன்று உறுப்புடையனவாகின்றன.



சூரியனுஞ், சூரியகாந்தமும், பஞ்சும் நேர்படும்போதுதான் சூரிய ஒளி சூரியகாந்தத்தினூடு பாய்ந்து பஞ்சை அடைந்து தீயைப் பற்றுவித்துப் பஞ்சைத் தீயே யாக்கிவிடும். அதுபோலவே சிவமும் (திருவருளும்), குருவுஞ், சீடனும் நேர்படும் போதுதான் திருவருள் குருவினூடாகப் பாய்ந்து சீடனையடைந்து ஞானத்தைத் தோற்றுவித்து அச்சீடனை ஞானந்தானே ஆக்கிவிடும். மூன்றும் நேர்படாதவிடத்துத் தீபற்றுவதும், ஞானம் உதிப்பதும் இல்லை. இக்குறள் சகலருக்கு ஞானம் உதிப்பிப்பதற்குக் குருவின் இன்றியமையை வலியுறுத்தி ஏற்றதோர் உவமையால் விளக்கி நிற்கிறது.

எப்படிச் சூரியோதயம் ஒளி கிடைத்தற்கும் இருள் நீக்கத்திற்கும் காரணமோ அப்படியே குருவின் தீட்சை, சீடனிடம் ஞானம் கிடைப்பதற்கும் பாசவிருள் நீங்குதற்கும் காரணமாம். ஆதலால் இக்குறள் ஏழாம் குறளோடு இணைந்து எட்டாம் குறளாக அமைதலே பொருத்தமாகும். மேலே உள்ள எட்டாம் ஒன்பதாம் குறள்கள் மூவகை ஆன்மாக்களும் மெய்யுணர்ந்து முத்தி பெறுவதைக் கூறுவன. அவை ஒன்பதாம் பத்தாம் குறளாய் அமைவதும், முதலேழு குறளும் சகலர் குருமூலம் மெய்யுணர்ந்து வீடு பெறுவது கூறி வருதலால் குருவைப் பற்றிக் கூறும் இதுவும் முந்தியவையோடு சேர்ந்து எட்டாவதாய் இருப்பதே பொருத்தமாம்.

ஏழாவது குறளின் உவமையையும் இதனோடு பொருந்த நோக்குவது விளக்கத்துக்கு ஏற்றது.

| உவமானம் | உவமேயம் (பொருள்) |
|---|---|
| ஆதியான்மிக நகுலம் | சிவம் (திருவருள்) |
| பாவகன் (விடந் தீர்ப்பவன்) | குரு (தீட்சை செய்பவன்) |
| விடந் தீண்டப்பெற்றவன் | பாசபந்தமுற்ற ஆன்மா |
| பரிகாரத்தால் விடந்தீர்தல் | தீட்சையால் பாசம் நீங்கல் |
| பயன்விட வேதனை நீங்கிச் சுகம் பெறல் | பயன் மல நீங்கப் பெற்று சிவானந்தமடைதல் |

இரு உவமை விளக்கங்களும் ஒன்றையொன்று தழுவித் தொடர்புற்றிருப்பதனைக் காண்க.

உ

சிவமயம்

# 12. திருவருட் பாடல்கள்

## திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் தேவாரம்

### திருக்கோணமலைப் பதிகம்

**பிள்ளையார் பாண்டி நாட்டில் சமணரை வாதில் வென்றபின், நெடுமாற பாண்டியரும், மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும் உடன் வரப் பாண்டிநாட்டுத் தலங்களுக்கு யாத்திரை செய்துகொண்டு, திருவிராமேச்சுரத்தை அடைந்து சுவாமி தரிசனஞ் செய்துகொண்டு சிலநாள் எழுந்தருளி இருந்தார். அங்ஙனம் இருக்கும் நாளில், ஆழிசூழ்ந்த ஈழ நாட்டில் இறைவன் எழுந்தருளியிருக்கும் திருக்கோணமலை, திருக்கேதீச்சரம் ஆகிய இரு தலங்களையும் திசைநோக்கித் தொழுது தேவாரப் பதிகங்கள் பாடியருளினார். இத் திருப்பதிகம் மூன்றாந் திருமுறையில் உள்ளது.**

**பண் : புறநீர்மை**

*திருச்சிற்றம்பலம்*

1. நிரைகழ லரவஞ் சிலம்பொலி அலம்பும் நிமலர்நீ றணிதிரு மேனி
வரைகெழு மகளோர் பாகமாப் புணர்ந்த வடிவினர் கொடியணி விடையர்
கரைகெழு சந்துங் காரகிற் பிளவும் அளப்பருங் கனமணி வரன்றிக்
குரைகட லோதம் நித்திலங் கொழிக்குங் கோணமா மலையமர்ந் தாரே.

**பொழிப்பு:** *வீரக்கழலும் சிலம்பும் ஒலிக்கும் திருவடிகளுடைய பரிசுத்தர், திருநீறணிந்த தம் திருமேனியில் மலைமகளாகிய உமா தேவியாரைப் பாகமாகக் கொண்ட கோலத்தினர், இடபமெழுதிய கொடியை உடையவராகிய சிவபெருமான், கரையிலே சந்தனம் அகில் அளவில்லாத மணிகள் ஆகியவற்றை வாரிக்கொண்டுவந்து ஒலிக்கின்ற கடலின் திரைகள் முத்துக்களையும் கொழித்து ஒதுக்குகின்ற திருக்கோணமலையில் எழுந்தருளி இருக்கின்றார்.*



**குறிப்பு:** *நிமலர் – தூயவர், பரிசுத்தர். வரை – மலை. சந்து – சந்தனம். வரன்றுதல் – வாருதல். ஓதம் – திரை. நித்திலம் – முத்து.*

2. கடிதென வந்த கரிதனை உரித்து அவ்வுரி மேனிமேற் போர்ப்பர்
பிடியன நடையாள் பெய்வளை மடந்தை பிறைநுத லவளொடு முடனாய்க்
கொடிதெனக் கதறுங் குரைகடல் சூழ்ந்து கொள்ளமுன் நித்திலஞ் சுமந்து
குடிதனை நெருங்கிப் பெருக்கமாய்த் தோன் றுங் கோணமா மலையமர்ந் தாரே.

**பொழிப்பு:** *வேகமாய் வந்த கயாசுரன் என்னும் யானையை உரித்து அதன் தோலைத் தோளிலே போர்த்தருளியவர், பெண்யானை போலும் நடையும், அணிந்த வளையலும், பிறைபோலும் நெற்றியுமுடைய உமையம்மையோடு கூடத் திருக்கோணமலையில் வீற்றிருக்கின்றார். அம்மலையானது, கொடிதாக ஒலிக்கின்ற கடலானது சூழ்ந்து சேற்றையும், முத்தையும் சுமந்துகொண்டு அயலிலுள்ள குடிகளை நெருக்கிக்கொண்டு பெருக்கமாய்த் தோன்றுவதாகும்.*

**குறிப்பு:** *கரி – யானை – கயாசுரன். உரி—தோல் -உரிக்கப்பட்டது. பிடி – பெண் யானை. நுதல் – நெற்றி. கொள்ளம் – சேறு.* **யானை வடிவாயிருந்த கயாசுரன், தனக்குப் பயந்தோடிய தேவரும் முனிவரும் காசியில் விசுவநாதப்பெருமான் கோயிலில் அடைக்கலம் புகுந்திருக்க அங்கும் அவர்களைக் கொல்லச் சென்றான். அப்போது பெருமான் தேவரைக் காக்கும் பொருட்டு யானையை உதைத்து அதன் தோலை உரித்துப் போர்த்தருளினார்.**

3. பனித்திளந் திங்கள் பைந்தலை நாகம் படர்சடை முடியிடை வைத்தார்
கனித்திளந் துவர்வாய்க் காரிகை பாக மாகமுன் கலந்தவர் மதில்மேல்
தனித்தபே ருருவ விழித்தழல் நாகந் தாங்கிய மேருவெஞ் சிலையாக்
குனித்ததோர் வில்லார் குரைகடல் சூழ்ந்த கோணமா மலையமர்ந் தாரே.

**பொழிப்பு:** *குளிர்ச்சிபொருந்திய இளம்பிறையையும், படம் விரிக்குந் தலையுள்ள பாம்பையும் படர்ந்த சடாமுடியில் வைத்தவரும், கொவ்வைக் கனிபோன்ற மென்மையான சிவந்த வாயுள்ள உமாதேவியைப் பாகத்திலே கலந்திருக்கக் கொண்டவரும், முப்புரங்களின் மேலே போராட ஒப்பற்ற பேருருவம் கோபத்தீ சிதறும் கண்ணுடைய வாசுகி என்னும் பாம்பை நாணாகக் கொண்டு மேரு மலையை வில்லாகும்படி வளைத்துக்கொண்ட வில்லாளருமாகிய சிவபெருமான், ஒலிகடல் சூழ்ந்த திருக்கோணமலையில் அமர்ந்தருளுகின்றார்.*

குறிப்பு: பனி - குளிர், திங்கள் - சந்திரன். பை - படம். கனி - கொவ்வைப்பழம், துவர் - சிவப்பு. காரிகை - பெண் உமை. மதில் - முப்புரம். தனித்த - ஒப்பற்ற. நாகம் - பாம்பு - வாசுகி. குனித்த - வளைத்த. வில்லார் - வில்வீரர்.

4. பழித்திளங் கங்கை சடையிடை வைத்துப் யாங்குடை மதனனைப் பொடியா
விழித்தவன் தேவி வேண்டமுன் கொடுத்த விமலனர் கமலமார் பாதர்
தெழித்துமுன் அரற்றுஞ் செழுங்கடற் றரளஞ் செம்பொனும் இப்பியுஞ் சுமந்து
கொழித்துவன் திரைகள் கரையிடைச் சேர்க்குங் கோணமா மலையமர்ந் தாரே.

பொழிப்பு: கங்கையைச் சடையிலே வைத்தும், மன்மதன் வெந்து பொடியாகும் வண்ணம் நெற்றிக்கண்ணை விழித்துப் பார்த்தும், பின் அவன் மனைவி இரதி வேண்ட மீண்டும் அவனைக் கொடுத்தும் அருளிய விமலரும், தாமரைமலர் போன்ற திருவடியினரும் ஆகிய சிவபெருமான் பேராரவாரமாக ஒலிக்கின்ற கடலின் வலிய திரைகள் முத்தையும் பொன்னையுஞ் சிப்பியையுஞ் சுமந்துகொண்டு வந்து கரையிலே கொழித்துவிடுந் திருக்கோணமலையிலுள்ளரார்.

குறிப்பு: மதனன் - மன்மதன். தேவி - மனைவி - இரதி. விமலர் - மனமில்லாதவர். கமலம் - தாமரை. தரளம் - முத்து. பகீரதன் தவத்துக்குப் பூமியை நோக்கி வேகமாய் வந்த கங்கையை உலகந் தாங்க மாட்டாது அழியுமென்று சிவபெருமான் தம் சடையிலே தாங்கிக்கொண்டு அளவாகச் சிறிது நீரைப் பூமியிற் செல்லவிட்டார். சிவபெருமான் யோக நிலையிலிருந்து குழம்பி உமாதேவியைத் திருமணஞ் செய்யுங் கருத்தினராகும்படி செய்வேனென்று மலரம்புகளை எய்த மன்மதனை, சிவபெருமான் நெற்றிக்கண்ணாற் பார்த்து எரித்துப் பொடியாகச் செய்தார். பின்பு இரதி இரந்து வேண்ட, அவளுக்கு உருவமுடையவனாயும், மற்றவர்களுக்கு உருவிலியாயும் இருக்கும்படி மன்மதனை மீள எழுந்து வரச் செய்தருளினார்.

5. தாயினும் நல்ல தலைவரென் றடியார் தம்மடி போற்றிசைப் பார்கள்
வாயினும் மனத்தும் மருவிநின் றகலா மாண்பினர் காண்பல வேடர்
நோயிலும் பிணியுந் தொழிலர்பால் நீக்கி நுழைதரு நூலினர் ஞாலங்
கோயிலுஞ் சுனையுங் கடலுடன் சூழ்ந்த கோண மா மலையமர்ந் தாரே.



பொழிப்பு: தம்மடியவர்கள் 'தாயினுமினிய தம்பிரான்' என்று தம் பாதங்களைப் போற்ற, அவ்வடியாரது வாயிலும் மனத்திலும் (சொல்லிலும் நினைவிலும்) பொருந்தியிருந்து நீங்காத மாண்புடையவரும், காணும் பல வேடமுடையவரும், தொண்டு செய்யும் தொழிலுடையவர்களை நோய் பிணிகளினின்றும் நீக்கி (அவர்களறிவிலே) நுழையும் வேதம் முதலான நூல்களாயிருப்பவரும் ஆகிய சிவபிரான், பூமியிலே கோயிலும், சுனைகளுங் கடலுஞ் சூழ்ந்துள்ள திருக்கோணமலையில் அமர்ந்துள்ளார்.

---

# திருஞான சம்பந்த மூர்த்தி நாயனர் தேவாரம்

## திருவாலவாய் — திருநீற்றுப் பதிகம்

கூன்பாண்டியன் என்னும் பாண்டிய மன்னனும், நாட்டு மக்களும் சமணம் புகுந்தமை கண்டு, மங்கையர்க்கரசியாரும் குலச்சிறை நாயனரும் மனம் வருந்தி, அதனை அடியார் மூலம் வேதாரணியத்திலிருந்த திருஞான சம்பந்தமூர்த்தி நாயனருக்கு விண்ணப்பித்தனர். நாயனர் அவர் குறை தீர்த்தற்பொருட்டுப் பாண்டிநாட்டுக்கு வந்து, ஒரு மடத்திலே எழுந்தருளினர். அவர் அங்கு எழுந்தருளியிருத்தலைப் பொருத சமணர், மடத்துக்குத் தீயிட்டனர். நாயனர் "செய்யனே" என்றெடுத்து, "அமணர் கொழுவும் சுடர் பையவே சென்று பாண்டியற்காகவே" என்று பாடியருள, அத் தீ பாண்டியன்பால் வெப்புநோயாய்ச் சேர்ந்து வருத்தியது. சமணருடைய மருந்தாலும் மந்திரங்களாலும் நீங்காமல் மேன்மேல் அதிகரித்தது. அதனைத் தீர்த்தருளும்படி மங்கையர்க்கரசியார் நாயனரிடம் விண்ணப்பித்தார். நாயனர் அரண்மனைக்கு எழுந்தருளிப் பாண்டியனுக்கு நீறு சாத்தி இத் திருப்பதிகத்தைப் பாடியருள அவனது வெப்புநோய் நீங்கிற்று. அவனும் நாட்டு மக்களும் சைவ சமய மகிமையை உணர்ந்து சைவசமயிகளாயினர். இப் பதிகம் இரண்டாம் திருமுறையில் உள்ளது.

பண்: காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

1. மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தில் உள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருவால வாயான் திருநீறே

பொழிப்பு: மந்திரமாய் இருப்பதும், தேவர்கள் தங்கள் மேல் அணியப்பெற்றிருப்பதும், அழகாவதும், வணங்கப்படுவதும், சிவாகமத்திலே சிறப்பாகச் சொல்லப்படுவதும், சைவசமய சின்னமாயுள்ளதுந் திருநீறு. இப்பெருமைகளையுடைய இது, சிவந்த பவளம் போன்ற திருவாயினை உடைய உமாதேவியாரை இடப்பக்கத்திலே கொண்ட திருவாலவாய்ப் பெருமானது திருநீறேயாம்.

குறிப்பு: வானவர் – தேவர், சுந்தரம்-அழகு, தந்திரம்-ஆகமம், சமயத்தில் –சைவசமயத்தில், உள்ளது-சின்னமாயுள்ளது, செந்துவர்-சிவந்த பவளம், பங்கன் – பக்கத்திலே கொண்டவர், பங்காக உடையவன், திருஆலவாய் – மதுரையிலுள்ள சிவாலயம். பாண்டியனது வேண்டுகோளின்படி, சிவபெருமான் தமது திருக்கையிலணிந்த சிறு பாம்பினாலே மதுரையின் எல்லைகாட்டிய காரணத்தால் 'ஆலவாய்' என்னும் பெயருடையதாயிற்று. (ஆலவாய் – நஞ்சை வாயிலே உடையது-பாம்பு.)

2. வேதத்தில் உள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு
போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு
ஓதத் தகுவது நீறு உண்மையில் உள்ளது நீறு
சீதப் புனல்வயல் சூழ்ந்த திருவால வாயான் திருநீறே.

பொழிப்பு: வேதத்திலே சிறப்பித்துச் சொல்லப்பெற்று இருப்பதும், கொடிய துன்பங்களை ஒழிப்பதும், மெய்யுணர்வைத் தருவதும், இழிந்த இயல்புகளை நீக்குவதும், யாவராலும் படித்து ஆராய்ந்து உணரத்தக்கதும், உண்மை நூல்களிலே சிறப்பித்துச் சொல்லப்பட்டுள்ளதும் திருநீறு. இப்பெருமைகளை உடைய இது, குளிர்ந்த நீர் வளமுள்ள வயல்களாற் சூழப்பட்ட திருவாலவாயிலே எழுந்தருளிய சிவபெருமானது திருநீறே.

குறிப்பு: வெந்துயர் – கொடிய துன்பம், போதம்—மெய்யுணர்வு, சிவஞானம். புன்மை—இழிந்த செயல்கள்—இழிந்த குணஞ் செயல்கள், ஓதுதல்—படித்துணர்தல், திருநீற்றின் மகிமை யாவரும் உணரவேண்டுவது ஆதலால் 'ஓதத்தகுவது' என்று கூறப்பட்டது. சீதம் – குளிர், புனல் – நீர்.

3. முத்தி தருவது நீறு முனிவர் அணிவது நீறு
சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ இனியது நீறு
சித்தி தருவது நீறு திருவால வாயான் திருநீறே.



பொழிப்பு: முத்தியின்பத்தைத் தருவதும், முனிவர் அணிந்து கொள்வதும், உண்மையாவதும், சிவனடியார் புகழ்ந்துரைப்பதும், பத்தியைத் தருவதும், துதிக்க இன்பம் பயப்பதும், சிறந்த பேறுகளைத் தருவதும் திருநீறு. இத்தகைய பெருமை வாய்ந்த இது, திருவாலவாய்ப் பெருமானது திருநீறே.

குறிப்பு: முத்தி – வீடு பேறு. மும்மலங்களும் அகன்று பேரின்பப் பேறெய்தி நிற்கும் நிலை. தக்கோர் – சிவனடியார், பரவுதல் – துதித்தல், போற்றுதல். சித்தி – சிறந்தபேறு, நற்பேறு.

4. காண இனியது நீறு கவினைத் தருவது நீறு
பேணி அணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு
மாணந் தகைவது நீறு மதியைத் தருவது நீறு
சேணந் தருவது நீறு திருஆல வாயான் திருநீறே.

பொழிப்பு: காணும்போது இன்பம் பயப்பதும், அழகைத் தருவதும், விரும்பித் தரித்துக்கொள்பவர்களுக்குப் பெருமை தருவதும், மாட்சிமையை நீங்காமற் றடுப்பதும், அறிவைத் தருவதும், மேலுலக இன்பத்தைத் தருவதும் திருநீறு. இவ்வியல்புகளையுடைய இது, திருவாலவாய்ப் பெருமானது திருநீறே.

குறிப்பு: கவின்—அழகு, பேணுதல்-விரும்புதல், மதித்தல், பாதுகாத்தல். மாணம் - மாட்சிமை. தகைவது—நீங்காமற் றடுப்பது. மதி—அறிவு. சேணம் (—சேண் + அம்) என்பதில் சேண் – மேலுலகம்; அம்—சாரியை.

5. பூச இனியது நீறு புண்ணிய மாவது நீறு
பேச இனியது நீறு பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்
ஆசை கெடுப்பது நீறு அந்தம தாவது நீறு
தேசம் புகழ்வது நீறு திருவால வாயான் திருநீறே.

பொழிப்பு: தரித்துக்கொள்ள இன்பமளிப்பதும், புண்ணிய வடிவம் ஆவதும், எடுத்துரைப்பதற்கு இனியதாயிருப்பதும், பெரிய தவமுள்ளவர்களுக்கு அவர்களது உலகப்பற்றுக்களை நீக்குவதும், எல்லாப் பொருள்களின் முடிவாயிருப்பதும், உயர்ந்தோராற் புகழப்படுவதும் திருநீறு. இத்தகைய பெருமையுடையது திருவாலவாய்ப் பெருமானது திருநீறே.

குறிப்பு: ஆசை—உலகப்பற்று. திருநீறு இல்லறத்தாருக்குப் புண்ணியப்பயனை இம்மை இன்பங்களைக் கொடுத்து உதவுதலால் 'புண்ணியம் ஆவது' என்றும் துறவறத்தாருக்கு ஆகாத உலகப்பற்றுக்களை

நீக்குதலால் "ஆசை கெடுப்பது" என்றும் கூறப்பட்டது. எல்லாப் பொருள்களும் இதனுருவம் அடைந்து முடிவாகும் இயல்பின ஆதலால் "அந்தமதாவது" என்று கூறப்பட்டது. தேசம் – இடவாகுபெயரால் உயர்ந்தோரைக் குறித்தது.

---

## திருநாவுக்கரசு நாயனார் தேவாரம்

### நமச்சிவாயப் பதிகம்

உலக நிலையாமை கண்டு இளமையிலேயே துறவு பூண்டு சமண சமயப் பெருங் குரவராய்த் தருமசேனர் என்னும் பெயரோடு விளங்கும் நாளில், சிவபிரான் திருவருளாலே தம்மைப் பற்றிய சூலைநோய் நீங்காமை கண்டு, திருவதிகையை அடைந்து, திலகவதியாரிடம் திருநீறு பெற்றுத் தரித்து, "கூற்றாயினவாறு" என்னும் தேவாரம் பாடியருளிச் சூலை நீங்கி, இறைவனே 'நாவுக்கரசன்' என நாமமிடப்பெற்ற திருநாவுக்கரசு சுவாமிகளாலே சமண சமயம் தாழ்வடையப் போகிறதே என்று அஞ்சிய சமண குரவர்களின் சூழ்ச்சிக்காளான பல்லவ மன்னன் அப்பரை அழைப்பித்து அவரைக் கொல்லும் பொருட்டு நீற்றறையிலிட்டும், நஞ்சூட்டியும், யானையை ஏவியும் ஒன்றுஞ் செய்யமுடியாது போகவே, அவரைக் கல்லோடு கட்டிக் கடலிலிடுமாறு பணித்தான். அரசகட்டளை நிறைவேற்றப்பட்டபோது அப்பர் சுவாமிகள் பின்வரும் நமச்சிவாயப் பதிகத்தைப் பாடி யருளினார். அப்போது கல்லே தெப்பமாக மிதக்கக் கட்டுகள் கழன்று போக, மெல்ல மெல்லத் திருப்பாதிரிப் புலியூர் என்னும் திருப்பதியில் கரைசேர்ந்தார். கல்லே தெப்பமாகக் கரைசேர்ந்த நாயனாரைச் சிவனடியார்கள் மகிழ்ச்சியோடும், சிவநாம ஒலியோடும் வரவேற்று வணங்கிப் போற்றினர். இப் பதிகத்தில் திருவருளே வடிவாய் திருவைந்தெழுத்து மந்திரத்தின் சிறப்புச் சொல்லப்படுகிறது. இப்பதிகம் நான்காம் திருமுறையில் உள்ளது.

பண் : காந்தார பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

1. சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே.



பொழிப்பு : ஆருயிர்க்குத் துணைவன் எனச் சொல்லப்படுகின்ற வேதப் பொருளாயுள்ளவனும், ஞானச் சோதிவடிவான தேவனும் ஆகிய சிவபிரானது பொன்போன்ற திருவடிகளை மனம்பொருந்தி அன்பு செய்து கைதொழுது வணங்கினால், அங்ஙனம் வணங்குபவரைக் கல்லையும் துணையாகச் சேர்த்துக் கட்டிக் கடலினுள்ளே விட்டாலும், அமிழ்ந்திவிடாதபடி நல்ல துணையாக நின்று கரைசேர்த்து உய்யும்படி உதவுவது நமச்சிவாய என்னும் திருவைந்தெழுத்தே.

குறிப்பு : வேதியன்–வேதத்தின் உட்பொருளாயவன். பொருந்த - மனம், வாக்குக், காயம் ஒருமுகப்பட்டு.

2. பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை
ஆவினுக் கருங்கலம் அரனஞ் சாடுதல்
கோவினுக் கருங்கலங் கோட்டம் இல்லது
நாவினுக் கருங்கலம் நமச்சி வாயவே.

பொழிப்பு : பூக்களுக்கெல்லாம் சிறப்பாயுள்ளது பொலிவுடைய தாமரை மலர்; பசுவுக்குச் சிறப்புத் தருவது பஞ்ச கவ்வியங்களால் இறைவன் மஞ்சனம் ஆடுதல்; அரசனுக்குச் சிறப்பாவது செங்கோல் கோடாதிருத்தல்; நாவுக்குச் சிறப்பு நமச்சிவாய மந்திரத்தை ஓதுதல்.

குறிப்பு : அருங்கலம் – அணி – சிறப்பு. ஆ – பசு. கோ – அரசன். கோட்டம் – கோடுதல் (நீதி தவறுதல்). நா – நாக்கு.

3. விண்ணுற அடுக்கிய விறகின் வெவ்வழல்
உண்ணிய புகில்அவை ஒன்றும் இல்லையாம்
பண்ணிய உலகினிற் பயின்ற பாவத்தை
நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே.

பொழிப்பு : விண்ணை முட்ட அடுக்கிய விறகுக் குவியலில் கொடிய நெருப்பானது அதை உண்பதற்குச் சென்றால், அவ்விறகில் ஒன்றும் எஞ்சாதபடி எரித்துண்டுவிடும்; அதுபோல நாம் பிறந்து பயின்று வாழும் உலகத்திலே பண்ணிய பாவம் முழுவதையும் (நாம் பஞ்சாட்சர செபஞ் செய்தால்) பொருந்திநின்று எரித்தழிக்க வல்லது அந்த நமச்சிவாய மந்திரமே.

குறிப்பு : வெவ்வழல் – கொடிய தீ, உண்ணிய - உண்பதற்கு, தீ விறகை எஞ்சாதபடி எரிப்பதுபோல நமச்சிவாய மந்திரம் ஓதுவாரது வினைகளை எஞ்சாமல் அழிக்கும்.

4. இடுக்கண்பட் டிருக்கினும் இரந்து யாரையும்
விடுக்கிற் பிரானென்று வினவுவோ மல்லோம்
அடுக்கற்கீழ்க் கிடக்கினும் அருளின் நாமுற்ற
நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சி வாயவே.

பொழிப்பு: நாம் எத்தனை துன்பமுற்றிருக்கும் போதிலும், சிவ பிரானையன்றி, வேறு யாரையும் நம்மை ஆபத்தினின்றும் விடுவிப் பிராக என்று இரந்து கேட்கமாட்டோம். மேலும் ஒருவர் தாமாக வந்து விடுவித்தாராயினும் அவரைப் பிரான்-இறைவன்-என்று நாம் மதிக்கவும் மாட்டோம்; மலையின் கீழே அகப்பட்டு வருந்த நேரிடினும், அருளாலே முன்வந்து, நாமடைந்த வருத்தத்தைத் தணித்து உய்விப்பது நமச்சிவாய மந்திர செபமேயாகும்.

குறிப்பு: இடுக்கண் — துன்பம். விடுக்கில் — விடுவித்தால்; அடுக்கல் — மலை. நடுக்கம் — வருத்தம்,

5. வெந்தநீ றருங்கலம் விரதி கட்கெலாம்
அந்தணர்க் கருங்கலம் அருமறை ஆறங்கம்
திங்களுக் கருங்கலந் திகழும் நீண்முடி
நங்களுக் கருங்கலம் நமச்சி வாயவே.

பொழிப்பு: விரதிகளாகிய முனிவர்களுக்குச் சிறந்த அணியா யுள்ளது சுடப்பட்ட திருநீறாகும்; அந்தணருக்குச் சிறந்த அணி அருமையான நால்வேதமும் ஆறங்கமுமேயாம்; சந்திரனுக்குச் சிறப் புத் தருவது சிவபிரானது நீண்ட சடாமுடியில் அணியப்பெற் றிருத்தல்; சிவனடியேங்களாகிய நமக்குச் சிறந்த அணியாவது நமச்சிவாய மந்திர செபமேயாகும்.

---

## சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம்

### திருக்கேதீச்சரப் பதிகம்

சுந்தரமூர்த்தி நாயனார் தம் தோழராகிய சேரமான்பெருமாள் நாயனாரோடு பாண்டி நாட்டுத் தலயாத்திரை செய்துகொண்டு, திரு விராமேச்சுரத்தை அடைந்து, சுவாமி தரிசனஞ் செய்துகொண்டிருக் கும் நாளில், ஈழ நாட்டுத் திருப்பதியான திருக்கேதீச்சரத்தையும் அங்கிருந்தவாறே தொழுது பதிகம் பாடியருளினார். இப்பதிகம் ஏழாந் திருமுறையில் உள்ளது.



இத்தலம் ஈழத்து வடமேற்குப் பாகத்தில் மன்னார்ப் பகுதியிலுள்ள மாந்தையிலுள்ளது. இத்தலத்தையும் தென்கயிலை என்றும், வாயுதேவன் பறித்தெறிந்த திருக்கயிலைச் சிகரத்தில் ஒன்றுதான் இங்கு வீழ்ந்து இப் பெயரோடு நிலைத்ததென்றும் புராணம் கூறும். இத்தலத்தில் கேதுவும், மகாதுவட்டாவும், அகத்தியரும், இராமரும் பூசித்து அருள் பெற்றனர். கேது பூசித்ததால் கேதீச்சரம் என்றும், மகாதுவட்டா பூசித்ததால் மகா துவட்டாபுரம் என்றும், அப்பெயரே மருவி இன்று மாதோட்டம் - மாந்தை என வழங்குகின்றது என்றும் சொல்வர். மாதோட்டம் விஜயன் முதலிய அரசர்களின் தலைநகராயும், துறைமுகமாயும் விளங்கியதென்பர். அம்மை பெயர் — கௌரி அம்பாள். சுவாமி பெயர் — கேதீச்சுரர்.

பண்: நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

1. நத்தார்படை ஞானன்பசு ஏறிந்நனை கவிழ்வாய்
மத்தம்மத யானைஉரி போர்த்தமண வாளன்
பத்தாகிய தொண்டர்தொழு பாலாவியின் கரைமேல்
செத்தாரெலும் பணிவான்திருக் கேதீச்சரத் தானே.

பொழிப்பு: சங்கைப் படையாகக் கொண்ட ஞானியாகிய விஷ்ணுவையே இடப வாகனமாகக் கொண்டவரும், மதத்தால் நனைந்த கவிழ்ந்த வாயையும், மதத்தால் செருக்கையுங் கொண்ட கயாசுரன் என்னும் யானையை உரித்து அதன் தோலைப் போர்த்த மணவாளரும் ஆகிய சிவபிரான், பற்றுடைய தொண்டர்கள் தொழும் பாலாவித் தீர்த்தத்தை அடுத்துள்ள திருக்கேதீச்சரத்தில் செத்த (பிரமா, விஷ்ணு என்பவர்களின்) எலும்பைப் பூண்டவராய் எழுந் தருளியுள்ளார்.

குறிப்பு: நத்து - சங்கு - பாஞ்சசன்னியம் (விஷ்ணுவின் ஐம்படை களில் ஒன்று), ஞானன் - ஞானி - அறிதுயில் கொள்ளும் விஷ்ணு; பசு - இடபம். மத்தம் - உன்மத்தம், செருக்கு. பத்து - பற்று-அன்பு.

2. சுடுவார்பொடி நீறும்நல்ல துண்டப்பிறை கீளுங்
கடமார்களி யானைஉரி அணிந்தகறைக் கண்டன்
படவேரிடை மடவாளொடு பாலாவியின் கரைமேல்
திடமாவுறை கின்றான்திருக் கேதீச்சரத் தானே.

**பொழிப்பு:** சர்வசங்கார்த்தில் சுடப்பட்டு வெந்த பிரம விஷ்ணுக்களின் சாம்பரும், நல்ல ஒரு கலையாகிய பிறைச்சந்திரனும், கீளுடையும், மதச் செருக்குள்ள யானைத்தோலும் அணிந்த நீலகண்ட ராகிய சிவபிரான், சர்ப்ப படம் போன்ற இடையுடைய கௌரி யம்மையோடும் பாலாவித் தீர்த்தத்தை அடுத்துள்ள திருக்கேதீச் சரத்தில் நிலையாக எழுந்தருளி இருக்கின்றார்.

**குறிப்பு:** உலகம் அழிந்து பிரம விஷ்ணுக்களில் ஒடுங்க, அவர் களையும் அழித்துத் தம்மிடம் ஒடுங்கச் செய்பவர் சிவபிரான். அந்த ஒடுக்கத்தை – லயத்தைக் குறிக்கவே நீற்றை அணிந்தருளினார். கீள் – சிவனடியார் அணியும் ஒருவகை உடை. கறைக்கண்டன் – நஞ்சையுண்டதால் நீலமான கழுத்துடையவர். திடமாய்–உறுதியாய்–நிலையாய்.

3. அங்கம்மொழி அன்னாரவர் அமரர்தொழு தேத்த
வங்கம்மலி கின்றகடல் மாதோட்டநன் னகரில்
பங்கஞ்செய்த பிறைசூடினன் பாலாவியின் கரைமேல்
செங்கண்ணர வசைத்தான்திருக் கேதீச்சரத் தானே.

**பொழிப்பு:** மரக்கலங்கள் வந்து நிறைகின்ற கடலைச் சார்ந்துள்ள மாதோட்ட நகரிலே பாலாவியை அடுத்துள்ள திருக்கேதீச்சரத்தில் வேத வேதாங்கங்களை ஓதும் அவ்வியல்பு உடைய அந்தணரும் தேவரும் தொழுது துதிக்க, தேய்ந்த பிறையைச் சூடியவரும் சிவந்த கண்ணுள்ள பாம்பை ஆபரணமாக அணிந்தவருமாகிய சிவபிரான் எழுந்தருளியுள்ளார்.

**குறிப்பு:** அங்கம் – வேதாங்கங்கள். மொழிதல்–ஓதுதல். வங்கம்–மரக்கலம். பங்கஞ் செய்த – (தக்கன் சாபத்தாலே) தேய்ந்த. அரவு – பாம்பு. அசைத்தல் – அணிதல். தக்கன் தன் புதல்வியரில் இருபத் தெழுவரைச் சந்திரனுக்கு மணஞ் செய்துகொடுத்து யாவரையும் சமமாய் நடத்தும்படி பணித்தான். சந்திரன் உரோகிணி என்பவ ளிடம் அதிக பிரியம் கொண்டிருந்தான். இதனை அறிந்த தக்கன், கலைகள் தேய்ந்து அழியும்படி சந்திரனுக்குச் சாபமிட்டான். கலை பதினைந்துந் தேயப்பெற்று ஒரு கலையோடு சந்திரன் சிவபிரானிடந் தஞ்சமடைந்தான். அவர் அவ்வொரு கலையைத் தம் சடையிலணிந்து வளர்ந்து வருமாறும், மீண்டுஞ் சாபத்தின்படி தேயுமாறும், பின்னும் வளர்வதும் தேய்வதுமாய் இருக்குமாறும் அருள் செய்தார். இனி ‘அங்கம் மொழி யன்னாரவர்’ என்பதற்கு ‘அங்கம் மொழி யன்னாரரவு’ எனப் பாடங் கொண்டு, ‘அங்கம் வெட்டுண்டு ஒழியப்பெற்ற அந்தக் கேதுவாகிய அரவும்’ எனப் பொருள் கூறுவதும் உண்டு.



தேவார காலத்தில் திருக்கேதீச்சரம் பல கோவில்களைக் கொண்ட கோயிற் பட்டணமாகவும், மாதோட்டம் பிரசித்தி பெற்ற பெருந் துறைமுகமாகவும் விளங்கியிருந்தன.

4. கரியகறைக் கண்டன்நல்ல கண்மேலொரு கண்ணன்
வரியசிறை வண்டியாழ்செயும் மாநோட்டநன் னகரில்
பரியதிரை எறியாவரு பாலாவியின் கரைமேல்
தெரியும்மறை வல்லான்திருக் கேதீச்சரத் தானே.

**பொழிப்பு:** கரிய நஞ்சேறிய கண்டரும், நல்ல கண்களுக்கு மேலும் ஒரு (நெற்றி) கண்ணை உடையவரும், ஆய்ந்து தெளியப் படும் வேதங்களைப் பாட வல்லவரும் ஆகிய சிவபிரான், வரி பொருந்திய சிறகுள்ள வண்டுகள் யாழிசை போல ஒலிக்கும் சோலைசு ளுள்ள மாதோட்ட நகரிலே, பெரிய திரைகளை வீசுகின்ற பாலாவித் தீர்த்தக் கரையை அடுத்துள்ள திருக்கேதீச்சரத்தில் வீற்றிருக்கின்றார்.

**குறிப்பு:** பிணி மூப்புச் சாக்காட்டை நீக்கி, அமரத்துவம் தரும் அமுதம் பெற விரும்பிய சூரரும், அசுரரும் பாற்கடலைக் கடைந்தபொழுது எழுந்த ஆலகால விடத்தைக் கண்டு அஞ்சிச் சிவபிரானிடம் சரணடைந்தனர். உலகம் முழுவதையும் அழிக்க வல்ல அவ்விடத்தை இறைவன் தாமே உண்டு திருமிடற்றில் நிறுத்தி, எல்லா உயிரையும் அழியாது காத்தருளினர். அதனால் அவர் **கறைக் கண்டர்** எனப்படுவர்.

5. அங்கத்துறு நோய்கள்அடி யார்மேல்ஒழித் தருளி
வங்கம்மலி கின்றகடல் மாதோட்டநன் னகரில்
பங்கஞ்செய்த மடவாளொடு பாலாவியின் கரைமேல்
தெங்கம்பொழில் சூழ்ந்ததிருக் கேதீச்சரத் தானே.

**பொழிப்பு:** மரக்கலங்கள் தங்கும் கடலைச் சார்ந்துள்ள மாதோட்ட நகரிலே, பாலாவித் தீர்த்தத்தை யடுத்திருக்கும் தென்னை மரச் சோலையாலே சூழப்பெற்ற திருக்கேதீச்சரத்தில், தம்மை வழி படும் அடியவர்களது அங்கங்களில் வரும் நோய்களைத் தீர்த்து அருள்பவராய், பாதியுடம்பைத் தமதாக்கிய கௌரியம்மையோடும் சிவபிரான் எழுந்தருளியுள்ளார்.

**குறிப்பு:** அர்த்த நாரீசுர வடிவில் வலப்பாகம் சிவமும் இடப் பாகம் சத்தியுமாயிருக்கும். பங்கம் – பாதி.

# திருவெம்பாவை

## மார்கழி நீராடலும் பாவை நோன்பும்

சங்ககாலந் தொடக்கந் தமிழகத்தில் மார்கழி நீராடும் வழக்கம் நிகழ்ந்து வருகிறது. இதையே தை நீராடல் என்றும் கூறுவர். இது முன்னை நாளில் சமூக வழக்கமாயிருந்து, காலகதியில் ஒரு சமயச் சடங்கும் விழாவுமாக வளர்ச்சி பெற்றதாக ஆராய்ச்சியாளர் கூறுவர். சமயப் பெரியார்கள், மக்களுடைய வாழ்க்கை நிகழ்ச்சிகள் யாவும் சமயத்தோடு இணைந்து போகும்படி அமைவதே, அவர்களை நல்ல சமய வாழ்வில் வளர்ந்தோங்கச் செய்யுமெனக் கருதினர். அதனாலே பல சமூகப் பழக்க வழக்கங்களையெல்லாம் சமய அடிப்படையோடு இணைத்து, சமயப்பண்டிகைகளும், விழாக்களும் நோன்புகளுமாக அமைத்துவிட்டனர் என்பது ஆராய்ச்சியாளர் கருத்தாகும்.

மார்கழி நீராடலோடு, கன்னிப் பெண்கள் மண்ணாலே பாவை அமைத்து வழிபட்டு நோன்புசெய்யும் முறையும் இருந்ததாகப் பண்டைய இலக்கியங்கள் கூறுகின்றன. சைவம், வைணவம், சமணம் முதலியனவாகத் தமிழ்நாட்டில் நிலவிய பல சமய இலக்கியங்களிலும், கன்னியர் மார்கழி நீராடிப் பாவை நோன்பு புரிந்த செய்திகள் காணப்படுகின்றன.

கன்னியர் மார்கழித் திங்களில் வைகறைப்போதில் துயிலெழுந்து தோழியரையும் எழுப்பி அழைத்துக்கொண்டு, இறைவன் சீர்பாடிச் சென்று, பெரிய நீர்நிலையை அடைந்து நீராடி, ஈரமண்ணாலே பாவை செய்து வழிபட்டு வருவது வழக்கம். இந்த நோன்பிலே தாம் விரும்பிய நல்ல கணவரை அடையவேண்டும்; அவரோடு சேர்ந்து இறைபணி புரியவேண்டும்; பருவம் மாறாது மழை பொழியவேண்டும்; நாடு செழிக்கவேண்டும்; மக்கள் குறையின்றி நிறைவுடன் வாழவேண்டும் என வேண்டுதல் செய்வர்.

## திருவெம்பாவை அருளப்பெற்றமை

மேற்குறித்தவாறு மார்கழி நீராடச் செல்லும் கன்னியர் செயலைக் கண்ட மாணிக்கவாசக சுவாமிகள், அக்கன்னியர் துயிலெழுப்பும் போதும், நீராடும்போதும் உரைத்தவற்றைக் கருவாகக் கொண்டு, அவர்களே பாடிய பாவனையில் திருவெம்பாவை என்னும் இந்த அருட்பாக்களை அருளிச்செய்தார். எட்டாந் திருமுறையாகிய திருவாசகப் பாடலின் ஒரு பகுதியாயமைந்த இது திருவண்ணாமலையில் அருளப்பெற்றதென்பர்.



தத்துவப்பொருள்; மனிதருக்கு ஓர் ஆண்டு, தேவருக்கு ஒரு நாள். அந்த நாளின் வைகறை மார்கழி. உதய காலம் தை. நவசத்திகளும் வைகறையிலே துயிலெழுந்து நீராடிப் பராசத்தியை வியந்து பாடியதாக அமைந்தது திருவெம்பாவை என்பர் தத்துவ ஞானியர்.

3. முத்தன்ன வெண்ணகையாய் முன்வந்தெதிரெழுந்தென்
அத்தன் ஆனந்தன் அமுதனென் றள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய் வந்துன் கடைதிறவாய்
பத்துடையீர் ஈசன் பழஅடியீர் பாங்குடையீர்
புத்தடியோம் புன்மைதீர்த் தாட்கொண்டாற் பொல்லாதோ
எத்தோநின் அன்புடைமை எல்லோம் அறியோமோ
சித்தம் அழகியார் பாடாரோ நஞ்சிவனை
இத்தனையும் வேண்டும் எமக்கேலோர் எம்பாவாய்.

பொழிப்புரை: முத்துப் போலும் வெண்மையான பற்களை உடைய பெண்ணே! முன்னேயெல்லாம் நாங்கள் எழுவதற்கு முன்னரே விழித்தெழுந்து வந்து, என் தந்தை என்றும், இன்ப வடிவினன் என்றும், அமுதம் போன்றவன் என்றும் வாயூறி இனிக்கப் பேசுவாய், (இன்று நாங்கள் அழைத்தும்) எழுந்து வந்து உன் பள்ளியறையின் வாயிற் கதவைத் திறக்கின்றாயில்லையே. (என்று தோழிப் பெண்கள் கூற, துயில் நீத்த பெண் கூறுவது) இறைவனிடத்துப் பேரன்பு உடையீர், இறைவனின் பழைய தொண்டர்களே, இறைவனிடத்தும் எவ்விடத்தும் மிக்க உரிமை உடையீர், புதிய அடியவர்களாகிய எங்களது குற்றத்தை நீக்கி ஆட்கொண்டால் தீங்காகுமோ? (இதைக் கேட்ட தோழிப் பெண்கள் கூறுவது) உனது அன்புடைமை வேறு எதுவாகும்? நாங்கள் அதனை அறியமாட்டோமா? மனத் தூய்மை உடையவர்கள் நமது சிவபெருமானைப் புகழ்ந்து பாடாமலிருப்பார்களோ? அழைக்க வந்த எங்களுக்கு இவ்வளவும் வேண்டியதே! எமது கண் பாவை போன்றவளே, நாம் சொல்வதை ஏற்பாயாக! ஆராய்ந்து உணர்வாயாக,

குறிப்பு: 'முன் எழுந்து எதிர்வந்து' என இயைத்துப் பொருள் கொள்க. அள்ளூறுதல் - வாயூறுதல் – உள்ளங் களித்தல், கடை - வாயில் கதவு, பத்து–பேரன்பு. பாங்கு-தகுதி. புத்தடியோம் - புதிய அடியேங்கள். எத்து – எத்தன்மையது, அழகியார் - தூயார். நேற்றுத்தான் பழ அடியாள் போல் முன்னெழுந்து வந்து தம்மை எழுப்பியவள், இன்று தன்னைப் புத்தடியாள் என்றும், தம்மைப் பழ அடியார் என்றும் நகையாடுகிறாள் என நினைந்து, இத்தனையும் வேண்டும் நமக்கு என்றனர்.

5. மாலறியா நான்முகனுங் காணா மலையினைநாம்
போலறிவோம் என்றுள்ள பொக்கங்க ளேபேசும்
பாலூறு தேன்வாய்ப் படிறீ கடைதிறவாய்
ஞாலமே விண்ணே பிறவே அறிவரியான்
கோலமும் நம்மையாட் கொண்டருளிக் கோதாட்டுஞ்
சீலமும் பாடிச் சிவனே சிவனேயென்
றோல மிடினும் உணராய் உணராய்காண்
ஏலக் குழலி பரிசேலோர் எம்பாவாய்.

**பொழிப்புரை:** மயிர்ச் சாந்தணிந்த கூந்தலை உடைய பெண்ணே! திருமால் அறியாத **திருவடியையும்**, பிரமா அறியாத **திருமுடியையும்** உடைய மலைபோலும் பேரொளிப் பிழம்பாய் நின்ற இறைவனை, நாம் அறியமுடியுமென்று நினைக்கும்படி வேடிக்கையாகப் பொய்களையே பாலோடு சேர்ந்த தேன்போல இனிமை தோன்ற வாயாற் பேசும் வஞ்சகீ! கதவைத் திறப்பாயாக; இவ்வுலகினரும் வானுலகினரும் பிற உலகினரும் அறிவதற்கு அரியவனுடைய திருமேனியையும், எங்களை அடிமையாகக்கொண்டு குற்றங்களைந்து சீர்செய்யும் பெருங் குணத்தையும் வியந்து பாடி **சிவபெருமானே, சிவபெருமானே** என்று சரணடையும் ஓலக் குரலெழுப்பியும் நீ அறிந்தாயில்லை; துயிலுணர்ந் தாயுமில்லை. எமது கண்பாவை போன்றவளே, இதுவோ உன்னியல்பு. நாம் சொல்வதை ஏற்பாயாக;' ஆராய்ந்து உணர்வாயாக.

**குறிப்பு:** மால்-திருமால். நான்முகன்-பிரமா. போல் – அசை. பொக்கம்-வாய். படிறீ – வஞ்சகீ (விளி). ஞாலம், விண், பிற (உலகு)-ஆகுபெயர்களாய். அவ்வவ்வுலகினரைக் குறித்தன. கோதாட்டுதல்-குற்றங் களைந்து குணமுடையராக்குதல். ஓலம் – அபயக் குரல்.

8. கோழி சிலம்பச் சிலம்புங் குருகெங்கும்
ஏழில் இயம்ப இயம்பும்வெண் சங்கெங்குங்
கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கருணை
கேழில் விழுப்பொருள்கள் பாடினோங் கேட்டிலையோ
வாழியீ தென்ன உறக்கமோ வாய்திறவாய்
ஆழியான் அன்புடைமை ஆமாறும் இவ்வாறோ
ஊழி முதல்வனாய் நின்ற ஒருவனை
ஏழைபங் காளனையே பாடேலோர் எம்பாவாய்.

**பொழிப்புரை:** கோழி கூவ எங்கும் காக்கை முதலிய பறவைகள் ஓசை எழுப்புகின்றன; நாதசுரம் இசைக்க எவ்விடத்திலும் வெண்சங்குகள் ஒலிக்கின்றன; ஒப்பற்ற மேலான ஒளிவடிவினனும் ஒப் பற்ற மேலான அருளுடையவனும் ஆகிய சிவபெருமானது, ஒப்பற்ற சிறந்த புகழமைந்த வேதப் பொருள்களைப் பாடினோம்; அவற்றை நீ கேட்கவில்லையோ? நீ நன்றாக வாழ்வாய்; இது எத்தகையதான தூக் கமோ தெரியவில்லை; வாயைத் திறக்கின்றாயில்லையே; சக்கரப் படை யாளியாகிய திருமால் சிறந்த சிவபக்தன் எனப்படுவதும் இவ்வண்ணந் தானோ? சர்வசங்கார காலமான பேரூழியில் அழிவற்ற தலைவனாய் நிற்கின்ற ஒருவனும், உமையம்மையை ஒரு பாகத்திலுடையவனும் ஆகிய சிவபெருமானையே, இனியாவது பாடுவாயாக; எமது கண் பாவை போன்றவளே நாம் சொல்வதை ஏற்பாயாக; ஆராய்ந்து உணர்வாயாக.



**குறிப்பு:** ஏழில் – ஏழு துளைகளையுடைய. வாத்தியம் – நாதசுரம். கேழ்இல்-ஒப்பில்லாத. திருமாலானவர் பாற்கடலிலே பாம்பணைமீது என்றும் அறிதுயில் கொள்பவர். சிறந்த சிவபத்தராக மதிக்கப்படுபவர். உறங்குகின்ற திருமால் சிறந்த சிவபக்தரானவாறு, நீயும் உறங்கிக் கிடப்பதால் சிறந்த சிவபத்தையாகிவிடலாமென எண்ணுகின்றாயா? என்று நகையாடிக் கூறினர். ஏழை-உமையவள். பங்காளன் – பாகத்தி லுடையவன். ஏழைபங்காளன் – ஏழை எளியவர்கள் பக்கத்தில் துணை நிற்பவன்.

11. மொய்யார் தடம்பொய்கை புக்கு முகேரென்னக்
கையாற் குடைந்து குடைந்துன் கழல்பாடி
ஐயா வழியடியோம் வாழ்ந்தோங்காண் ஆரழல்போல்
செய்யாவெண் ணீறாடி செல்வா சிறுமருங்குல்
மையார் தடங்கண் மடந்தை மணவாளா
ஐயா நீயாட்கொண் டருளும் விளையாட்டின்
உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்
எய்யாமற் காப்பாய் எமையேலோர் எம்பாவாய்.

**பொழிப்புரை:** தலைவனே, நிறைந்த நெருப்புப்போலும் செம்மை நிறம் உடை வனே, வெண்மையான திருநீற்றைத் திருமேனி முழுவ தும் அணிந்தவனே; பேரின்பமாகிய பெருஞ்செல்வம் உடையவனே, சிறிய இடையும் மை பொருந்திய நெடிய கண்களும் உள்ள உமா தேவியாரின் கணவனே, வண்டுகள் நிறைந்த அகன்ற தடாகத்திலே புகுந்து, ''முகேர்'' என்னும் ஒலி எழும்படி கையினால் நீரை அளைந்து முழுகி, உன் திருவடிகளைப் புகழ்ந்து பாடி, உன் பரம்பரை அடிமை களாக நாங்கள் வாழ்ந்தோம்: அதனை நீ அறிவாய்; ஆண்டவனாகிய நீ ஆட்கொண்டருளும் (ஐந்தொழிலாகிய) திருவிளையாட்டினாலே, உய்திபெறுகின்றவர்கள் உய்யும் வகை எல்லாவற்றாலும் நாமும்

உய்ந்துவிட்டோம்; இனி நாங்கள் (பிறவி வழியே சென்று) இளைத்து விடாதபடி எங்களைக் காத்தருள்வாயாக. எமது கண்பாவை போன்றவளே (இப்படியாக) நாம் கூறுவதை ஏற்று ஆராய்ந்து உணர்ந்து கொள்வாயாக.

குறிப்பு: மொய் - வண்டுகள் மொய்க்கின்ற. பொய்கை - தடாகம். முகேர் – நீராடும்போது எழும் ஒலிக் குறிப்பு. குடைந்து குடைந்து – மூழ்கி (எழுந்து) மூழ்கி. (கையிரண்டையும் தலைமீது குவித்துப் பிடித்துத் தலையை நீருள் முழுகுமாறு செலுத்தி நீராடுவதைக் குறிப்பிட்டது.) வழியடியோம் – வாழையடி வாழைபோல மரபுவழி மாறாது வந்த அடியேங்கள், இறைவன் திருவிளையாட்டாகச் செய்யும் ஐந்தொழிலால் ஆன்மாக்கள் கீழான பிறவிகளைக் கடந்து மேலான மானுடப் பிறவி யெடுத்து அதிலும் சிறு தெய்வங்களை வழிபடும் புறச்சமயங்களைக் கடந்து சைவராய், அந்த நிலையிலும் பத்தி சிரத்தையோடு சிவதொண்டு புரிபவராய் வருதல் அரிதினும் அரிது. ஆதலால் உய்ந்தோம் என்றார்.

17. செங்க ணவன்பால் திசைமுகன்பால் தேவர்கள்பால்
எங்கும் இலாததோர் இன்பம்நம் பாலதாக்
கொங்குண் கருங்குழலி நந்தம்மைக் கோதாட்டி
இங்குநம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச்
செங்கமலப் பொற்பாதந் தந்தருளுஞ் சேவகனை
அங்கண் அரசை அடியோங்கட் காரமுதை
நங்கள் பெருமானைப் பாடி நலந்திகழப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய்.

பொழிப்புரை: வாசனையை இயற்கையாகக் கொண்ட கரிய கூந்தலை உடையவளே, சிவந்த கண்களையுடைய திருமாலிடத்தும், நான்முகனிடத்தும், ஏனைய தேவர்களிடத்தும், வேறு எவ்விடத்தும், இல்லாததாகிய ஒப்பற்ற பேரின்பம் நம்மைச் சேரும்படி, எங்களைக் குற்றங் களைந்து தூய்மை செய்து, இவ்வுலகில் எமது வீடுகள் தோறும் எழுந்தருளி வந்து, தனது செந்தாமரை மலர் போன்ற அழகிய திருவடிகளைத் தந்தருளுகின்ற காவலனை, அழகிய அருள் நோக்கமுடைய இறைவனை, அடிமைகளாக்கிய எமக்குக் கிடைத்தற்கரிய அமுதாக உள்ளவனை, எம்முடைய தலைவனை, புகழ்ந்து பாடி, நன்மை சிறந்து விளங்கும்படி தாமரைத் தடாகத்திலே உள்ள புதுப் புனலிற் குதித்து முழுகுவோமாக; எமது கண் பாவை போன்றவளே, நாம் சொல்வதை ஏற்று ஆராய்ந்து உணர்ந்து கொள்வாயாக.

குறிப்பு: செங்கண்ணவன் – திருமால், திசைமுகன் — நான்முகன், பிரமா. கொங்கு – வாசனை. சேவகன் – தலைவன் - காவலன்.

# கருவூர்த்தேவர் அருளிச்செய்த திருவிசைப்பா

திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்னும் அருட்பாக்கள் ஒன்பதாந் திருமுறையாக வகுக்கப்பட்டுள்ளன. சிவபெருமானது சிறந்த பொருள் சேர் புகழைக் கூறும் அருட்பா, 'திருவிசைப்பா' எனப்படும். தெய்வத் தன்மை பொருந்திய இசைப்பாடல்கள் என்று பொருள் கொள்வதும் உண்டு. திருவிசைப்பாவை அருளிச்செய்தோர், சேந்தனார், கருவூர்த் தேவர், பூந்துருத்திநம்பி, காடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார், புருடோத்தமநம்பி, சேதிராயர், திருமாளிகைத்தேவர் என்போராவர்.

பின்வரும் திருவிசைப்பா கருவூர்த்தேவர் அருளிச்செய்த திருவிசைப்பாத் திருப்பதிகத்தில் மூன்றாம் பாடலாய் இருப்பது; கங்கை கொண்ட சோழேச்சரத்தில் எழுந்தருளிய பெருமானைப் பற்றிக் கூறுவது.

கங்கை கொண்ட சோழேச்சரம் இராசராச சோழன் மகனான இராசேந்திரனாற் கட்டப்பட்டது. கருவூர்த்தேவர் இவ்வரசன் காலத்தில் (பத்தாம் நூற்றாண்டில்) வாழ்ந்தவர்.

பண்: பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

அற்புதத் தெய்வம் இதனின்மற் றுண்டே
அன்பொடு தன்னைஅஞ் செழுத்தின்
சொற்பதத் துள்வைத் துள்ளம் அள்ளூறுந்
தொண்டருக் கெண்டிசைக் கனகம்
பற்பதக் குவையும் பைம்பொன்மா ளிகையும்
பவளவா யவர்பணை முலையும்
கற்பகப் பொழிலும் முழுதுமாங் கங்கை
கொண்டசோ ழேச்சரத் தானே.

திருச்சிற்றம்பலம்

பொழிப்புரை: கங்கை கொண்ட சோழேச்சரத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் ஆகிய தெய்வம், தன்னைத் திருவைந்தெழுத்தாகிய சொல்லினிடத்திலே வைத்துத் தியானித்து ஓதி மனம் உவக்கின்ற மெய்யன்பர்களுக்கு எட்டுத் திசைகளிலும் பல பொற்குவியல்களும், பசிய பொன்போலும் சிறப்புடைய மாளிகைகளும், பவளம் போலும் வாயுடைய இல்லாளது நெஞ்சகத்தைப் பொருந்தும் இன்ப

மும், கற்பகச் சோலையில் வாழும் இன்பமும் ஆகிய எல்லாப் பேறு களுமாகப் பொருந்தி நின்றுதவும். ஆதலினால், இந்தத் தெய்வத் திலும் மேலான தெய்வம் வேறு (உண்டோ) இல்லை.

**குறிப்பு:** உண்டே – இல்லை என்றபடி. அஞ்செழுத்து-திருவைந் தெழுத்து. சொற்பதத்துள் – சொல்லிடத்தில். சொற்பதத்துள் வைத்து அள்ளூறுதலாவது, இறைவனது அருளியல்புகளையும் அருட் செயல்களையுந் திருவைந்தெழுத்திற் பொருந்திப் பொருளுணர்ந்து ஓதி மகிழுதலாம். கனகம் – பொன்.

### சேந்தனார் அருளிச்செய்த

## திருப்பல்லாண்டு

இறைவனிடம் பேரன்பு கொண்டு பெரும்பேறு அடைந்த மகிழ்ச்சியால் அந்தம் இல்லாத அப்பெருமானை **'பல ஆண்டுகள் வாழ்க' என மெய்யடியார்கள் வாழ்த்துவர்.** அங்ஙனம் வாழ்த்திக் கூறும் அருட்பா திருப்பல்லாண்டு எனப்படும்.

திருப்பல்லாண்டுத் திருப்பதிகம் பாடியருளியவர் சேந்தனார் ஒருவரே. அது **சிதம்பரத் தேர்த்திருவிழாவிலே ஓடாது நின்ற தேரை ஓடச்செய்யும் பொருட்டுப் பாடியருளப்பட்டது.**

பின்வரும் திருப்பல்லாண்டு அத்திருப்பதிகத்திற் பன்னிரண்டாம் பாடலாய் உள்ளது.

**பண்: பஞ்சமம்**

திருச்சிற்றம்பலம்

ஆரார் வந்தார் அமரர் குழாத்தில்
அணியுடை ஆதிரை நாள்
நாரா யணனொடு நான்முகன் அங்கி
இரவியும் இந்திரனுந்
தேரார் வீதியிற் றேவர் குழாங்கள்
திசையனைத் தும்நிறைந்து
பாரார் தொல்புகழ் பாடியு மாடியும்
பல்லாண்டு கூறுதுமே.

திருச்சிற்றம்பலம்



**பொழிப்புரை:** எங்கும் அழகு பொலிகின்ற திருவாதிரை நாளிலே (சிதம்பரத்துக்கு) தேவர் கூட்டத்தில் யார் யார் வந்தார்கள்? திருமாலுடன் பிரமன், அக்கினிதேவன், சூரியன், இந்திரன் முதலான தேவர் கூட்டத்தினர் வந்தனர்; தேரோடும் வீதியிலே எல்லாத் திசைகளிலும் நிறைந்து நிற்கின்றனர். நாமும் அவர்களுடன் சேர்ந்து பூமி முழுவதும் நிறைந்த இறைவனது பழைமையான புகழைப் பாடியும், ஆனந்தக் கூத்தாடியும் அவ்விறைவன் பல்லாண்டு வாழ்க என்று வாழ்த்துக் கூறுவோமாக.

**குறிப்பு:** ஆர் ஆர்-யார்யார். அமரர் குழாம்-தேவர் கூட்டம். அணிஉடை-அழகு உடைய. ஆதிரைநாள்-திருவாதிரைநாள். நாராயணன் – திருமால், அங்கி-அக்கினிதேவன். இரவி-சூரியன், தேர் ஆர் வீதி-தேர் ஓடும் வீதி. நிறைந்து-நிறைந்து நிற்கின்றார்கள் (என வினை முடிவு வருவிக்கப்பட்டது) பாரார் (பார்+ஆர்)-பூமியில் நிறைந்த. ஆடுதல்-ஆனந்தக் கூத்தாடுதல். கூறுதும்-கூறுவோம்.

## திருமந்திரம்

அன்புஞ் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே.

**பொழிப்புரை:** அன்பாகிய திருவருளும், இன்பாகிய சிவனும் மணியும் ஒளியும்போல் ஒன்றே. அவற்றை இருவேறு பொருள்கள் என்று கூறுவார் மெய்யுணர்வு கைவரப்பெறாதார். மெய்ம்மையான் நோக்கின் அன்பாகிய திருவருளே இன்பமாகிய சிவனுக்குத் திருமேனியாகும். அம்முறையான் அன்பே சிவமாகும். இவ்வுண்மையினையும் எவரும் உணர்கிலர். அன்பே சிவம் என்னும் உண்மையினை அருளால் அனைவரும் அறிந்த பின், தாம் இடையறாது திருவடிக்கண் வைக்கும் அன்பாகிய வித்தே சிவமாய் விளைந்து இன்பாய்க் கனிந்து அவ்வன்புடையார்க்கு என்றும் பொன்றாப் பேரின்ப நுகர்வாகும். அவ்வுண்மை ''சிவமாய் அமர்ந்திருந்தார்'' என்னும் இம்மறைமொழியான் உணரலாம்.

**குறிப்பு:** அன்பும் – அன்பாகிய திருவருளும்; சிவமும் – இன்பாகிய சிவனும்; இரண்டென்பர்-இருவேறு பொருள்கள் என்று கூறுவர், அறிவிலார்-மெய்யுணர்வு கைவரப்பெறாதார்; அன்பே சிவமாவது-அன்பாகியதிருவருளே இன்பாகிய சிவனுக்குத் திருமேனியாகும் என்பதை; ஆரும் அறிகிலார்-எவரும் உணர்கிலர்; அன்பே சிவமாவது–அன்பே

சிவம் என்னும் உண்மையினை; ஆரும் அறிந்தபின்—அனைவரும் அறிந்த பின்பு: அன்பே சிவமாய்—அன்பாகிய வித்தே சிவமாய் விளைந்த; அமர்ந் திருந்தார்—அவ்வுண்மை சிவமாய் அமர்ந்திருந்தார்.

## பன்னிரண்டாந் திருமுறை

## பெரிய புராணம்

**நா**யன்மாரது திருச்சரிதையைக் கூறும் **திருத்தொண்டர்புராணம்** எல்லாப் புராணங்களிலும் சிறப்பு மிக்கது. ஆதலால் அது, **பெரிய புராணம்** என வழங்கும்.

பெரிய புராணத்தை அருளிச்செய்தவர் **சேக்கிழார் சுவாமிகள்.** இவர் அநபாய சோழனின் முதன் மந்திரியாய் இருந்தவர்; அவ்னிடத்திலே '**உத்தம சோழப் பல்லவன்**' என்னும் வரிசைப் பெயரும், திருத்தொண்டர் புராணத்தை அருளிச்செய்த காரணத்தால் '**தொண்டர்சீர் பரவுவார்**' என்னும் சிறப்புப் பெயரும் பெற்றவர்.

பின்வரும் புராணம் திருஞானசம்பந்தமூர்த்திநாயனரது திருச் சரிதையில் உள்ளது. அவ்ர் பெற்ற ஞானத்தைப்பற்றிக் கூறுவது இஃதாகும்.

சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினில்ஓங் கியஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில்.

**பொழிப்புரை:** வைதிக சைவநெறி காட்டும் தவங்களை நிலைபெற வைத்தமையால் அத்தவங்களுக்கு முதல்வரான ஆளுடைய பிள்ளையார், சிவபெருமானது திருவடியையே தியானிக்கும் (பேரின்ப) செல்வம் மிகுந்த (பரஞானமான) சிவ்ஞானத்தையும், பிறவித் துன்பத்தை முற்றுக நீக்குகின்ற இயல்பினுற் சிறந்த அபரஞானத்தையும் ஒப்பு இல்லாத அறுபத்துநான்கு கலை ஞானத்தையும், உண்மைப் பொருளை உணர்வதற்கு எற்ற அரிய துணையான வியாகரணம், தருக்கம், மீமாம்சை முதலிய கருவி நூல்களால் உண்டாகும் ஞானத்தையும், உமையம்மையாரிடத்தில் ஞானப்பாலுண்ட அப்பொழுதே உணர்ந்தருளினர்.

**குறிப்பு:** திரு—**செல்வம், பேரின்பச் செல்வம். சிவபெருமானது திருவடியை உள்ளபடி தியானித்தலே சிவஞானமாம். ஆதலின், "சிவனடியே சிந்திக்குஞ் சிவஞானம்" என்றும், அந்தச் சிவஞானம் வளர்ந்து கொண்டேயிருக்கும் பேரின்பச் செல்வத்தையுடையது ஆதலால், "திருப் பெருகு சிவஞானம்" என்றும் கொள்ளப்பட்டது. பவம்—பிறப்பு; பிறவித் துன்பம். அறமாற்றும்—முற்றுக நீக்கும். பாங்கினில்—இயல்பில், தன்மையில். ஓங்கிய—சிறந்த, உயர்ந்த. அபரஞானம்—வேதாகம நூலுணர்வு. உணர்வு அரிய – உண்மைப் பொருளை உணர்வதற்கு அரிய கருவியான. மெய்ஞ்ஞானம் – (இங்கு) கருவிநூலுணர்வு (என்னும் பொருளுடையது). வியாகரணம். நிகண்டு, சந்தோபிசிதம், நிருக்தம், சோதிடம், மந்திரம் என்னும் வேதாங்கங்களும், வேதத்தின் கருமகாண்டத்தை ஆராயும் மீமாம்சையும், சரியான பொருளை வரையறை செய்யும் தருக்கம் முதலான கருவி நூலுணர்வும் இல்லாமல் உண்மையை உள்ளபடி உணரமுடியாது ஆதலால், இவற்றின் இன்றியமையாச் சிறப்பை விளக்க, "உணர்வரிய மெய்ஞ்ஞானம்" என்று கூறப்பட்டது.**



**"ஆளுடைய பிள்ளையார் ஞானப்பாலுண்ட அப்பொழுதே பரஞானம், அபரஞானம், கலைஞானம், கருவி நூல்களின் ஞானம் என்னும் நால்வகை ஞானங்களையும் உணர்ந்துகொண்டார்" என்பது இப்பாடலின் கருத்து.**

## திருப்புகழ்

**மு**ருகவேளின் பெருமையைப் புகழ்ந்து அருணகிரிநாதர் அருளிய அழகிய இனிய சந்தப் பாடல்கள் **திருப்புகழ்** என வழங்கும்.

அருணகிரிநாதர் பதினைந்தாம் நூற்றுண்டில் அருணையில் அவதரித்து வாழ்ந்தவர்! முருகவேளின் திருவருளால் உய்ந்தவர். "முத்தைத்தரு" என்று முருகனே அடியெடுத்துக் கொடுக்கத் திருப்புகழைப் பாடியருளியவர். இவர் கந்தரநுபூதி, கந்தரலங்காரம் என்பவற்றையும் அருளிச் செய்தார்.

அருணகிரிநாதரின் அருட்பாடல்கள் திருமுறை வகுக்கப்பெற்ற காலத்துக்குப் பிற்பட்டன. ஆதலால், இவை திருமுறைகளுட் சேர்க்கப்பட்டில. தேவாரம், திருவாசம், திருவிசைபா, திருப் பல்லாண்டு, பெரிய புராணம் என்பவற்றை ஓதியபின் திருப்புகழையும் ஓதுவர்.

பின்வரும் திருப்புகழ் **கதிர்காமப்** பெருமான்மீது பாடியருளப் பட்டது.

எதிரி லாத பத்தி தனைமேவி
  இனிய தாணி னைப்பை இருபோதும்
இதய வாரி திக்கு ளுறவாகி
  எனது ளேசி றக்க அருள்வாயே
கதிர காம வெற்பி லுறைவோனே
  கனக மேரு வொத்த புயவீரா
மதுர வாணி யுற்ற கழலோனே
  வழுதி கூனி மிர்த்த பெருமாளே.

உ

சிவமயம்

# 13. ஈழத்தில் சைவம்

ஈழத்தில் சைவம் வரலாற்றுக் காலத்திற்கு முன்னரே வேரூன்றி வளர்ச்சிபெற்ற சமயமாகும். ஈழத்தில் இன்று நிலவும் ஏனைய சமயங்கள் இந் நாட்டிற்கு வந்த காலத்தை வரையறை செய்யலாம்; ஆயின், சைவத்தின் காலத்தை அவைபோல் வரையறை செய்து காட்ட முடியாது. இந் நாட்டின் அதிதொன்மையான சமயம் சைவம் ஆகும்

ஈழநாட்டின் பூர்விகக் குடிகளாகக் கருதப்படுபவர்கள் நாகரும் இயக்கரும் ஆவர். இவர்கள் வழிபடு கடவுள் சிவன் ஆவர். நாகர் ஈழத்தில் மட்டுமல்ல, இந்தியாவின் பல பாகங்களிலும் வாழ்ந்தவர்களாவர். இவர்கள் எங்கு வாழ்ந்தாலும் சிவ வழிபாட்டுக்காரராகவே இருந்து வந்திருக்கின்றனர். திருக்கேதீச்சரம் அவர்களது பிரதான வழிபடு கோயிலாகவும், இருப்பிடமாகவும் விளங்கியதாக ஆராய்ச்சியாளர் கூறுவர்.

இங்கு வாழ்ந்தவர்களாகக் கூறப்படும் மாதுவட்டா, விசுவகர்மா, மயன், குபேரன், இராவணன், மண்டோதரி முதலியோர் சிறந்த சிவ பத்தி உடையவர்களாகத் திகழ்ந்திருக்கின்றனர்.

பூவும் புகையும் கொண்டு கடவுளை வழிபடுதலே பண்டைத் தமிழர் மரபு. பூ இதயத்தையும், புகை அது உருகுவதையும் குறிப்பிடுவன. தென்னாட்டவனாகிய இராவணன் சிவபூசை புரிபவனென்றும், அவன் செல்லுமிடங்களெல்லாம் பொன் இலிங்கத்தை எடுத்துச் சென்று, பூவும் புகையுங் கொண்டு வழிபட்டானென்றுஞ் சொல்லப் படுகின்றது.

மயனின் மகளும், இராவணனின் மனைவியுமாகிய மண்டோதரி திருக்கேதீச்சரத்திற்முன் வளர்ந்து வழிபாடு செய்து வந்தவளாவாள். இன்னும், இவள் கன்னிகையாக இருந்து நோற்று வரம்பெற்ற வரலாற்றை,



"ஏர்தரும் ஏழுல கேத்த எவ்வுரு வுந்தன் னுருவாய
ஆர்கலி சூழ்தென் னிலங்கை யழகமர் வண்டோ தரிக்கு
பேரருள் இன்ப மளித்த பெருந்துறை மேய பிரானை
சீரிய வாயாற் குயிலே தென்பாண்டி நாடனைக் கூவாய்"

என்ற குயிற் பத்திலும், மண்டோதரி மனதில் தியானித்த மாத்திரையில் சிவபிரான் அவளுக்குக் காட்சி கொடுத்ததை.

"வந்திமையோர்கள்......... எனத் தொடங்கி
...... . ...பெருந்துறை யாதி அந்நாள்
உந்து திரைக்கடலைக் கடந் தன்(று)
ஓங்கு மதிலிலங்கை யதனிற்
பந்தணை மெல்விரலாட் கருளும்
பரிசறிவா ரெம்பிரா னவாரே" என்ற திருவார்த்தையிலும்

மணிவாசகர் சிறப்பித்துப் பாராட்டிப் பாடியமை இங்கு கருதற் பாலதாகும்.

இராவணனும், அவன் மனைவி மண்டோதரியும், சிவன் மாட்டு ஆழ்ந்த பக்தி யுடையோராய்ப் பஞ்சாட்சர செபஞ் செய்தவர்களாதலினலன்றே, பஞ்சாட்சர மகிமை பற்றி திருஞானசம்பந்தப் பெருமான் கூறும்போது;

"வண்டம ரோதி மடந்தை பேணின
பண்டை இராவணன் பாடி யுய்ந்தன" என்றும், விபூதி பற்றிக்

கூறும்போது,

"இராவணன் மேலது நீறு" என்றும் பாடியிருக்கின்றார். இதிலிருந்து ஈழத்தில் அக்காலச் சிவபக்தி எவ்வளவு ஆழமாக இருந்ததென்பதையும் அறிந்து கொள்ளலாம்.

இராவணன் தன் தாயின் அபரக்கிரியைகள் செய்தற்காக அமைக்கப்பெற்றதே திருக்கோணமலையிலுள்ள கன்னியாய் தீர்த்தம் என தட்சண கைலாய புராணம் கூறுகின்றது.

கைலைமலையின் கீழ் அமுந்திய இராவணன் பரமசிவனை இரங்க வைப்பதற்காக இரங்கற்பண்ணாகிய விளரி பாடி உய்ந்தனன் என வரலாறு கூறுகின்றது. இராவணனுடைய தகப்பனார் "சிவதாசன்" என்று இராவணனுக்கும், "பரமன்" என்று கும்பகர்ணனுக்கும், "பசுபதி" என்று விபீடணனுக்கும், "உமையம்மை" என்று சூர்ப்பனகைக்கும் பெயரிட்டிருந்தார் என்றும்; இவர்களுடைய பகைவர்களே

இராவணன், கும்பகர்ணன், விபீடணன், சூர்ப்பனகை என்ற பெயர் கொண்டு இவர்களை அழைத்தனர் என்றும் "அகத்தியர் இலங்கை" என்ற நூலில் புத்தூர் வாசியாகிய திரு. வ. நாதர் கூறியிருக்கின்றார்.

சூரபன்மனது மனைவியுடைய பாட்டனார் பெயர் துவட்டா. இவர் நெடுங்காலம் பிள்ளைச்செல்வம் இல்லாதிருந்தவர். ஈற்றில் திருக்கேதீச்சரத்தில் தவம் செய்து புத்திரப்பேறு பெற்று, அங்கேயே வாழ்ந்தவர். அவரால் அந்நகரம் உண்டாக்கப்பட்டபடியால் அது மகாதுவட்டா எனப்பட்டு, பின் மாதோட்டம் ஆனது என்பர் அறிஞர்.

பண்டைக்காலத்தில் ஈழத்தில் வாழ்ந்த மக்கள் கல்வியிலும் கடவுள் பத்தியிலும் சீர்திருத்தத்திலும் மிகவும் சிறந்து விளங்கினர். இன்று இந் நாட்டில் நிலவுஞ் சமயங்கள் இங்கு வருவதற்கு முன்பு, இந் நாட்டில் வாழ்ந்த மக்களுக்குரிய சமயம் சைவமாக இருந்தது. சிவனே அவர்களது கடவுள். ஈழத்து அரசனாகிய இராவணனும் அவனுக்கு முன்பு இங்கு வாழ்ந்த மக்களும் சைவ சமயத்தவர்களாகவே இருந்தார்கள் என்று இதில் முன்பு கண்டோம். இவர்கள் ஈழத்தின் பல பகுதிகளிலும் பல சிவன் கோவில்களைக் கட்டி வழிபட்டு வந்தார்கள்.

காங்கேசன்துறையில் "காங்கேயனீசுவரம்" என்னும் பெயர் கொண்ட சிவன் கோவிலை "கைதன்" என்னும் மறுபெயர் கொண்ட "முருகன்" என்ற சேனைத் தலைவன் ஒருவன் கட்டி, அக்காலத்தில் ஊர்கள் தோறுமுள்ள சிவாலயங்களில் சைவப்பிரசங்கங்களைச் செய்வித்துச் சனங்களுக்குச் சைவ அறிவை ஊட்டினான் என வரலாறு கூறுகின்றது.

இலங்கைச் சரித்திர ஆராய்ச்சியில் ஈடுபட்ட மேனாட்டறிஞர்களும், இலங்கையின் பூர்விகம் பற்றிக் கூறிமிடத்து சைவசமயமே எல்லாச் சமயங்களுக்கும் முன்னர் இலங்கையில் விளங்கிற்றென்பதை வலியுறுத்துகின்றனர்.

போர்த்துக்கேய வரலாற்றாசிரியராகிய "குவிரோஸ்" என்பவர் தான் எழுதிய இலங்கைச் சரித்திரம் பற்றிய நூலில், கி. மு. 1300ஆம் ஆண்டில் திருக்கோணேசுரக் கோயில் கட்டப்பட்டதெனக் கூறுங் கல்வெட்டொன்று இருந்தது எனக் கூறுகின்றார்.

விசயன் இலங்கைக்கு வருவதற்கு முன்னரும் பின்னரும் இந் நாட்டிற் சைவம் செழிப்புற்றிருந்ததென வண. வலபொல இராகுல என்பவர் எழுதிய "இலங்கையில் பௌத்த வரலாறு" என்னும் நூலில் கூறியுள்ளார்.



திரு. ஜே. டபிள்யூ. ரெனற் என்பவர் எழுதிய இலங்கைச் சரித்திர நூலில் "இலங்கையில் ஆதியில் குடியேறியவர்கள் சைவர்களே" எனக் கூறுகின்றார்.

19ஆம் நூற்றாண்டில் புகழ்வாய்ந்த கல்விமான்களுள் சேர் வில்லியம் ஜோன்ஸ் ஒருவர். ஈழத்துப் பல்வேறு குடிகளினதும் மொழி, இலக்கியம், சமயம், தொல்பொருட்கள் முதலானவற்றை நன்கு ஆராய்ந்தவர். ஈற்றில் முடிந்த முடிபாக இப்பெரியார் கூறுவது, "எமது எண்ணத்திற்கு எட்டாத காலந் தொட்டும் ஈழத்தில் சைவமக்கள் வாழ்ந்து வந்திருக்கின்றனர்" என்பதாகும்.

உருகுணைத் தேசியப் பூங்காவில் கண்டெடுக்கப்பட்ட கிறீத்துவுக்கு முற்பட்ட காலத்ததெனக் கணிக்கப்படும் கல்வெட்டொன்றில் "சிவநகர்" என்ற இடப்பெயர் குறிக்கப்பட்டிருக்கக் காணலாம்.

விசயன் இலக்கைக்கு வந்து அரசாட்சியை ஏற்றதும், பழைய சிவாலயங்களைத் திருத்தினான் என்றும், பாதுகாப்பிற்காக நாலு திக்கிலும் நாலு புதிய சிவாலயங்களை அமைத்தானென்றும் யாழ்ப்பாண வைபவமாலை கூறுகின்றது.

### அநுராதபுரகாலம்:

விசயனுக்குப்பின் அரசாண்ட பாண்டுக வாசுதேவன், அபயன், பாண்டுகபாயன் முதலியோர் சைவர்களாகவே இருந்திருக்கின்றனர்.

தீசனுக்கு முற்பட்ட அரசர் பலர் "சிவன்" என்ற பெயருடன் இருந்திருக்கின்றனர். கிரிகண்ட சிவன், மூத்த சிவன் (கி. மு. 307—267), மகாசிவன் (257—205) போன்ற பெயர்கள் இதற்கான எடுத்துக் காட்டுக்குரியனவாகும்.

அநுராதபுரதில் வேதசிவாகமங்களில் வல்ல அந்தணர் பலர் அக்காலத்தில் இருந்திருக்கின்றனர். பாண்டுகபாயன் அநுராதபுரத்தை நிருமாணிக்கும் பொழுது அந்தணர்களுக்கென ஒரு பகுதியை வகுத்தானென்றும், சிவன் கோயில் ஒன்றை நிறுவினான் என்றும் மகாவம்சம் கூறுகின்றது.

கி. மு. 145—101 வரையான காலத்தில் எல்லாளன் என்னுந் தமிழ் மன்னன் அநுராதபுரத்திலிருந்து அரசுபுரிந்தான். இவன் ஒரு சைவன். இவன் காலத்தில் சைவம் இங்கு நன்கு பரவியிருக்கின்றது. ஆயின் எல்லாளனும் அவன் போன்றோரும் அக்காலத்தில் சைவத்திற்காற்றிய அருந்தொண்டுகளை எடுத்துக்காட்டக்கூடிய நூல்கள் இல்லாதொழிந்தமை எமது தவக்குறையேயாம்.

கி. பி. 4ஆம் நூற்றுண்டில் அரசு செலுத்திய மகாசேனன் பௌத்தந் தவிர்ந்த ஏனைய சமயங்கள் பரவுவதைத் தடுக்க முயன்ற போது சிவாலயங்கள் தகர்த்தெறியப்பட்டதாகக் கூறப்படுவதனுல், அவன் காலத்திலும் — அவனுக்கு முற்பட்ட காலத்திலும் சைவம் இந்நாட்டில் நன்கு வளர்ந்திருக்க வேண்டும் என யாம் நம்பலாம்.

கி. பி. 5ஆம் நூற்றுண்டில் ஈழத்திற்கு வந்த குளக்கோட்டன் என்ற சோழ அரசன் திருக்கோணேசுவரம், முன்னேசுவரம் ஆகிய திருத் தலங்களுக்குத் திருப்பணிகளைச் செய்ததோடு, நித்திய நைமித்திய பூசைகள் சிறப்புற நடைபெறத்தக்க அதிகாரிகளையும் அவ்விடங் களில் நியமித்திருந்ததாகவும் கூறப்படுகின்றது.

**ஈழத்தில் சேக்கிழார் மரபு:**

''சேக்கிழார்'' என்ற பெயர் ஒரு குடிமரபுப் பெயராக இருந்து வந்தது, இதைப் போலவே ''கூடல்கிழான்'', ''புரிசைக்கிழான்'', ''குண்டையூர்க்கிழான்'' போன்ற குடிகளும் இருந்தனர். சங்ககாலத்தி லும் ''கிழார்'' என்ற பெயர் பல இருக்கக் காண்கிறோம். கிள்ளிமங்கலங் கிழார், கோளியூர்க்கிழார், நல்லாவூர் கிழார், பெருங்குன்றூர் கிழார், மருதங் கிழார், மாங்குடிகிழார் முதலிய பெயர்கள் குறிப்பிடத்தக்கனவாகும்.

மேற்கூறிய ''கிழார்'' விகுதியில் சேக்கிழார் மரபு ஈழநாட்டி லும் ஆதியில் இருந்து வந்திருக்கின்றமையைக் கல்வெட்டுக்கள் மூலம் தெரிந்துகொள்ளலாம்.

தென்னிந்திய சாசன எண் 1403 — பகுதி II இன்படிக்கு, ''சேக் கிழான் செட்டி சங்கன், அநுரதபுரம் — இலங்கைத்தீவு'' என, (607/1912B) கல்வெட்டு ஒன்று தமிழில் உள்ளது. சிறிசங்கபோதி மாராயன் 5ஆம் நூற்றுண்டு. இதில் சேக்கிழான் செட்டிசங்கன் என்பவன் குமாரகணத்துப் பேரூர் வாசிகள் வட்டிக்காக 30 ஈழக் காசுகள் பெற்று, நொந்தா விளக்கு, திருவமுது இவைகளுக்காகக் கொடுத் தது கண்டிருக்கின்றது.

மேலும் ''சேக்கிழான் — சென்னை'' 608/2. மேற்கூறிய அதே இடத்தில்; அதே அரசன் 7ஆம் ஆண்டில் சேக்கிழான் சென்னை என் பான் தானஞ்செய்தது காணப்படுகின்றது.

மேலே கூறப்பட்ட இவ்விரண்டு கல்வெட்டுகளும், ''சேக்கிழார்'' என்ற குடிப்பெயர் ஈழநாட்டிலும் வழங்கி வந்திருக்கிறதென்பதை உறுதி செய்கின்றன.



மகாவம்சத்தின்படிக்கு இச்சாசனத்தில் கூறப்படும் சிறிசங்கபோதி என்ற சங்கபோதி III என்னும் அரசன், கி. பி. 624இல் பட்டத்திற்கு வந்தவன் (1913, E. P. 103). இதிலிருந்து சேக்கிழார் என்ற குடிப் பெயரின் தொன்மையை யாம் மட்டுக்கட்டிக் கொள்ளலாம். இன் னும், திருத்தொண்டர் பெரியபுராணம் அருளிய அருண்மொழித் தேவராகிய குன்றத்தூர் சேக்கிழார் காலம் 12ஆம் நூற்றுண்டாகக் கருதப்படுகின்றது. அப் பெரியவர் காலத்துக்குப் பல நூற்றுண்டு களுக்கு முன்னரே ஈழத்தில் சேக்கிழார் மரபு இருந்து வந்தமை குறிப்பிடத்தக்கதாகும்.

மேற்காட்டிய மேற்கோள்களிலிருந்து சேக்கிழார் மரபுக் குடிகள் தமிழ் நாட்டுத் தொண்டை நாட்டில் மட்டுமன்றி சோழநாடு, ஈழ நாடு ஆகிய நாடுகளிலும் வெகு புராதன காலமுதல் வாழ்ந்து வந்திருக்கின்றனர் என்றும், அவர்கள் சைவத்தில் சிறந்த பற்றுடைய வர்களாக இருந்து ஆலயங்களுக்குப் பல தானங்களைச் செய்துதவி யுள்ளனர் என்றும் அறியக் கிடக்கின்றது.

**நாவலூர் நந்தாவிளக்கு:**

திருநாவலூர் சுந்தரர் திருவவதாரஞ் செய்த ஊர். ''நாதனுக் கூர் நமக்கூர் நரசிங்க முனையரையன் ஆதரித்தீசனுக் காட்செயு முரணி நாவலூர்'' என சுந்தரரால் போற்றப்பட்ட பெருமான் கோயில் கொண்ட ஊர். இராசாதித்த சோழனது 28ஆம் ஆண்டுக் கல்வெட் டொன்று, இக்கோயிலுக்கு நந்தாவிளக்கெரிக்க வழங்கப்பட்ட நன் கொடை ஒன்று பற்றிக் கூறுகின்றது. கூற்று ''ஸ்வஸ்தி ஸ்ரீமதுரை கொண்ட கோபர கேசரி வர்மற்கு யாண்டு 25ஆவது திருமுனைப்பாடித் திருநாவலூர் திருத்தொண்டீசுவீரம் திருக்கற்றளி செய்வித்த ராஜாதித்த தேவர் தாயார் நம்பிராட்டியார் சேக்கிழானடிகள் பரிவாரத்தான் சித்திர கோமளம் வைத்த நந்தாவிளக்கு ஒன்றுக்கு வைத்த சாவா முறைப் பேராடு தொண்ணூறு, ஈழவிளக்கு ஒன்று'' என்பதாம்.

அந்நாளில் அரச பரிவாரங்களால், தமிழ்நாட்டுத் திருக்கோவி லுக்கு, விளக்கெரிக்க ஈழத்து விளக்கு வழங்கப்பட்டதென்றால், அரச மாளிகையிலுள்ளோரையும், கவரக்கூடிய கவின்பெறு கைவினைஞர் ஈழநாட்டில் இருந்திருக்கின்றனர் என்பது தேற்றமாகும்.

5ஆம் நூற்றுண்டின் முற்பகுதியில் ஈழத்திற்கு வருகைதந்த சீன யாத்திரிகனுகிய பாகியன் என்பவன் கூறியதாக சாமுவேல் பீல் (Samuel Beal) என்ற பெரியார் கூறுவதாவது: ''இலங்கை மன்னன் கடுமையான பிராமணிய அநுட்டான ஆசாரங்களால் தன்னைத் தூய்மை

செய்து கொண்டான்'' என்பதாகும். இங்கு அவன் கூறிய அநுட்டான ஆசாரமுறைகள் அக்காலத்தில் இங்கு நிலவி வந்த சைவசமய ஆசார அநுட்டானங்களேயாம்.

**பல்லவர் காலம்:**

கி. பி. 7ஆம் நூற்றூண்டு தொடக்கம் தமிழ் நாட்டில் பல்லவர் ஆதிக்கம் தலையெடுத்த காலம். இக்காலத்திற்றூன் தமிழ்நாட்டில் சைவநாயன்மார்கள் தோன்றிச் சைவத்திற்குப் புத்துயிர் ஊட்டினர். இவர்கள் இங்குள்ள திருத்தலங்களாகிய திருக்கேதீச்சரம், திருக்கோணேசுவரம் ஆகிய திருத்தலங்கள்மீது தேவாரம் பாடி வழிபட்டனர். இதிலிருந்து யாம் அறியக்கூடியது தேவார ஆசிரியர்கள் காலத்திலே, தேவாரம் பாடக்கூடிய பெருமையும் சிறப்பும் பெற்ற நிலையில் ஈழத்தில் திருக்கோவில்கள் விளங்கியிருக்கின்றன என்பதும், அத்தகைய உன்னத நிலைக்கு அவற்றை வைத்திருப்பதற்கேற்ற முறையில் ஈழத்தில் சைவமக்கள் சமயத்தைப் போற்றி வந்திருக்கின்றனர் என்பதுவுமேயாம்.

மேலும், மகேந்திரபல்லவன் சமணத்திலிருந்து சைவத்திற்குக் கொண்டுவரப்பட்டவன், அவனும் அவன் சந்ததியாரும் சைவத்திற்கு அருந்தொண்டாற்றியவர்கள். அவன் காலத்தில் இலங்கையை ஆண்ட மானவர்மன் கி. பி. 691 இல் தனது அரச பதவியை இழந்து தமிழ்நாட்டிற்கு ஓடினுன். அங்கு ஓடியவன், நரசிம்மவர்மபல்லவனிடம் தஞ்சம் புகுந்தான். அங்கு பல்லவருடன் சேர்ந்து இரண்டாம் புலிகேசியுடன் போர்புரிந்து, புலிகேசியைத் தோற்கடித்தனர். அதன் பின்னர், நரசிம்மன் மானவர்மன் இலங்கையைக் கைப்பற்ற உதவி செய்தான். ஈழநாட்டவர் மிக நுட்பமான சிற்ப வேலைப்பாடுகளைப் பல்லவர்களிடம் கற்றுக்கொண்ட காலம் இதுவேயாகும். தமிழ் நாட்டிலிருந்து மானவர்மனுக்கு உதவிசெய்ய வந்த போர்வீரரில் பலர் இந்நாட்டில் தங்கிவிட்டனர். அவர்கள் வழிபாட்டிற்காகக் கட்டப்பட்டவைகளே, நாலந்தாவில் காணப்படும் கெடிகைகள் எனக் கூறப்படுபவை ஆகும்.

மாணிக்கவாசக சுவாமிகள் காலத்திலும் சைவமக்கள் ஈழத்தில் செழித்திருந்தன ரெனக் கருத இடமுண்டு. மாணிக்கவாசக சுவாமிகள் வரலாற்றில் ஈழநாட்டுப் புத்தரை வாதில் வென்ற பகுதி ஒன்று வருகின்றது. வாதில் தோற்றவர்கள் சைவத்திற்குத் தாங்களாகவே மாறினர் எனக் கூறப்படுகின்றது, அப்படி மாறியவர்கள் பரம்பரையில் வந்தவர்கள்தான் தாமென யாழ்ப்பாணத்திலுள்ள ஊர் ஒன்றில் வாழும் சைவ வேளாளச் செட்டிகள் கூறுகின்றனர்.



**மாவிட்டபுரகாலம்:**

8ஆம் நூற்றூண்டின் பிற்பகுதியிலும், 9ஆம் நூற்றூண்டின் முற்பகுதியிலும் உக்கிரசிங்கன் என்னும் அரசகுமாரன், இன்று ''கந்தரோடை'' என வழங்கும் பண்டைய ''கதிரமலை'' என்னுமிடத்திலிருந்து இலங்கையின் வடபாகத்தை ஆண்டனன். இவனே குதிரைமுகம் மாறப்பெற்ற சோழ அரசகுமாரியாகிய மாருதப்புரவிகவல்லியைத் திருமணஞ் செய்தவனுவான். அவள் வேண்டுதலின்படி அவளுக்கு உதவியாக விருந்து மாவிட்டபுரம் கந்தசுவாமி கோவிலைக் கட்டுவித்தவன் இவனேயாம். கதிரமலையிலிருந்து பின்னர் சிங்கை நகருக்கு (வல்லிபுரக் குறிச்சி) தன்னரசிருக்கையை மாற்றிக் கொண்டனன். மாருதப்புரவிகவல்லி வயிற்றில் பிறந்தவன் பாலசிங்கன். ''மணற்றி'' என்ற பெயரில் இருந்த யாழ்ப்பாணத்தை இசையிலும் கவிதையிலும் வல்லவனுகிய வீரராகவன் என்றழைக்கப்படும் யாழ்பாடிக்குப் பரிசிலாக வழங்கியவன் இப் பாலசிங்கனேயாம். யாழ்பாடியாகிய வீரராகவனும், அந்தகக்கவி வீரராகவனுகிய கவிஞனும் ஒருவரல்லர். வெவ்வேறு காலத்தில் வாழ்ந்த இருவர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**சோழர் காலம்:**

சோழரின் செல்வாக்கும் ஆதிக்கமும் தென்னுட்டில் மட்டுமன்றித் தென்கிழக்காசிய நாடுகள் பலவற்றிலும் பரவியிருந்த காலம் கி. பி. 10, 11 ஆம் நூற்றூண்டுகளாகும். அக்காலத்தில் இராசராசசோழன் இலங்கையின் பெரும்பகுதிக்கு அரசனுக விளங்கியவன். இவனைத் தொடர்ந்து இவன்மகன் இராசேந்திரசோழன் இலங்கை முழுவதையும் தனது ஆட்சிக்குக் கொண்டுவந்தவன். கி. பி. 1017 இல் இலங்கை சோழ சாம்ராச்சியத்தின் ஒரு கூறுக இருந்தது. அக்காலத்திற்றூன் அநுரதபுரத்திலிருந்து பொலன்னறுவைக்குத் தலைநகர் மாற்றப்பட்டதாகும். ''ஜனநாதபுரம்'' என்ற பெயர் பொலன்னறுவைக்கு ஏற்பட்டதும் இக்காலத்திற்றூன்.

சோழர் ஆட்சிக்காலத்தில் ஈழத்தின் பல பாகங்களிலும் பல சிவாலயங்களைக் கட்டினர். அவர்கள் காலத்தில் சைவம் இந்நாட்டில் உச்சநிலையில் வளர்ச்சி பெற்றிருந்தது. சோழர் புலத்திய நகராகிய பொலன்னறுவையைத் தலைநகராக்கி அரசாட்சி நடத்திவந்தகாலத்தில், பொலன்னறுவையில் மாத்திரம் பத்துச் சிவாலயங்களைக் கட்டியுள்ளார்கள். இவற்றுள் இரண்டாம் சிவாலயம் எனப் புதைபொருளாராய்ச்சிப் பகுதியினரால் கூறப்படும் சிவாலயம், இன்றும் நன்னிலையில் இருக்கக் காணலாம், இச்சிவாலயம் இராசராசன் மனைவி பெயரால் கட்டப்பட்டு வானவன்மாதேவி ஈசுரம் என்னும் பெயர் கொண்டழைக்கப்பட்டதாகும். இந்நகரில் காணப்படும் இன்னொரு சிவாலயம் பாண்டிய காலத்தில் கட்டப்பட்டதெனக் கருதப்படுகிறது.

இலங்கைக்கு வந்து அரசு செலுத்திய சோழ இலங்கேசுவரதேவன் என்ற சோழ இளவரசன், கோணேசுவரத்தின மீது கவனம் செலுத்தினன் என்பதை அவனுடைய மானங்கேணிக் கல்வெட்டின் மூலமாக அறியமுடிகின்றது. இக்காலப்பகுதியிலே கோணேசுவரம் ''மச்சேசுவரம்'' எனக் குறிப்பிடப் பெற்றது என்பதைச் சாசனச் சான்றின் மூலம் அறிய முடிகின்றது. நிலாவெளியில் உள்ள சோழர் காலத்துக் கல்வெட்டொன்று கோணேசுவரத்துக்கு 250 வேலிநிலம் நிவந்தமாகக் கொடுக்கப்பட்டமை பற்றிக் குறிப்பிடுகின்றது. கந்தளாய்ச் சிவன் கோயில், பழமோட்டைச் சிவன் கோயில், மாதோட்ட இராசராச ஈசுவரத்து மாதேவர் கோயில், பதவியா சிவன்கோயில் போன்றவை இவர்கள் காலத்தில் கட்டப்பட்டவையேயாகும். இவற்றுள் மாதோட்டக்கோயில் இராசராசனது படைத்தலைவருள் ஒருவனுகிய தாழிக்குமரனுல் கட்டப்பட்டதாக கொழும்பு நூதனசாலையில் காணப்படும் சாசனம் கூறுகின்றது.

''சோழமண்டலத்துச் சத்திரிய சிகாமணி வளநாட்டுச் சிறுகூற்ற நல்லூர் கிழவன் தாழிக்குமரன் என்போன் மாதோட்டமான இராசராச புரத்திலே இராசராசேசுவரம் என்னும் கோவிலை அமைத்து அதற்கு நிலம் வழங்கியதோடு, அருண்மொழித் தேவ வளநாடு என்ற பகுதியின் அரசிறை வருமானங்களையும் தானம் பண்ணியிருந்தான் என்றும், மடமொன்றினை நடாத்துவதற்கும்—வைகாசி விசாகம் முடிய ஏழுநாட்களாகத் திருவிழா நடத்துவதற்கும் — இதிகாச நூல்கள் அங்கு படிப்பதற்கும் அதனுல் ஒழுங்குகள் மேற்கொள்ளப்பட்டதாகவும் திருவிராமீசுவரம் என்ற கோயிலொன்றும் மாதோட்டத்திலேயிருந்தது என்பதனையும், பதினேராம் நூற்ருண்டுக் கல்வெட்டொன்றின் மூலம் அறிய முடிகின்றது.

இராசேந்திர சோழனின் அதிகாரிகளுள் ஒருவனுகிய சிறுகுளத்தூருடையான்தேவன் என்பவன் கோயிலிலே சந்தி விளக்கெரிப்பதற்காக நாலு காசு நிவந்தங்கொடுத்திருந்தான். கோயிலுக்குத் தேவையான பொருட்களைக் கோயிலுக்குரியோர் இலகுவிலே பெற்றுக் கொள்வதற்காக வெற்றிலை வாணிகர், வாழைக்காய் வாணிகர், சங்கரபாடியர் என்ற சிறு வாணிகர் குழாங்கள் மாதோட்டத்திலே குடியிருத்தப்பட்டார்கள் என்பதையும் இக்கல்வெட்டின் மூலம் ஊகித்தறிய முடிகின்றது.

பதவியாவிலே சோழர் காலத்திலே பல சிவன் கோயில்கள் எழுந்தன. அவற்றின் அழிபாடுகள் அண்மைக்காலங்களிலே அகழ்ந்தெடுக்கப்பெற்றுள்ளன. அங்கு முதலாம் இராசராசனுடைய காலத்திலே கட்டப்பெற்ற கோயில்களுள் இரவிகுலமாணிக்க ஈசுவரம் என்பதும் ஒன்ருகும். சோழராட்சியில் சேவைபுரிந்த அதிகாரிகளும் படைத்தலைவர்களும் வணிகரும் இக்கோயிலுக்குக் கொடுத்த பொன், காசு, மணி, விளக்கு முதலிய நன்கொடைகளைப் பதவியாவிலே கண்டெடுக்கப்பெற்ற இராசராசனுடைய சாசனமொன்று குறிப்பிடுகின்றது.



மட்டக்களப்புப் பிரதேசத்தையும் உள்ளடக்கி, பொலன்னறுவையிலிருந்து ஆட்சிசெய்த கலிங்க மாகனுடைய காலத்தது (1215 – 1255) என்று கருதப்படக்கூடிய முத்திரையொன்று கிரந்த எழுத்துக்களிலுள்ள வடமொழிச் சாசனத்தைக் கொண்டுள்ளது. அது பிராமணர் வாழுகின்ற ஸ்ரீபதி (பதவியா) கிராமத்திலே எழுந்தருளிய மகேசரைப் பற்றிக் கூறுவதாகும். எனவே மாகனது காலத்திலே பதவியாவிலே சிவத்தலமொன்று சீர்பெற்றிருந்ததோடு, முத்திரை வழங்கக்கூடிய வித்திலே ஆட்சிச் சிறப்புப்பெற்றிருந்தது எனவும் யாம் ஊகிக்க இடமுண்டு.

பொலன்னறுவையில் கண்டெடுக்கப்பட்டு கொழும்பு நூதனசாலையில் வைக்கப்பட்டிருக்கும் நடராசர், பார்வதி, நால்வர் திருச்சிலைகள் உலகப் பிரசித்தமானவை. பொலன்னறுவைக் காலத்தில் ஈழத்தில் சைவம் இரண்டாந்தரச் சமயமாக இருக்கவில்லை. மன்னரதும், மக்களதும் சிறப்புகளும் மரியாதைகளும் பெற்று வரலாற்றில் மற்றெவ்விடத்துங் காணுத பேரொளியாக ஈழத்தில் சைவம் விளங்கியது.

கந்தளாய்க்கு அண்மையிலுள்ள பழமோட்டையில் சோழர்காலச் சிவன்கோவிலின் அழிவுகளை இன்றும் காணலாம். கோவில் மட்டுமன்றி, தமிழில் எழுதப்பட்ட கல்வெட்டையும் காணலாம். இதன்படி இக்கோவிலின்பெயர் தென்கைலாசம். இதற்கு நாகைச்சாணி என்ற பிராமணப் பெண்ணெருத்தி தன் கணவன் பெயரால் நித்திய பூசைக்கும், நந்தவன பரிபாலனத்திற்கும், இரவு விளக்கு எரிப்பதற்கும், தேவ அடியப் பெண்களை வைத்துப் பரிபாலிப்பதற்குமாகப் பொன்னும் பொருளும் வழங்கியதாகக் கூறப்படுகின்றது. கந்தளாய்ப் பகுதி ஸ்ரீ விக்கிரமசோழ மேகன் தெரிந்த ''வேளக்காரன்'' பொறுப்பில் விடப்பட்டிருந்ததாகக் கூறப்படுகின்றது.

கந்தளாயில் இருந்த பார்வதி அன்னசத்திரம் சோழர் காலத்தது என்பது ஒருசாரார் கொள்கை. இதனைக் கட்டியவன் கீர்த்திஸ்ரீ நிசங்கமல்லன் என்பர் இன்னேர் சாரார்.

கி. பி. 1185–1198வரை பொலன்னறுவையிலிருந்து அரசு செய்த கீர்த்தி நிசங்கமல்லன் ஆணைப்படி செதுக்கப்பட்ட ஒரு கற்சாசனம் கந்தளாயில் 1921ஆம் ஆண்டில் கண்டெடுக்கப்பட்டது. அவ்வெழுத்

துகளின்படி, ஆதிகாலத்தில் கந்தளாய் "சதுர்வேத பிரமபுரம்" என்றழைக்கப்பட்டதென அறியக்கிடக்கின்றது. "நாலு வேதங்களையும் கற்ற பிராமணர்களின் உறை நகரம்" என்பது இதன் கருத்தாகும்.

மேலும், சோழர்காலத்தில் சைவம் இலங்கையில் செழித்திருந்த படியினுல், அவர்களுக்குப் பின்வந்த சிங்கள அரசர்களும் அதை ஆதரித்து வந்தார்களேயன்றி அழிக்க முன்வரவேயில்லை. சோழர்களைத் தோற்கடித்து சிங்கள அரசை மீண்டும் நிலைநாட்டிப் பௌத்த மறுமலர்ச்சிக்குப் பாடுபட்ட முதலாம் விஜயபாகு (1070—1114) சோழர் காலத்தில் அமைக்கப்பட்ட ஆலயங்களுக்குக் காணிக்கை செலுத்தி வந்தான். "தென்கைலாசம்" என்ற கந்தளாய்க் கோவிலையும் இவன் ஆதரித்து வந்தான். பிராமணக் குடிகளையும் ஆதரித்து வந்திருக்கின்ருன். அவன் காலத்தில் இக்கோவில் "விஜயராச ஈசுவரம்" எனக் கூறப்பட்டதாகும்.

## பழமோட்டைக் கல்வெட்டு :

திருக்கோணமலை மாவட்டத்திலுள்ள கந்தளாயில் பழமோட்டை என்ற கிராமத்தில் 1933ஆம் ஆண்டில் அழிந்த சிவாலயம் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டது. இங்கு காணப்பட்ட கல்வெட்டு ஒன்றின் மூலம் இக்கோவிலின் பெயர் விஜய இராசேசுவரம் எனவும், கந்தளாயின் பெயர் விஜய இராச சதுர்வேத மங்கலம் எனவும் அறியக்கிடக்கின்றது. கி. பி. 1244 வரை நான்மறைவல்ல பிராமணர் புலர் வசித்த இடமாகவே கந்தளாய் விளங்கி இருக்கின்றதாக ஆராய்ச்சிப் பேரறிஞர் கூறுகின்றனர்.

கி. பி. 1070இல் சோழராட்சி மறைந்தாலும், அவர்களுடன் வந்த வேளைக்காரப் படையும், அகம்படியர் என்ற போர்வீரர்களும், மற்றும் தமிழ்க் குடிகளும் கந்தளாய், பொலன்னறுவை பிரதேசத்தில் குடி இருந்தனர். இதற்கு ஆதாரங்கள் அப்பிரதேசத்தில் இன்றும் இருக்கக் காணலாம்.

முதலாம் விசயபாகுவிற்குப் பின் அரசாண்ட அரசருள் பெரும்பாலானேர் கலிங்க அல்லது பாண்டிய மரபின் வழித்தோன்றல்களாதலின், அவர்கள் சைவத்திற்குப் பேராதரவு கொடுத்துச் சைவ ஆலயங்கள் பலவற்றைக் கட்டியிருக்கின்றனர்.

சமயத்துறையில் சோழர் ஆட்சியின் பயனுக ஏற்பட்ட மாறுதலை ஜீ. ஈ. மில்ரன் என்பவர் கீழ்க்கண்டவாறு கூறுகின்ருர்.

"பொலன்னறுவையில் தூய பௌத்தக் கொள்கைக்கு மேலாகச் சைவம் எங்கும் தலைதூக்கி நிற்பதைக் காணலாம். தென்னிந்தியாவில் இருந்து வந்த படைஎழுச்சிகள் அதிகரித்ததினுலும், இப்படைகளோடு வந்தவர்களில் பலர் நிரந்தரமாக இங்கு தங்கியதனுலும், இப்படித் தங்கியவர்களது கொள்கைகள் நாட்டில் செல்வாக்குப் பெற்றதனுலும் ......சைவர்களுடைய தெய்வங்களுக்கு வழிபாடு மேலோங்கி வந்தது" என்பதாகும்.



கி. பி. 1153—1186 வரை ஆட்சிபுரிந்த முதலாம் பராக்கிரமபாகு மன்னனின் வாழ்க்கையில் பலசந்தர்ப்பங்களில் சைவக்கிரியைகள் நடந்ததாகக் கூறப்படுகின்றது. இவன் 13 சைவ ஆலயங்களை நிறுவியதோடு, 79 பாழடைந்து அழிந்துபோன சைவ ஆலயங்களைப் புனருத்தாரணஞ் செய்தானென்றும் சூளவம்சம் கூறுகின்றது.

கி. பி. 1186—1197வரை ஆட்சியிலிருந்த கீர்த்திஸ்ரீ நிசங்கமல்லன் இராமேசுவரத்தில் "நிசங்கமகேசுவரம்" என்ற கோயிலைக் கட்டியதாகவும், இராமேசுவரத்தில் திருப்பணி வேலைகள் செய்ததாகவும் கூறப்படுகின்றது.

தம்பதெனியா, குருநாகல், கம்பளை, கோட்டை, இறயகம அரசர்கள் ஆட்சிக்காலங்களிலும் சைவசமயம் வளர்ச்சிபெற்றதென்றே சொல்லலாம். இக்காலத்துச் சைவநிலை பற்றிய விளக்கத்தை டாக்டர் ஜி. சி. மெண்டிஸ் எழுதிய "இலங்கைப் பூர்விக சரித்திரம்" என்ற நூலிற் கண்டுகொள்ளலாம்.

## வன்னியர் காலம் :

வன்னியர் மான்மியம் பற்றிக் கூறும் நூல் சிலை எழுபது. சோழராட்சி வீழ்ந்த பின்னர் அவர்களுடைய படைத்தலைவர்களாகிய வன்னியர்கள் இப்பொழுது வன்னிநாடு என்று அழைக்கப்படும் பிரதேசத்தில் தங்கள் ஆட்சியை நிலைநாட்டினர். இவ் வன்னியர் அக்கினி குலத்தவர் என்று கூறப்படுவர். பனங்கமம், குமாரபுரம், ஓமந்தை, தம்பலகமம் என்னும் ஊர்களே இவர்களின் பிரதான இடங்களாகும்.

பதின்மூன்ரும் நூற்ருண்டின் இறுதியில், இவ்வன்னியர்கள் ஆதிக்கம் மேலிட்டுத் தாம் வாழ்ந்த பகுதிகளில் சைவசமய வளர்ச்சியில் ஈடுபடலாயினர். இதனுல் இப்பிரதேசங்களில் அநேக சைவ ஆலயங்களைக் கட்டினர். இப் பகுதியிலுள்ள "குமாரபுரம்" முருகன் கோயில் பெருமை வாய்ந்த ஒன்ருகும். இவ்விடங்களில் வாழ்ந்த வன்னித் தலைவர்கள் குடும்பங்களுக்கும் அராலி, மூளாய், தொல்புரம், சுளிபுரம், நவாலி, சங்கானை, கோப்பாய், இருபாலை, தெல்லிப்பழை, மறவன்புலம், உடுப்பிட்டி, கோவிலாக்கண்டி ஆகிய இடங்களிலுள்ள சைவக் குடும்பங்களுக்குள்ளும் மாற்றுத் திருமணத் தொடர்புகள் இருந்து வந்தமையும் குறிப்பிடத்தக்கதாகும்.

## பாண்டியர் காலம்:

பாண்டிய அரசர்களாகிய சடாவர்மன் சுந்தரபாண்டியனும் (1253—1270) மாறவர்மன் குலசேகரனும் (1270 - 1310) இலங்கையைத் தங்களாணைக் குட்படுத்தியவர்களாவர். இவர்களாட்சியாலும் சைவம் இங்கு செழிப்புற்றிருக்கின்றது. சுந்தரபாண்டியன் திருக்கேதீசுவரம் புனருத்தாரண வேலையிலும், சைவசமய வளர்ச்சியிலும் கருத்துச் செலுத்தியவனாகக் கூறப்படுகின்றது. திருக்கோணமலையிலுள்ள பிரடறிக் கோட்டை வாயிலில் உள்ள நிலைக்கல்லில் காணப்படும் மீன் முத்திரையைப் பொறித்தவன் இவனே எனவும் பேசப்படுகின்றது.

இவ்வாறு சிவ வழிபாடு செழித்து ஓங்கிஇருந்த சிவபூமி எனப் பெயர் கொண்ட இந்நாட்டில், பிறமத வருகை சிவ ஆலயங்களை அழியச் செய்துள்ளது. இவற்றால் புராதன சிவத்தலங்கள் பல அழிந் தன. சிலகாடு மண்டிவிட்டன. இன்னும் சில பேச்சிலும் எழுத்திலும் இருக்கின்றனவே தவிர, இருந்த இடமே காணவில்லை. இதைப்பற்றிய புராதன வரலாறுகளையும், மகிமைகளையும் — இவற்றைப் பழுது பார்த்த மன்னர்கள்—இவற்றின் பரிபாலன பாதுகாப்பிற்கு வழங்கப் பட்ட விளைநிலங்கள், பொன் முதலானவை பற்றிய விளக்கங்களைத் திருக்கேதீசுவரம், திருக்கோணேசுவரம், முன்னேசுவரம், நகுலேசுவரம் முதலான திருத்தலங்களாலும், ஆங்காங்கு கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டுக்களாலும், தட்சண கயிலாயபுராணம், தட்சணகயிலாய மான் மியம், தேவாரம், திருவாசகம், இராமாயணம், மகாவம்சம், யாழ்ப்பாண வைபவமாலை, இலங்கைச் சரித்திரம் முதலிய நூல்களாலும் பிற ஏதுக் களாலும் அறிந்துகொள்ள முடிகிறது.

## யாழ்ப்பாணத்தரசர் காலம்:

கி. பி. 13ஆம் நூற்றாண்டிலிருந்து இலங்கைச் சரித்திரத்தில் தனி இடம் பெறுபவர்கள் யாழ்ப்பாணத்தரசர்கள். இவர்கள் ஆரியச் சக்கர வர்த்திகள் என்று கூறப்படுபவர்கள். இவர்கள் தமிழுக்கும், சைவத் திற்கும், சித்தவைத்தியத்திற்கும் அருந்தொண்டாற்றியவர்கள். இவ் வரசர்கள் திருக்கேதீச்சரம், திருக்கோணேசுவரம், இராமேசுவரம் ஆகிய மூன்று தலங்களினதும் நித்திய நைமித்தியங்களிலும், திருப்பணி களிலும் கூடிய கவனஞ் செலுத்தி வந்ததாகக் கூறப்படுகின்றது.

கி. பி. 1410இல் அரசோச்சிய குணசிங்க ஆரியன் திருகோண மலையிலிருந்து கொண்டுசென்ற கருங்கற்களால் இராமேசுவரக் கர்ப்பக் கிரகத்தைக் கட்டுவித்தவனாவன். கோயிற் கர்ப்பக்கிரகத்திற் பதிக்கப் பட்டிருக்கும் சாசனமூலம் இதனை அறிந்துகொள்ளலாம். மேலும்



இவ்வாரியச்சக்கரவர்த்திகளுக்கும், இராமேசுவரத்திற்கும் நெருங்கிய தொடர்பு இருந்ததனாலன்றோ இவர்கள் ''சேதுகாவலர்'' என்ற விருதுப்பெயர் கொண்டழைக்கப்பட்டு வந்தனர்.

இராமேசுவரம் இவ்வரசர் ஆணைக்குட்பட்டிருந்ததாகவும், அத் தலத்துச் சிவாலயத்தில் இவ்வரசர்கள் பத்தி பூண்டோராயும், சேது தீர்த்தத்தை அதிசிரத்தையோடு காவல் செய்வோராயும், இன்று யாம் ''சிவமயம்'' ''திருச்சிற்றம்பலம்'' எனும் மங்களச் சொற்களுடன் எழுதத் தொடங்குவதுபோல், இவ்வரசர்கள் ''சேது'' எனும் மங்களச் சொல்லிட்டுத் தங்கருமங்களை ஆரம் பிப்பவராயும் ''சேது'' எனும் வாசகத்தையே தம் முத்திரைக் காசுக்கு வழங்குவோராயும் இருந்தமை பற்றி வரலாறு பேசுகின்றது. மேலும், சங்கிலியன் தன் வெண்சங்கக் கேடயத்தில் ''சேது'' என்றே பொறித்திருந்தான் என வண. குவிறேஸ் கூறுகின்றார். இன்னும் இவர்களது முத்திரைக் காசுகளில் ''சேது'' என்ற எழுத்துடன், சிவபெருமானது ஊர்தியாகிய ''நந்தி''உம் இருக்கக் காணலாம்.

பரராசசேகர மன்னன் தனது மகனாகிய சங்கிலிக்குத் தெரியாது தன்னிடத்துள்ள திரவியங்களையும், பொன்முடி முதலிய அணிகலங் களையும், பிலத்துவாரத்தில் (தொண்டைமானாறிலுள்ள பகுதி ஒன்று) பாதுகாப்பாகச் சேமித்து வைத்துவிட்டு, ஒருதொகைத் திரவியத் துடன் திருக்கேதீச்சரஞ் சென்று வழிபாடாற்றிக்கொண்டு இராமேசு வரத்துக்குச் சென்றதாகவும், இராமேசுவரத்தில் அப்பொழுது பழுதுற்றிருந்த சித்திரக்கான் மண்டபத்தையும், கர்ப்பக் கிரகத்தை யும் புதுக்குவிக்குமாறு தான் கொண்டுசென்ற திரவியத்தைத் தனது மந்திரி ஒருவனிடங் கொடுத்து, அவ்வேலைகளைக் கவனிக்க அவனை அங்கே அமர்த்தி மீண்டதாக யாழ்ப்பாண வரலாறு கூறுகின்றது. இது நடந்த காலம் கி. பி. 1540 என்பர்.

செகராசசேகர மன்னனால் இராமேசுவரத்தில் ஒரு அன்னசத்திரம் அந் நாளில் கட்டப்பட்டதாகவும் கூறப்படுகின்றது.

இங்கு இவை யாவற்றையும் ஊன்றி நோக்கும்போது, யாழ்ப் பாணத்தரசர்களே ஆதிச்சேதுகாவலர் என்று தெளிய இடமுண்டு.

## கண்டியரசர் காலம்:

கண்டியரசர் காலத்திலும் சைவம் ஈழத்தில் வளர்ச்சியுற்றிருந்தது. இவ் வரசர்களில் பலர் தமிழ் நாட்டிலிருந்தே தங்கள் பட்டத்தரசி களைத் தெரிந்தெடுத்து வந்தனர். அப்பட்டத்தரசிகளும், அவர்க

ளுடைய துணைக்கென அனுப்பப்பட்டோரும் சைவசமயத்தவர்களாகவே இருந்தனர். இதனால், இவர்களது வணக்கத்திற்காகவும் இம் மன்னர்கள் கண்டியில் சிவாலயங்களை அமைத்தனர். கோணேசுவரம், முனீசுவரம், கதிர்காமம், கண்டிக் கதிரேசன் கோவில் போன்றவை இம் மன்னர்களது பேராதரவைப் பெற்றிருந்தனவாகும்.

தமிழ்மக்கள் பெரும்பான்மையாக வாழும் இடங்கள் தவிர்ந்த ஏனைய பிரதேசங்களில் படிப்படியாக வளர்ந்துவந்த சைவ சமயச் செல்வாக்கு, 16ஆம் நூற்றுண்டில் இப்பிரதேசங்களில் உச்சநிலையை அடைந்திருந்தது. போர்த்துக்கீசரைக் கடுமையாக எதிர்த்துப் போர் புரிந்த சீதாவாக்கை மன்னனுகிய முதலாம் இராசசிங்கன் தனது பாரம்பரிய சமயத்தை விட்டுச் சைவத்தைத் தழுவியதாகக் கூறப்படுகிறது. அரண்மனையில் சைவம் பெற்றிருந்த செல்வாக்கை எடுத்துக் காட்டும் நல்ல உதாரணம் இதுவாகும். மேலும் சைவப் பற்றுடைய இம்மன்னன் ''பைரவ ஆண்டி'' என்றழைக்கப்படும் ஒரு சிவாலயத்தை சீதாவாக்கையில் விசயநகரக் கட்டட அமைப்புமுறையில் கட்டியுள்ளான். சிவனொளிபாதயாத்திரை வருமானங்களைக் கூடச் சைவத் துறவிகளுக்கு வழங்கினுன் என்று சூளவம்சத்தில் கூறப்படுகிறது.

இரண்டாம் இராசசிங்கன் கோணேசர் கோயிலையும், கதிர்காமத்தையும் திருத்தியமைப்பதில் ஈடுபட்டதாக வாலாறு கூறுகின்றது.

ஆரும் விஜயபாகு மன்னன் காலத்தில் கொழும்பு மாவட்டத்தில் கந்தசுவாமி கோவில் ஒன்று இருந்ததாக இங்கு கிடைத்த தமிழ்க் கல்வெட்டொன்றின் மூலம் அறியக்கிடக்கிறது.

கோட்டை அரசின் தலைநகரான ஜயவர்த்தன புரத்திற்கு வெளியே ஈசுவரன் கோயில் ஒன்று அமைந்திருந்தது. அக்கோவிலை பல்வகை வாத்தியங்களும் இசைக்கத் தமிழ் மொழித் தேவாரங்கள் ஓதப்பட்டு வந்ததாகச் சிங்கள நூலாகிய பஸலகி ஹினி சந்தேச என்ற நூலின் 12ஆவது செய்யுள் கூறுகின்றது.

## விடைக்கொடி:

பாண்டியர் படைத்தலைவனென மாகாவம்சத்தில் குறிப்பிடப்பட்ட '' ஆரியச் சக்கரவர்த்தி'' எனக் கருதப்படும் யாழ்ப்பாணத் தமிழ் அரசர்களுள் ஒருவராகிய குலோத்துங்க சிங்கை ஆரியச் சக்கரவர்த்தி காலத்தில் ஈழம் எங்கும் சிங்கை அரசன் விடைக்கொடியே (சிவனது வாகனம்) விளங்கியது என யாழ்ப்பாண வைபவமாலை கூறும்.



## நாயன்மார்க்குத் திருமடம்:

யாழ்ப்பாணத்து அரசர்கள் (ஆரியச் சக்கரவர்த்திகள்) சைவ சமயத்தவர்களாகவே விளங்கினர். இவர்கள் பல சிவாலயங்களைக் கட்டியுள்ளனர். அவற்றுள் சிறப்புவாய்ந்த சிவத்தலம் நல்லூர் சட்டநாதர் கோயிலாகும். யாழ்ப்பாணத்து அரசர் ஆட்சி ஐரோப்பியர் கைக்குப் போகும் வரைக்கும் இந்நாட்டுத் தமிழர் யாபேரும் சைவசமயத்தவர்களாகவே இருந்தனர். யாழ்ப்பாணத்து அரசர் காலத்தில் அவர்களின் அமைச்சராக விளங்கிய அடியார்க்கு நல்லார் நல்லூருக்கு அருகே சைவநாயன்மார் அறுபத்து மூவருக்கும் திருமடம் அமைத்து வழிபாடாற்றச் செய்தார். இதனால் இந்த இடத்தின் பெயர் நாயன்மார்கட்டு என இன்றும் விளங்குகின்றது. திருக்கோவில் வழிபாட்டோடு மாத்திரம் நிற்காது, அடியார் வழிபாட்டிலும் இந்நாட்டவர் மிக்க பத்திமையுடையவர்களாக இருந்தனர் என்பதை இது எடுத்துக்காட்டுகின்றது.

## புராண படனம்:

இந்நாட்டில் உள்ள சிவாலயங்களிலும் விநாயகர் ஆலயங்களிலும், சுப்பிரமணியர் ஆலயங்களிலும் கட்டளைப்பிரகாரம் நித்திய நைமித்தியங்கள் வழுவாது நடந்து வருவதுடன், பெரும்பாலான ஆலயங்களில் ஆண்டு தோறும் திருத்தொண்டர் பெரியபுராணம், திருவிளையாடற் புராணம், கந்தபுராணம், திருவாதவூரடிகள் புராணம், காசிகாண்டம் முதலிய புராணங்கள் எவ்வெப்புராணம் எவ்வெக்காலத்திற் படித்து முடிக்க வேண்டுமோ, அவ்வப்புராணத்தை அவ்வக்காலத்தில் பொருள் சொல்வதோடு படித்து முடித்து, புராணம் நிறைவேறும் காலங்களில் அன்னதானமும் பிற பல தானங்களும் ஈந்து வரும் நியமம் இந்நாட்டில் பண்டுதொட்டு இருந்துவருகின்றது. இப் புராணபடனம் படிக்கும் முறை ஈழநாட்டைத் தவிர்ந்த வேறெந்த நாட்டிலும் சைவ உலகிற் காணமுடியாத தனிச் சிறப்புடையதாகும்.

## சைவநூல் உரையாசிரியர்கள்:

செய்யுள் நடையிலுள்ள நூற்கருத்துக்களைத் தெளிவாக்கி, மூல நூலாசிரியர் கருத்துகளுக்கு இணங்க ஐயந்திரிபறக் கூறுந் திறமை பெற்றோர் உரையாசிரியர் எனப்படுவர், உரையாசிரியரானவர் ஆழமான இலக்கணப் பயிற்சி—பலவகை இலக்கியப் புலமை, நிகண்டு நெட்டுருவால் நிபுணத்துவம், புராண இதிகாசத் தேர்ச்சி, உலக அறிவு போன்றவற்றில் கரைகண்டிருக்கவேண்டும். ஈழத்தில் சைவ அறிவும், அருள் இயல்பும், இதிகாச அறிவும் வளர்ச்சியுற்றமைக்குக்

காரணமாயிருந்தோர் பலருள், மேற்கூறிய வன்மைபெற்ற ஆசார சீல உரையாசிரியர்களுக்கும் (நூலுக்கு உரைசெய்யும் உரையாசிரியர்கள், புராணங்களுக்குப் பொருள் கூறும் உரையாசிரியர்கள்—பயன் சொல்பவர்கள்)பிரசங்கிகள்,சொற்பொழிவாளர்கள்,புராண இதிகாசங்களை ஒட்டி எழுதிய நாடகங்களையும்—கூத்துக்களையும் இடத்துக்கு இடம் காலத்திற்குக் காலம் நடத்திவந்த எழுத்தாளர்கள், அண்ணாவிமார்களுக்கும் பெரும்பங்கு உண்டு. சைவநூல்களுக்கு உரை செய்து பெரும்புகழ் படைத்த பெரியோர் பலர் அன்று இங்கு இருந்தனர்; இன்றும் சிலர் உளர்; எப்பொழுதும் இருந்தே ஆவர்.

சைவநூல்களுக்குப் புத்துரை செய்த ஈழத்து உரையாசிரியர் சிலரின் விவரங்கள் இதன்கீழ்த் தரப்படுகின்றன.

| உரையாசிரியர் பெயர் | உரைநூற் பெயர் |
|---|---|
| 1. நல்லூர் ஞானப்பிரகாச முனிவர் | 1. சிவஞானசித்தியார் — சுபக்கம்<br>(சித்தாந்தப் பேராசிரியர் இணுவில் நடராச ஐயர் இவ்வுரை நூலைத் தனி நூலாக அச்சிட்டுள்ளார். பரராசசேகர மன்னனின் மருகனாகிய அரசகேசரி காலத்துக்குப் பின், ஈழத்திற்குப் பெரும் புகழ் ஈட்டிக் கொடுத்த உரையாசிரியர் ஞானப்பிரகாச முனிவராவர்). |
| 2. ஆறுமுகத் தம்பிரான் | 1. பெரியபுராணம்<br>(பெரியபுராணத்துக்கு முதன் முதல் எழுதப்பட்ட உரை தம்பிரானுடையதாகும்.) 1885—1889ஆம் ஆண்டுகளில் பகுதி பகுதியாக வெளிவந்தது.<br>2. திருமுறை கண்ட புராணம்<br>3. சேக்கிழார் புராணம்<br>4. அற்புதத் திருவந்தாதி<br>5. மூத்தநாயனார் இரட்டை மணிமாலை |
| 3. நீர்வேலி சங்கர பண்டிதர் | 1. சிவபூசையந்தாதி |
| 4. வல்வை ச. வைத்திலிங்கம்பிள்ளை | 1. கந்தபுராணம் அண்டகோசப்படலம்<br>2. தெய்வானை அம்மை திருமணப் படலம்<br>3. வள்ளியம்மை திருமணப்படலம்<br>4. கல்வளையந்தாதி<br>5. கந்தரலங்காரம் |



| உரையாசிரியர் பெயர் | உரைநூற் பெயர் |
|---|---|
| 5. வித்துவசிரோமணி ந. ச. பொன்னம்பல பிள்ளை (நாவலர் மருமகன்) | 1. மயூரகிரிப்புராணம்<br>(உரை சொல்வதில் திலகமாகத் திகழ்ந்தவர். இவரிடம் பாடங் கேட்டோர் பெரியபுராணம், கந்தபுராணம் என்பனவற்றுக்கு எழுதி வைத்திருந்த குறிப்புகள் தமிழ்நாட்டிலும் ஈழத்திலும் கையெழுத்துச் சுவடியாகப் பரவியுள்ளன.) |
| 6. இணுவில் அம்பிகைபாகப் புலவர் | 1. தணிகைப்புராண நகரப்படலம் வரையான உரை — முழுவதற்கும் பொழிப்புரை. |
| 7. புலோலி நா. கதிரைவேற்பிள்ளை | 1. கூர்மபுராணம்<br>2. பழனித்தல புராணம் |
| 8. உடுப்பிட்டி சிவசம்புப் புலவர் | 1. மறைசையந்தாதி<br>2. கந்தபுராணம்<br>3. வள்ளியம்மை — திருமணப்படலம்<br>4. சேதுபுராணம் (அச்சிடப்படாதது) |
| 9. நீர்வேலி சிவப்பிரகாச பண்டிதர் | 1. திருச்செந்தூர்ப் புராணம் |
| 10. வழக்கறிஞர் மு. திருவிளங்கம் | 1. சிவப்பிரகாசம்<br>பதிப்பு ஆண்டுகள் — 1918, 1938, 1941, 1974<br>2. சிவஞானசித்தியார் — 1925, 1971<br>3. கந்தரலங்காரம்<br>4. திருப்புகழ் |
| 11. சுன்னாகம் அ. குமாரசுவாமிப் புலவர் | 1. திருவாதவூரடிகள் புராணம்<br>2. மறைசையந்தாதி |
| 12. காசிவாசி செந்திநாத ஐயர் | 1. திருநீலகண்ட பாஷியம் (தமிழ் உரை)<br>2. தேவாரம் வேதசாரம்<br>3. கந்தபுராண நவநீதம் |

| | உரையாசிரியர் பெயர் | உரைநூற் பெயர் |
|---|---|---|
| 13. | மட்டுவில் க. வேற்பிள்ளை | 1. திருவாதவூரடிகள் புராணம்<br>2. புலியூரந்தாதி<br>3. அபிராமி அந்தாதி |
| 14. | மகாவித்துவான் புலோலியூர் சிவஸ்ரீ ம. முத்துக்குமாரசுவாமிக் குருக்கள் | 1. கந்தபுராணம்—உற்பத்தி காண்டம்<br>2. அசுர காண்டம்<br>3. மகேந்திர காண்டம் |
| 15. | வே. சிதம்பரப்பிள்ளை | 1. கந்தபுராண— சூரபன்மன் வதைப் படலம் |
| 16. | சாவகச்சேரி ச. பொன்னம்பலபிள்ளை | 1. கந்தபுராணம் — மார்க்கண்டேயர் படலம் |
| 17. | புலோலி வைத்திலிங்க தேசிகர் (முத்தமிழ்ப் பெரும்புலவர் விபுலா நந்த அடிகளின் ஆசிரியர்) | 1. பிள்ளையார் புராணம் |
| 18. | ஏகாம்பரப் புலவர் | 1. கந்தரந்தாதி |
| 19. | தும்பளை. சுப்பிரமணிய சாஸ்திரிகள் | 1. கந்தபுராணம்<br>2. கந்தரநுபூதி |
| 20. | சைவப்பெரியார் சு. சிவபாதசுந்தரம் | 1. திருவருட்பயன்—1918<br>2. திருவாசகமணிகள்<br>3. கந்தபுராண விளக்கம் |
| 21. | பண்டிதமணி மாவை சு. நவநீதகிருஷ்ண பாரதியார் | 1. திருவாசகம்—பேருரை |



| | உரையாசிரியர் பெயர் | உரைநூற் பெயர் |
|---|---|---|
| 22. | திக்கம் சி. செல்லையாபிள்ளை (தீட்சாநாமம் ஈசான சிவன்) | 1. சீகாழி சிற்றம்பலநாடிகள் துகளறு போதம் — 1950. |
| 23. | காரைநகர் பண்டிதர்— சு. அருளம்பலம் | 1. திருமுருகாற்றுப்படை — 1936<br>2. திருவாசகம் பகுதி I, பகுதி II 1967 — 1973 |
| 24 | பண்டிதமணி சி கணபதிப்பிள்ளை | 1. கந்தபுராணம் — தட்சகாண்டம் |
| 25. | பண்டிதமணி இ. பரமேசுவரி அம்மையார் | 1. ஈழத்துச் சிதம்பர புராணம்—1971. சருக்கம் 10. பாடல்கள் 806. இப் புராணம் பாடியவர் நவாலியூர் சோ. இளமுருகனார். உரையாசிரியர் நூலாசிரியர் மனைவியார். இந் நூலின் தனிச்சிறப்பு, மூலமும் உரையும் ஒன்றிய முறையில் வெளி யானமையும், ஒரே குடும்பத்தின ரால் ஆக்கம் பெற்றமையும், பெண் பாற் புலவர் ஒருவரால் உரை செய்யப்பட்டிருப்பதுமாம். |
| 26. | கொக்குவில் வை. நல்லையா | 1. கந்தபுராணம்—முழுவதும்<br>2. பெரியபுராணம்—முழுவதும் |
| 27. | யோகி க. கார்த்திகேசு | 1. கந்தபுராணம் — யுத்தகாண்டம்<br>2. அபிராமி அந்தாதி<br>3. கந்தரநுபூதி |

**சைவக்குருக்கள் பரம்பரை:**

திருவெண்ணெய் நல்லூரில் ஆரூரரின் பாட்டனர் எழுதிக்கொடுத்த மூல ஓலைக் கைச்சாத்தை அவையோர் ஆராய்ந்தனர். அதற்காக அரண் தருகாப்பில் (Safe Custody) இருந்து வேறோர் ஆவணம் கொண்டு வந்து காட்டப்பட்டது. அவ் "ஆசிலா எழுத்தை" (Genuine and Admitted Signature and Handwriting) அவையோர்நோக்கி, முதியவன் தந்த மூல ஓலையுடன் ஒப்பு நோக்கி உண்மையை உணர்ந்தனர். இவ்வாறு ஓலைகளை எடுத்துவந்து தருவதற்கும், அவையின் அலுவல்களைக் கவனிப்பதற்கும், 'அந்நாளில் அலுவலன் ஒருவன் இருந்தான். அவன் "அருள் பெறு கரணத்தான்" (Clerk of the Court)

என்ற பெயரால் அழைக்கப்பட்டு வந்தான். இக் கரணத்தார் மூதறிவினராகவும், அனைத்து நூலுணர்ந்தவராகவும், பரம்பரைச் சைவராகவும் இருந்து வந்தனர். அன்று அங்கு பேசப்பட்ட அக் கரணத் தார் பரம்பரையினர் யாழ்ப்பாண ஆரியச் சக்கரவர்த்திகள் மரபில் வந்த சங்கிலி மன்னனது ஆட்சிக்காலத்தில் இங்கு கணக்கர்களாக இருந்ததாக அறிகின்றோம். அவர்கள் இங்கு "கருணிகர்" என்று அழைக்கப்பட்டனர். "கருணிகர்" என்றால் "கணக்கர்" என்பது பொருளாகும்.

அக்காலத்தில் காடாகக் கிடந்த கரணவாயை சங்கிலிமன்னன் அவர்களுக்குக் கொடுத்தான். கொடுத்ததுடன் உடுப்பிட்டியைச் சார்ந்த 12 குறிச்சிகளுக்கும் அவர்களைக் கருணிகர்களாக்கியதாக வரலாறுண்டு. "கருணிகர் வாயில்" என்ற அந்நாட் பெயர் மருவியே "கரணவாய்" என இன்று விளங்குகின்றதாகக் கூறப்படுகின்றது. யாழ்ப்பாணத் தமிழரசு மறைந்த பின்னர், இக்கருணிகர்கள் சைவக் குருக்கள்மாராகி, ஆலய அர்ச்சகர்களாகவும், ஊர்ப்புரோகிதர்க ளாகவும் மாறிச் சைவத் தொண்டாற்றி வருகின்றனர்.

இன்று யாழ்ப்பாணத்தில் குருக்கள் வளவு, குருக்கள் மடம், குருக்கள் கோவில் என்ற பெயர்களில் இருக்கும் இடங்கள் இச் சைவப்பரம்பரை யினர் பெயரால் உண்டாகிய காரண இடுகுறிப் பெயர்களேயாம், இப் பரம்பரையில் வந்தவர்தான் வரணி தில்லைநாதத்தம்பிரான் சுவாமிகள் ஆவார்.

"திருவாரூர்த் தேரழகு" என்பது முது மொழி. திருவாரூருக்கு அடுத்தபடியான தேரழகு மிக்க தலம் திருமறைக்காடாகும் (வேதாரணி யம்). இத் திருமறைக்காட்டு ஆலய ஆட்சிப்பொறுப்பு அறங்காவலர் களாக இன்றும் இருந்து வருபவர்கள் கரணவாய் – வரணிச் சைவக் குருபரம்பரையினரேயாவர். இவ்வுரிமை, வரணி தில்லைநாதத் தம்பிரான் சுவாமிகள் காலத்தில் அவருக்குக் கிடைத்ததாகும்.

27-10-49 இல் இவ்வாலயம் சென்னை அறநிலையப் பாதுகாப்புப் பகுதியின் நேரடி நிர்வாகத்துக்கு வந்துள்ளது. அப்படி வந்தும், அவர் களால் நியமிக்கப்பட்ட நிர்வாக அதிகாரியும், வரணி ஆதீனத்தைச் சேர்ந்த மரபுவழி அறங்காவலருமே (Hereditary Trustee) கோவிற் கருமங்களைக் கவனித்து வருகின்றனர்.

பராபவ ஆண்டு ஆவணி 12இல் (28-8-66) பரம்பரை அறங்காவலர் ஸ்ரீலஸ்ரீ கதிர்காமபண்டார சந்நிதி அவர்களின் முயற்சியால் திருக்குடத் திருமஞ்சனம் (கும்பாபிஷேகம்) நடைபெற்றமை குறிப்பிடத்தக்க தாகும்.



**ஆங்கிலத்தில் சைவக் கொள்கை:**

சைவத்தைப் பற்றிப் பிற இனத்தவர்களும், சமயத்தவர்களும் அறிந்துகொள்ளும்பொருட்டு நம்நாட்டு ஆங்கிலப் புலமை படைத்த சைவப் பெரியோர் சிலர் ஆங்கிலத்தில் சைவ நூல்களும் கட்டுரை களும் எழுதியுள்ளனர். கீழ்க்காண்போர் அவ்வரிசையில் குறிப்பிடத் தக்க முக்கிய சிலராவர்.

கி. பி. 1857இல் சேர். கு முத்துக்குமாரசுவாமி அவர்கள் உறோயல் ஏசியற்றிக் கழக இலங்கைக் கிளைச் சஞ்சிகையில் "Synopsis of Saiva Siddhanta" (சைவசித்தாந்தச் சுருக்கம்) என்ற தலைப்பில் அமைந்த கட்டுரை ஒன்றெழுதியுள்ளார்கள். ஆங்கிலத்தில் சைவ. சித்தாந்தம்பற்றி முதன் முதலாக வெளியாகிய ஆராய்ச்சி விளக்கக் கட்டுரை இதுவேயெனக் கூறப்படுகின்றது.

யேர்மன் நாட்டைச் சார்ந்த சமயப் பிரசாரகராகிய எச். டபிள்யூ. சோமறஸ் (H. W. Schomerus) என்னும் பெரியார் தான் இந்தியாவில் வாழ்ந்த காலத்தில் "சைவசித்தாந்தம்" (Saiva Siddhanta) என்னும் தலைப்பில் யேர்மன் மொழியில், 1912இல் நூல் ஒன்று செய்தனர். இதனை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர் டாக்டர் ஆர்தர் பிச் (Dr. Arthur Fiz). சைவசித்தாந்தம் பற்றிய சகலவற்றையும் நிறைவாக உள்ளடக்கி ஐரோப்பிய மொழியில் எழுதப்பட்ட நூல் இது ஒன்றே என அறிஞர் உலகம் கூறுகின்றது. இப் பெருமைபெறு நூல் செய்த ஆசிரியரர்கிய சோமறஸ் என்பவர் "The Culture of the Soul Among the Western Nations" (மேலை நாட்டார் உள்ளத்தின் பண்பு நிலை) என்ற சேர் பொன் இராம நாதனது நூல் சைவசித்தாந்த அடிப்படையில் எழுதப்பட்ட ஒன்றாகும் எனத் தனது நூலில் கூறியுள்ளார். மேலும், அமெரிக்காவின் அழைப்பிற்கு இணங்க அங்கு சென்ற சேர். பொன். இராமநாதன் ஆற்றிய சொற்பொழிவுகள் யாவும், சைவசித்தாந்த அடிப்படையில் அமைந்தவை என்பது முக்கியமாக இங்கு குறிப்பிடத் தக்கதாகும்.

சித்தாந்த சைவ அறிவைப் பரப்பி வளர்க்கும் பொருட்டு "சித்தாந்த தீபிகை" என்ற ஆங்கிலச் சஞ்சிகை ஒன்றைத் தென்னாட்டில் திறம்பட நடத்தி வந்தவர் சைவத் திரு ஜே. எம். நல்ல சாமிப்பிள்ளை அவர்களாவர். அச்சஞ்சிகையில் எமது பெரியாராகிய கொக்குவில் குகதாசர் ச. சபாரத்தின முதலியார் சைவம் பற்றிப் பல கட்டுரைகள் எழுதியுள்ளார்கள். அவ்வெழுத்து மூலம் அந்நாட்டுப் பிரபல சைவப் பெரியோர் பலரது நட்பு முதலியார் அவர்களுக்கு உண்டாகியுள்ளது. இவர் 1913இல் சைவசித்தாந்தப் பார்வையில் எழுதிய "Essentials of Hinduism" (இந்து மதத்தின் பிரதான

அம்சங்கள்) என்ற நூலும், பண்டைத்தமிழர் சமயம் ''வைதிக சைவமே'' என்ற கொள்கையைத் தக்க பல ஆதாரங்களுடன் விளக்கிக் காட்டி எழுதிய "Religion of the Ancient Tamils" (பண்டைத் தமிழர் சமயம்) என்ற நூலும் சைவ உலகம் முன் வரிசையில் வைத்தெண்ணப்பட வேண்டிய நூல்களாகும்.

புலோலி சைவப்பெரியார் சு. சிவபாதசுந்தரம் அவர்களால் எழுதப்பட்டு இலண்டனில் அச்சிடப்பட்டு வெளியாகிய "Saiva School of Hinduism" (இந்து சமயத்தில் சைவக்கொள்கை) என்ற நூலும், "Glories of Saivaism" (சைவத்தின் மாட்சி) என்ற யாழ்ப்பாணம் சைவபரிபாலன சபை வெளியீட்டு நூலும் ஈழத்துச் சைவ வளர்ச்சியின் இரு கண்களாகப் போற்றக்கூடிய நூல்களாகும். 1948இல் இப் பெரியாரைத் தருமபுர ஆதீனத்தினர் தமிழ்நாட்டிற்கு அழைப்பித்து, சைவத்திரு ஜே. எம். நல்லசாமிப்பிள்ளை அவர்களது சிவஞானசித்தியார் மொழிபெயர்ப்பைத் திருப்பிப் பார்வையிடுவித்துத் திருத்தியும், புதுப்பித்தும் வெளியீடு செய்தனர். "An Outline of Sivagnana Botham with a Rejoinder to a Christian Critic —1951" என்ற இவரது வெளியீடு, சமய தத்துவம் பயிலும் இக் காலத்தோர் கட்டாயமாகக் கற்கவேண்டியதாகும்.

1942இல் யாழ்ப்பாணம் சைவபரிபாலன சபை வெளியீடாக 'விஞ்ஞானப் பட்டதாரி' ஒருவரது ஆக்கம் எனப் பிரசுரஞ் செய்யப்பட்ட, "The Elements of Saiva Siddhantam" (சைவசித்தாந்தக் கருவூலம்) என்ற நூல், சித்தாந்த சைவம் கற்கப் புகுவோர்க்கு வழிகாட்டியாக அமைந்த நல் விருந்து நூலாகும். இதனது மறுபிரசுரம் 1955இல் வெளியாகியுள்ளது. ''விஞ்ஞானப் பட்டதாரி'' என்ற பெயரில் இந்நூலைச் செய்த பெரியார் கொழும்பு விவேகாநந்தசபையின் ஆரம்பகால முக்கிய உறுப்பினர்களில் ஒருவராகிய அராலி, அ. செல்லப்பாபிள்ளை அவர்களது. சகோதரராகிய நீராவியடி அ. விசுவநாதபிள்ளை அவர்களாவர்.

ஆங்கிலத்தில் திருவாசகத்தை முதன்முதல் 1900ஆம் ஆண்டில் மொழிபெயர்த்தவர் டாக்டர் ஜி. யு. போப். இதன் மறுபதிப்பு சென்னைப் பல்கலைக் கழகத்தாரால் வெளியிடப்பட்டது. 1934இல் வேதமுத்து என்பவரினால் திருவம்மானையும், திருச்சாழலும் மொழிபெயர்க்கப்பட்டன. இதனை வெளியிட்டவர்கள் சென்னை கிறீத்தவ சங்கத்தார். 1958 இல் கே. எம். பாலசுப்பிரமணியத்தின் மொழிபெயர்ப்பு வெளியாகியது. இவ்வரிசையில்,

1963 இல் எமது நாட்டு ஆங்கிலப் புலவராகிய திருமதி இரத்தினநவரத்தினம்—முன்னுள் கல்விப் பணிப்பாளர் (Director of Education) அவர்களால் ஆங்கிலத்தில் எழுதப்பட்ட 256 பக்கங்களைக் கொண்ட "திருவாசக விளக்கம்" என்னும் நூல் பாம்பாய் பாரதிய வித்தியா பவனில் வெளியிடப்பட்டது. சில பாடல்களின் மொழி பெயர்ப்பும், பிறபாடல்களின் விளக்கமும் சேர்ந்து திருவாசகம் எவ்வாறு சிறந்த ஒரு பத்திநூல் ஆகின்றது என்பதனை நயம்படச் சிறப்பாக எடுத்துக் காட்டும் நூல் இதுவாகும். இவ்வம்மையாரது "A New Approach to Tiruvacagam" 1971இல் அண்ணாமலைப் பல்கலைக்கழக 2 ஆம் பதிப்பாக வெளிவந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.



வட்டுக்கோட்டை யாழ்ப்பாணக் கல்லூரி 1923இல் தொடக்கப்பட்ட ஒரு கிறித்தவக் கல்லூரி. இக்கல்லூரியில் அந்நாளில் கற்பித்தவர்கள் ஆங்கிலேயர். அங்கு கற்பித்த அப்படியான கிறித்தவ ஆங்கிலேய ஆசிரியர்கள், சைவ நூல்களைக் கற்று ஆங்கிலத்தில் மொழி பெயர்த்ததாக அறிகிறோம். ஹென்றி றிச்சாட் ஹோய்சிங்ரன் (Hentry Richard Hoisington) என்னும் இக்கல்லூரியைச் சேர்ந்த பாதிரியார், தமிழ், வடமொழி ஆகியவற்றை நன்கு கற்று இவற்றிலுள்ள சில சைவநூல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார்.

மேலும் டாக்டர் டாசில் (Dr. Dashiel) என்பர் 1846-49ஆம் ஆண்டுகள் வரையான காலத்தில் உவைமன் கதிரவேற்பிள்ளை அவர்களது உதவியுடன் சிவப்பிரகாசம், சிவஞானபோதம் போன்ற சித்தாந்த நூல்களை மொழிபெயர்த்துள்ளார்,

மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்கையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பதுடன், சுவாமி விவேகாநந்தர் வேதாந்தக் கொள்கைகளை மேலை நாட்டில் பரப்பியது போன்று, சைவ சித்தாந்தக் கொள்கைகளையும் அங்கு பரப்பும் பணிகளில் ஈடுபட்டுழைக்கும்படி தருமை ஆதீனத்தில் அருளாட்சி புரிந்துவந்த 25ஆவது குருமுதல்வர் கைலைக் குருமணி அவர்கள், விபுலாநந்த அடிகளை 1944 இல் கேட்டிருந்தார்கள். அடிகளும் அப்பணி நிற்க இசைவுபட்டு அதற்கேற்ற முயற்சிகளில் ஈடுபட இருந்தனர். ஆயின் ......... பொல்லாக்காலன் அவரை நீண்டதொண்டாற்ற—நீண்டநாள் வாழவைக்காது எம்மிடமிருந்து பிரித்துக்கொண்டனன். அவர் மேற்கொள்ள இருந்த முயற்சி கைகூடியிருப்பின், சைவசித்தாந்த அடிப்படையிலமைந்த விபுலாநந்த சபைகள் பல உலக நாடுகளில் தோற்றியிருக்கக் கண்டு சைவ உலகம் களித்திருக்கும்.

## 19 ஆம் நூற்றாண்டு :

1814 இல் யாழ்ப்பாணப் பிரதேசத்தில் 329 சைவ ஆலயங்கள் இருந்ததாகக் கூறப்படுகின்றது. டாக்டர் வண. பாலடிஸ் 1816இல்

எழுதிய யாழ்ப்பாணப் பட்டனத்தின் சுருக்க வரலாறு (A short Account of Jaffna Patanam—1816 by Dr. Rev. Baldaeus) என்ற நூலில் இவ் விவரங்கள் உள. சைமன் காசிச் செட்டியின் சிலோன் கசற்றீர் (Ceylon Gazetteer) என்ற நூலில் தீவின் ஏனைய பகுதிகளில் உள்ள கோயில்களின் விவரங்கள் இருக்கின்றன.

19ஆம் நூற்றூண்டின் மத்தியகாலத்தில் ஏற்பட்ட சைவசமய விழிப்புணர்ச்சி, ஆரம்பத்தில் கிறித்தவம் பரவுதலைத் தடைசெய்து சைவசமயக்கோட்பாடுகளை மீண்டும் நிலைநிறுத்துவதை முக்கியகுறிக் கோளாகக் கொண்டிருந்தது. இவ் வியக்கத்தைக் கொண்டுநடத்த முன்னின்றுழைத்த அக்காலப் பெரியவர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலராவர். ஆயின், இதுபற்றி இவர் கூடுதலாகச் சிந்திக்க முன்னரே வண்ணார் பண்ணையில் 30-9-1842 இல் நடைபெற்ற சைவக்கூட்டம் ஒன்றில் சைவப்பாடசாலை ஒன்று கட்டுவதுபற்றியும், அச்சுக்கூடம் ஒன்று நிறுவிச் சைவப்பத்திரிகை ஒன்று வெளியிடுவதுபற்றியும் கலந்துரையாடினர். இச்செய்தி, 20-10-1842 இல் வெளியான உதயதாரகை என்ற கிறித்தவப் பத்திரிகையில் வெளியாகியுள்ளது.

அரசாங்க உதவியுடன் யாழ்ப்பாணத்தில் வடமொழி தமிழ் மொழிப் பாடசாலை அமைப்பதற்கு அந்நாள் நல்லூர் கந்தசுவாமி கோவில் பிரதம அர்ச்சகராக இருந்த சிவஸ்ரீ சுப்பிரமணிய ஐயர் (1806 – 1811) முயற்சிகள் மேற்கொண்டார். ஆயின், கல்விபற்றி அக்கால அரசாங்கத்திடம் திட்டமான கொள்கை எதுவுமில்லாதிருந்ததினால் அவரது முயற்சி தோல்வி கண்டது. 1834 இல் யாழ்ப்பாணத்தில் 239 சைவப்பாடசாலைகள் இருந்ததாகவும், காலப்போக்கில் இவைகள் கிறித்தவர்களது கைக்கு மாறிவிட்டதாகவும், இதனால் சைவப்பிள்ளைகளுக்குப் புறம்பான பாடசாலைகள் நிறுவவேண்டிய நிலை ஏற்பட்டதாகவும் கூறப்படுகின்றது. இப் பாடசாலைகள் பெரும்பாலும் திண்ணைப்பள்ளிக்கூடங்களாக விளங்கி இருக்கவேண்டுமெனக் கருதப்படுகின்றது—(The Hindu Board for the Promotion of Education Jaffna: *1930* by Hon. S. Rajaratnam).

சமய சின்னங்களாகிய திருநீறு சந்தனம் போன்றவற்றை கிறித்தவ பாடசாலைகளில் பயின்றுவந்த அந்நாட் சைவ மாணவர்கள் அணிந்து செல்வது வழக்கம். அப்படிச் செல்வோரை அங்கு அவற்றை அகற்றும்படி வற்புறுத்துவர். அகற்ற மறுத்த சைவ மாணவர்கள் வெசிலியன் பாடசாலையிலிருந்து நீக்கப்பட்டதனாற்றான் 1872இல் நாவலர் சைவ ஆங்கில வித்தியாசாலை ஒன்றை ஆரம்பித்தார். ஆயின் பணமுடைமையாலும், அரச அங்கீகாரமின்மையாலும் 1876 இல் இது மூடப்பட்டது.



*1880* இற்குப் பின் சைவசமய வளர்ச்சியில் பெரும்பங்கு கொண்டோர் ஆங்கிலக் கல்வியின் பயனாக உயர் தொழில்கள் புரிந்தோராவர். இதில் சட்டவல்லுனர். இளைப்பாறிய நீதிபதிகள், சைவ அரசியல் வாதிகள் முதலானோர்க்குப் பெரும் பங்குண்டு.

### முதற் சைவப்பாடசாலை:

நாவலர் பெருமானது சைவப்பிரகாச வித்தியாசாலை தோன்றுவதற்கு முன்னரே சைவப்பிள்ளைகளது கல்வி வளர்ச்சியை முன்னிட்டுத் தனது பொறுப்பில் ஒரு சைவப்பாடசாலையை 1820ஆம் ஆண்டளவில் உடுப்பிட்டியில் சைவத்திருவாளர் அருளம்பல முதலியார் அவர்கள் நிறுவியுள்ளார்கள், இவருக்குப்பின் இப்பாடசாலை இவரது மகன் அம்பலவாண முதலியார் அவர்களினால் சிறப்பாக நடத்தப்பட்டுவந்ததாக, *25-9-1851*இல் வெளியாகிய "உதய தாரகை" என்ற கிறித்தவ வார இதழின் அறிக்கை ஒன்று கூறுகின்றது.

### பக்தி இலக்கியம்:

19ஆம் நூற்றூண்டிலும் இந்நூற்றூண்டிலும் ஆக்கம்பெற்ற செய்யுளிலக்கியங்களில் பெரும்பாலானவை சமயச் சார்புடையனவாகும். இக்காலத்தில் சைவசமய உட்பொருள்களை விளக்கிப்பாடிய பாடல்கள் பல. ஊர்கள் தோறும் உள்ள திருக்கோவில்களில் கோவில்கொண்டிருக்கும் மூர்த்திகள் மீது அந்தாதி, வெண்பா, ஊஞ்சல், அகவல் மான்மியம் முதலிய பிரபந்தங்கள் பாடப்பட்டன. இவற்றுள்ளும் அந்தாதி, ஊஞ்சல் ஆகிய இருவகைப் பிரபந்தங்களையுமே மிகக விருப்புடன் புலவர்கள் பாடிவந்தனர்.

ஈழத்தில் சைவத்தமிழ் மக்கள் வாழும் இடங்களில் கோயில் இல்லாத ஊரே இல்லை எனலாம். அத்தோடு ஏதோவொரு வகைப் பாடலும் பெறாத கோவிலுமில்லை என்றும் கூறலாம். எனவே, ஈழத்தில் சைவம் தூய்மையுடன் வளர்வதற்குக் காரணமா யமைந்தவை மேற்கூறிய பிரபந்தவகைப் பாடல்கள் என்பதும் தேற்றம்.

ஈழத்தில் சைவசமய வளர்ச்சியின் பொருட்டு நூற்றுக்கணக்கான பத்தி இலக்கியங்களைப் பாடுவதற்கமைவான சூழ்நிலையை உண்டாக்கி வைத்தவர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் பெருமானேயாம். அவரால் உருப்பெற்ற புலவர் பரம்பரை இன்றும் ஈழத்தில் சுடர்விட்டொளி கொடுத்துக்கொண்டேயிருக்கின்றது.

நாவலர் மாணவ பரம்பரையில் அகப்படாத ஈழத்துத் தமிழ்ப் புலவர்களை இன்று காண்பதரிது. இக்காரணத்தினாற்றான் 19ஆம் நூற்றூண்டிலும், அதற்குப் பின்னரும் பாடப்பட்ட நாவலர் பரம்பரையினர் பாடல்கள் சைவசமயச் சார்பு பற்றி அமைந்திருக்கக் காண்கின்றோம்.

**சமயதாபனத் தோற்றம் :**

சமய முன்னேற்றத்திற்காக உழைப்பதற்கும் — எல்லோரையும் ஒன்றுபடுத்தி அதில் ஈடுபாடு கொள்ளச்செய்து ஊக்கமளிக்கத் தாபன அமைப்புத் தேவைப்பட்டது. இந்நோக்கால் ஏற்பட்டவையே அகில இலங்கைச் சைவபரிபாலன சபை, யாழ்ப்பாணம் சைவபரிபாலன சபை, கொழும்பு விவேகாநந்த சபை போன்ற தாபனங்களாகும்.

சைவசமயக் காற்ருேட்டம் பாடசாலைகள் முழுவதும் பரவ வேண்டும், மேலைநாட்டு உயர் கல்விக்கூடங்கள் போல இவை வளர வேண்டும் என்ற பாங்கில் உருவாக்கப்பட்டனவே சைவப்பாடசாலைகளும் — சைவப் பெருங் கல்லூரிகளுமாம்.

சைவர்களுக்கென ஆசிரிய பயிற்சிக்கூடமொன்றை நிறுவுவதற்கு 1913இல் சபை ஒன்று தாபிக்கப்பட்டது. காரைநகர் அருணுசல உபாத்தியார், ஏரம்பையர் போன்ருேர் இதில் ஊக்கம் காட்டி வந்தனர்.

இக்காலத்தில் கிழக்கு மாகாணத்தில் சைவக் கல்வி வளர்ச்சி இயக்கத்தினை ஆரம்பித்து நடத்தியோர் அரசாங்க உத்தியோகத்திலுள்ளோராவர். ஆயின், மிசனரிகளின் ஏவுதலினுல் அரசாங்கம் தனது அதிகாரத்தைப் பயன்படுத்தி இவர்களைத் தடைசெய்து வந்தது. (பார்க்க பதிவேடு "Hanzard" 1913–16, பக். 306–309).

**அறநிலையக் கட்டளைச் சட்டம் :**

1889இல் பௌத்த அறநிலையச் சட்டம் இந்நாட்டில் இயற்றப்பட்டது. இதுபோன்ற சட்டம் ஒன்று இந்நாட்டுச் சைவர்களுக்கும் வேண்டுமென்ற முறையீடொன்றை 1890இல் பொன். இராமநாதன் சட்ட நிருபண சபையில் சமர்ப்பித்தார். "தேசாபிமானி" போன்ற பத்திரிகைகள் ஆசிரியத்தலையங்கங்கள் எழுதின. சீர்திருத்தம் வேண்டி நின்றவர்களையும், திருத்தப்பட வேண்டியவர்களையும் கூட்டி ஆலய நிருவாக ஒழுங்குகளைச் செய்ய அக்கால அரசாங்க அதிபர்கள் முயன்றனர். இவ்வுத்தேசத் திட்டத்திற்கு எதிர்ப்புங் கலவரங்களுந் தலைகாட்டின. எனவே சைவாலயங்கள் அறநிலையக் கட்டளைச் சட்டத்தின் கீழ் கொண்டுவரவேண்டுமென அரசாங்க அதிபர்கள் அரசாங்கத்திற்கு ஆலோசனை தெரிவித்தனர்.

1906இல் திரும்பவும் கௌரவ அ. கனகசபை மூலம் முறையீடு செய்யப்பட்டது. சகல சைவர்களும் ஒருமித்துக் கோயில் நிருவாகத்தைச் செவ்வனே நடத்தக்கூடிய திட்டம் ஒன்றைத் தயாரித்துத் தந்தால், அதனை நடைமுறைப்படுத்த ஆவன செய்ய உதவுவதாக அரசாங்கம் உறுதியளித்தது. 1910 வரை சைவர்கள் இதுபற்றி எம்முடிவுக்கும் வராமையால், அறநிலையக் கட்டளைச் சட்டத்தின்கீழ் சைவாலயங்களின் நிர்வாகம் கொண்டுவரப்பட்டது.



1950ஆம், 1975ஆம் ஆண்டுகளிலும் இக்கோரிக்கை வலுப்பெற்றமையும், கடும் எதிர்ப்பால் அது தணிந்தமையும் நினைவுகொள்ளத் தக்கதாகும்.

**சைவத்தோன்றல்கள் :**

இந்நாட்டில் பல சிவாநுபூதியுடையோர் வாழ்ந்து, சைவ உலகிற்குப் பெரும் வழிகாட்டிகளாகவும் விளங்கியுள்ளனர். இவர்களது சைவசமய சாத்திர தோத்திர அறிவுகளையும், ஆசார முறைகளையும், தொண்டுகளையும் பாராட்டித் தமிழ்நாட்டவரும் — தமிழ்நாட்டுச் சைவ ஆதீன முதல்வர்களும் — அரசர்களும் மதிப்புக்கள் செய்திருக்கின்றனர். இத்திறத்தோரில் தலையாயவர்கள் பறங்கியர் காலத்தில் கோவதைக்கஞ்சிச் சிதம்பரஞ் சென்று துறவு பூண்டு வாழ்ந்தவரும், சித்தியார் சுபக்கத்திற்கு உரை கண்டவருமான ஞானப்பிரகாச சுவாமிகள், இதேகாரணத்திற்காக ஊரைவிட்டோடிய வரணி தில்லைநாதர் (பின்னுளில் தில்லைநாதத்தம்பிரான் என்னுந் திட்சாநாமத்துடன் வாழ்ந்தவர்) அளவெட்டி வைத்தியநாத முனிவர், நல்லூர் சின்னத்தம்பிப் புலவர், சுன்னுகம் அ. வரதபண்டிதர், நீர்வேலி சங்கர பண்டிதர், நல்லூர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர், சுன்னுகம் முருகேச பண்டிதர், கோப்பாய் சபாபதி நாவலர், கந்தர்மடம் சுவாமிநாத பண்டிதர், திருவண்ணுமலை ஆதீனத்தவராகச் சென்னையில் வாழ்ந்த ஸ்ரீ சரவண சுவாமிகள், ஆறுமுகத் தம்பிரான், செம்பறை சிதம்பர சுவாமிகள், இலக்கணசுவாமி எனப்படும் முத்துக்குமாரசாமித் தம்பிரான் (பழனி ஈசான சிவாசாரியர், சிவக்கவிமணி கோவை சி. கே. சுப்பிரமணிய முதலியார் என்போரின் சித்தாந்த பாட ஆசிரியர்), கொக்குவில் குகதாசர் சபாரத்தின முதலியார், நல்லூர் சிற். கைலாசபிள்ளை, காரை— கார்த்திகேயப் புலவர், ந. ச. பொன்னம்பலபிள்ளை, புலோலி நா. கதிரைவேற்பிள்ளை, மட்டுவில் க. வேற்பிள்ளை, இணுவில் நடராச ஐயர், ஏழாலை காசிவாசி செந்திநாதஐயர், தெல்லிப்பழை வித்துவான் சிவாநந்த ஐயர், அளவெட்டி சுப்பிரமணியத் தம்பிரான், திருவண்ணுமலை ஆதீனத்து வித்துவானுக இருந்த வண்ணுர்பண்ணை கனேச பண்டிதர் வட்டுக்கோட்டை அம்பலவாணநாவலர், கொழும்பு வழக்கறிஞர்—மானிப்பாய் மு. திருவிளங்கம், விபுலாநந்த அடிகள், வதிரி வித்துவான் சி. தாமோதரம்பிள்ளை, அவர் சகோதரர் சி. நாகலிங்கம்பிள்ளை, நவாலியூர் க. சோமசுந்தரப்புலவர், வே. க. இராமலிங்கம்பிள்ளை போன்ருேராவர்.

சைவத்தின் வளர்ச்சிக்காகத் தங்களையும், தங்கள் பொருள்களையும் அர்ப்பணித்து, அடக்கவிலைகளிலும் இலவசமாகவும் சமய மெய்ந்நூல்களை எளிமையான முறையில், படிப்படியாக வெளியிட்டு இந்நாட்டவரதும், தென்னுட்டவரதும் உள்ளங்கவர்ந்த ஈழத்து

அண்மைக்காலப் பெரியோரில் சைவப்பெரியார் சு. சிவபாதசுந்தரம், சைவப் புலவர் தேசிகமணி க. அருணாசலம், சிவஸ்ரீ அச்சுவேலி ச. குமார சாமிக்குருக்கள் ஆகிய மூவரும் என்றும் சைவசமயத்தவர்களது நினைவில் நிற்கவேண்டியவராவர்.

**விரிவுரையாளர்:**

மேற்கூறியோர் வழியில் "கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழிவதாஞ் சொல்" என்னும் பாங்கிலமைந்த சைவ விரிவுரைகள்—சொற்பொழிவுகள் ஆற்றும் பேரறிவும், பேராற்றலும்—நா நலமும் படைத்த பெரியோர் பலர் இங்கு வாழ்ந்திருக்கின்றனர். இன்றும் வாழ்ந்துகொண்டிருக்கின்றார்கள்.

எம். எஸ். இளையதம்பி, சித்தவைத்தியர் சித்தாந்தம் ஐயம்பிள்ளை பொன்னையா (தீட்சா நாமம் அருளாநந்தசிவம்), குருகவி ம. வே. மகாலிங்கசிவம், ம. வே. திருஞானசம்பந்தபிள்ளை, சங்கானை நாகலிங்க பரதேசிச் சாமியார், திக்கம் செல்லையா, கலாநிதி சு. நடேசபிள்ளை, வித்துவான் க. கார்த்திகேசு, பண்டிதர் சோ. இளமுருகன், வழக்கறிஞர் வே. நாகலிங்கம், "பிரசங்க இரத்தின தீபம்" என்னும் நூலாசிரியர் உடுவில் பண்டிதர் சிவஸ்ரீ வ. மு. இரத்தினேசுவர ஐயர், வித்துவான் க. வேந்தன் போன்ற உலகவாழ்வை ஒருவிய பெருமக்களும், இலக்கிய கலாநிதி பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை, புலவர்மணி ஏ. பெரியதம்பிப் பிள்ளை, வித்துவான் க. கி. நடராசன், முதலியார் செ. சின்னத்தம்பி மானிப்பாய் மு. வைரமுத்து, பண்டிதர் கா. பொ. இரத்தினம், சபா ஆனந்தர், வித்துவான் சி. ஆறுமுகம், க. சிவராமலிங்கம், வித்துவான் பொன். முத்துக்குமாரன், பண்டிதர் வி. சி. கந்தையா, கலாநிதி ஆ. கந்தையா, சிவஸ்ரீ வ. குகசர்மா, வழக்கறிஞர் நம. சிவப்பிரகாசம், கவிஞர் செ. கதிரேசர்பிள்ளை, ஆத்மசோதி நா. முத்தையா, வறுத்தலைவிளான் திருமுறைச் செல்வன் ச. விநாயகமூர்த்தி, மதுரகவி சோ. பத்மநாதன் போன்றோர் முதிர்ச்சிபெற்ற வாழும் சைவச் சொற்பொழிவாளர் என்பது குறிப்பிடத்தக்கதாகும். "கற்றோர் கனமறிவர்" என்பதற் கமைய ஈண்டு இவர்கள்பற்றி அதிகம் எழுதாது விடப்படுகின்றது.

சைவ உலகம் மெச்சிப் பேசுந் தலைசிறந்த சைவசமயச் செஞ்சொல்லரசிகளும் உளர் என்பதும் இங்கு சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும்.

பண்டிதர் திருமதி பத்மாசனி இராசேந்திரம், பண்டிதர் திருமதி அமிர்தாம்பிகை சதாசிவம், பண்டிதர் திருமதி சத்தியதேவி துரைசிங்கம், திருமதி மகேசுவரி மகாதேவா, சிவத்தமிழ்ச்செல்வி பண்டிதர் தங்கம்மா அப்பாக்குட்டி, பண்டிதர் திருமதி கங்கேசுவரி கந்தையா, வித்துவான் வசந்தா வைத்தியநாதன், செல்வி புஷ்பா செல்வநாயகம் போன்றோர் குறிப்பிடத்தக்க சில பெண் பேச்சாளர்களாவர்.



1950இல் கொழும்பில் நடைபெற்ற சித்தாந்த மாநாட்டு—மாதர் மாநாட்டுக்குத் தலைமை வகித்தவர் பண்டிதர் திருமதி பத்மாசனி இராசேந்திரம்.

1962இல் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்தின் சார்பில் நடைபெற்ற திருமுறை விழாவில் கலந்துரையாற்றிய பெருமைக்குரிய பெண்பாற்புலவர் பண்டிதர் திருமதி சத்தியதேவி துரைசிங்கம்.

தமிழ்நாடு—சிங்கப்பூர்—மலேசியா ஆகிய நாடுகளுக்குப் பன்முறை சென்று, பற்பல சமயச்சொற்பொழிவுகளாற்றிப் பல விருதுகள் பெற்றிருப்பவர் சிவத்தமிழ்ச்செல்வி தங்கம்மா அப்பாக்குட்டி. தெல்லிப்பழை துர்க்கையம்மன் கோவிலின் இன்றைய பொலிவு, அம்மையார் அவர்களது சமயச் சொற்பொழிவுகளின் உயர்வால் வந்த உயர்வு எனக் கூறலாம்.

**இறைவனோடிசைந்த இன்பம்—**
**பண்ணோடிசைபாடல்:**

தேவாரத் திருக்கூட்டச் சிறப்பையும், தேவாரம் முதலிய திருமுறைப் பாடல்களைத் திருவிழாக் காலத்தில் சுவாமிக்குப் பின்னாக ஓதுவதால் அடியார்களுக்கு உண்டாகும் பத்தியையும் இந்நாட்டவர்களுக்குக் காட்ட நினைந்த நாவலர் பெருமான், திருவாவடுதுறையினின்றும் ஓதுவார் சிலரை அழைப்பித்து, திருவிழாக் காலங்களில் சுவாமி திருவீதியிலே எழுந்தருளும்போது, சுவாமிக்குப் பின்னாக ஓதுவார்களைக்கொண்டு தமிழ் வேதமாகிய தேவாரத்தை ஓதுவித்து வந்தனர். இதே வழிமுறையில் அந்நாளில் பயிற்சிபெற்று வந்தோரைப் பின்பற்றி, இன்று எல்லா இடங்களிலும் சுவாமி வீதிவலம்வரும்போது தனித்தும் — கூட்டாகவும் திருமுறைப்பாடல்கள் பாடிவருவதைக் காணக்கூடியதாக இருக்கின்றது. அத்துடன் பண்ணோடு பாடல்கள் பாடவேண்டும் என்ற எண்ணத்தினால், சிலர் பண்முறைகளை நன்கு கற்றும், தாம் கற்றவற்றைப் பிறர்க்குக் கற்பித்தும் வருகின்றனர். இதனால் இன்று இங்கு இருபாலாரும் போட்டியிட்டுத் திருமுறைப் பண்ணிசை பயின்று வருவதைக் காணலாம்.

கொக்குவில் திரு. த. குமாரசாமிப்புலவர் (16ஆண்டு காலம் திருவாவடுதுறையில் வாழ்ந்தவர்), கீரிமலை செல்லையா தேசிகர் போன்றோர் பண்ணிசை தெரிந்த எம் தலைமுறைப் பெரியோராவர். தலையாளி திரு. சு கனகசுந்தரம், புங்குடுதீவு தா. இராசலிங்கம் போன்ற சங்கீத பூஷணங்கள் அண்ணாமலைத் தமிழ் இசைக் கல்லூரியில் பண்ணிசையில் சிறப்புப் பயிற்சி பெற்றுப் பட்டம் பெற்றவர்களாவர். இத்துறையில் முழு அறிவு பெறாத—ஆயின், பண்ணோடு பாடவல்ல தரமான இசை

வாணர் பலர் ஊர்கள் தோறும் இந்நாட்டில் இன்று இருக்கக் காண்கிறோம். இத்தகையோரும், ஏனைய நாட்டமுள்ளவர்களும் பண்ணிசைப் பயிற்சியை நிறைவான முறையில் கற்றுக் கொள்வதற்காகத் தமிழ் நாட்டிலிருந்து மெய்கண்டாராதீனப் பண்ணிசைமணி பீ. ஏ. எஸ். இராசசேகரன் என்ற ஓதுவாமூர்த்தியை கொழும்பு விவேகாநந்த சபையார் அநுசரணையுடன் 1966இல் அகில இலங்கை இந்துமாமன்றம் அழைத்திருந்தது. கொழும்பு, மட்டக்களப்பு, யாழ்ப்பாணம் ஆகிய இடங்களில் இவ்வோதுவார் நாயகத்தின் வகுப்புக்கள் நடைபெற்றன. இவற்றால் நன்மை அடைந்தோர் பலர். இவ்வகுப்புக்களில் நான்கு ஆண்டுகள் பயிற்சிபெற்றோர்க்கு இறுதித் தேர்வு ஒன்று நடைபெற்றது. இத்தேர்வு சென்னை தமிழ் இசைச் சங்கத் திருமுறை ஆசிரியர் திரு. வே. சோமசுந்தரம் அவர்களால் கல்வி அமைச்சு அதிகாரிகள் உதவியுடன் 1972 யூன் 12ஆம் நாள் தொடக்கம் 17ஆம் நாள்வரை நடத்தப்பட்டது. இப்பரீட்சையில் சித்தியடைந்தோர் தொகை 49. இவர்களுக்குச் சான்றிதழ்களுடன் பண்ணிசைமணிப் பட்டமும் வழங்கப்பட்டது. பாடசாலைகளில் பண்ணிசை பயிற்றும் தகுதி இப் பண்ணிசைமணிகளுக்கு உண்டு என அந்நாளில் பேசப்பட்டது.

இன்று பிரபல பண்ணிசையாளர்களாக நாட்டில் கணிக்கப்பட்டு வரும் திருவாளர்கள் வ. பரமசாமி, அ. சோமசுந்தரம், சி. க. சிவபாலன், மா. தங்கராசா, வீ. ரீ. வீ. சுப்பிரமணியம் போன்றோர் இத்தேர்வில் சித்தியடைந்தோரேயாம். இப்பண்ணிசைமணிகள் இறைவனோடிசைந்த இன்பம் — பண்ணோடிசைபாடல் என்ற குறிக்கோளுடன் நாளும் இன்னிசையால் இந்நாட்டில் இன்று பண்ணிசை பரப்பி வருகின்றமை, பண்ணிசை வளர்ச்சிக்கு மேலும் நல்லூக்கம் அளிப்பதாக அமைந்திருக்கின்றது.

இந்நாட்டுத் திருக்கோயில்களில் உபசார முடிவில் நாள்தோறும் திருமுறைப் பாடல்கள் ஓதப்படுகின்றன. நாளாந்தம் அதிகாலையில் திருவனந்தலுக்கு முன் திருப்பள்ளியெழுச்சி பாடப்பட்டே திருக்கதவுகள் திறக்கப்படுகின்றன. சூர்ணோத்சவகாலத்தில் திருப்பொற்சுண்ணம் ஓதப்படுகின்றது. மார்கழித் திருவாதிரைத் திருநாளில் திருவெம்பாவை ஓதப்பட்டுத் தீபதரிசனஞ் செய்யப்படுகின்றது. திருவிழாக்காலங்களில் வேதபாராயணத்தோடு, தமிழ்மறைப் பாராயணமும் நடைபெற்றுவருகின்றது. திருமுறைகளுக்கெனத் தெற்குத் திருச்சுற்றில் திருக்கேதீச்சரத்தில் கோவிலுமுண்டு. நாளொன்றிற்கு இருமுறை இவற்றிற்குப் பூசை நடைபெற்று வருகின்றது. இன்னும் இங்கு மகோற்சவகால இறுதிநாள் சண்டேசுரர் விழாவன்று பகல் திருக்கேதீச்சரப் பெருமானுக்குத் திருமுறை அர்ச்சனை நடைபெறுவது வழக்கமாகிவிட்டது. திருமுறை அர்ச்சனைக்கு இங்கு இவர்கள் எடுத்துக்கொள்ளும் பதிகங்கள்,



1. கற்றவர்க ளுண்ணுங் கனியே போற்றி
2. வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி
3. பொறையுடைய பூமிநீ ராணாய் போற்றி
4. பாட்டான நல்ல தொடையாய் போற்றி

எனத் தொடங்கும் அப்பர் சுவாமிகளது போற்றித் திருத்தாண்டகங்கள் நான்கும், மணிவாசகப்பெருமான் அருளிய போற்றித் திருவகவலுமாகும். இத்திருமுறை அர்ச்சனை இங்கு தொடங்கிய ஆண்டு 1977.

**கதாப்பிரசங்கிகள் :**

சமய அறிவைச் சாதாரண மக்களுக்கு மிகவும் எளியமுறையில் விளக்கப் பயன்படுவது கதாப்பிரசங்க முறையாகும். கதாப்பிரசங்கியானவர் பல்துறை அறிவோடு பல்துறைச் சுவையுணர்வுகளும் கைவரப்பெற்ற இசைஞானமும், ஈசுவரபத்தியுமுடையவராக இருக்க வேண்டும். மேற்கூறிய இயல்புகளுடைய சைவசமயக் கதாப்பிரசங்கிகள் ஈழத்தில் வாழ்ந்திருக்கின்றனர்; இன்று வாழ்ந்துகொண்டுமிருக்கின்றனர்; இன்னுஞ் சிலர் அப்படியான வாழ்வுபெறப் பயிற்சிபெற்றுக்கொண்டும் வருகின்றனர்.

"சச்சிதாநந்த ராசயோகி" என்ற துறவுப் பெயருடன் பின்னாளில் வாழ்ந்த வட்டுக்கோட்டை சங்கரசுப்பையர், நாகலிங்க பரதேசிச்சாமியார், மாணிக்கத்தியாகராசா, குப்பிளான் செல்லத்துரை, கொக்குவில் த. குமாரசுவாமிப்புலவர், இரத்தினபுரி வழக்கறிஞர் க. சிதம்பரநாதன், சி. சி. எஸ். மணிஐயர் (இன்றைய நல்லூர் திருஞானசம்பந்தர் ஆதீனக் குருமுதல்வர், ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாத தேசிக பரமாசாரிய சுவாமிகள்), அளவெட்டி அருட்கவி சி. விநாசித்தம்பி, கல்வயல் விநாசித்தம்பி, திருப்பூங்குடி வீ. கே. ஆறுமுகம், புங்குடுதீவு க. செல்லத்தம்பி, திருகோணமலை பண்டிதர் வடிவேல், சிவஅன்பு போன்றோர் இந்நாட்டில் நன்கு அறிமுகமான சைவக் கதாப்பிரசங்கிகள் ஆவர்.

இவர்களுள் சச்சிதாநந்தயோகிகள் தமிழ்நாடுவரை புகழ்பூத்த கதாப்பிரசங்கியாவர். சி. சி. எஸ். மணிஐயரும், இந்துசாதன இதழின் உதவி ஆசிரியராக இருந்த நீர்வேலி கு. சிற்சபேசனும் இவரது சீடர்களாவர்.

கொழும்புப் புரோக்கர் ஆ. செல்லமுத்து, புரோக்கர் சிவ. தியாகராசா போன்ற பல செல்வந்தர்களது உதவியுடன் தென்னாட்டுப் பழம் பதியாகிய திருவாலங்காட்டுத் தேர்த்திருப்பணி செய்து முடித்தவரும் இப்பெரியாரேயாம். மேலும், இந்த நூற்றாண்டின் முற்பகுதியில் தமிழ் மக்களுள் தமிழ்ப் பேச்சுக்கு ஒரு மறைமலை, ஆங்கிலப் பேச்சுக்கு ஒரு பொன். இராமநாதன், சைவக் கதாப்பிரசங்கத்திற்கு ஒரு சங்கர சுப்பையர்

என்ற பெரும் பெயர் ஒன்று அடிபட்டுலாவியமை இங்கு சிறப்பாகக் கூறத்தக்கதாகும்.

ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாததேசிக பரமாசாரிய சுவாமிகள் தமிழ்நாடு, மலேசியா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளுக்கு ஆண்டுதோறும் கதாப் பிரசங்கத்தின் பொருட்டுச் சென்று வருவதும், பெரும்பகுதிக் காலத்தை இந் நாடுகளில் இப் பணிக்காக இன்று செலவு செய்து வருவதும் எம்நாட்டுச் சைவர் பெருமைகொள் பணியேயாம்.

## சைவங்காத்த நிறுவனங்கள்:

ஐரோப்பியர் வருகையால் இந்நாட்டில் நலிந்திருந்த சைவ சமயத்தை ஆங்கிலேயர் காலத்தில் நலியவிடாது காத்தவை, ஆறுமுக நாவலரைத் தொடர்ந்து சைவசமய வளர்ச்சிக்கெனவே இங்கு தோன்றிய *அகில இலங்கைச் சைவபரிபாலன சபை (1887), யாழ்ப் பாணம் சைவபரிபாலன சபை (1888), கொழும்பு விவேகாநந்த சபை (13-7-1902 அனுஷநட்சத்திர ஞாயிற்றுக்கிழமை), சைவவித்தியா விருத்திச் சங்கம் (1922) ஆகிய நிறுவனங்களும், தனிப்பட்ட முறையில் சில சைவப் பெரியோரினால் நிறுவப்பட்ட சைவப்பாடசாலைகளும், கல் லூரிகளுமேயாம். இக்காலத்தில் கிழக்கிலங்கையில் சைவத்தைக் காக்க அரும்பாடுபட்டவர்கள் கா. வ. மார்க்கண்டன் முதலியார், வீ. வல்லிபுரம் பிள்ளை. அருட்திரு. விபுலாநந்த அடிகள் போன்றோராவர். அவர் தொண்டைத் தொடர்ந்து அங்கு இராமகிருஷ்ண சங்கம் செய்து வந்தமை நினைவு கொள்ளற்பாலதாகும்.

சைவப் பெண்பிள்ளைகள் பயில்வதற்கெனத் தனியான கல்லூரி களும், சைவ அநாதை இல்லங்களும் சைவ ஆசிரிய பயிற்சிக் கலாசாலை போன்றவைகளும் இந் நிறுவனங்களினால் நடத்தப்பட்டு வந்தமை இந்நாட்டில் உள்ளோர் சைவத்திற் கொண்டிருக்கும் சமயப்பற்றை எடுத்துக்காட்டுபவையாகும்.

சைவ வித்தியா விருத்திச் சங்கத்தைப்பற்றிக் கூறும்போது 1960ஆம் ஆண்டு திசம்பர் மாதம் அரசாங்கம் தனியார் பாடசாலை களைப் பொறுப்பேற்கும்வரை, இச்சபை நிருவகித்து வந்த 180இற்கு மேற்பட்ட சைவப் பாடசாலைகளும், இவற்றின் வளர்ச்சிக்காக இரவு பகலாகப் பாடுபட்ட பெரியோரும், அவர்களுள்ளும் சைவத் திருவாளர் சு. இராசரத்தினம் (இந்து போட்) அவர்களும் சைவமக்கள் மனதில் தலைமுறை தலைமுறையாக நீங்கா இடம் பெறுவர்.

மேற்கூறிய நிறுவனங்களினால் நடத்தப்பட்டுவரும் சைவ சாத்திர தோத்திர வகுப்புகளும் — வெளியீடுகளும் — சொற்பொழிவுகளும் —

*இதன் தலைமையகம் கொழும்பு.



பரீட்சைகளும் சமயத்தைப்பற்றி யாவரும் அறிந்துணரக்கூடிய வாய்ப்புகளை வழங்கி வருகின்றன. இந்நிறுவனங்களினால் நிறுவப்பட்ட பாடசாலைகள் சைவ ஆசார அநுட்டானப் பயிற்சி நிலையங்களாக விளங்கியமையினாற்றான், இன்று இந்நாட்டிற் சைவப்பொலிவும், சைவ அறிவும், சைவ உணர்வும் மிக்க பெருமக்களைக் காணக்கூடியதாக இருக் கின்றது.

கொழும்பு விவேகாநந்த வித்தியாலயம் (24-3-1926), பம்பலப்பிட்டி பிள்ளையார் பாடசாலை (இன்றைய பம்பலப்பிட்டி இந்து கனிட்ட பாடசாலை— 12-2-1951), இரத்மலானை இந்துக் கல்லூரி (20-4-1953), வெள்ளவத்தை சைவ மங்கையர் வித்தியாலயம், கப்பித்தாவத்தை தொண்டர் வித்தியால யம், உனுப்பிட்டி இந்து சன்மார்க்க பாடசாலை, நீர்கொழும்பு விவேகாநந்த வித்தியாலயம் (10-8-1954), சிலா/மருதங்குளம் சைவப்பிரகாச வித்தியா சாலை, சிலா/குசலை ஞானசம்பந்த வித்தியாசாலை, சிலா/முந்தல் கமலாம் பிகை வித்தியாசாலை, அநு/அநுராதபுரம் விவேகாநந்த வித்தியாலயம், நாவலப்பிட்டி கதிரேசன் வித்தியாலயம் (30-10-1924), கண்டி இந்து சிரேட்ட பாடசாலை, மாத்தளை பாக்கியம் வித்தியாலயம் (18-5-1927இல் கல் நாட்டியவர் மகாத்மாகாந்தியடிகள்; தாபகர் திரு. எஸ். எஸ். கந்தசாமி. 9-8-1929இல் பாடசாலையைத் திறந்து வைத்தவர் சேர். பொன். இராம நாதன்.) மாத்தளை கந்தசாமி வித்தியாலயம், புசல்லாவை சரசுவதி வித்தி யாலயம், பதுளை சரசுவதி வித்தியாலயம் (பதுளைச் சைவபரிபாலன சபையின ரால் ஆரம்பிக்கப்பட்ட பாடசாலை) போன்ற பாடசாலைகளும், கொழும்பு சைவபரி பாலன சபை என்ற பெயரில் இருந்து 1887இல் ''இலங்கைச் சைவபரிபாலன சபை'' என்ற பெயருக்கு மாறிய சபை, கொழும்பு கொச்சிக்கடை தம்பையா முதலியார் சத்திரம் 1820, கொழும்பு கதிர்காமம் யாத்திரிகர் தொண்டர் சபை 1925, கொழும்பு சைவமங்கையர் கழகம் 1930, கொம்பனித்தெரு சைவ முன்னேற்றச் சங்கம், கொழும்பு இந்து வித்தியாவிருத்திச் சங்கம் 5-2-1951, வடகொழும்பு சைவபரிபாலன சங்கம், அனைத்து இலங்கை இந்து வாலிபர் சங்கம் 11-9-1957, அகில இலங்கை இந்து மாமன்றம் 1955, அப்பர் அருள்நெறி மன்றம் 17-8-1962, அனைத்து இலங்கை இந்து இளைஞர் பேரவை, திருநெறிய தமிழ் மன்றம் 1972, நீர்கொழும்பு இந்து வாலிபர் சங்கம், சிலாபம் இந்து வாலிபர் சங்கம், புத்தளம் சைவமகாசபை, குருநாகல் சைவ மகாசபை, அநுராதபுரம் விவேகாநந்தசபை, மாத்தளை சைவமகாசபை 1954, கண்டி சைவமகாசபை 1926, நாவலப்பிட்டி இந்து வாலிபர் சங்கம் 13-4-1919, பதுளை சைவபரிபாலன சங்கம் 1926, இரத்தினபுரி சைவபரிபாலன மகாசபை போன்ற சங்கங்களும், மன்றங்களும், சபைகளும் சைவசமய அபிவிருத்தி கருதி இந்நாட்டுப் பெரியோர்களால் காலத்துக்குக் காலம் தோற்றுவிக்கப்பட்ட நிறுவனங்களேயாம். இவையாவும் ஈழத்தில் சைவத்தின் எழுச்சியைச் சைவத் தமிழர்கள் கூடுதலாக வாழும் வடக்குக் கிழக்குப் பிராந்தியங்கள் தவிர்ந்த ஏனைய இடங்களில் பிரதிபலிக்கச் செய்யத் தோன்றிய நிலையங் களாகும்.

## யாழ்ப்பாணம் சைவபரிபாலன சபை:

தொடக்க நாள்: சர்வதாரி ஆண்டு சித்திரைத் திங்கள் (29-1-1988) ஞாயிற்றுக்கிழமை

திதி: கிருஷ்ணபக்க சதுர்த்தி நட்சத்திரம்: மூலம்.
நேரம்: சித்தயோகமும், கௌலவகரணமும் கூடிய நல்லோரை.

| | | |
|---|---|---|
| கூடிய இடம் | : | நாவலர் சைவப்பிரகாச வித்தியாசாலை |
| சபையின் பெயர் | : | யாழ்ப்பாணம் சைவசமய பரிபாலன சபை |
| முதற் தலைவர் | : | திரு. ந. ச. பொன்னம்பலபிள்ளை |
| முதற் செயலாளர் | : | திரு. த. கைலாசபிள்ளை |
| முதற் பொருளாளர் | : | திரு. கு. சபாபதிச் செட்டியார் |

### சபையின் தொடக்க நோக்கங்கள்:

1. சைவசமயத்தை வ்ளர்த்தல். பிறசமயத்தில் (அந்நிய) நம்மவரைச் சேரவிடாது தடுத்தல்.
2. சைவமுறைப்படி, சைவப்பிள்ளைகள் தமிழையும், ஆங்கிலத்தையும் பயின்றுகொள்வதற்கான வகையில் பாடசாலைகளை வேண்டிய ஊர்தோறுந் தாபித்து நடத்துதல்.
3. கல்வி, அறிவு, ஒழுக்கமுடைய பெரியோரைக் கொண்டு சைவ சமய விருத்தி கருதிப் பிரசங்கங்கள் செய்வித்தல்.
4. சைவ மக்களுக்குச் சிறப்பாகவும், தமிழ் மக்களுக்குப் பொதுவாகவும் நலன்தரும் பத்திரிகைகளைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளியிடுதல்.
5. அழிந்திருக்கும் சைவாலயங்கள், திருமடங்கள் முதலிய பழைய தரும தாபனங்களைப் புதுப்பித்து, ஒழுங்காக இயக்கம் பெறச் செய்தல். கோயில்கள், திருமடங்கள் முதலியவற்றுக்குரிய அசைவுள்ள, அசைவற்ற பொருள்களைப் பிறர் கவராதிருக்கத் தாமே அவற்றைப் பொறுப்பேற்றுப் பாதுகாத்துச் சேர வேண்டிய தாபனங்களுக்குச் சேரவைத்தல்.
6. வாசிகசாலை, நூல்நிலையம் தாபித்து நடத்தல்.
7. இன்னுஞ் சைவத்தையும் தமிழையும் பங்கமின்றி வளர்த்தற்கு என்னென்ன தேவையோ அவற்றைத் தவறாது செய்தல்.
8. சபையின் நோக்கங்களை நிறைவுசெய்யச் சைவப் புத்தகங்களை வெளியிடல் முதலானவைகளாகும்,

மேற்கூறப்பட்ட "யாழ்ப்பாணம் சைவசமய பரிபாலனசபை" என்ற பெயர், விகிர்தி வருடம் கார்த்திகை க-ஆம் நாள் (15-11-1890) திருத்தப்பட்ட பிரமாணங்களுக்கமைய "யாழ்ப்பாணம் சைவபரிபாலன சபை" என்ற பெயருக்கு மாற்றப்பட்டது.



முதல் ஆண்டுப் பொதுக் கூட்டம் 1889ஆம் ஆண்டு வைகாசி 24ஆம் நாள் நடைபெற்றது.

விரோதி ஆண்டு ஆவணி 28ஆம் நாள் (11-9-1889) புதன்கிழமை கிருஷ்ணபக்கத் துதியையும் உத்தரட்டாதியும் கூடிய நல்ரோரையில் இரு கிழமைக்கு ஒரு வெளியீடாகத் தமிழில் ''இந்துசாதனம்'', ஆங்கிலத்தில் "Hindu Organ" என்னுஞ் செய்தி இதழ்கள் வெளியாகின.

நாவலர் பெருமானது சொற்பொழிவுகள் வாயிலாகச் சைவநன் மக்கள் அடைந்த பயனை—நன்மைகளை உணர்ந்த சபையார், அவர் வழியில் அவரது மாணவர்களையும், அறிஞர்களையும் கொண்டு ஊர்கள் தோறுஞ் சொற்பொழிவுகள் செய்வித்துவந்தனர். சபையாரின் அக் காலப் பிரசாரச் சொற்பொழிவாளர்கள் சிவஸ்ரீ க. சுப்பையர், அ. முத்துக்குமாரசாமிக்குருக்கள், சு. ஏரம்பையர், க. இராமலிங்க வன்னியனார் முதலியோராவர்.

பின்னாளில் சங்கரகப்பையர் என்று கூறப்பட்ட சச்சிதாநந்த இராச யோகிகளும் கௌரவ பிரசாரகராகச் சபையார்க்குப் பணிபுரிந்து வந்தனர்.

சொற்பொழிவுகள் பாடசாலை—திருக்கோவில்—திருமடம் ஆகிய இடங்களில் நடைபெற்றுவந்தன.

### தத்துவப் பிரகாசப் பதிப்பு:

பொய்கண்டகன்ற மெய்கண்டதேவர் சந்தானத்துள் சீகாழி சிற்றம்பல நாடிகளின் மாணாக்கராய் விளங்கியவர் சீகாழி தத்துவப் பிரகாச சுவாமிகள். இவர் 14ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த பெருஞ் சிவஞானி. இவர் செய்த நூல் தத்துவப்பிரகாசம்.

சிவபெருமானாலே அருளப்பட்ட சிவாகமங்களில் காணும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பவற்றையுடைய தந்திர, மந்திர உபதேசக் கலைகள் மூன்றும் மிகவும் விளக்கமாக அமைந்த நூல் இதுவாகும்.

சிவஞானபோதம், சிவஞானசித்தியார் முதலான ஆதார சாத்திர நூல்களில் சொல்லப்படாத பல விடயங்கள் இதனுள் நன்கு சொல்லப்பட்டிருப்பதைக் காணலாம்.

சைவக்கிரியைப் பகுதி விளக்கங்களைத் திருத்தமாகவும், தெளிவாகவும் சிறப்பாகத் தமிழில் கூறும் நூல் இதுவாகும். எனவே, சைவ மக்களது விலைமதிப்பிலாப் பெருஞ் சைவக்களஞ்சியம் என இதனைக் கூறிக்கொள்ளலாம்.

மெய்கண்டாருக்குப் பின்னர் சைவசித்தாந்த சாத்திர நூல்கள் பலதுறைகளிலும் விரிவாக வளர்ந்தன. ஆயின், சிவஞான போதத்தை அடுத்துவந்த சிவஞானசித்தியாருடன் அளவிலும், பொருட்சிறப்பிலும் ஒருங்கு வைத்து எண்ணத்தக்க நூல்கள் மிகச் சிலவே. அவற்றுள் முதலிடம் பெறுவது தத்துவப்பிரகாசமேயாம்,

இப்பெருநூலை மிக்க சிரத்தையோடு திருத்தமான முறையில் முதன்முதல் அச்சில் பதிப்பித்தவர் வேலணை சைவப்பிரகாச வித்தியா சாலை அதிபதி சைவத்திரு வி. கந்தப்பிள்ளை ஆவார். பதிப்பு ஆண்டு—நந்தன ஆண்டு மாசி மாதம் (1893). அச்சகம்—கொக்குவில் சோதிடப்பிரகாச அச்சுயந்திரசாலை.

## அடங்கன்முறைப் பதிப்பு :

மூவர் தேவாரங்களையும் (அடங்கன்முறை) பல ஏட்டுச் சுவடிகளுடன் ஒப்புநோக்கிப் பரிசோதித்து, சென்னையில் தன்னால் நிறுவப்பட்டிருந்த அச்சுக்கூடத்தில் முதன்முதல் பதிப்பித்தவர், நாவலரின் மாணவர் மரபில் வந்த கந்தர்மடம் சுவாமிநாத பண்டிதர் ஆவர். இப்பிரதிகளுக்கு நாள்தோறும் மலரிட்டிறைஞ்சி வருபவர்களை இன்றும், இந்நாட்டில் யாம் காணலாம்.

## திருவாசகம் :

யாழ்ப்பாணம் வண்ணார்பண்ணை 'நாவலர் கோட்டம்' ஆ. முத்துத் தம்பிப்பிள்ளை அவர்களினால் "திருவாசகம்" என்ற நூல் 1920ஆம் ஆண்டு யாழ்ப்பாணம் நாவலர் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ளது. இந்நூற்கு 30 பக்கங்களைக்கொண்ட ஒரு முகவுரை உண்டு, இம்முகவுரையில் தேவாரம், திருவாசகம், உபநிடதம் முதலானவைகளிலிருந்து திருவாசக உண்மைக்கும் பெருமைக்கும் மேற்கோள்கள் காட்டப்பட்டுள்ளன. உபநிடதப் பிரமாணங்கள் பெரும்பாலும் சிவஸ்ரீ உபயவேதாகமப் பண்டிதர் ந. வே. கனகசபாபதி ஐயர் அவர்களால், பிள்ளை அவர்கட்கு உபகரிக்கப்பட்டுள்ளதாக அதில் எழுதப்பட்டுள்ளது.

"திருவாசகம்" என்பது அருட் பொலிவினையுடைய வாசகம் எனப் பொருள் விரிக்கப்படும். "வாசகம்" ஆவது வேதத்துப் பொருளை எடுத்து விரித்துரைக்கும் ஒரு மொழியாகும். வேதத்துப் பொருளாவது பிரணவத்துப் பொருளாகிய சிவமாம். ஆகவே, பிரணவமே வாசகம், பிரணவப் பொருளாகிய சிவமே *வாச்சியம். எனவே, சிவத்தினதியல்பையும் சிவனைத் தலைப்படு முபாயத்தையு முணர்த்தும் நூல் திருவாசகம் என்பது முடிந்த பொருள் என்று முகவுரை சொல்கின்றது. இந்நூல் சிறந்த நூற்பதிப்புக்கான வெள்ளி விருதும் சான்றிதழும் பெற்ற ஒன்றாகும்.

---

* பொருள ; சொல்லப்படத்தக்கது ; சொல்லாமற் பெறும் பொருள்.



## யா. கூ. த. நூ. ப வி. கழகம்:

கடந்த சில ஆண்டுகளுக்கு முன்பாகத் தொடக்கப்பட்ட யாழ்ப்பாணம் கூட்டுறவுத் தமிழ் நூற் பதிப்பு விற்பனைக் கழகம், கடந்தகால நம்நாட்டுப் பெரியோர்களது வளமான பழம்பெரும் சைவநூல்களையும், வேறு பல தொகுப்பு நூல்களையும் திருத்தமான முறையில் அச்சிட்டு, அடக்க விலைக்கு வழங்கிவருகின்றது. வேறு யாருஞ் செய்ய முன்வரா இத்தெய்வப்பணியைத் தம் தலையாய சைவப் பெரும்பணியாகக் கருதிச் செய்துவருந் தொண்டைப் பாராட்டுவதுடன், அவர்கள் சைவநூற்பிரசுர ஊக்கம் மென்மேலும் வளர்ந்தோங்க உதவ வேண்டியது சைவர்கள் ஒவ்வொருவரதும் கடமையாகும்.

## அறக்கட்டளைகள்:

இந்நாட்டில் சைவசமய வளர்ச்சிக்கு உதவுமுகமாக ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர், புண்ணியநாச்சி, மழவராயர், தொல்புரம் மானு முதலியார், சேர். பொன், இராமநாதன் ஆகியோரினால் உபகரித்து ஏற்பாடு செய்யப்பட்ட அறக்கட்டளைகளும், வேறுபல கட்டளைகளும் உள. இவை யாவற்றையும் வரையறை செய்து சமய வளர்ச்சிக்குப் பயன்படுத்துவதற்கேற்ற முறையில் சமயப்பெரியோருடன், சபைகளும் முயற்சி எடுத்துக்கொண்டு வருகின்றன, இவர்கள் இம்முயற்சியில் காணும் சித்தி, சைவசமயத்தின் பெருமுன்னேற்றத்திற்கு வழி திறக்கும் என நம்ப இடமுண்டு.

சைவசித்தாந்த அறிவுச்சுடராகவும், சைவசித்தாந்த நூல்கள் பலவற்றின் ஆங்கில மொழிபெயர்ப்பு ஆசானாகவும், சைவ சித்தாந்த சமாசத்தை நிறுவ உழைத்தவரும், பெருங்கல்விமானாகத் திகழ்ந்த பெரியாருமாகிய ஜே. எம். நல்லசாமிப்பிள்ளை அவர்கள் "உலகில் சைவ சித்தாந்தத்திற்கு எங்கேனும் ஓர் உயர்பீடம் இருக்குமேயானால், அது கொழும்பு விவேகாநந்த சபையாகவே இருக்கும்" என இற்றைக்கு அரை நூற்றாண்டுக்கு முன்னர் கூறியுள்ளார்கள். மேலும் 29-5-1938இல் நடைபெற்ற மேற்படி சபையின் ஆண்டுவிழாவில், தூத்துக்குடி சைவத் திருவாளர் நா, சிவகுருநாதபிள்ளை அவர்கள் இச்சபை பற்றிக் கூறிய கருத்தும் இங்கு நோக்கற்குரியதாகும்.

"சைவபரிபாலனத்துக்கென நிறுவப்பெற்ற எமது விவேகாநந்தசபையையும், ஏனைய சைவச் சபைகளையும் நாம் ஆதரிக்கவேண்டும். இனி நமது விவேகாநந்த சபையார் நம் மாணவர்களுக்குச் சைவசித்தாந்தம், தமிழ் இலக்கண இலக்கியங்களும் கற்பிப்பதுடன் பரீட்சைகளும் ஏற்படுத்தி இருப்பதாக அறிகிறேன். இப்படியான சிவதருமம் ஆற்றிவரும் நமது விவேகாநந்த சபை நீடூழி நிலைபெற்று என்றும் சைவ வான்பயிரை வளர்த்துக்கொண்

டிருக்கும் வண்ணம் எம்மை ஆளுடைத் திருஞானசம்பந்தப் பெருமான் பொன்னடிகளைப் போற்றுகின்றேன்'' என்பதாம். இவற்றிலிருந்து நாம் அறியக்கூடியது, பிறநாட்டுச் சைவர்களையும் கவரக்கூடிய தன்மையில் ஈழத்தில் சைவம் வளருகின்ற தென்பதேயாம்.

**சித்தாந்த மாநாடு:**

சித்தாந்த சைவத்தையும், அதன் தத்துவ சாத்திர முடிபுகளையும், அவற்றிற்கேற்ற சமய ஒழுக்க வாழ்க்கையையும் உலகில் பரவச்செய்யும் நோக்குடன் 17-7-1905இல், திருப்பாதிரிப்புலியூர்மடத்தில் ஞானியார் சுவாமிகளது ஆசியுடன் சைவசித்தாந்த சமாசம் நிறுவப்பட்டது. இச்சமாச அமைப்பில் சேர்.பொன். இராமநாதனுக்குக் பெரும்பங்குண்டு. இதில் செய்துகொண்ட தீர்மானங்களில் ஒன்று, ஆண்டுக்கொரு சித்தாந்த மாநாடு கூட்டப்படவேண்டும் என்பதாகும். 1905இல தொடக்கப்பட்ட இச்சித்தாந்த சமாச மாநாடு ஈழத்தில் மூன்று முறை கூட்டப்பட்டிருப்பது இங்கு குறிப்பிடத்தக்க விடயமாகும்.

சமாசத்தின் 43வது சைவசித்தாந்த மாநாடு 1948 திசம்பர் மாதம் யாழ்ப்பாணத்தில் நடைபெற்றது. மாநாட்டின் பெருந்தலைவர் திரு. ம· பாலசுப்பிரமணிய முதலியார். மாநாட்டைக் கூட்டியவர்கள் யாழ்ப்பாணம் சைவபரிபாலண சபையார்.

44ஆவது மாநாடு கொழும்பில் 1950 ஜனவரி மாதம் 7ஆம், 8ஆம், 9ஆம் நாட்களில் நடைபெற்றது. மாநாட்டின் பெருந்தலைவர் திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரம்பிள்ளை. நடத்தியவர்கள் கொழும்பு விவேகாநந்த சபையார். இதில் 7ஆம், 9ஆம் நாள் மாநாடுகள் விவேகாநந்தசபை மண்டபத்திலும், 8ஆந் திகதி நடைபெற்ற சைவ இளைஞர் மாநாடு சைவமங்கையர் மாநாடு ஆகியவை வெள்ளவத்தை செம்மாங்கோட்டார் மாணிக்கப் பிள்ளையார் கோவில் மண்டபத்திலும் நடைபெற்றன. இம் மாநாட்டை நடத்திய கொழும்பு விவேகாநந்தசபை பற்றி 1950ஆம் ஆண்டு பெப்ரவரி மாத ''சித்தாந்தம்'' என்ற சமாச இதழ் கூறியவை; ''சைவசமய உணர்ச்சியின் பயனாகப் பல ஊர்களிலும் பல சங்கங்கள் தோன்றின. அவைகள் நாளது வரையில் மிகுந்த ஊக்கத்தோடு வேலை செய்து வருகின்றன. சைவசமயத்தை இலங்கையில் நிலைநிறுத்த இச் சங்கங்களே பெருத்த ஆதாரபூதங்களாகத் திகழ்கின்றன. அவைகளில் ஒன்று கொழும்பு விவேகாநந்தசபை. அதன் அங்கத்தினர் சமயத்திற்குப் பெருந்தொண்டு புரிந்து வருகின்றனர். மக்கள் மதிகெட்டுப் புறச்சமயப் பிரவேசஞ் செய்துவருவதை ஒருவாறு தடுத்து வைப்பது இச்சபையேயாகும்'' என்பதாகும்.

54ஆவது மாநாடு பாடல்பெற்ற திருத்தலமாகிய திருக்கேதீச்சரத்தில் 1960 திசம்பர் 30ஆம், 31ஆம் நாட்களிலும், 1961 ஜனவரி



முதலாம் நாளும் நடைபெற்றது. மாநாட்டின் பெருந்தலைவர் பெரியார் திரு. ச. சச்சிதாநந்தம்பிள்ளை. நடத்தியவர்கள் திருக்கேதீச்சரம் ஆலயத் திருப்பணிச் சபையார். இதனை இங்கு நடத்தப் பாடுபட்டுழைத்தவர் சேர் கந்தையா வைத்தியநாதன். இம்மாநாடு தொடர்பாக ''திருக்கேதீச்சரம் சைவ மாநாட்டு மலர்'' என்ற பெயரில் ஒரு மலரும் வெளியிடு செய்யப்பட்டுள்ளது.

தமிழ்நாட்டில் இம்மாநாடுகள் நடக்கும் போதெல்லாம் இங்குள்ள அறிஞர்களையும் அழைத்து உரைசெய்வித்தும், தலைமை தாங்குவித்தும் சிறப்புச் செய்துவருகின்றனர். ஈழநாட்டுச் சைவவளர்ச்சிக்கும்—சைவப்பெரியோர்க்கும், தமிழ்நாட்டவர் செய்துவரும் மதிப்பை எடுத்துக்காட்டுவன இவையாகும். ஈழத்தினர் தலைமை வகித்த மாநாடுகள் — நடைபெற்ற கால — இடப் பெயர் விவரங்கள்;

| மாநாடு | ஆண்டு | இடம் | தலைவர் பெயர் |
|---|---|---|---|
| 1ஆவது | 1906 | சிதம்பரம் | சேர். பொன். இராமநாதன் |
| 4ஆவது | 1909 | திருச்சிராப்பள்ளி | பன்னாலை சேர். அ. கனகசபைப் பிள்ளை |
| 7ஆவது | 1912 | காஞ்சிபுரம் | திரு. ரீ. பொன்னம்பலபிள்ளை |
| 10ஆவது | 1915 | தஞ்சாவூர் | வட்டுக்கோட்டை க. அம்பலவாண நாவலர் |
| 11ஆவது | 1916 | மயிலாப்பூர் | குகதாசர் — கொக்குவில், ச. சபாரத்தின முதலியார் |
| 13ஆவது | 1918 | திருக்குடந்தை | கந்தர்மடம் திரு. சுவாமிநாத பண்டிதர் |
| 15ஆவது | 1920 | மயூரம் | கந்தர்மடம் திரு. சி. சுவாமி நாத பண்டிதர் |
| 17ஆவது | 1922 | சென்னை | சேர். பொன். இராமநாதன் |
| 20ஆவது | 1925 | சென்னை | சேர். பொன். இராமநாதன் |
| 30ஆவது | 1935 | திருவண்ணாமலை | விபுலாநந்த அடிகள் |
| 48ஆவது | 1953 | சென்னை | வட்டுக்கோட்டை திரு. வே. நாகலிங்கம் |
| 49ஆவது | 1954 | விருதுநகர் | சேர். கந்தையா வைத்திய நாதன் |
| 50ஆவது | 1955 | சிதம்பரம் | திரு. க. நடேசபிள்ளை |
| 51ஆவது | 1956 | பெண்ணாகடம் | திரு. சு. நடேசபிள்ளை |

**சைவ இளைஞர் மாநாடு:**

26, 27-12-1915 ஆகிய இருநாட்களிலும் கீரிமலையில் சிருப்பர் மடத்தில் சைவ இளைஞர் மாநாடு ஒன்று கூட்டப்பட்டது. நாட்டின் பல இடங்களிலிருந்தும் முந்நூறுக்கு மேற்பட்ட பிரதிநிதிகள் மாநாட்டிற்கு வருகை தந்திருந்தனர், இம்மாநாடு கூட்ட உயிர்நாடி

யாக இருந்தவர் சைவப்பெரியார் எம். எஸ். இளையதம்பி ஆவார். இவர் கீர்த்தி வாய்ந்த ஒரு நியாயவாதி, இந்துசாதன இதழ் ஆசிரியர். சைவத்தின் புதுயுகம் காண்பதற்குத் துடித்தவர். தனது வாழ்க்கையைச் சைவத்திற்காகவே செலவுசெய்து வந்தவர். கொழும்பு விவேகாநந்த சபையை 1902இல் உருவாக்க முன்னின்றுழைத்த முக்கிய மூவரில் (திரு. சி. எம். குமாரவேலுப்பிள்ளை, திரு. எம். எஸ். இளையதம்பி, திரு. சி. எஸ். ஜம்புசாமி ) ஒருவர். இப்படியான நல்லிலக்கணங்கள் பலவும் ஒருங்கே அமைந்த இப் பெரியாரின் தூண்டுதலால் கூட்டப்பட்ட இம்மாநாட்டின் தலைவர் ஸ்ரீமத் சர்வாநந்த சுவாமிகள். சொற்பெருக்காற்றியோர் சைவத்துறைதோய்ந்த பெரியோராகிய மறைமலை அடிகள், ஸ்ரீமத் நாகலிங்கசுவாமிகள், சைவப்பெரியார் சங்கரசுப்பையர் போன்றோராவர். இவர்களோடு கௌரவ அ. கனகசபை (சட்டமன்ற உறுப்பினர்), திரு. ச. சபாரத்தின முதலியார் போன்றோரும் உரையாற்றினர். இம் மாநாட்டிற் செய்து கொண்ட தீர்மான எதிரொலியாகத் தோற்றியவையே இன்று ஊருக்கு ஊர் காணப்படும் பழம் பெரும் சைவ இளைஞர் சங்கங்களாம்.

### திருமுறை விழா :

சைவசமயத் தோத்திர சாத்திரவகை நூல்களை ஒட்டிச் சைவ மாநாடுகள் ஈழத்தில் நடைபெற்று வருவது வழக்கம். இவற்றுள் 1955இல் வேலணையில் நடைபெற்ற திருமுறைவிழா இற்றைவரை ஈழத்துச் சைவ வரலாற்றில் காணாத ஒரு பெருவிழாவாகும். தமிழ் நாட்டுப் பெரும் பேரறிஞர் பலர் இவ்விழாவுக்கு வரவுதந்து சிறப்புச் செய்திருந்தனர். அடுத்த ஆண்டு நடைபெற்ற பாராளுமன்றத் தேர்தலில், தீவுப்பகுதிப் பாராளுமன்ற உறுப்பினரைத் தெரிவு செய்ய முன்னோடியாக நடந்த நிறைவு விழா இது என அந்நாளில் பேச்சடிபட்ட பெருநல்விழா இதுவாகும்.

வேலணை விழாவைத் தொடர்ந்து, 1962 ஏப்பிரல் 7, 8, 9ஆம் நாட்களில் கொழும்பு விவேகாநந்த சபையாரினால் நடத்தப்பட்ட திருமுறை விழாவும், இந்நாட்டுச் சைவர்களது கவனத்தை ஈர்த்த ஒன்றாகும். சபையார் இது முதலாகப் பின்னரும் பல திருமுறை விழாக்கள் எடுத்துள்ளனர். ஆயின் 29-6-75இல் நடைபெற்ற சபையாரின் திருமுறைவிழா இந்நாட்டுச் சைவ வரலாற்றில் முக்கியமான இடம்பெறும் ஒரு விழாவாகும். இவ்விழா ஆரம்பத்தில் கொழும்பு கொச்சிக்கடை பொன்னம்பலவாணேசுவரர் திருக்கோவிலில் இருந்து திருமுறை ஓசை நாற்றிசையும் ஒலிக்க, மங்கல வாத்தியங்கள் முழங்க, கொழும்பு மாநகர வீதிகள் ஊடாகத் திருமுறை ஏட்டுச்சுவடிகளைப் புனிதபீடத்தில் வைத்து — யானைமீது எழுந்தருளச்செய்து—விழாமண்டபத்திற்கு ஊர்வலமாக இவர்ந்து



கொண்டுவரப்பட்டன. இந்நாட்டில் இதற்குமுன் ஒருபோதும் இவ்வண்ணம் திருமுறை ஊர்வலம் யானைமீது இவர்ந்து கொண்டுவரப் பட்டதில்லை என்பது முக்கியமாக இங்கு குறிப்பிடத்தக்கதாகும்.

இன்று ஈழத்தில் ஆண்டாண்டாகத் திருமுறை விழாக்கள் இடம் பொருள் ஏவலுக்கு அமைய ஆங்காங்கு நடைபெற்று வருகின்றன. ஆயின், எதுவித இடையீடுமின்றிப் பல ஆண்டுக்கணக்கில், தப்பாது ஆண்டுக்கொரு திருமுறைவிழா நடந்துவரும் இடம் தொண்டர் திரு. இ. சண்முகராசா அவர்களினால் இயக்கப்பட்டுவரும் திருகோணமலை இளைஞர் அருள்நெறி மன்றமாகும்,

### 9–7–1956 :

ஈழத்துச் சைவவரலாறு 9–7–1956இல் பெரிய ஒரு முன்னேற்றங் கண்டது. சைவத்தைத் தழுவி வந்த எம் இனமக்களில் ஒரு பகுதியினருக்கு இந்நாட்டில் பல நூற்றாண்டு காலமாக ஆலயத்தினுட் செல்லும் உரிமை மறுக்கப்பட்டுவந்தது. இந்தப் பாரம்பரிய கொள்கைக்கு முற்றுப்புள்ளி வைத்தற்காகப் பற்பல இடங்களில், பல கூட்டங்கள்—பல ஆண்டுகள் தொடர்ந்து நடைபெற்றுவந்தன. இவற்றின் பயனாக உரிமை குறைந்தவர்களெனக் கருதி ஒதுக்கப் பட்டு வந்த—ஆண்டவனின் குழந்தைகளாகிய அம்மக்களும் ஆலயத்தினுட் சென்று பண்ணினேர் மொழியாளுமைபங்கரைக் கண்ணினால் கண்டு வலஞ்செய்து வழிபட நம்நாட்டு ஆலயக் கதவுகள் முதன் முதலாகச் சமரசமாகத் திறந்தருள்செய்த நாள் 9–7–56 ஆகும்.

### வேதசிவாகம பாடசாலைகள் :

சைவ அறிவு, ஒழுக்கம், ஆற்றல், இறைபத்தி முதலானவை நிறைந்த சைவ ஆசாரியர்களை ஈழத்தில் உருவாக்கும் நோக்குடன் 1961ஆம் ஆண்டு கார்த்திகைத் திங்களில் திருக்கேதீச்சரத்தில் தொடக்கப்பட்டு, 1974இல் யாழ்ப்பாணம் வண்ணை சிவன் கோவிலடிக்கு மாற்றம் செய்யப்பட்டு, இன்று நடேசர் கோவில் வளவில் நடைபெற்றுவரும் சிவாநந்த குருகுலத் தோற்றத்திற்கு முன்னரே, சுன்னாகம் கதிரைமலைச் சிவன்கோவிலுக்கு அண்மையில் இந்த நோக்குடன் முகாந்திரம் சிவஸ்ரீ சதாசிவஐயர் அவர்களினால், 1920இல் பிராசீன பாடசாலை ஒன்று தொடக்கப்பட்டது. அதன் முதற் தலைமை ஆசிரியராக இருந்தவர் மகாவித்துவான் சிவஸ்ரீ சி. கணேச ஐயர் அவர்கள் ஆவர். இதற்குப் பல ஆண்டுகளுக்கு முற்பட இற்றைக்கு முக்கால் நூற்றாண்டுக்குமுன் *சங்குவேலியில் (உடுவில்), சித்தங்கேணி

* யாழ்ப்பாணத்தரசர் காலத்தில் இருந்த தமிழ்ச்சங்கப் புலவர்க்கு அரசர்களினால் வழங்கப்பட்ட ஊர் சங்கவேலி என்ப. அது மருவியே இன்று சங்குவேலி ஆனதாம்.

வைத்திலிங்கம் அவர்களால் வழங்கப்பட்ட பொருள் கொண்டு அந்தணச் சிறுர்கள் சிவாகம முறைகளையும், சைவசமய தத்துவ விளக்கங்களையும், சாத்திர தோத்திர அறிவைத் தமிழிலும்—வடமொழியிலும் நன்கு கற்று, நித்திய நைமித்திய சைவக்கிரியைகளைச் சைவ ஆலயங்களிலும், மற்றும் சைவத் தாபனங்களிலும் ஒழுங்காகவும் சிறப்பாகவும் நடத்தக் கூடியவர்களாகப் பயிற்றுவதற்கான சிவாகம பாடசாலை ஒன்றும் நிறுவப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

12-9-1957இல் கொழும்பில் தொடக்கப்பட்ட அகில இலங்கைச் சிவப் பிராமண சங்கமும் மேற்கூறப்பட்ட அடிப்படையிலான வேத சிவாகம வகுப்பொன்றை ஒழுங்காக நடத்தி வருகின்றது. இதனோடு தொடர்பு பட்ட இதே வகுப்பொன்று இணுவில் சிவஸ்ரீ மகாதேவக் குருக்களினால் நடத்தப்பட்டு வருகின்றது.

ஆறுமுக நாவலர் பெருமான் தமிழ்மொழி, வடமொழி ஆகிய இருமொழிகளினதும் கருவி நூலுணர்ச்சியும், சிவாகம அறிவும் விருத்தியடைய வேண்டும் என்று பல சாதனங்களைச் செய்து வைத்துள்ளார்கள். அவற்றைத் தொடர்ந்தே அவர்களது திருவுளப் பாங்கின்படி அவர்களது அண்ணர் மகனாகிய திரு. த. கைலாசபிள்ளை காவிய வகுப்பு நடைபெறச்செய்தும், சிவாகம சாரமான நூல்களை அச்சிடுவித்தும், சிவாசாரியர்களுக்கான வகுப்புக்களை நடத்துவித்தும் வந்தனர்.

சுன்னாகத்தில் பிறந்து, நீர்வேலியில் வாழ்ந்து வந்த சைவவேளாள மரபைச் சார்ந்த திரு. சி. சங்கரபண்டிதர், அவர் மகன் நீர்வேலி திரு. ச. சிவப்பிரகாசபண்டிதர் ஆகியோர் சிறந்த வடமொழி, தென்மொழிப் புலமை மிக்கோராவர். இவர்கள் வடமொழிச் சிவாகமங்களிலும், தமிழ் மொழிச் சித்தாந்த நூல் அறிவிலும் வல்லவர்கள். இவர்களிடம் கற்ற பல அந்தணர் பிற்காலத்தில் சிறந்த சிவாசாரியர்கள் என மதிக்கப்பெற்றவர்களாவர். இவர்களுள் சங்கரபண்டிதரிடங் கற்ற கீரிமலை சிவஸ்ரீ சபாபதிக்குருக்கள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்க சிவாசாரியராவர். யாழ்ப்பாணத்தில் வாழ்ந்த வடமொழிப் பண்டிதர்களுள் முதன்மை பெற்றவர் சங்கரபண்டிதரேயாம். இன்றும் இதே தன்மையான அந்தணர் குலத்தோரல்லாத சைவநெறி யொழுக்கங்களில் சிறந்த, வடமொழி தென்மொழிப் புலமைமிக்க பெரியோர் இந்நாட்டில் வாழ்ந்து வருகின்றனர். இந்நிரலில் ஏழாலை வாசிகளாகிய சைவத்திரு மு. ஞானப்பிரகாசம், பண்டிதர் மு. கந்தையா, ஆவரங்கால் பண்டிதர் ச. சுப்பிரமணியம் போன்றோர் இங்கு குறிப்பிடத்தக்கோராவர்.



வண்ணார்பண்ணை வைத்தீசுவரன் கோவிலுக்குத் தமிழ்நாட்டிலிருந்து அந்நாளில் தருவிக்கப்பட்ட அர்ச்சகர்கள் சிவாகம விற்பன்னர்களாக இருந்தார்களெனவும், இந்நாட்டில் வேதாத்தியயனமும், சிவாகம ஞானமும் பரவுவதற்கு அவர்களே காரணர்களாக இருந்தார்களெனவும் கூறப்படுகின்றது.

கொழும்பிலுள்ள பொன்னம்பலவாணேசுவரர் கோவில் அர்ச்சகர்கள் சிவாகமக் கிரியைகளில் மேன்மையுடையவர்களாக இருக்க வேண்டுமென்ற நோக்கத்தில், அவற்றிற்காக வேண்டிய வசதிகளையெல்லாம் சேர் பொன். இராமநாதன் அவர்கள் அக்காலம் அக்கோவிற் குருமார்களுக்குச் செய்துகொடுத்துதவியுள்ளார்.

இன்னும், புலோலி சிவஸ்ரீ ம. முத்துக்குமாரசுவாமிக் குருக்கள், சங்கானை அ. அருணாசலசாத்திரிகள் ஆகியோர் தங்கள் வாழ்நாள் முழுவதையும் வடமொழிக் காவியம், வியாகரணம், ஆகமம், பத்ததிகள் முதலியவற்றைப் பாடஞ்சொல்லிக் கொடுப்பதில் போக்கிய பெரியோராவர். இவ்வாறே மாதகல் சிவஸ்ரீ சு. ஏரம்பையர், கீரிமலை சிவஸ்ரீ தி. குருசாமிக்குருக்கள், அச்சுவேலி சிவஸ்ரீ ச. குமாரசுவாமிக்குருக்கள் முதலியோர் அர்ச்சகர்களுக்குப் பயிற்சி அளிப்பதற்காகச் செய்த முயற்சிகளும் சேவைகளும் சொல்லிலடங்காதன. இதே வகுப்புக்கள் யாழ்ப்பாணம் சைவபரிபாலனசபையால் யாழ். இந்துக் கல்லூரியிலும், கொழும்பு சட்டத்தரணி சைவத்திரு. சு. சிவசுப்பிரமணியம் அவர்கள் முயற்சியால் நல்லூர் கைலாயபிள்ளையார் கோவில் அறங்காவலர்களது இணக்கத்துடன் அவ்வாலய மண்டபத்திலும் நடைபெற்று வந்தமையும் குறிப்பிடத்தக்கனவாகும்.

மு. கு.: வேதசிவாகம பாடசாலையில் இன்று பயின்றுவரும் மாணவர்கள் நல்ல முறையிலான தேர்ச்சிபெற வேண்டின், இப் பாடசாலை முறைக் கல்விப் பயிற்சியை விடுத்து, ஐந்து ஆண்டுகளேனும், ஏழு ஆண்டுகளேனும், பன்னிரண்டு ஆண்டுகளேனும் குருகுலவாச முறையில் பயிற்சி பெறவேண்டும். அங்கும் வடமொழி வேதசிவாகமப் பயிற்சியுடன் மாத்திரம் நிற்காது, தமிழ் இலக்கண இலக்கியம், சைவத்திருமுறைகள், சித்தாந்த சாத்திரங்கள், புராணங்கள், இதிகாசங்கள் போன்றவற்றிலும் நல்ல அறிவு பெறக் கற்கவேண்டும். அப்படியான வகையிலமைந்த குருமாரது அறிவே சோபிக்கும் என்பது திண்ணம்.

## நாட்டுக்கோட்டை நகரத்தார் பணி :

நாட்டுக்கோட்டைச் செட்டிகளை "நகரத்தார்" என்றழைப்பது வழக்கம். தமிழ்நாட்டிலிருந்து காலத்துக்குக் காலம் இவர்கள் வாணிப நோக்கில் இந்நாட்டிற்கு வந்திருக்கிறார்கள். வந்தவர்கள்

தாம் சென்ற இடமெல்லாம் தங்கள் சமயமாகிய சைவத்தின் வளர்ச்சி கருதிப் பல புண்ணிய கைங்கரியங்களில் ஈடுபட்டிருக்கின் றனர். அவர்கள் இருந்த இடங்களாகிய யாழ்ப்பாணம், கொழும்பு, கண்டி, கம்பளை, நாவலப்பிட்டி, பண்டாரவளை, இரத்தினபுரி, மாதம்பை, புத்தளம், குருநாகல், நீர்கொழும்பு, காலி ஆகிய இடங்களில் சைவத் திருக்கோயில்களையும் திருமடங்களையும் கட்டி, ஊழி ஊழியாக அவற்றைப் பரிபாலிப்பதற்கு வேண்டிய பல இலட்சம் ரூபா பெறுமதி யான நிவந்தங்களையும் ஏற்பாடு செய்திருக்கின்றனர். இன்று நகரத் தார் தொகை அருகிக்கொண்டு வந்தாலும், அவர்கள் கட்டிய கோயில்களும், அவற்றில் நடைபெற்று வரும் சிறப்பு விழா நிகழ்ச்சி களும் இந்நாட்டில் சைவசமய வளர்ச்சிக்காக அவர்கள் செய்த தொண்டுகளை என்றும் நினைவுபடுத்திக்கொண்டிருக்கவே செய்யும்.

கி. பி. 1820ஆம் ஆண்டு ஆவணி தொடக்கம் கொழும்பில் நகரத்தாரால் அதிசிறப்பாக நடத்தப்பட்டுவரும் "வேல்விழா" இந் நாட்டுத் தேசிய விழாக்களில் ஒன்றாகும். இவ்விழா நாள் கி. பி. 1931 தொடக்கம் கி. பி. 1956 வரையான ஆண்டுகளில் அரசாங்க விடுமுறை நாளாக இருந்து வந்ததென்பது இங்கு நினைவுகொள்ளற் பாலதாகும்.

**கட்டாயக் கல்வி:**

இன்று இந்நாட்டில் ஒவ்வொரு சமய மாணவர்க்கும் அவரவர் சமயம் கட்டாய பாடமாகப் படிப்பிக்க வேண்டுமென அரசாங்கம் பிர கடனம் செய்துள்ளது. இதன்படி, கல்வி பயிலும் சைவ மாணவர்கள் தம் சமயத்தை எதுவிதத்திலும் கற்றே ஆகவேண்டும். சமயத்தைப் பரீட்சைக்குக் கற்பதோடு நில்லாது, கற்ற வழி அவர்கள் நிற்பரேல் அவர்கள் யாபேரும் சிவபுரம் சேர்வர் என்பதில் யாதுமோர் ஐயுறவு மில்லை. இப்படியான நிலைபேற்றிற்கு ஆளாவதற்கேற்ற சூழ்நிலை இந்நாட்டில் சைவ மக்களுக்கு இருப்பது சிவநெறி பேணுவோர் தவப் பயனேயாம்,

**பத்திரிகைகள்:**

ஈழநாட்டில் சைவசமய வளர்ச்சி தொடர்பாக இற்றைவரை வெளிவந்த — வெளிவந்துகொண்டிருக்கும் பத்திரிகை — சஞ்சிகை முதலானவற்றின் பெயர், அவற்றின் ஆரம்பகால ஆண்டு —ஆரம்ப கால ஆசிரியர் பெயர் போன்ற விவரங்கள் கீழ்க்கண்டவாறு:-

1877 — இலங்கைநேசன் — திரு. எச். எம். சின்னத்தம்பி

1880 — சைவஉதயபானு — ஊரெழு சரவணமுத்துப்பிள்ளை
சைவப்பிரகாச சமாச வெளியீடு



1881 — சைவசம்போதினி — கையெழுத்துப் பிரதி
உடுவில் சிவஸ்ரீ வைத்தீஸ்வர ஐயர்

1882 — விஞ்ஞானவர்த்தனி — மூத்ததம்பிச்செட்டியார்

1884 — சைவாபிமானி — இயற்றமிழ்ப் போதகாசிரியர்
வல்வை ச. வைத்திலிங்கம்பிள்ளை

1886 — உதயபானு — காரைதீவு கார்த்திகேயப் புலவர்

11-9-1889 (விரோதி ஆண்டு
ஆவணி 28ஆம் நாள்
கிருஷ்ண பக்கத் துதியை
யுடன் கூடிய உத்திரட்
டாதி புதன்கிழமை)

தமிழில் "இந்துசாதனம்"-நல்லூர் கைலாசபிள்ளை
ஆங்கிலத்தில்
"Hindu Organ" — இளைப்பாறிய திருவனந்தபுரம் உயர் நீதிமன்ற நீதிபதி தா. செல்லப்பா பிள்ளை. யாழ்ப்பாணம் சைவபரி பாலன சபை வெளியீடு.

12-2-1907 ஞானசித்தி
மாதம் இரண்டு வெளியீடு — வதிரி வித்துவான் சி. தாமோதரம் பிள்ளை. யாழ்ப்பாணம் விவேகா நந்த அச்சகப் பதிப்பு. இவ் வச்சக அந்நாள் உரிமையாளரும் அவரே.

1908 — சைவகுக்குமார்த்த
போதினி — திரிபதார்த்த இலட்சணம், சித்தாந்தம் என்னும் நூல்களின் ஆசிரியர் - வேலணை செ. கனக சபாபதிப்பிள்ளை.

வெளியீடு செய்துதவியவர் - வேலணை வி. கந்தப்பிள்ளை

மு, கு. 1 "சித்தாந்தம்" என்ற இவ்வாசிரியர் நூலில் வேதாந்த சித்தாந்தம் என்னும் இரண்டினதும் தொடர் பைத் தெளிவுறச் சுருக்கமாக விவரித்துள்ளார். ஈண்டு "வேதாந்தம்" என்பது யோகப்பெயராக எடுத்துக் கூறும்

வேதத்தின் முடிவாகிய உபநிடதங்களையேயாம். ஊருடிப் பெயராக எடுத்துக்கூறும் ஏகான்மவாதத்தைச் சாதிக்கும் நூற்கருத்தை அன்றும்.

1910 — சைவபாலிய சம்போதினி

1910 — ஞானப்பிரகாசம்

1910 — பாலச்சந்திரன்

1911 — கலியுகவரதன்

1911 — சண்முகநாதன்

1911 — சைவாபிமானம் காரணமாகச் சைவ உண்மைகளைத் துண்டுப் பிரசுர மூலம் கிழமைக்கொன்றாக மாதம் நான்கு வெளியீடு. இலங்கை இந்து சபையார் வெளியீடு, கொழும்புப் பிரசுரம்.

1917 — The Young Hindu —

1924 — சைவசித்தாந்தபானு —

1924 — பாலமித்திரன் மாதவெளியீடு — கொழும்பு கலா அபிவிருத்திச் சங்கம்

1924 — தமிழர் போதினி — ஆசிரியர் கு. விஜயரத்தினம், யாழ்ப்பாண வெளியீடு.

1925 திசம்பர்—விவேகாநந்தன்— முதல் ஆசிரியர் விபுலாநந்த அடிகள். கொழும்பு விவேகாநந்த சபை வெளியீடு.

1933 — வித்தகம்—வாரஇதழ் — தென்கோவைப் பண்டிதர் ச. கந்தையாபிள்ளை

1935 — சைவத்தொண்டன் —

1935 — சிவதொண்டன் — யாழ்ப்பாணம், சிவயோகசுவாமிகள் அருளாணை வெளியீடு: வித்துவான் க. கி. நடராசா

13-4-1938 (வெகுதானிய ஆண்டு சித்திரைப்பிறப்பு) சைவபோதினி — மாத இதழ்: பருத்தித்துறை சைவப் பிரகாச சபை வெளியீடு. சைவ போதினி அச்சகப் பிரசுரம்

1939 ஆவணி — சைவசாத்திர பரிபாலனம் — அச்சுவேலி, சிவஸ்ரீ ச. குமாரசாமிக் குருக்கள்



ஆறுமுகநாவலர் — வெளியீடு யாழ்ப்பாணம் வேதாகம சைவசித்தாந்த சபை. ஆசிரியர் சிவஸ்ரீ ச. குமாரசாமிக்குருக்கள்.

16-11-1948 ஆத்மஜோதி — கௌரவஆசிரியர், க. இராமச்சந்திரா. பதிப்பாசிரியர், நா. முத்தையா. வெளியீடு, நாவலப்பிட்டி ஆத்ம ஜோதி நிலையம்.

13-12-1959 — இந்து இளைஞன் மூன்று மாதங்களுக்கு ஒன்றாகத் தொடங்கி, இரண்டு மாதங்களுக்கு ஒன்றாக வளர்ந்து, 1961 மே தொடக்கம் மாத இதழாக வெளிவந்தது. — ஆசிரியர் சோ. பத்மநாதன் வெளியீடு கொழும்பு இந்து வாலிபர் சங்கம்.

1964 (குரோதி ஆண்டு சித்திரை) சிவாயவாசி மாத இதழ்—கொழும்பு வெளியீடு.

1965 சைவக் குரல் — மாத்தளை சைவ மகாசபை வெளியீடு.

1966 — சைவக்காவலன் —

1967 — இலங்கை இந்து — வெளியீடு அகில இலங்கை இந்து மாமன்றம்.

1972 — மெய்கண்டார் நெறி — வெளியீடு தொண்டை மண்டலம் மெய்கண்டார் ஆதீனம் குருமகா சந்நிதானம் அவர்கள் ஆணைப்படி ஈழத்துத் திருநெறிய தமிழ் மன்றம்.

1974 — அருளமுதம் — வெளியீடு நல்லை ஆதீனம்

3-6-1977 — சந்திரதீபம் — கொக்குவில் உயரப்புலம், வை. நல்லையா. இலங்கைமணி சைவநூற் பதிப்பக மாத வெளியீடு.

கோப்பாய் சபாபதி நாவலர் அவர்கள் சைவசித்தாந்த பரிபாலனத்தின் பொருட்டு, சென்னையில் சித்தாந்த வித்தியானு பாலன என்னும் அச்சகத்தை நிறுவி "ஞானமிர்தம்" என்னும் பத்திரிகையை வெளியீடு செய்துவந்தார்.

ஏழாலை காசிவாசி செந்திநாதஐயர் அவர்கள் சேலம் மாவட்ட திருப்புற்றூரில் இருந்து "அமிர்த போதினி" என்ற பத்திரிகையை 1888இல் ஆரம்பித்து வெளியீடு செய்து வந்தார்.

## ஆலய—குடிசனத் தொகை:

அரசாங்க ஆணைப்படி 1951 யூனில் வெளியாகிய Vஆம் பருவ மடலாகிய "சைவசமய அறநிலையங்கள் முதலியவை பற்றிய விசேட விசாரணைச் சபையின் அறிக்கை" என்ற தொகுதியில் இருந்து எடுக்கப்பட்ட மாகாண—மாவட்ட ஈழத்துச் சைவாலய விவரங்கள் பின் வருமாறு:

| மாகாணம் | மாவட்டம் | ஆலயங்கள் தொகை | 1946ஆம் ஆண்டு குடிசனக் கணிப்புப்படி மாகாண அடிப்படையான சைவமக்கள் தொகை |
|---|---|---|---|
| மேல் | கொழும்பு | 33 | 1,16,529 |
| | கழுத்துறை | 15 | |
| மத்தி | கண்டி | 122 | 3,96,416 |
| | மாத்தளை | 12 | |
| | நுவரெலியா | 70 | |
| தெற்கு | காலி | 05 | 17,753 |
| | மாத்தறை | 17 | |
| | அம்பாந்தோட்டை | 04 | |
| வடக்கு | யாழ்ப்பாணம் | 1,196 | 3,83,855 |
| | வவனியா | 87 | |
| | மன்னார் | 43 | |
| கிழக்கு | மட்டக்களப்பு | 182 | 1,24,736 |
| | திருகோணமலை | 55 | |
| வடமேல் | குருநாகல் | 17 | 21,733 |
| | புத்தளம் | 33 | |
| வடமத்தி | அநுராதபுரம் | 32 | 9,774 |
| ஊவா | பதுளை | 139 | 1,34,576 |
| சப்பிரகமுவா | இரத்தினபுரி | 91 | 1,14,980 |
| | கேகாலை | 34 | |
| | | 2,187 | 13,20,352 |



1871 — 1971 வரையான கால ஈழத்துச் சைவக் குடிசனத் தொகையும் மொத்தக் குடிசனத் தொகையில் சைவர்கள் விகிதாசாரமும், சைவர்கள் தேசிய விகிதாசாரப் பெருக்க விகிதமும்:

| ஆண்டு | மொத்தத் தமிழர் தொகை | நாட்டு மொத்தக் குடிசனத்தில் தமிழர் % | மொத்தச் சைவர்கள் தொகை | நாட்டு மொத்தக் குடிசனத்தில் சைவர்கள்% | |
|---|---|---|---|---|---|
| 1871 | 5 37,818 | 22·4 | 4,65,944 | 19·4 | * |
| 1881 | 6,87,248 | 24·9 | 5,93,630 | 21·5 | 27·4 |
| 1891 | 7,38,853 | 24·1 | 6,15,932 | 20·5 | 03·8 |
| 1901 | 9 51,740 | 26 7 | 8,26,826 | 23·2 | 34·2 |
| 1911 | 10,59,007 | 25 8 | 9,38,260 | 22·8 | 13·5 |
| 1921 | 11,20,059 | 24 9 | 9,82,073 | 21·8 | 04·7 |
| 1946 | 15,14,320 | 22·7 | 13,20,352 | 19·8 | 34·4 |
| 1953 | 18,58,807 | 23·0 | 16,10,561 | 19·9 | 21·9 |
| 1963 | 22,93,160 | 21·7 | 19,45,210 | 18·3 | 21·6 |
| 1971 | 26,10,935 | 20·5 | 22,39,310 | 17·6 | 14·3 |

1971ஆம் ஆண்டு இந்நாட்டில் எடுக்கப்பட்ட குடிசனக் கணக்கில், மாவட்ட அடிப்படையிலான சைவமக்கள் குடிசனத் தொகையும், மாவட்ட மொத்தச் சைவர்களின் விகிதாசார விவரங்களும்:

| மாவட்டம் | *மாவட்டக் குடிசனத்தொகை | மாவட்டச் சைவ மக்கள் தொகை | மாவட்டத்தில் சைவமக்கள் விகிதம் | நாட்டு மொத்த சைவர்களில் மாவட்டச் சைவ மக்கள் விகிதம் |
|---|---|---|---|---|
| கொழும்பு | 26,72,620 | 1,45,567 | 5·4 | 6·5 |
| கழுத்துறை | 7,31,824 | 40,578 | 5·5 | 1·8 |
| கண்டி | 11,87,170 | 3,08,717 | 26·0 | 13·8 |
| மாத்தளை | 3,16,342 | 54,420 | 17·02 | 2·4 |
| நுவரெலியா | 4,52,243 | 2,36,947 | 52·3 | 10·6 |
| காலி | 7,37,451 | 16,549 | 2·2 | 0·7 |
| மாத்தறை | 5,88,254 | 18,237 | 3·1 | 0·8 |
| அம்பாந்தோட்டை | 3,41,005 | 1,381 | 0·4 | 0·1 |
| யாழ்ப்பாணம் | 7,04,350 | 5,85,418 | 83·1 | 26·1 |
| மன்னார் | 77,882 | 23,278 | 29·9 | 1·0 |
| வவனியா | 95,536 | 62,436 | 65·4 | 2·8 |
| மட்டக்களப்பு | 2,58,104 | 1,67,597 | 64·9 | 7·5 |
| அம்பாறை | 2,77,790 | 57,346 | 21·0 | 2·5 |
| திருகோணமலை | 1,91,989 | 62,828 | 32·7 | 2·8 |
| குருநாகல் | 10,28,107 | 17,493 | 1·7 | 0·8 |
| புத்தளம் | 3,79,787 | 18,200 | 4·8 | 0·8 |
| அநுராதபுரம் | 3,89,207 | 9,306 | 2·4 | 0·4 |
| பொலன்னறுவை | 1,63,858 | 4,664 | 2·8 | 0·2 |
| பதுளை | 6,16,315 | 2,14,506 | 34·0 | 9·6 |
| மொனறுகலை | 1,91,505 | 13,728 | 7·2 | 0·6 |
| இரத்தினபுரி | 6,61,710 | 1,11,648 | 17·3 | 5·2 |
| கேகாலை | 6 52,094 | 67,393 | 10·3 | 3·0 |

* முதற்கணக்கெடுப்பிலிருந்து அடுத்த கணக்கெடுப்பிற்குள்ளான காலப் பெருக்க விகிதம்.

# ஈழத்துப் புராதன சிவாலயங்கள்

ஈழத்துச் சிவாலயங்களை மூன்று பிரிவாகப் பிரிக்கலாம். அவை புராதன சிவாலயங்கள், இடைக்காலச் சிவாலயங்கள், பிற்காலச் சிவாலயங்கள் என்ப.

திருக்கேதீச்சரம், திருக்கோணேசுவரம், நகுலேசுவரம், முன்னேசுவரம் [1]சம்புகேசுவரம், மாஞுவாரி போன்றவை புராதன சிவாலயங்களாகும்.

கி. பி. மூன்ரும் நூற்ருண்டில் வீரவராயன் என்னும் வாணிவச் செட்டியினுல் செட்டிகுளத்தில் கட்டப்பட்ட சந்திரசேகரர் கோவிலும் புராதன சிவாலயமாகும். ஆயின் இதன் வரலாறு பற்றி விளப்பமாக இன்று ஒன்றும் அறிந்துகொள்ள முடியாதிருக்கின்றது.

பழைய அநுராதபுரத்திலும் சிவ வணக்கம் பண்டை நாளில் இருந்ததற்குப் போதிய சான்றுகள் கிடைத்துள்ளன. சைவர்கள் பண்டைக்காலந் தொடங்கி நட்சத்திரங்களைப் பற்றியும் கிரகங்களைப் பற்றியும் அவற்றிற்கும் மனிதருக்குமுள்ள தொடர்பைப் பற்றியும் அறிந்திருந்தார்கள். இவற்றைப் பற்றிய அறிவு பூர்விக இலங்கை மக்களிடத்தும் காணப்பட்டது. மக்கள் பிறந்த நட்சத்திரத்தைக் கொண்டே சிலருக்கு பேர் வைக்கப்பட்டதாக டாக்டர் பரணவிதான கூறுகின்ருர். இதன்படிக்கு அநுராதபுரம் என்ற நகர்ப்பெயரும் சைவ மக்கள் போற்றும் நட்சத்திரங்களுள் ஒன்ருய அநுஷ நட்சத்திரத்திலிருந்தே வந்ததாகவும் கூறப்படுகின்றது. தேவநம்பியதீசன் அநுராதபுரத்தின் எல்லையை வரையறை செய்தபோது அவன் பிராமணன் ஒருவனுக்குச் சொந்தமான கோவில் ஒன்றைக் கடந்து போகவேண்டி இருந்ததாகக் கூறப்படுகின்றது. 1893இல் அநுராதபுரியில் நடைபெற்ற புதைபொருள் ஆராய்ச்சி, அப்பழம் நகரில் [2]சிவன்கோவில் ஒன்று இருந்ததைத் தெளிவுறுத்தியுள்ளது. ஜெத்தவனராம விகாரைக்கும், விஜயராம மடத்திற்கும் இடையில் சைவ ஆலயங்கள் பலவும் அவற்ருேடு தொடர்பான கட்டடங்களும் அவ்வாராய்ச்சியின் போது கண்டுபிடிக்கப்பட்டன. இரு சிவன் கோவில்களில் கருங்கல்லில் செய்யப்பெற்ற இரண்டு சிவலிங்கங்கள் அவைகளுக்குரிய இடங்களில் கண்டெடுக்கப்பட்டன. இவ்வாலயங்களும் ஈழத்துப் புராதன சிவ ஆலயங்களுடன் சேர்க்கப்பட வேண்டியவையாகும்.

1. திருவடிநிலையில் அழிந்த கோயிற் பெயர்.

2, பெருமான் பெயர் : அநுராசபுரேசுவரர். இறைவி பெயர் : விஜயாம்பிகை.

* தினமொன்றிற்கு இரண்டாயிரம் சிற்பிகள் கூடி வேலை செய்தாலும், இருபது வருடங்களில் முடித்தற்கரிதான மகத்துவம் வாய்ந்த அறபுதலங்காரமான கருங்கற் திருப்பணியுடைய சிவாலயம் என்று பறங்கிச் சரித்திரக்காரனே வியந்து கூறுமளவு பிரமாண்டமான சிவாலயத்தை 1552இல் சீதாவாக்கையில் பறங்கியர் இடித்தழித்தனர்.

— யாழ்ப்பாண வைபவ கௌமுதி



ஒட்டுசுட்டான் தான்தோன்றீசுவரர், கொக்கட்டிச் சோலை தான்தோன்றீசுவரர், பொலன்னறுவைச் சிவன் கோயில், பதவியாச் சிவன் கோயில், [1]உருத்திரபுரம் சிவன்கோயில், பனங்காமம் சிவன் கோயில், வவனிக்குளத்திற்கு அண்மையிலுள்ள கோயிற்காடு, கற்சிலமடு ஆகிய இடங்களிலுள்ள சிவன் கோவில்கள், [2]குதிரைமலைக்கருகே உள்ள அசுவகிரி, நல்லூர் சட்டநாதர் சிவன் கோவில் போன்ற யாவற்றையும் இடைக்காலக் கோவில்களாகக் கொள்ளலாம்.

இடைக்காலக் கோவில்கள் யாவும் சோழ பாண்டியர் ஆட்சிக் காலத்தில் கட்டப்பட்டனவாக ஊகிக்க இடமுண்டு. இவர்கள் ஆட்சியில், காடாக இன்று மிளிரும் வன்னிப் பிரதேசத்தில் பல சிவன் கோவில்கள் கட்டப்பட்டிருக்கின்றன. இங்கெல்லாம் நான்கு மறைகளிலும் வல்ல அந்தணர் பலர் இருந்திருக்கிருர்கள், இவற்றை உறுதிப்படுத்துகின்றன பழமோட்டைக் கல்வெட்டும், கந்தளாய்க் கற்சாசனமும், மற்றும் இவ்விடங்களில் கண்டு எடுக்கப்பட்ட பிற ஏதுக்களும்; இப்பிரதேசத்துக் காடுகளை அழித்து நாடாக்குங்காலை பல அழிந்த இடைக்காலச் சிவாலயங்கள் மேலும் வெளிப்படலாம் என நம்ப இடமுண்டு. சோழ பாண்டியர் ஆட்சிக் காலந் தொட்டு யாழ்ப்பாணத்து அரசர் – வன்னிநாட்டரசர் காலம் வரை எழுந்த ஆலயங்களை இடைக்காலச் சிவாலயங்களாகக் கணிக்கலாம்.

யாழ்ப்பாணத்தரசர்-வன்னி நாட்டரசர் வீழ்ச்சிக்குப் பின், தனிப்பட்ட வள்ளல்களாலும், ஊரவர்களினுலும் கட்டப்பட்ட சிவாலயங்கள் பிற்காலத்தனவாகும்; வண்ணை வைத்தீசுவரன் கோயில், காரைநகர் சிவன் கோவில், தம்பலகமம் சிவன்கோயில், கொழும்பு கொச்சிக்கடை பொன்னம்பலவாணேசுவரர் கோயில் போன்றவை இக்காலத்தைச் சார்ந்தவையாகும்.

## 1. திருக்கேதீச்சரம்

" மேரு நடுநாடி மிக்கிடை பிங்கலை
கூரு மிவ்வானின் இலங்கைக் குறியுறுஞ்
சாருந் தில்லைவனத் தண்மா மலயத்தூ
டேறுஞ் சுழுனை யிவைசிவ பூமியே"

எனச் சிறப்பாகத் திருமந்திரத்திற் கூறப்படும் சிவபூமியாகிய ஈழநாட்டிற் கீர்த்தி வாய்ந்த அதிபுராதன சிவாலயங்கள் பலவுள; அவற்றுள் திருக்கேதீச்சரமும் ஒன்ருகும்.

1. 2-9-1822இல் சேர் வில்லியம் துவைனம் என்பவரால் காட்டில் கண்டுபிடிக்கப் பட்டது.

2. மறிச்சுக்கட்டியிலிருந்து $7\frac{1}{2}$ கல் தொலைவிலுள்ள இடம் கல்லாறு.

மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகியன மூன்றும் முறையாக அமைந்த பதி திருக்கேதீச்சரம். கேது, மயன், மகாதுவட்டா, மண்டோதரி, இராமன், அகத்தியர் முதலாம் பெருந்தவத்தோர்கள் குறைநீங்க வழிபட்டு அருள்பெற்றுய்ந்த வரலாறுடைய தலம் இதுவாகும். தேவர்கள் இங்கு அர்த்தசாமப் பூசை செய்வதாக ஓர் ஐதிகமும் உண்டு. புரட்டாதி மாதப் பூர்வபட்ச சதுர்த்தசித் திதியே தேவர்கள் அர்த்தசாமப் பூசை நாளாகும். கேது வழிபட்ட தலமாதலின் இது கேதீச்சரமெனப் பெயர் பெற்றதாம்.

விசயன் இந்நாட்டிற்கு வந்தபோது வடக்கே கீரிமலேச்சாரலிலே திருத்தம்பலேசுவரன் கோயிலையும், கிழக்கில் கோணேசர் கோயிலையும், தெற்கில் சந்திரசேகர ஈசுவரன் கோயிலையும் (மாத்தறையில் அழிபாடடைந்துவிட்ட கோயில். இக்கோயிலின் அழகிய நந்தி ஒன்று 1956 பெப்பிரவரி ஸ்ரீ லங்கா சஞ்சிகையில் வெளியாகியிருந்தது) மேற்கில் திருக்கேதீச்சரத்தையும் வழிபட்டுத் திருப்பணி வேலைகள் பல செய்ததாகவும் வரலாறு கூறுகின்றது.

திருக்கேதீச்சரம் இருக்கும் இடத்திற்கு "மாதோட்டம்" எனப் பெயர் வந்த காரணம், சூரபன்மனுடைய மனைவியின் தகப்பனுடைய தகப்பன் பெயர் துவட்டா என்பதனாலாம். அவன் நெடுங்காலம் பிள்ளைப் பேறில்லாதிருந்து, திருக்கேதீச்சரத்திற்கு வந்து பாலாவியில் நீராடி, கேதீச்சரப் பெருமானை வழிபட்டு வந்தமையால் பிள்ளைப்பாக்கியம் கிடைத்ததாம். இதனால் அவன் அவ்விடத்தை ஒரு நகரமாக்கி அங்கு வாழத் தலைப்பட்டானும் "துவட்டா" என்னும் பெயர்கொண்ட அவனால் உண்டாக்கப்பெற்ற நகரமானமையால் அது "துவட்டா" ஆகிப் பெருநகரமானபோது "மாதுவட்டா" ஆயதாகவும், காலக்கிரமத்தில் அச்சொல் திரிபடைந்து "மாதோட்டம்" எனப் பெயர்பெற்றதாகவும் கூறப்படுகின்றது.

இவ்வாலய மகாலிங்கத்தைப் பூசித்த தேவர்களும் முனிவர்களும் சித்தி முத்திகளைப் பெற்றிருப்பதனால், இவ்வாலயம் மூர்த்தி விசேடம் பெற்று விளங்குகின்றது.

தன்னை அடைந்து இறந்தோர்க்குப் பிரணவ உபதேசஞ் செய்யும் இடமாக திருக்கேதீச்சரம் இருப்பதால், தலவிசேடம் மிக்க தலமாகவும் விளங்குகின்றது.

இவ்வாலயத் தீர்த்தமாய பாலாவிக் கரையிற் பிதிர்க்கடன் செய்வோர்க்குக் காயாவிற் செய்யும் சிராத்த புண்ணிய பலன் கூடும் என்பதனால், இங்கு நீராடிக் கேதீச்சரப் பெருமானை வழிபடுவோருக்குப் பிரமகத்தி முதலிய பாவங்கள் நீங்குகின்றதனால் தீர்த்த விசேடமும் பெற்ற தலமாகின்றது இவ்வாலயம்.



இந்நாட்டு ஆதிக்குடிகளாகிய நாகர்களது தலையாய வணக்கத் தலமாக விளங்கியதும் கேதீச்சரமேயாகும். இதனால் நாகநாதர் என்ற பழம்பெயர் ஒன்றும் கேதீச்சரப் பெருமானுக்குண்டு. இது நாகர்களது தொன்மையை எடுத்துக் காட்டுவதுடன், இந்நாட்டுச் சைவநெறியினதும், திருக்கேதீச்சரத்தினதும் தொன்மையையும் வலியுறுத்துஞ் சான்றுமாகின்றது.

7ஆம் 8ஆம் நூற்றுண்டுகளில் வாழ்ந்த சிவானுபூதிச் செல்வர்களாகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளாலும்; சுந்தரமூர்த்தி சுவாமிகளாலும் தேவாரத் திருப்பதிகங்கள் பாடப்பட்ட பேரருள் மிக்க பெருஞ் சிவத்தலம் இதுவாகும். அப்பர் சுவாமிகளின் திருவீழிமிழலைத் திருத்தாண்டகத்தில் "பூதியணி பொன்னிறத்தர்" என்ற பாடலிலும், சுந்தரரின் திருநாட்டுத் தொகையில் "ஈழநாட்டு மாதோட்டம்" என்ற பாடலிலும்; சேக்கிழாரின் பெரியபுராணத்தில் "அந்நகரில் அமர்ந்தங்கண்—மன்னுமிரா மேசுரத்து" என்னும் பாடலிலும் திருக்கேதீச்சரம் இடம்பெற்றிருக்கின்றமை பெருமைக்குரியதாகும். சோழரும் பாண்டியரும் திருப்பணிகள் பல செய்ததும்; வன்னி நாட்டரசரதும், யாழ்ப்பாணத்தரசரதும் இறை உணர்ச்சியால் நித்திய நைமித்தியங்கள் நியமமாகச் செய்து வளர்க்கப்பட்ட பெருமைக்குரியதுமான பெரும் பதி இதுவாகும். இத்திறச் சீரும் சிறப்பும் பழம் பெருமையும் மகிமையும் வாய்ந்த ஈழத் தமிழரின் இப் புண்ணிய திருத்தலம், காலச் சுழற்சியிற் சிக்குண்டு சிதைவுற்று அழிந்து மண்மேடாகும் நிலை ஏற்பட்டது.

திருக்கேதீச்சரம் இருக்கும் இடம் "வன்னிநாடு" என்று கூறப்படும். இவ்வன்னி நாடு 3000 சதுரமைல் பரப்பளவு கொண்டதாகும். இவ்வன்னி நாட்டிலுஞ் சிறப்பாக திருக்கேதீச்சர ஆலயச் சூழலில் மேலும் பல திருத்தலங்கள் அக்காலத்தில் இருந்ததாகத் தொல்பொருள் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். அவர்கள் கூற்றுப்படி திருக்கேதீச்சரம் அந்நாளில் ஒரு கோயிற் பட்டினம் (City of Temples) எனப்படுகின்றது. அந் நாளில் இவ்வாலயக் கோட்டஞ் சிற்பத்தில் வல்ல தபதிகளுக்கு உறைவிடமாக இருந்ததாகக் கருதப்படுகின்றது. இன்று காடுமண்டிக் கிடக்கும் வளமிக்க வன்னிப் பிரதேசத்தில் திருக்கேதீச்சரம் போன்ற பல உன்னத சிவாலயங்கள் இருந்திருக்கின்றன என்பதும், அவை இன்று கண்ணுக்கு எட்டாது அழிந்தும், மறைந்துங் கிடக்கின்றன என்பதும் அகழ்வாராய்ச்சியாளர் தேற்றமாகும்.

அன்றைய பாலாவியின் முகத்துவாரத்தில் மாந்தைத் துறைமுகம் அமைந்து இருந்தது. அங்கே மலைபோன்ற அலைகள் எழுந்தும்

விழுந்தும் காட்சியளித்தன. களஞ்சியக் கட்டடங்களும், பாலத் துறையும் பாலாவியின் தென்கரையில் அமைந்து விளங்கின. அவ் விடம் இன்றும் "வங்காலை" (வங்கம் – கப்பல்; காலை – தங்கும் நிலையம். கப்பல்கள் தங்கும் நிலையம்) என்ற பெயருடன் நிலவக் காணலாம். பாலாவியின் வடகரையில் திருக்கேதீச்சர ஆலயம் அமைந்து திகழ்ந்தது. அதை அடுத்து அதன் பரிபாலகர்களின் இல்லங்களும், மக்கள் வாழ்ந்த வளம்மிக்க மாளிகைகளும் காணப்பட் டன. அந்நாளில் மாளிகைகள் நிலவிய உயர்ந்தவிடம் "மாளிகைத் திடல்" என்றும், அந்தணர்க்குரிய இடங்கள் "பாப்பாமோட்டை" என்றும்; கோயில் நிலத்திற்கு நீர்பாய்ச்சும் குளம் "கோயிற்குளம்" என்றும் இருந்தவை, இன்றும் அதே பெயர்களில் இருந்து வருவதை நாம் காணலாம்.

திருவிராமேசுவரமுடைய மகாதேவன் கோவில் என இன்னோர் கோவில் இங்கு இருந்ததாகவும் வரலாறு இருக்கின்றது.

பத்தாம், பதினோராம் நூற்றாண்டுகளில் திருக்கேதீச்சரம் "இராசராசேசுவர மகாதேவன் கோவில்" எனச் சோழர்களால் அழைக்கப்பட்டு வந்தது.

புத்த தந்தம் பகையரசன் கைக்குப் போகாது பாதுகாத்தற் காகக் கலிங்கத்திலிருந்து கொண்டு வரப்பட்டபோது, கொண்டு வந் தவர் மாந்தோட்டையில் இறங்கியதாகவும், அன்று இரவு அவர் ஓர் ஆலயத்தில் தங்கியதாகவும் கூறப்படுகின்றது. அவ்வாலயம் பெரும்பாலும் திருக்கேதீச்சரம் ஆகவே இருக்கக்கூடுமென ஆராய்ச் சியாளர் கருதுகின்றனர்.

சிதம்பரத்தில் உள்ள கல்வெட்டு ஒன்றின்படி 12ஆம் நூற்றாண் டில் சுந்தரபாண்டியன் என்பவனால் இவ்வாலயம் பிற்காலப் பாண் டியர் சிற்பமுறையில் திருப்பிக் கட்டப்பட்டதாகக் கூறப்படுகின்றது.

இவ்வாலயம் போர்த்துக்கேயரினால் இடிக்கப்பட்டபோது, இடித்த ஆலயத்திற் சூறையாடப்பட்ட விக்கிரகங்கள் மாதோட்டத் தில் முதலாவதாகப் போர்த்துக்கேயரினால் கட்டப்பட்ட தேவாலய அத்திவாரத்தில் இடப்பட்டதாகக் கூறப்படுகின்றது.

மூன்று முழுநூற்றாண்டுகள் இருந்த இடமே தெரியாமல் இருந்த திருக்கேதீச்சர நிலத்தை வாங்கி, அதில் கோயில் எடுத்துப் பழைமை நாட்டப்பட வேண்டுமென அவாவியவர் சைவசமயத்தை விளக்க முறச் செய்ய, அவதாரமூர்த்திபோல் வந்த ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் அவர்களேயாம். இவர்கள் "யாழ்ப்பாணத்துச் சமயநிலை" என்னும் துண்டுப் பிரசுரத்தில் இது பற்றி வெளியிடப்பட்டதை அறிந்த



கொழும்பு தம்பையா முதலியாரும், சுபதார் வைத்திலிங்கமும், மாத்தளை தபாற்கோச்சு ஒப்பந்தக்காரராகிய ஆசைப்பிள்ளையும் அவர் கனவை நனவாக்க முன்வந்தனர். ஆயின், 1887 இல் நடந்த ஏலத்தில், அரசாட்சியார் விதித்த நிபந்தனைகளின் கொடூரம் காரண மாக இவர்கள் இதனைக் கொள்ள இயலாதவராயினர்.

1890இல் கண்ணியமுள்ள சைவப்பெரியோர் சிலர் யாழ்ப்பாண மாவட்ட அதிபரைக் கேட்டதையொட்டி, சைவர்களுக்கே இந் நிலத்தைக் கொடுக்கும்படி அரசினர்க்குத் தனது அறிக்கையில் அவர் பரிவுரை செய்துள்ளார்.

இத் திருக்கேதீச்சரத் தலத்திற்கு வேறு எப்பாடல் பெற்ற சிவத் தலத்திற்கும் இல்லாத தனிச்சிறப்பொன்றுஉண்டு. அது, "கோயிலோ, உருவமோ, பூசையோ யாதொன்றுமே இன்றி மூன்று முழு நூற் றாண்டுகளுக்கு மேலான காலம் தமிழ் வேதமாகிய தேவாரத் திருவுருவில் மட்டுமே கேதீச்சரப்பெருமான் உறைந்திருந்தார்" என்பதாம்.

இந் நிலைக்கு உள்ளாகி இருந்த இத் திருப்பதியின் பழைய இடத் தைக் கண்டறிந்து, அதில் கோயில் எடுத்துப் பழைமையை நிலைநாட்ட வேண்டுமென்ற முயற்சியில் முதன்முதலீடுபட்டவர் 19ஆம் நூற் றாண்டில் சைவத்தின் விடிவெள்ளியாக விளங்கிய ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் அவர்கள் ஆவர். மன்னாருக்குச் சமீபத்திலுள்ள மாதோட் டத்தில் "திருக்கேதீச்சரம்" என்னும் தேன்பொந்து ஒன்று உளது; அங்கு மருந்து ஒன்று மறைந்திருக்கின்றது; அதனைச் சென்றடையுங் கள் என ஆங்கிரச ஆண்டு ஐப்பசி மாசம் (1872) சைவ உலகிற்கு விஞ்ஞாபனம் ஒன்றை நாவலர் பெருமான் விடுத்தார்கள்.

இதனைக் கேள்விப்பட்டு அப்போது இதில் முதலாவதாக முயற் சித்தவர் திருக்கேதீச்சரத்திற்கு அண்மையில் உள்ள விடத்தல்தீவு என்னும் ஊரினராகிய திரு. வி. வேலுப்பிள்ளை என்பவராவர்.

இன்றைய திருக்கேதீச்சரத் திருப்பணிச் சபைக்கு மூல வித்திட் டவர் நாவலர் ஐயா அவர்களே என்பதும், திருக்கேதீச்சரம் புனர் நிருமாணம் பெறவேண்டுமென முதன் முதலாகக் குரல் கொடுத்த சபை "யாழ்ப்பாணம் சைவபரிபாலனசபை" என்பதும் இங்கு நினைவு கூரற்பாலனவையாம்.

மாவட்ட அதிபர் விதப்புரைப்படி, விஜய ஆண்டு கார்த்திகை 29ஆம் நாள் (13-12-1893) புதன்கிழமை அவிட்ட நன்னாளில் நடைபெற்ற ஏலத்தில் பழைய கோவில் இருந்த இடத்தோடு கூடிய

43 ஏக்கர் 3 றுட் 33 பேர்ச் காடடைந்த நிலம் நாட்டுக்கோட்டை நகரத்தவராகிய சைவப்பெரியார் ராம. அரு. பழனியப்பசெட்டியார் அவர்களால், 3,100 ரூபாவுக்கு யாழ்ப்பாணக் கச்சேரியில் கொள்வனவு செய்யப்பட்டது.

1894ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் வண்ணை சித. மு. பசுபதிச் செட்டியார் அவர்கள் திருவாளர்கள் இ. இராமுப்பிள்ளை வைத்தியர் வை. ஆறுமுகப்பிள்ளை, தா. இராகவப்பிள்ளை முதலானோர் உதவியுடன் மேற்கொண்ட முயற்சியால், ஜய ஆண்டு ஆனி முதலாம் நாள் (13-6-1894) புதன்கிழமையன்று பழைய ஆலயம் இருந்த இடமும், தீர்த்தக் கிணறு ஒன்றும், பழைய ஆலயப் பிரதிட்டா லிங்கம் ஒன்றும், திருநந்தி, சோமஸ்கந்தர், கணேசர் ஆகிய மூர்த்திகளது சிலைகளும் கண்டெடுக்கப்பட்டன இதன் நிமித்தம் இன்று கோயிலுள்ள இடத்தில் சிறு கோயில் ஒன்று கட்டப்பட்டு, அங்கு நூதனப் பிரதிட்டை செய்யப்பட்ட மூர்த்திகளுக்கு, சோபகிருது ஆண்டு ஆனித்திங்கள் 14ஆம் நாள் (28-6-1903) ஞாயிற்றுக்கிழமை வளர்பிறைச் சதுர்த்தசியும், அவிட்ட நட்சத்திரமும் கூடிய நன்னாளில் முதலாவது திருக்குடமுழுக்குச் செய்யப்பட்டது. அன்று ஆதி மூலக் கருவறையில் பிரதிட்டை செய்யப்பட்ட சிவலிங்கம் காசியிலிருந்து கொண்டுவரப்பட்டுக் குடமுழுக்குச் செய்யப்பட்டதாக திருவிராமேசுவர வரலாறுகள் கூறுகின்றன. இதன் பின்னர் நித்திய பூசைகள் செய்யப்படுதற்கேற்ற ஒழுங்குகளும் செய்யப்பட்டன. இத் தலத்தில் மேலும் தொடர்ந்து பல திருப்பணிகள் செய்யப்பட்டு கி. பி. 1910இல் இன்னொரு திருக்குடமுழுக்குஞ் செய்யப்பட்டது. இத்தலத்திற் கொண்டிருந்த பத்திசிரத்தையினுற் திரு. பசுபதிச் செட்டியார் தனது ஆன்மார்த்த பூசையில் திருக்கேதீச்சரப் பெருமானையே ஆவாகித்துப் பூசித்து வந்தார் என்பதும் குறிப்பிடத் தக்கதாகும்.

இவ்வாறு புதிதாக அமைக்கப்பட்ட ஆலயமும் பழுதடைந்து காடு மண்டிக் கிடந்ததினுல், இதனைப் புதுப்பிக்க வேண்டிய நிலை இந்நாட்டுச் சைவர்களுக்கு ஏற்படலாயிற்று. பல சைவப் பெரியோரின் பல ஆண்டு முயற்சியால் இந்நாட்டுச் சைவர்களை விழிப்படையச் செய்யவும்; திருக்கேதீச்சரத்தைப் பழைய உன்னத நிலைக்குக் கொண்டுவர வேண்டுமென்ற நோக்கத்திற்காகவும், "ஈழத்துச் சிவனடியார் திருக்கூட்டம்" என்ற பெயரில் இயங்கிவந்த சைவ தாபனத்தின் தொண்டர்கள் சார்பில், 1948ஆம் ஆண்டு ஒக்தோபர் 3ஆம், 4ஆம் திகதிகளில் திருக்கேதீச்சரத்தில் சைவமாநாடு ஒன்று கூட்டப்பட்டது. அம் மாநாட்டிற்கு நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் தகைசான்ற சைவப்பெரியோர் பலர் வருகை தந்திருந்தனர். இக் கூட்டத்தைக் கூட்ட முன்னேடியாக நின்று அயராது உழைத்தவர்கள் வேலணையூரைச் சேர்ந்த திரு. வி. கே. செல்லப்பாச்சாமி அவர்களும், திருக்கேதீச்சரத் திருவாசக மடத்தின் கர்த்தாவாகிய திரு. சி. சரவணமுத்துச்சாமி அவர்களும், வழக்கறிஞர் திரு. சு. சிவசுப்பிரமணியம் அவர்களுமாவர். அன்று அங்கு கூடிய அம் மாநாடு திருக்கேதீச்சரம் புனர் நிருமாணம் பெறவேண்டுமென்ற விழிப்புணர்வை நாடு முழுவதும் ஏற்படுத்தியது. அப் பெருவிருப்பை அடித்தளமாகக் கொண்டு 1948 ஐப்பசி 28இல் கொழும்பு பப்பலப்பிட்டி நகரத்தார் கதிரேசன் கோயிலிற் கூட்டிய மன்றில் உதயமான சபைதான் இன்றைய திருக்கேதீச்சரம் ஆலயத் திருப்பணிச்சபை ஆகும். இதன் முதற் தலைவர் சைவப்பெரியார் சு. சிவபாதசுந்தரம் அவர்கள், செயலாளர் பண்டிதர் அ. சிற்றம்பலம் ஆவார்.



திருப்பணிச்சபை உதயமாகிய பின்னரும் கோயில் உரிமைகள் நாட்டுக்கோட்டை நகரத்தவரிடமே இருந்துவந்தன. 2-8-1956 இல் கூட்டப்பட்ட ஆலய பஞ்சாயக் கூட்டத்திற் செய்துகொண்ட யோசனைப்படி 14-9-1956இல் திருக்கேதீச்சர ஆலயத்தில் விசேட அபிடேக ஆராதனைகள் செய்து, மங்களகரமான நல்லோரையில் நகரத்தாரின் நல்லிணக்கத்துடன் அவர்களிடமிருந்து திருப்பணிச் சபையார் ஆலய பரிபாலனத்தைப் பொறுப்பேற்றனர். கோவில் சம்பந்தமான கணக்குகளை நகரத்தார் 8-11-56 இல் சபையாரிடம் ஒப்படைத்தனர்.

### திருப்பணி:

இத்திருப்பணிச்சபையாரின் வேண்டுகோட்படி தமிழ் நாட்டைச் சேர்ந்த திருவாளர்கள் மு. செல்லக்கண்ணு ஸ்தபதி, மு. வைத்திய நாதஸ்தபதி ஆகியவர்களினுல் கோயிற் சிற்பாகமமுறைப்படி வரைவு செய்யப்பட்டு; காசிவாசி சிவஸ்ரீ ஈசான சிவாசாரியர்; அச்சுவேலி சிவஸ்ரீ குமாரசாமிக்குருக்கள், சைவப்பெரியார் திரு. சு. சிவபாத சுந்தரம்; கட்டடக்கலைஞர் திரு. வி. நரசிம்மன் ஆகியோரது அங்கீகாரம்பெற்ற வரைபடத்திற்கு அமைய, சுவாமி அம்பாள் கோவிற் கருவறைகளும், அவற்ருேடிணைந்த அர்த்தமண்டபம் வரையான பகுதிகள் கருங்கற் திருப்பணியாகவும், விமானம், இராசகோபுரம், விநாயகர் முதலான பரிவார கோட்டங்கள் பலவும் கலவைக் கட்டாகவும், நாட்டின் நாற்றிசையோரதும்—கடல் கடந்த நாடுகளாகிய மலேசியா, சிங்கப்பூர், தென்னுடு ஆகியவற்றிலுள்ள அடியார்களதும் பெரும் பொருட்செலவில் எழுந்திருக்கும் பெருங்கோயிலே இன்று நாம் காணும் திருக்கேதீச்சரம். இதற்குத் திருக்குடத் திருமஞ்சனம் நடந்த நாள் நள ஆண்டு ஆனி உக (4-7-1976). இத்

திருப்பணிக்காக இவ்வாலயம் பாலத்தாபனம் செய்யப்பட்ட நாள் 6-6-71 ஆகும். இப்போதைய கௌரியம்பாள் கோவிற் கருங்கற் றிருப்பணிகள் முழுவதும் மலேசியநாட்டுக் கிளைச் சங்கத்தினராற் கட்டிமுடிக்கப்பட்டதாகும்.

இப்பொழுது இவ்வாலயத்தில் பிரதிட்டை செய்யப்பட்டிருக்கும் திருப்படிவங்களிற் பெரும்பாலானவை, தமிழ்நாட்டு மாமல்லபுரத்துச் சிற்பக்கலைக் கல்லூரியிற் செய்யப்பட்டனவாகும்.

பலவித சிறப்பம்சங்களுடன் பொலிவுதரும் இப் புதுக்கோயில் இந்நாட்டில் காணப்படாச் சில புதுப் பொலிவுகளுடனும் அமைந் திருக்கின்றது. ஐம்பொன்னால் வார்க்கப்பட்டிருக்கும் சோமஸ்கந் தரும், திருமுறைக் கோயிலும், சந்தானசாரியர் கோயிலும் திருக் கேதீச்சரத்தின் கீர்த்தியையும் கவர்ச்சியையும் மேலும் மேலும் உயர்த்துவனவாகும்.

திருக்கேதீச்சரத் திருப்பணிச்சபை உதயமான பின்னர் திருப் பணிகள் செய்து 1952ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் திருக்குட முழுக்கு ஒன்று செய்வித்தனர். இது இன்று மதுரை திருஞான சம்பந்தர் மடத்துக் குரு முதல்வராக விளங்கும் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள், அன்று குலசேகரபட்டினம் திரு. கே. வி. எஸ். சுந்தரம் என்னும் பூர்வாசிரமப் பெயருடையவரது செலவில் நடைபெற்றதாகும். பின்னர் ஆலயச் சுற்றில் பூமியின் அடியிலிருந்து எடுக்கப்பட்ட பழைய மகாலிங்கத்தையும், விநாயகர், சுப்பிரமணியர், நடராசர், சண்டேசுரர் முதலான மூர்த்திகளையும் அந்தந்தமூர்த்திகளுக்குரிய திருச்சுற்று இடங்களில் பிரதிட்டைசெய்து 31-10-1960இல் இன்னோர் திருக்குடமுழுக்குஞ் செய்யப்பட்டது.

1968இல் ஆவணி 19ஆம் நாள் இராசகோபுரத் திருக்குடத் திருமஞ்சனம் நடைபெற்றது. இதனோடு திருச்சுற்றிலுள்ள சோமஸ் கந்தர், மகாவிஷ்ணு, பஞ்சலிங்கம், ஆறுமுகசுவாமி, பள்ளியறை, மகாலட்சுமி, சந்திரன் முதலான கோயில்களுக்கும் திருக்குடத் திருமஞ்சனம் நடைபெற்றது.

இவ்வேளையில் பண்டைய திருக்கேதீச்சரத்தை அமைப்பதற்காக ஒல்லுமட்டும் பல்லாற்றானும் பணிகளையாற்றியும் இடர்களை அனு பவித்தும் பெருஞ்சோதியோடு இணைந்த சேர். கந்தையா வைத்திய நாதன் அவர்களது திருக்கேதீச்சரப் பெரும்பணிகளும், சேறும் சுரியும் நிறைந்த மண்மேடாய்க் கிடந்த பாலாவியை மீண்டும் வெட்டி அணைகட்டி நீர்தேங்கி ஓடும் நிலைக்காக்கிவைத்த நீர்ப்பாசனப் பொறியியலாளர் திரு. எஸ். ஆறுமுகம் அவர்களின் சேவையும் நம் மவர் நெஞ்சில் என்றென்றும் நிலைத்துநிற்கவேண்டியனவாகும்.



திருக்கேதீச்சர நித்திய நைமித்தியங்கள் நாள் நேரம் தப்பாது நியமமாக நடைபெற்று வருகின்றன. இங்கு நடைபெறும் அதிசிறப்பு விழா மாசிமாத மகாசிவராத்திரியாகும். அன்று பல்லாயிரக்கணக் கான அடியவர் வந்து பாவம் வினையறுக்கும் பாலாவியில் நீராடி, தேவன் எம்மையாளும் திருக்கேதீச்சரத்தில் வழிபாடாற்றுவர்.

திருக்கேதீச்சரத்தைச் சூழ்ந்த இடங்களில் 1887, 1925, 1928, 1950 ஆகிய ஆண்டுகளிற் புதைபொருள் ஆராய்ச்சிப் பகுதியினர் அகழ்வாராய்ச்சி நடத்தியுள்ளனர்.

இன்று இந்நாட்டுச் சைவர்களது மனம் முழுவதும் திருக்கேதீச் சரப் பக்கமே சாய்ந்திருப்பதனால், அன்று நாயன்மாரால் பாடப் பெற்ற பாலாவியின் பண்பையும்; திருக்கேதீச்சரச் சிறப்பையும் யாம் ஓரளவிற்குத் திருவருள் கடைக்கணேக்காற் பெற்றிருக்கின்றனம்.

இன்று திருக்கேதீச்சரம் யாத்திரை செய்வோர் தங்குவதற்கு ஏற்ற வசதியில் கோயிலைச் சூழப் பல திருமடங்கள் அமைக்கப் பட்டுள்ளன. திருஞானசம்பந்தர் மடம், சுந்தரர் மடம், திருவாசக மடம், நாவலர் மடம் (அப்பாமடம்), அம்மா மடம், நகரத்தார் மடம், சிவராத்திரி மடம், திருப்பதி மடம், கௌரி மடம், நடராசர் மடம் போன்றவை அவைகளாகும். இவற்றோடு அஞ்சலகம், குழாய்நீர், திருக்கேதீச்சரம் சைவப்பாடசாலை, நூல்நிலையம், கிராமச்சங்கம், மருத்துவமனை, மின்னொளி, உற்சவகாலங்களில் கிடைக்கும் அரசாங்க உதவிகள் போன்றவை திருக்கேதீச்சரத்தைப் பொலிவு செய்வன வாகும்.

இங்கு கோயில் கொண்டிருக்கும் இறைவன் பெயர் திருக்கேதீச் சரநாதர்; இறைவி பெயர் கௌரி; தீர்த்தம் பாலாவி; தலவிருட் சம் வன்னி; வரலாறு பற்றிக் கூறும் அழிந்த நூல்கள் போக எஞ் சியவை தட்சண கைலாய மான்மியம், மாந்தைப் பள்ளு என்பன வாம். இவையன்றி, திருக்கேதீச்சரம் பற்றிய பிற்காலத்திலெழுந்த செய்யுள் நூல்கள் திருக்கேதீச்சரநாதர் திருப்பதிகம் (1949)—நயினை திரு. க. இராமச்சந்திரன், திருக்கேதீச்சரநாதர் பிள்ளை விடு தூது (1963)—புங்குடுதீவு பேராசான் திரு. சி. இ. சதாசிவம்பிள்ளை, திருக் கேதீச்சரநாதன் ஊஞ்சல் (1966)—கொக்குவில் திரு. த. குமாரசாமிப் பிள்ளை, திருக்கேதீச்சரப் புராணம் (1970)—அச்சுவேலி சிவஸ்ரீ ச. கு. வைதீஸ்வரக் குருக்கள், திருக்கேதீச்சரத்து கௌரிநாயகி பிள்ளைத் தமிழ்(1976)—புங்குடுதீவு பேராசான் சி. இ. சதாசிவம்பிள்ளை என்பன வாகும்.

## 2. திருக்கோணேசுவரம்

திருக்கோணேசுவரம் இலங்கையின் வடகிழக்குக் கடற்கரையில் உள்ள குன்றிலே அமைந்திருக்கும் தலமாகும். இக்குன்றிற்குச் சுவாமி மலை என்பது பெயர். திருக்கோணேசுவரம், தட்சணகயிலாயம், திரிகூடம், தென்கயிலை, கைகேசிகோயில் எனவும் வழங்கும்.

திருமூலர் இலங்கையைச் சிவபூமி என்றும் (திருமந்திரம் 2747), இலங்கையில் மேருவின் குறியைக் காணலாம் என்றும் கூறியுள்ளார், அவர் கூறிய மேருவின் குறி கோணேசர் மலையேயாம்.

கோணேசர் ஆலயம் உலகிலுள்ள பழைய வழிபாட்டுத் தலங்களுள் மிகவும் பழைமையான ஒன்றென்பதும், திருகோணமலை நாகரிகமும், மொஹஞ்சதாரோ நாகரிகமும் ஏறக்குறைய ஒரே காலத்தன என்பதும் ஆராய்ச்சியாளர் சிலரின் துணிபு.

இலங்கையை இராவணன் ஆண்ட காலத்தில் கோணேசுவரர் இராவணனுடைய இட்ட தெய்வமாக இருந்ததாகப் பழைய வரலாறுகள் கூறுகின்றன. இராவணன் வழிபட்ட பழைய கோணேசுவரம் கடல்கொள்ளப்பட்டு, கடலுக்கடியில் இருப்பதாக ஆழ்கடல் ஆராய்ச்சியாளர் கண்டுபிடித்துக் கூறியுள்ளனர். தென்னகத்துக் காவிரிப்பூம் பட்டினத்தைக் கடல்கொண்டதுபோல், கோணேசுவரமும் கடல்கொள்ளப்பட்டிருக்கலாமெனக் கருத இடமுண்டு. இதற்குச் சான்ருக இருக்கிறது ''ராஜவளி'' என்ற புராதன பாளிநூல், இராமாயண காலத்திற்குப் பின்னர் கி. மு. 3544 ஆம் ஆண்டிலும், அதற்குப் பின்னர் விகாரமா தேவியின் தந்தை களனிதீசன் காலத்திலும் இரு பெருங்கடற்கோள்கள் நடந்ததாக இந்நூல் கூறுகின்றது. இவற்றுள் ஒன்றினல் கோணேசுவரமும் கடல்கொள்ளப்பட்டிருக்கலாம் என யாம் நம்ப இடமுண்டு.

இதையடுத்துக் குளக்கோட்டன் என்னும் சோழ மன்னன் திருக்கோணேசுவரர் ஆலயத்தைத் திரும்பவும் கட்டுவித்துத் திருப்பணிகள் செய்ததாகச் சில சாசனங்கள் கூறுகின்றன. இத்திருக்கோயில் பல மண்டபங்களோடும், பெரு வீதிகளோடும் கூடியதாக அக்காலத்தில் விளங்கியுள்ளது.

பின்னுளில் யாழ்ப்பாணத்தரசர்களும் இக்கோயிலுக்குத் தொழும்புசெய்து வழிபாடாற்றியுள்ளனர். இப்படிப் பழம் பெருமை வாய்ந்த இத்திருத்தலம் 1624ஆம் ஆண்டு சித்திரை வருடப்பிறப்பன்று



போர்த்துக்கேயத் தளபதியினல் இடித்தழிக்கப்பட்டுக் கோட்டை கட்டப்பட்டதாக வரலாறு கூறுகின்றது. அவன் கோவிலை இடித்த பொழுது செய்த நல்ல செயல் ஆலயத்தை இடித்துத் தகர்க்குமுன் அதன் படத்தை வரைந்து வைத்திருந்தமையேயாகும். அப்படங்களுள் ஒன்று போர்த்துக்கலில் உள்ள ''லிஸ்பன்'' நகரிலுள்ள உலகப் பிரசித்தி பெற்ற ''அட்சுடா'' நூல்நிலையத்தில் கண்டெடுக்கப்பட்டு 1889இல் இலங்கையில் பிரசுரிக்கப்பட்டது. கோணேசர் கோவில் புனர்நிர்மாணம் பெற்று விளங்குவதற்கு முன்னேடியாய் நின்று உழைத்த, டாக்டர் பாலேந்திராவிற்கு உதவியாயிருந்த கருவிகளில் இப்படமும் முக்கியமான ஒன்ருகும், 1953இல் இப் பெரியாரால் வெளியிடப்பட்ட ''திருகோணமலை விக்கிரகங்கள்'' என்ற நூலே, திருக்கோணசுவரம் பற்றி முதன் முதலாக எழுந்த இக்கால அமைவு பெற்ற ஆராய்ச்சி நூலாகும்.

அழிந்த கோவிலைப் புனருத்தாரணஞ் செய்வதற்காக 9-7-1950இல் நிறுவப்பட்ட திருப்பணிச் சபை, கிணறென்றைத் தோண்டிய பொழுது நிலத்துள்ளிருந்து தாமிர மயமான சோமாஸ்கந்தர், பார்வதி, சந்திரசேகரர் முதலான விக்கிரகங்கள் கண்டெடுக்கப்பட்டன.

இத் திருப்பணிச் சபையாரின் நன் முயற்சியால், முற்காலத்தே அமைந்த பொலிவுடைய சுற்றுப்பிராகாரத்தோடமைந்த கோவில் ஒன்று கட்டப்பட்டு, சுபகிருது வருடம் பங்குனி 21 ஆம் நாள் புதன் கிழமை (3-4-63 இல்) குடமுழுக்குச் செய்யப்பட்டது. நித்திய நைமித்திய பூசைகள் இன்று ஒழுங்காக நடைபெற்று வருகின்றன. இன்று நாம் காண்பது மூன்ருவது கோணேசர் ஆலயமாகும்.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுரால் பாடப்பெற்ற திருப்பதிகம் ஒன்று இத் திருத்தலத்திற்கு உண்டு. இதனேடு சம்பந்தப்பெருமான் பாடியருளிய திருப்பதிகக் கோவையிலும் (2 ஆம் பாடல் அண்ணமலை ஈங்கோயுமத்தி...எனத் தொடங்கும் பாடலில் வரும் கோணம்), சுந்தரமூர்த்திநாயனுரால் அருளப்பட்ட ஊர்த்தொகைப் பதிகத்திலும் (3ஆம் பாடல் நிறைக்காட்டானே நெஞ்சத்தானே ..... ..... எனத் தொடங்கும் பாடலில் வரும் மாகோணம்) திருக்கோணேசுவரம் இடம் பெற்றிருக்கின்றது. இவ்வாலயத்தின் மீது அருணகிரிநாதர் திருப்புகழும் பாடியுள்ளார்.

இக் கோவிலில் வழிபாடாற்றி அருள் பெற்ருேர். தேவேந்திரன், இராவணனின் தாயார், விசறன், கயபாகு மன்னன் போன்ருேராவர்.

இவ்வாலய இறைவன் பெயர் கோணேசுவரர். இறைவி மாதுமை. தீர்த்தம் பாவநாசம். தலவிருட்சம் கல்லால். வரலாறு கூறும் நூல்கள், தட்சணகயிலாய புராணம், திருக்கோணசல புராணம், திருக்கோணசல வைபவம், திருக்கோணநாதர் வைபவம், திருக் கோணமலை அந்தாதி முதலியன.

வருடாந்த அலங்கார உற்சவம் பங்குனிப் பூரணையும் உத்தரமும் கூடிய நாளில் தொடங்கி, அடுத்துவரும் திருதியைத் திதியுடன் கூடிய பரணி நாளில் தீர்த்தம் நடைபெறும்.

## 3. நகுலேசுவரம்

கீரிமலை இலங்கையின் வடகரையில் உள்ளது. இது தீர்த்த விசேடம் மிக்க இடம்; இங்கு புராதன சிவத்தலம் ஒன்றும் உண்டு. இவ் விடத்தின் புராதன பெயர் திருத்தம்பலை. கோயில்கொண் டிருந்த பெருமானின் புராதன பெயர் திருத்தம்பலேசுவரர். கீரிமுக முடைய முனிவர் ஒருவர் இத்துறையில் நீராடி, அருகிலுள்ள பெரு மானை வழிபட்டு வந்ததினலே கீரிமுகம் மாறப்பெற்ருர். இக் காரணங் கொண்டே இவ் விடம் கிரிமலை எனப் பெயர் பெற்றது. இதனை வடமொழியில் நகுலகிரி என்பர். இங்கு இடங்கொண்ட இறைவனின் இக்காலப் பெயர் நகுலேசர்—நகுலேசுவரர். இறைவி நகுலாம்பிகை—நகுலேசுவரி. கோவில் நகுலேசுவரம்.

இத்தலம் ஆதிச் சோழ மன்னனுகிய முசுகுந்தன், நளன், அருச் சுனன் முதலியோரினல் தொழப்பெற்ற ஒன்ருகும். தீர்த்த—தல யாத் திரைகளுக்குரிய புராதனப் புண்ணிய இடங்களுள் கீரிமலையும் ஒன்று.

வடமொழிச் சைவ புராணங்கள் பத்தினுள் கந்தபுராணம் சிறப் பானது. அதில் உள்ள சூத சங்கிதையில் நகுலேசுவரம் பழைமையான யாத்திரைத் தலங்களுள் ஒன்று எனக் குறிக்கப்பட்டுள்ளது. இதி லிருந்து ஈழத்தில் சைவம் எவ்வளவு தொன்மைக் காலம் தொடக்கம் நிலவி வருகின்றது என்பதை நாம் அறிந்துகொள்ளலாம்.

விசயன் இலங்கை அரசனுக இருந்தபோது, இவ்வாலயத்திற்குத் திருப்பணிகள் செய்ததாக வரலாறு உண்டு.

முன்னுளில் ஈழத்தின் வடகரை முழுவதும் மலைத் தொடரா யிருந்து, பின் கடலால் தாக்குண்டு அழிந்துபோய்விட, எஞ்சியுள்ள அதனடிவாரமே இப்போதுள்ள கீரிமலை என்பது ஆராய்ச்சியாளர் கருத்து. இந்நிலத்தின் கீழேயுள்ள கற்பாறைகளிலே சிப்பிகளும்,



நத்தைகளும் பதிந்து கல்லாய்க் கிடத்தலாலும், வடகரையிலே கடலினுள் நெடுந்தூரம் கற்பாறைகள் காணப்படுதலாலும், ஆராய்ச்சியாளர் முடிவைச் சரியானதெனத் துணிந்து கொள்ளலாம்.

இவ்வாறு கீரிமலையிலிருந்த உன்னத மலையும், அதனருகேயிருந்த பூர்வ சிவாலயமும் கடல்வாய்ப்பட்ட பின்னர், புதிய கோவில் அமைக்கப்பட்டுள்ளது. நகுலமுனியால் பூசிக்கப்பட்ட கோயில் இதுவேயாம்.

இப்போது கீரிமலையென்று கூறப்படும் மேட்டு நிலத்தில் சுவறும் மழைநீர், நன்னீரருவியாகிப் பள்ளமாகிய கடற்கரையிற் பலவிடங் களில் சுரந்தோடுகின்றது. இவ்வருவி நீரே கீரிமலைத் தீர்த்தச் சிறப்புக்குரியதாகும். மாருதப்புரவிகவல்லி தீர்த்தமாடித் தனது குன்மநோய் நீங்கப்பெற்ற புண்ணிய தீர்த்தம் இதுவேயாம்.

பறங்கியர் யாழ்ப்பாண அரசைக் கைப்பற்றிய பொழுது இடித் தழித்த சிவாலயங்களுள் கீரிமலைச் சிவன் கோவிலும் ஒன்று. அழிந்த இக்கோவிலை உருவாக்குவதற்கு ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் முயற்சி எடுத்துள்ளார். அவரது முயற்சியைத் தொடர்ந்து, திருப்பணி வேலைகள் நடந்தேறி, இன்று நித்திய நைமித்திய கிரியைகள் ஒழுங் காக நடைபெற்று வருகின்றன. இவ்வாலய மகோற்சவம் மாசி மாதத்தில் பதினைந்து நாட்கள் நடைபெறுகின்றது. மாசி மகா சிவ ராத்திரியில் தீர்த்தோற்சவம் நடைபெறும்.

மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய மூவகைச் சிறப்பும் இவ்வால யத்திற்கு உண்டு.

இவ்வாலயத்தின் தொன்மைபற்றிக் கூறும் நூல்கள்; தட்சண கைலாய புராணம், கைலாயமாலை, நகுலாசல புராணம், நகுலமலைக் குறவஞ்சி, நகுலமலைச் சதகம், நகுலகிரிப் புராணம், நகுலேசுவரர் விநோத விசித்திரக் கவிப்பூங்கொத்து என்பனவாம்.

இவ்வாலயத்திற்குத் திருப்புகழ்ப் பாடல் ஒன்றும் உண்டு. திருப் புகழில் இவ்வாலயம் அருக்கோணமலை எனப் போற்றப்படுகின்றது. தலவிருட்சம் கல்லால்.

இவ்வாலயத் தீர்த்தக்கரைச் சூழலிலே பல அநுபூதிமான்களது சமாதிகள் உள. இவ்வாலயத்தைச் சூழப் பல திருமடங்களும் யாத்திரிகர் வசதிக்கேற்ப அமைக்கப்பட்டுள்ளன. கதிரவேலுச் சிருப்பர் மடம், சித்தங்கேணி வைத்திலிங்கம் மடம், தொல்புரம் கிருஷ்ணபிள்ளை மடம் போன்றவை குறிப்பிடத்தக்க சிலவாகும்.

1976இல் ஆரம்பிக்கப்பட்ட "சிவநெறிக் கழகம்" என்ற பெயருடைய சித்தாந்த சைவநெறி பரப்பும் மன்றம் ஒன்று, இன்று இவ்வாலயத்தோடொட்ட நின்று சைவமாநாடுகளையும் சைவக் கருத்தரங்குகளையும், சைவசமய அறிவுப் போட்டிகளையும் நடத்தி வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

## 4. முன்னேசுவரம்

ஈழத்தில் மூர்த்தி, தலம், தீர்த்தம் முறையாய் அமைந்த புராதன சிவத்தலங்களுள் முன்னேசுவரமும் ஒன்றாகும். ஈழநாட்டின் வடமேற்குப் பகுதியிலுள்ள சிலாபத்தில் உள்ளது முன்னேசுவரம். சிவமகாபுராணத்திற் கூறப்படும் அழகேசுவரம் என்னும் திருத்தலம் இம் முன்னேசுவரமே என்பது ஆன்றோர் துணிபு. இராமன், வியாசர் முதலானோரும், வேறு பல முனிவர்களும் வழிபட்ட தலமிதுவெனத் தட்சணகயிலாய புராணம் கூறும். இலங்கை மன்னர்களான கசபாகு, ஆறாவது பராக்கிரமபாகு ஆகியோரும் இத்தலத்தை வழிபட்டுப் பெறலரும் பேறுகள் பெற்றுள்ளனர். திருக்கோணேசுவர ஆலயத் திற்குத் திருப்பணி செய்த குளக்கோட்டன் இவ்வாலயத்தைப் புனர்நிர்மாணஞ் செய்து இதற்கென 64 கிராமங்களை அளித்துப் பெருஞ் சிறப்புச் செய்தானென வரலாறு கூறுகின்றது. கற்பிட்டிக் குடா முழுவதும், சிலாபத்தில் இருந்து உடப்பு வரையான 12 மைல் சுற்றாடல் நிலங்கள் முழுவதும் இக்கோவிலுக்கே சொந்தமாக அந்நாட்களில் இருந்தன. இக் *கிராமங்களில் இருந்தவர்கள் இவ்வாலயத்தில் பலதரப்பட்ட தொழும்பு செய்பவர்களாகவே இருந்தனர். கோட்டை அரசருள் சிறப்புப் பெற்றவனாக விளங்கிய ஆறாம் பராக்கிரமபாகு, கி. பி. 1448இல் இக் கோவிலுக்குத் திருப்பணிகள் பல செய்து, பல கிராமங்களையும் மானியஞ் செய்தான் எனக் கோவிற் பட்டயங்கள் கூறுகின்றன.

போர்த்துக்கேயர் இலங்கையைக் கைப்பற்றியபோது இக் கோவிலை இடித்தழித்ததுடன், கோவிலுக்குரிய அணிகலன்களையும், மற்றும் விலை மதிப்பு வாய்ந்த பொருள்களையும் கவர்ந்து சென்றனர். இவர்களினால் அழிக்கப்பட்ட இக் கோவிலைக் கண்டி அரசனாகிய கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்கன் 1753ஆம் ஆண்டில் திருத்தியமைத்து,

---

* மருதங்குளம், பிரமணியபுரம், வீரபாண்டியம், இரட்டைக்குளம், பூக்குளம், தாமரைச்குளம், காக்காப்பள்ளி, பொத்துவில், மணற்குளம், மண்டைகொண்டான், கழுவாமடு, தீர்த்தக்கரை, மானாவரி, குசலை, கருக்குப்பனை, கோட்டைப்பிட்டி, ஆனைவிழுந்தான், முத்துப்பந்தி, மதுரஞ்சோலை" போன்ற இடங்களில் பண்டைநாளில் இவ்வாலயத்தோடு நெருக்கமான தொடர்புடைய சைவத் தமிழ்மக்கள் வாழ்ந்துவந்ததாகக் கூறப்படுகின்றது.



குடமுழுக்குச் செய்வித்துக் கோவிலுக்குரிய சொத்துக்களைக் கோவிலுக்கு உரிமையாக்குவித்தான். 1576இல் போர்த்துக்கேயரினால் அழிக்கப்பட்ட இக்கோயிலைத் திருத்தம் செய்வதற்காக நுண் கலைஞர்களை இந்தியாவில் இருந்து அழைப்பித்தான் எனவும் கூறப்படுகின்றது. நெடுங்காலத்திற்குமுன் இவ்வாலயத் திருக்கிணற்றிலும், திருக்குளத்திலும் கண்டெடுக்கப்பட்ட விநாயகர், சுப்பிரமணியர், ஆறுமுகப் பெருமான், நடராசர் முதலான விக்கிரகங்கள் இங்கு பிரதிட்டை செய்து பூசிக்கப்பட்டு வருகின்றன.

உலகம் படைக்கப்பட்டபோது உலக நன்மைக்காக இவ்வாலயத்துச் சிவலிங்கம் சுயம்புலிங்கமாகத் தோன்றியதென்றும், இதனால் இச் சிவலிங்கப்பிரானுக்கு சுயம்புரேசுரர் எனப் பெயர் வந்ததாகவும் ஐதிகம். இன்று இவ்வாலயச் சூழலில் பெருமளவு சைவ சமயத்தவர்கள் இல்லாதிருப்பினும், நித்திய நைமித்திய பூசைகள் குறைவின்றி ஒழுங்காக நடைபெறுகின்றன. வசந்த நவராத்திரி விழா இங்கு அதிசிறப்பாக நடைபெற்றுவருகின்றது.

1963 இல் இவ்வாலயம் புனர்நிர்மாணம் செய்யப்பட்டுக் குடமுழுக்கு வைபவம் நடைபெற்றது.

அறுபத்துமூன்று நாயன்மார்கட்கும் சிலை வைத்து, நாள்தோறும் பூசை வழிபாடாற்றிவரும் தனிச் சிறப்புப் பெற்ற தலம் ஈழத்தில் இது ஒன்றேயாம்.

கோயில்கொண்ட இறைவன் பெயர் முன்னைநாதர். இறைவி வடிவாம்பிகை. தீர்த்தம் மாயவனாறு (தெதுரு ஓயா). தொன்மைபற்றிக் கூறும் நூல்கள் தட்சணகயிலாய புராணம், முன்னேசுவர மான்மியம், முன்னேசுவர அந்தாதி, முன்னேசுவரப் பாமாலை, முன்னைநாத சுவாமி வடிவழகம்மை, முன்னைநாதசுவாமி நவதூது.

## 5. கதிர்காமம்

மருவும் அடியார்கள் மனதில் விளையாடுபவன் முருகன். அம்முருகனுக்கு ஈழத்திலே அருள் நிறைந்த புகழ்மிக்க வழிபாட்டுத் தலங்கள் பல உள. அவற்றுள் கதிர்காமம் தலையாய யாத்திரைத் தலமாகும். அது ஈழத்தின் தென்கீழ்ப் பகுதியில் உள்ளது. கொழும்பிலிருந்து காலி வழியாக மாத்தறை சென்று, அங்கிருந்து "திசைமகாரும" வரை சென்றால், அடுத்த பன்னிரண்டு கல் தொலையில் தெரிவது புண்ணிய நதியான மாணிக்ககங்கை. அதன் அருகில் இருப்பதுதான் கதிர்காமம். நாற்றிசையும் கொடிய மிருகங்கள் வாழும் காட்டின் நடுவேயுள்ள கதிர்காமத் தலத்தில், மிக்க அற்புத மகிமையோடு பொற்புடன் கோயில்கொண்டிருக்கின்றான் முருகன்.

"கதிர்காமம்" என்றால் கடவுள் தன்மையுடைய ஒளியும், அன்பும் நிறைந்த இடம் என்பது பொருள். கதிர்காமம் முருகப்பெருமானது படைவீடுகளில் ஒன்று என்று பேசப்படுவது. முருகன் ஆணைப்படி சூரனைத் தடிந்து வெற்றியுடன் உக்கிரத்தோடு திரும்பிய வேலானது. வரும் வழியில் எதிர்ப்பட்ட வாகூரமலையை இருகூறாகப் பிளந்தெறிந்து கடலில் மூழ்கியதும், மூன்று கதிர்கள் சிந்தப்பட்டதாகவும், வேலுருக் கொண்ட அக்கதிர்கள் மூன்றும் முறையே உகந்தமலை உச்சியிலும், திருக்கோவிலில் உள்ள வெள்ளை நாவல் மரம் ஒன்றின்மீதும், மண்டூரில் தில்லை மரம் ஒன்றின்மீதும் தங்கினவென்றும், அதனாற்றான் அவ்விடங்களில் "வேலாயுதசுவாமி கோவில்கள்" அமைந்ததாகவும் கூறப்படுகின்றன. இந்த நம்பிக்கையினாற்றான் கதிர்காமத்துக்குக் கரையோரமாகக் கால் நடை யாத்திரை செல்லும் அடியவர், ஞானசக்தி பீடங்களாகிய இத்தலங்களை முறையாகத் தரிசித்து அருள்பெற்றுக் கொண்டே மூலவர் உறைபதியாகிய கதிர்காமம் செல்கின்றனர்.

அடுத்தபடியாக, "கதிர்காமம்" என்பதற்குத் தினை நிறைந்த ஊர் என்றும் பொருள் விரிப்பர். இப்பகுதியைச் சுற்றி வேடர்களினால் செய்கை பண்ணப்படும் தினைப் பயிர்கள் அதிகமாகக் காணப்பட்டதனாலேயே இப்பெயர் பெற்றதாகக் காரணங் கூறப்படும். ஆலயத்தின் சுற்றுப்புறங்களில் வேடர் இன்றும் வாழ்ந்து வருகின்றனர். இவர்களது வழிபடு கடவுள் கதிர்காமப் பெருமானே என்பதும் குறிப்பிடத்தக்கது. இப்பொழுது ஆலயத்திற்குப் பூசை செய்பவர் வேடர் வழிவந்த "கப்புராளை" எனப்படுபவரே. இது ஆகம முறைப்படி பூசை நடைபெறும் கோயிலல்ல. பூசை புரிபவர் வாயைச் சீலையால் கட்டிக்கொண்டு மௌனமாக நின்று பூசைசெய்வதே இங்குள்ள வழக்கம். இந்நேரம் அங்குள்ள தெய்வ சக்தி அடியாரை நெக்குநெக்குருகச் செய்து தன்வயப்படுத்தி நல்லறிவை அகத்துள் ஏற்றி, ஆனந்த பரவசமாக்கி, ஆலயத்தின் அருள் மயத்தை எங்கும் ஒளிவிடச் செய்யும்.

கதிர்காம ஆலயத்தின் கட்டடம் மிகவும் சிறியது. இது மூலத்தானத்தையும், சிறு மண்டபத்தையும் கொண்ட ஒரு சாதாரண சிறிய கட்டடமாகும். மூலத்தான வாயில் ஒருபோதும் திறக்கப்படுவதில்லை. எப்பொழுதுந் திரைச்சீலையால் மறைக்கப்பட்டிருக்கும். அம்மூலத்தானத்தில் ஓர் இயந்திரப்பெட்டி வைக்கப்பட்டிருக்கிறது. அது முருகப்பெருமானது இயந்திரத்தை மந்திர வடிவாக அமைத்து, முத்துலிங்க சுவாமிகளால் வணங்கப்பட்ட பொற்றகடு உள்ள பெட்டி எனக் கூறப்படுகின்றது. ஆலயத்திற்குப் பக்கத்தில் தெய்வானை அம்மன் கோயிலும், வள்ளியம்மன் கோயிலும், பிள்ளையார் கோயிலும் அமைந்



திருக்கின்றன. இவற்றோடு இங்கிருந்து முருகனைப் பூசித்து அவனடி சேர்ந்து சமாதியான முத்துலிங்க சுவாமிகளுக்கும் கோயில் உண்டு, இக்கோயில் வீதி முருகன் திருக்கை வேல் போல முக்கோணவடிவுடையதாகக் காட்சிதரும்.

கதிர்காமத்தில் ஆடி மாதத்தில் உற்சவ விழாக்கள் நடைபெறுகின்றன. ஆடித் திருவோண நாளன்று தீர்த்தம் நடைபெறும். இத்தினம் மகிமை மிக்கதாகும். இவ் விழாக்காலத் தரிசனத்திற்காக இலட்சக் கணக்கில் மக்கள் யாத்திரை செல்வர். இக்காலத்தைத் தவிர கார்த்திகை மாதத் திருக்கார்த்திகை, சித்திரை வருடப்பிறப்பு முதலிய நாட்களிலும் சிறப்பான விழாக்கள் இங்கு நடைபெறுகின்றன. உற்சவ காலங்களில் மூலத்தானத்திலிருக்கும் இயந்திரத் தகடு வைக்கப்பட்ட பெட்டியைக் கோயில் யானைமீது எழுந்தருளச் செய்து, திருவீதி உலாவரப்படும். இங்கு வரும் அடியவர் தேனும் தினைமாவுங் கொண்டு மாவிளக்கிட்டு முருகனுக்கு நிவேதிக்கின்றனர். பலர் காவடி எடுப்பர். வேறுபலர் ஊன் உருகி உள் ஒளி பெருக்கும் கர்ப்பூரத் தீபச் சட்டி ஏந்துவர்; இன்னும் பலர் மெய்மறந்து பாடியாடிக் கூத்துமாடுவர்! இவர்களுக்கு மேலாகச் சிலர் மௌனமாக இருந்து அந்தர் யாகஞ் செய்வர்.

கதிர்காம யாத்திரிகர் தங்குவதற்கு வசதியாகப் பல மடங்கள் கதிர்காமத்தில் உள. அவற்றுள் இராமகிருஷ்ண சங்கத்தாரின் மடமே பிரபலியத்துடன் விளங்கிவந்தது. உற்சவ காலத்தில் கதிர்காமம் செல்வோர் தங்கி ஆறுதலடைந்து செல்வதற்கு மாத்தறை அன்னதான மடமும், கொழும்பு கதிர்காம யாத்திரிகர் தொண்டர்சபைக் கப்பித்தாவத்தை மடமும் ஆகவேண்டிய உதவிகளை இரவு பகல் பாராது செய்து வருவதும், அடியவர்கள் பலவகையிலும் இவற்றிற்குப் பொருளுதவி செய்து வருவதும் இங்கு குறிப்பிடப்படத்தக்க புண்ணிய விடயமாகும்.

## 6. மாவிட்டபுரம் கந்தசுவாமி கோயில்

ஈழத் திருநாட்டில் நாற்றிசையும் பழைமையும் மகிமையும் வாய்ந்த பாவம் வினை அறுக்கவல்ல திருப்பதிகள் சூழ் நீராடு துறைகள்—தீர்த்தங்கள் பல உள.

வடக்கே கீரிமலையும்—நகுலேசர் ஆலயமும், கிழக்கே கன்னியா நிரூற்றும்—கோணேசர் ஆலயமும், தென்வரையில் மாணிக்க கங்கையும்—கதிரை வெற்பும், மேற்பரப்பில் பாலாவியும்—திருக்கேதீச்சரநாதர் கோவிலும். மாயவனாறும், முன்னைநாதர் கோவிலும் இயற்கையாகவே ஈழத்தை அரண் செய்கின்றன. இவை ஐந்தும் காலத்

தால் முற்பட்டவையாகவும், ஈழத்தின் வரலாற்றுக்கு முன்பே இடங் கொண்டனவாகவும் இருக்கின்றமையினுல், இவை இலங்கையைக் காவல் செய்யும் ஐம்படை வீடுகளென நாம் கூறிக்கொள்ளலாம்.

தமிழ் கூறும் தொல்லுலகமாகிய குமரிக்கண்டத்தை, கால வெள்ளமாகிய கடல் கொண்டதென்பது கீழைத்தேச மேலைத்தேச அறிஞர் பலரின் தேற்றமாகும். அக்குமரிக்கண்டத்தின் கூறே ஈழமு மாகும். அந்நேரம் இப்பிரதேசத்தைக் கடலால் விழுங்கப்படவிடாது ஒரு சிறுதீவாக இறைவன் விளங்க வைத்ததும் இங்கு முன்னர் கூறப்பட்ட ஐம்பெரும் தலங்களதும்—தீர்த்தங்களதும் மகிமையை யும் பெருமையையும் அழியவிடாது பாதுகாத்தற் பொருட்டே என நாம் ஊகிக்க இடமுண்டு. இத்திற மாண்பு பெற்ற நீராடு துறை களில் ஒன்ருகிய கீரிமலைத் தீர்த்த மகிமையினை ஒட்டி எழுந்த திருத் தலமே மாவிட்டபுரம் கந்தசுவாமி கோவில் ஆகும்.

மாவிட்டபுரம் கந்தசுவாமி கோவில் யாழ்ப்பாணப் பட்டணத் தில் இருந்து காங்கேசன்துறை செல்லும் நெடுஞ்சாலையில் 10 ஆவது கல் தொலையில் அமைந்திருக்கிறது. காங்கேசன்துறைப் பட்டின சபை, தெல்லிப்பழை, மயிலிட்டி ஊராட்சிமன்றங்கள் ஆகியவற்றை எல்லை களாகக் கொண்டிருப்பது. இதற்கு இரும்புப் பாதைக் தொடர் வண்டி மூலமும், தெருவண்டிகள் மூலமும் செல்லலாம். தெல்லிப் பழையை அடுத்த மாவிட்டபுரம் இதன் தொடர்வண்டி நிலையம். கிழக்கே இரண்டு கல் தொலையில் பலாலி விமானத்திடல் அமைந் திருக்கின்றது. காங்கேசன்துறை வடக்கே ஒரு கல்தொலையிலும், கீரிமலை நன்னீருற்று மேற்கே ஒன்றரைக் கல் தொலையிலும் அமைந் திருக்கின்றன.

எங்கள் நாட்டில் இருவகையில் அமைந்த கீர்த்தி வாய்ந்த முருகன் திருக்கோயில்கள் உள. சிவாகம சிற்ப நூல் அமைவு பெற்றவை ஒரு வகை. அவ்வமைவு பெருதவை இன்னெருவகை. இவை மடாலயங்க ளெனப்படுபவை.

மாவிட்டபுரம், கந்தவனக்கடவை, இணுவில், நீர்வேலி, அநுராத புரம் போன்ற இடங்களில் உள்ள கோவில்கள் சிவாகம சிற்பமுறை யில் அமைந்தனவாகும்.

கதிர்காமம், மண்டூர், வெருகல், செல்வச்சந்நிதி, நல்லூர் போன்ற ஆலயங்கள் மடாலய வகுப்பினவாகும், இவற்றுள் சிவாகம, சிற்ப நூல் அமைவுபெற்ற வரிசையில் சரித்திரப்பிரசித்தி மிக்க பெருங் கோயில் மாவிட்டபுரமாகும்.



பல ஊர் மக்களுக்கு வழிபடு கோயிலாகவும், குல தெய்வமாக வும் விளங்குவது மாவிட்டபுரம். வரலாற்றின்படிக்கு கி. பி. 9ஆம் நூற்ருண்டில் திசைஉக்கிரசோழன் என்னும் வளவன் ஒருவன் சோழ நாட்டில் இருந்தான். அவனுக்கு ஒரு மகள், பெயர் மாருதப்புர விகவல்லி. இவள் தோற்றம் குதிரைமுகமும் மானுட உடலும் கொண்டிருந்தது.

சாந்தலிங்கன் என்னும் சந்நியாசி ஒருவனின் கூற்றுப்படி இப் பெண் கீரிமலைக்கு வந்தனள். அங்கு தவ சிரேட்டராக விளங்கிய நகுல முனிவரிடம் உபதேசம்பெற்று, கீரிமலைக்குன்றருகே உவர் நீர் மத்தியில் நன்னீரும், அருவி நீரும் கலந்த இடமொன்றில் நாள் தோறும் சிவ சிந்தையுடன் நீராடிவந்தாள். நாளடைவில் இந்நீரா டலால் அவளது குதிரை முகம் மாறி குமரி முகம் ஆயது. அந்நாளில் அவள் தன் சேடியருடன் தங்கியிருந்து தீர்த்தமாடிய இடம் "குமாரத்தி பள்ளம்" என்றழைக்கப்பட்டது. (இன்றைய காங்கேசன்துறைச் சீமெந்துத் தொழிற்சாலை வாயிலுக்கு நேரே கிழக்கு முகமாக இருக் கும் குமார கோயிலடிதான் குமாரத்தி பள்ளம் என்று கூறப்படுகின்றது.)

நீராடிய பின்னர் வழிபாடாற்றிய கோயில் கதிரையாண்டவர் கோயில்; அக்கோயில் இருந்தஇடம் கோயிற் கடவை. (இன்று இவ்விடம் வளவுடை என வழங்கப்படுகிறது.) இதன் அருகில் இன்று அழிந்த நிலைக் கேணி ஒன்று இருக்கக் காணலாம். இன்றைய கோயிலில் இருந்து மேற்கே 200 யார் தொலையிற் காணப்படுவது கதிரையாண் டவர் கோயில்.

குதிரை முகம் நீங்க அருள்பாலித்த இறைவன் பதியாக அது இருந்ததினுல் கோவிற் கடவை, பின்னர் "மாவிட்ட புரம்" என மறுபெயர் கொண்டதாகக் கூறப்படும். மா—குதிரை, விட்ட—நீங்கிய, புரம்—இடம், குதிரை முகம் நீங்கிய இடம்—மாவிட்டபுரம். இக்காரணப் பெயரே பெருவழக்கில் இன்று பேசப்படுகின்றது. ஆயின், மாருதப் புரவிகவல்லியோடு வந்த தளபதி பெயர் "மகாவிட்டன்" என்றும், பின் ஞளில் கோயில் ஆட்சிப்பொறுப்பை அவனிடம் ஒப்படைத்து அவனை இருக்க வைத்த இடம் இன்றைய மாவிட்டபுரம் என்றும், மகாவிட் டன் வசித்த இடமாதலின் அப்பெயர் மருவியே மாவிட்டபுரம் ஆயிற்று எனவும் யாழ்ப்பாணச் சரித்திர ஆசிரியர் "நாவலர்கோட்டம்" ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை அவர்கள் கூறுவர்.

மேலும் சூரசங்காரத்தின் பின் முருகப்பெருமான் கதிரைமலைக்கு எழுந்தருளிச் செல்லுங்காலை, இங்கு தங்கிச் சென்ருரென்ற ஐதீகம் இருப்பதால், இவ்விடம் முருகன் அருள்பெற்ற இடமாகவும் கூறப் படுகின்றது. இக்கருத்தை ஏற்போர் "மா" என்ருல் மாமர வடி

வாகிய சூரன் என்றும், "விட்ட" என்றால் அவ்வடிவினைவிட்ட என்றும், "புரம்" என்றால் இடம் என்றும் கூறி மாமர வடிவாக நின்ற சூரன் அவ்வடிவினை விட்டேகிய இடமாதலின், இவ்விடம் "மாவிட்டபுரம்" எனக் கூறப்படுவதாகக் கூறுவர். இவர்கள் கூற்றை ஏற்போர் இவ்வாலயத் தலவிருட்சமாக மாமரமும், அண்மையில் கடலும் இருப்பதைச் சான்று காட்டி உறுதி செய்கின்றனர்.

தனக்கு வாழ்வளித்த கதிரைஆண்டவன் கோயிலை மாருதப்புரவிக வல்லி கட்டுவித்தாள் எனவும், அதற்கு வேண்டிய பொருளையும், திருவடி வங்களையும், பெரியமனத்துளார் எனும் தில்லைத்தீட்சிதர் மரபு அர்ச்ச கரையும், ஏனைய ஏவல்களையும் சோழ வளவன் அனுப்பிவைத்தான் எனவும் வரலாறு கூறும். காங்கேசப் பெருமானாகிய கந்தப் பெருமா னின் கோயிற் திருப்பணிகளுக்கு வேண்டிய திருவடிவங்களும், ஏனைய பிறவும் வந்திறங்கிய துறை அன்றுதொட்டு காங்கேசன்துறை என்று அழைக்கப்பட்டு வருகின்றன.

கோயிற்றிருப்பணிகள் நடைபெற்றுக்கொண்டிருக்கும் காலை உக்கிரசிங்கன் என்ற இளவரசன் மாருதப்புரவிகவல்லியை மணந்து கொண்டதாயும், அவனது அரசிருக்கை கதிரைமலையாக இருந்த தெனவும், மாருதப்புரவிகவல்லியை மணந்த பின்னர் தன் அரசிருக்கை யோடு இருந்த இடத்தை நெல்வயல்களாக்கி, அவற்றை அவளால் கட்டுவிக்கப்பட்ட கந்தசுவாமிகோவில் நித்திய நைமித்திய பூசை களின் பொருட்டும், ஆலய அர்ச்சகர்களுக்காகவும் பிரமதாயமாக வழங்கிவிட்டுத் தன் அரசிருக்கையை யாழ்ப்பாணத்தின் வடகீழ்ப் பகுதியில் உள்ள சிங்கை நகருக்கு—வல்லிபுரக் குறிச்சிக்கு மாற்றினான் எனவும் கூறப்படுகின்றது. கந்தசுவாமிகோவில் வழிபாட்டிற்காக விடப்பட்ட இடமான படியினாலே பண்டைய இராசதானியாக இருந்த "கதிரைமலை" கந்தரோடை எனப் பெயர் மாற்றம் பெற்றதாகவும் வரலாறு கூறும். (கந்தர் – கந்தசுவாமியார், ஓடை – குளவெளி). இன் றைய கந்தரோடையை உள்ளடக்கி இருக்கும் சுன்னாகத்தில் எழுந் தருளியுள்ள கதிரைமலைச் சிவன்கோவிலுக்கும், பண்டைநாட் கதிரை மலைக்கும் ஏதாவது தொடர்புண்டா என்பது ஈண்டு கவனத்திற் கொண்டு ஆராயற்பாலதாகும்.

இன்னும் மாருதப்புரவிகவல்லி தன் குன்மநோய் நீங்கி, இளமையும் அழகும் உடையவளாய் விளங்கிய காலத்தில் தங்கிய குறிச்சியை உள்ளடக்கிய ஊர் "தல்லிப்பள்ளி" எனப்பட்டதாகவும், தல்லிப் பள்ளி மருவியே, "தெல்லிப்பளை" ஆயதாகவும் கூறப்படும் கருத்தும் இவ்விடத்தில் உற்றுநோக்கற்பாலதாகும். (தல்லி—இளமை உடையவள், பள்ளி - சிற்றூர்).



இன்று கடலருகில் காணப்படும் சடையம்மா மடத்திற்கு அருகில் உள்ள தீர்த்தமே நகுலமுனி, மாருதப்புரவிகவல்லி போன்றோர், நீராடி நன்மை பெற்ற "அந்தர்வாவி" எனும் கண்டகி தீர்த்த மாகும்.

ஆன்மாக்களை ஆட்கொள்ளும்பொருட்டு இறைவன் கொள்ளும் வடிவங்களுள் கருணை வடிவான தீர்த்தமும் ஒன்றாகும். இதனால் அன்றோ "தீர்த்தன்" என்று சிவபெருமான் பேசப்படுகின்றான். இறைவன் தீர்த்தவடிவு அவனது அனுக்கிரகத்தைக் குறிப்பதாகும். மெய்யன்புடன் கீரிமலையில் நீராடுவோர்க்கு அநுக்கிரகம் சித்திக்கும் என்பதனை நிலைநாட்டி வற்புறுத்திக் காட்டுவதே, ஆர்த்த பிறவித் துயர்கெட மாருதப்புரவிகவல்லி ஆர்த்தாடி வழிபாடாற்றி வந்த பேறுகிய முகமாற்றமாகும்.

இவ்வாறு மாருதப்புரவிகவல்லியினால் எடுக்கப்பட்ட திருக்கோயில் காலத்துக்குக் காலம் வளர்ச்சிபெற்றுப் பிரசித்தமான பெருங் கோயி லாக இருக்கும் நாளில், போர்த்துக்கேயர் இந்நாட்டைக் கைப் பற்றினர். அவர்களது ஆட்சிக்காலத்தில் தகர்க்கப்பட்ட சைவ ஆலயங் களின் எண்ணிக்கைகளில் மாவிட்டபுரமும் ஒன்றாகும். அந்நேரம் கோயிற் பொருட்களையும் திரு உருவங்களையும் கிணற்றுள் போட்டு வைத்துக் காப்பாற்றியவர், அக்காலத்தில் கீரிமலையைச் சார்ந்த ஆலயங்களில் ஆட்சிப்பொறுப்பாளராக இருந்த சிவஸ்ரீ பாலசுப்பிர மணியக் குருக்களாவர். போர்த்துக்கேய ஆட்சி ஒழிந்து ஒல்லாந்தர் ஆட்சியின் கடைக்கூறாகிய 1782இல் சிவஸ்ரீ சபாபதி ஐயர் என்பவரினால் மாவிட்டபுரம் புனர்நிர்மாணம் செய்யப்பெற்றுப் பண்டுபோல் விழாக்கள் நடைபெற ஒழுங்குகள் செய்யப்பட்டன. புனர்நிர்மாணம் செய்யப்பட்ட இவ்வாலயம் காலத்துக்குக் காலம் ஆட்சிப்பொறுப் பேற்ற மரபுவழிப் பரிபாலக அறங்காவலர்களாலும், அடியவர்க ளாலும் மேலும் மேலும் விரிவுபடுத்தியும் செப்பனிட்டும் பெருங் கோவிலாக்கப்பட்டதாகும்.

இன்று இக்கோயில் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்ட பம், தம்பமண்டபம், நிருத்தமண்டபம், வசந்தமண்டபம், தட்டி மண்டபம்—வில்லுமண்டபம், வேட்டைமண்டபம், யாகசாலை, பாக சாலை, களஞ்சியம் ஆகியவை முறையாகக் கட்டப்பட்டுள்ள ஒரு பெருங்கோவில் முறையில் அமைந்துள்ளது. கருவறை தொடங்கி அர்த்தமண்டபம் வரையான கோவில் கருங்கற்றழிக் கோயிலாக 1927இல் கட்டி முடிக்கப்பட்டு, அவ்வாண்டு ஆனி சுவாதியில் திருக் குடத் திருமஞ்சனம் நடைபெற்றது. கருவறையில் கோலமாமஞ்ஞை தன்னில் முருகப்பெருமான் வள்ளி தெய்வயானை உடன் கூறுமடியார்கள்

வினைதீர்க்கும் முகப்பாவனையில், கருணை நெறிபுரியு மன்பர்க் கெளியோனாக அருளொடு விளங்குகின்றார். இங்கு பிரதிட்டை செய்யப்பட்டவும், எழுந்தருளச் செய்யப்பட்டவுமான ஏனைய மூர்த்திகள் விவரம்: விநாயகர், நடேசர், சந்திரசேகரர், ஆறுமுகசுவாமி, முத்துக்குமாரசுவாமி, சுப்பிரமணியர், சந்தானகோபாலர், மகாலட்சுமி, வைரவர், தண்டாயுதபாணி, நவக்கிரகங்கள், சண்டேசுவரர் என்பனவாகும். இங்குள்ள சிவகாமி பங்கராகிய நடேசர் திருவுருவம் சிதம்பரத்திலிருந்து தருவிக்கப்பட்டதாகும்.

இவ்வாலயத்தின் மேற்குப்புறத்தே காட்சிகொடுக்கும் இராசகோபுரத்தின் திருஉருவங்கள் கோயிலின் வரலாற்றைத் தெளிவுபடுத்துவதுடன், இக்கோவிலுக்கு மட்டுமன்றி ஈழநாட்டுக்கே பெருமை கொடுக்கும் பெருங்கோபுரமொன்றாகவும் மிளிர்கின்றது. இதனைக் கட்டிமுடிப்பதற்கு வேண்டும் பொருளுதவி புரிந்தவர் இரங்கூன் பண்டாரம் எனக் கூறப்படும் அருட்திரு நாகலிங்க தேசிகராவர். இதனைப் பரிபாலிப்பதற்கென அப்பெரியாரால் ஏற்பாடு செய்யப்பட்ட அறக்கட்டளை ஒன்றுண்டு. காங்கேசன்துறையிலுள்ள நாகலிங்கேசுவர மடாலய பரிபாலன அறக்கட்டளையே அதுவாகும்.

இன்று நாளாந்தம் இங்கு ஆறுகாலப் பூசைகள் நன்றாக நடைபெற்று வருகின்றன. கிழமைதோறும் வெள்ளிக்கிழமைகளில் காலை, மாலையிலும், மாதந்தோறும் கார்த்திகை நட்சத்திரத்திலும், சித்திரை, தை மாதப்பிறப்பு நாட்களாகிய சங்கிராந்திகளிலும் முத்துக்குமாரசுவாமிக்குச் சிறப்பான மஞ்சன நீராட்டும் பூசைகளும் நடைபெறுகின்றன. இப்பெரு நாட்களில் உற்சவ மூர்த்தியாகிய முத்துக்குமாரசுவாமி உள்வீதி எழுந்தருளுவார்.

**விசேட உற்சவங்கள் :**

இவ்வாலய மகோற்சவம் பூர்வபக்கச் சஷ்டித் திதியோடு கூடிய ஆனி உத்தர நாளன்று கொடியேற்றமும், ஆடி அமாவாசையன்று தீர்த்தமும், அதற்கு முதல்நாள் தேருமாக இருபத்தைந்து நாட்களுக்குத் திருவிழாக்கள் தொடர்ந்து நடைபெறும். இந் நாட்களில் நடைபெறும் ஆறுமுகசுவாமி திருநடனத் திருவிழா, கார்த்திகைத் திருவிழா, வேட்டைத்திருவிழா, பட்டுக்குடைத் திருவிழா, சப்பரத் திருவிழாப் போன்றவை சிறப்பான திருவிழா நாட்களாகும். உற்சவகால ஆறுமுகசுவாமி திருநடனத் திருவிழாவைத் தொடக்கிவைத்தவர்கள் நாட்டுக்கோட்டை நகரத்தவர்களாவர். உற்சவகால ஐந்தாம் திருவிழா நாள் இதுவாகும். இவ்வுபயத்திற்கென காங்கேசன்துறையில் ஒரு கிட்டங்கியை அவர்கள் எழுதிவைத்துள்ளனர். நாட்டுக்



கோட்டைச் செட்டிகளினால் வழங்கப்பட்ட தேர் வடிவான விளக்கு ஆலயத்திற்கு இன்றும் ஒளியூட்டிக் கொண்டிருப்பது ஈண்டு குறிப்பிடத் தக்கதாகும்.

தேருக்கு வரும் பஞ்சமூர்த்திகள் விநாயகர், சுப்பிரமணியர், சந்திரசேகரர், ஆறுமுகர், சண்டேசுரர் ஆகியோராவர். தேர்த்திருவிழா அன்று மாலை தேர்முட்டியடியில் நடைபெறும் சண்முகார்ச்சனையின் பின்னர் பஞ்சமூர்த்திகள் இருக்கைக்கு எழுந்தருளும் போது மலர் மாரியுடன் வேத ஒலியும், திருமுறை ஓசையும், நாதகானமும் முழங்க, பத்தித் திருமுகமாறுடன் பன்னிரு கைகளுமாய்த் தித்தித்திருக்கும் திருஅமுது கண்டேன் என அருணகிரி கூறும் ஆறுமுகப் பெருமானுக்கு நடைபெறும் பன்னீராட்டு, இந்நாட்டில் வேறெங்கும் காணாக் கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும்.

"கண்டேனவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்" என அப்பர் பெருமான் கூறும் திருக்கைலைக் காட்சியை, கைலாசபதியாகிய எம்பெருமான் அப்பர் பெருமானுக்கு திருவையாற்றில் காட்டிய நாள் ஆடி அமாவாசை நாளாகும். கூறுமடியார்கள் வினை தீர்த்தருள மாவைக்கந்தன் தீர்த்தம் கொள்ள எழுந்தருளும் பெருநாளும் அப்புண்ணிய நன்னாளேயாம்.

இவை தவிர, தைப்பூச நாளன்று* ஆறுமுகசுவாமி தேரில் திருவீதி உலா வருதலும், மார்கழி ஆருத்ராதரிசனத்துக்கு முதல்நாள் நடேசர் தேரில் திருவீதி உலாவருதலும் இவ்வாலய வழக்கமாகும்.

ஆண்டுதோறும் கந்தபுராணப் படிப்பு வைகாசி மாதத்தில் ஆரம்பித்து, மகோற்சவ இரண்டாம் நாள் முடிவடையும். ஐப்பசி மாதக் கந்தசட்டி காலத்தில் திருச்செந்தூர்ப் புராணம் படித்துப் பயன் சொல்லப்படும். சூரன்போர் இங்கு வெகு சிறப்பாக நடைபெறுவது வழக்கம்.

இவ்வாலயத்திற்குச் சொந்தமான சுவடிச்சாலை ஒன்று உண்டு. அதில் பன்னூற்றுக்கணக்கான சமயச்சார்புள்ள கிரந்த நூல்களும், தமிழ் நூல்களும் இருக்கக் காணலாம்.

---

*தைப்பூசம் பழநியாண்டவனுக்குகந்த நாள். இந்நாளில் தமிழ்நாடெங்கும் பழநியாண்டவன் வழிபாடும், தேர்விழாவும், அன்னதானமும் நடைபெறுவது வழக்கம். "தேர் ஐயா தைப்பூசந் தேசத்தார் கொண்டாட" என்பது முதியோர் மொழி. பழநியாண்டவரையே இங்கும் இந்நாளில் எழுந்தருளச் செய்வது நன்று.

புரட்டாதி மானம்பூவன்று முருகப்பெருமான் தெல்லிப்பழை துர்க்கை அம்மன் ஆலயத்துக்கு அடியார் புடைசூழ எழுந்தருளி வருவது பல்லாண்டுகால வழக்கம். இவ்வாலய அர்ச்சகர்கள் ஆதி சைவ மரபில் வந்தவர்கள். கோயில் நிர்வாக பரிபாலன உரிமை மரபு வழியாக அவர்களுக்கே உரியது. கோயில் மூன்று திருச் சுற்று வீதிகளை உடையது. கோயிலைச்சூழ நாற்புறமும் பல மடங்கள் உள்ளன. கோயிலுக்கெனத் தனியான நந்தவனம் ஒன்றும் உண்டு. இவ்வாலயத் தொழும்புக்குரியோர் பழைமையும், மரபுரிமையும் பேணியே நடந்து வருகின்றனர்.

கோயிலிருக்கும் வளவுப்பெயர் கொவ்வங்கட்டுவளவு. கோயிலுக்குரிய நட்சத்திரம் சுவாதி, தலவிருட்சம் மா. தீர்த்தம் கீரிமலைக் கடல். உறுதியின்படி கோயிற் காணிக்கு உரியவர் அம்பலவாணர் கந்தர். இன்று ஆட்சிப்பொறுப்புக்குரிமை யுடையவர் சிவஸ்ரீ சண்முகநாதக் குருக்கள்.

இவ்வாலயத் திருப்பணிகளைக் கவனிப்பதற்காக ''மாவைக் கந்தன் ஆலயத் திருப்பணிச் சபை'' என்ற பெயரில் 7-6-75இல் சபையொன்று அங்குரார்ப்பணஞ் செய்து வைக்கப்பட்டது. இச்சபை இன்று பல நல்ல கைங்கரியங்களைச் செய்து வருகின்றது. இவ்வாலயம் படிப்படியாக முன்னேறிப் பழையகால உன்னத நிலையை விரைவில் எட்டிப் பிடிக்கும் என்பது அடியார்களது பெருநம்பிக்கையாகும்.

**மாவைக்கந்தன் மீது செஞ்சொற்பாமாலை பாடியோர் பெயர் விவரம்:**

| பாடியவர் பெயர் | பாடல் |
|---|---|
| 1. முத்துக்குமார கவிராயர் | மாவைச் சுப்பிரமணியர் தோத்திரம் |
| 2. இருபாலை சேனாதிகவிராயர் | மாவைப்பதிகம், மாவை ஊஞ்சல் |
| 3. சுன்னாகம் அ குமாரசாமிப் புலவர் | மாவைப் பதிகம், மாவை இரட்டை மணி மாலை, மாவைக் கலி வெண்பா |
| 4. வறுத்தலைவிளான் க. மயில் வாகனப் புலவர் | மாவைப் பதிகம், மாவைக் கந்த ரகவல், மாவைக் கந்தர் சிங்காரம் |
| 5. க. சரவணமுத்துப் புலவர் | மாவைப் பதிகம், மாவைக் கதிர்காம வடிவேலவர் பதிகம் |
| 6. ம. சரவணமுத்துப்புலவர் | மாவை ஊஞ்சற் பாக்கள் |



| பாடியவர் பெயர் | பாடல் |
|---|---|
| 7. வே. அப்பாக்குட்டி | மாவிட்டபுரம் கந்தசுவாமிபேரில் பதிகம் |
| 8. பூநகரி முருகேசர் கனகசபை | போற்றித் திருவகவல், மாவைப் பதிகம் |
| 9. கரணவாய் தி. செவ்வந்திநாத தேசிகர் | மாவை மும்மணிமாலை |
| 10. சபாபதி நாவலர் | மாவை அந்தாதி |
| 11. தா. மு. பூ. பொன்னம்பல பிள்ளை | மாவை யமகவந்தாதி, மாவை திருவிரட்டை மணிமாலை, ஆறெழுத்துப்பத்து |
| 12. மாவை குமாரசுவாமிக் குருக்கள் | மாவைப் புராணம், மாவைப் பதிகம் |
| 13. பொ. சபாபதிப்பிள்ளை | மாவிட்டபுரம் தோத்திரப் பாமாலை |
| 14. க. சச்சிதானந்தம் | மாவை முருகன் |
| 15. நவாலியூர் க. சோமசுந்தரப் புலவர் | மாவை நகர முருகவேள் பதிகம் |
| 16. ஆசுகவி வயாவிளான் கல்லடி வேலுப்பிள்ளை | மாவை தோத்திர விருத்தம், மாவைக் கந்தரஞ்சலி |
| 17. மயிலிட்டி சி. வேலுப்பிள்ளை உபாத்தியாயர் | மாவைக் கீர்த்தனைகள், மாவைப் பதிகம் |
| 18. மகாவித்துவான் சிவஸ்ரீ சி. கணேசையர் | மாவை சுப்பிரமணியர் தோத்திர விருத்தம் |
| 19. ந. சிவப்பிரகாசன் | மாவை முருகன் கீர்த்தனைகள் |
| 20. அருட்கவி சீ. விநாசித்தம்பி | மாவிட்டபுரம் தண்டபாணிக் கந்தன் திருப்பதிகமும், தோத்திரப் பாமாலையும் |
| 21. ஏழாலை பண்டிதர் மு. கந்தையா | மாவைப் பிள்ளைத்தமிழ் |
| 22. விசுவநாத சாத்திரியார் | மாவைக் குறவஞ்சி |
| 23. இ. சி. கந்தையா ஆச்சாரி | மாவைக் கந்தர் தோத்திரமாலை |

## மாவைக் கந்தன் வரலாறு கூறும் நூல்கள்

| ஆசிரியர் பெயர் | நூற் பெயர் |
|---|---|
| * வரலாறுகூறும் வசன நூல்கள் : | |
| 1. சிவஸ்ரீ சு.து. சண்முகநாதக் குருக்கள் | மாவிட்டபுரத் திருத்தல வரலாறு |
| 2. இரா. சுந்தரராசசர்மா | கோயிற்கடவை |
| * நாடகநூல் | |
| 1. த. சண்முகசுந்தரம் | ''வாழ்வு பெற்ற வல்லி'' |
| மாவிட்டபுரம் பற்றிய குறிப்புக்கள் வரும் ஏனைய நூல்கள் : | |
| 1. முத்துராச கவிராயர் | கைலாயமாலை |
| 2. ———————— ———— | வையா பாடல், ஈழமண்டல சதகம் |
| 3. திருமலை மாசிலாமணி முத்துக்குமாருப் புலவர் | திருக்கோணசல புராணம் |
| 4. நா. கதிரைவேற்பிள்ளை | சுப்பிரமணிய பராக்கிரமம் |
| 5. மாதகல் ஏரம்பையர் | நகுலாசல புராணம் |
| 6. கா. அப்பாசாமி ஐயர் | நகுலகிரிப் புராணம் |
| 7. மயில்வாகனப் புலவர் | யாழ்ப்பாண வைபவமாலை |
| 8. வட்டுக்கோட்டை விசுவநாத சாத்திரியார் | நகுலமலைக் குறவஞ்சி |
| 9. கல்லடி வேலுப்பிள்ளை | யாழ்ப்பாண வைபவ கௌமுதி |
| 10. செ. இராசநாயக முதலியார் | யாழ்ப்பாணச் சரித்திரம் |
| 11. ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை | யாழ்ப்பாணச் சரித்திரம் |
| 12. வண. ஞானப்பிரகாசர் | யாழ்ப்பாண வைபவ விமர்சனம் |
| 13. எஸ்.டபிள்யு. குமாரசுவாமி | இடப்பெயர் ஆராய்ச்சி |
| 14. கா. மதியாபரணம் | யாழ்ப்பாண பூர்விக வைபவம் |

திக்குத் திசைகெட்டு, இடத்துக் கிடங்கிடந்த மேற்கூறிய புலவோர் பாடல்களையும், வரலாற்று நூல்களையும், ஏனைய குறிப்புக்களையும் அரிதில் முயன்று தேடி எடுத்து "மாவை முருகன் கவிப் பூங்கொத்து'' என்ற பெயரில் தொகுப்பு நூல் ஒன்றை 1977இல் பதிப்பித்துள்ளார் இளவாலை மயிலங்கூடல் வாழ் சைவப்புலவர்



சி. அப்புத்துரை. இந்நூலுக்கு அரும்பதக் குறிப்புக்களோடமைந்த உரையொன்று செய்யப்பெறின் இவ்வாலயத்தினதும் நூலினதும் சிறப்புக்கள் மேலும் பெருமை பெற்றோங்கும் என்பதுறுதி.

### குறிப்பு :

மாவிட்டபுரம் முருகப்பெருமான் வேட்டைத் திருவிழா நாளன்று திருவுலா வருங் காட்சியை, நாமாந்தரிகை என்னும் பிரகேளிகை வகையமைத்து, உடுவிற்பதி வாழ்ந்த மூத்துக்குமார கவிராயர் அவர்களினால் பாடப்பட்ட பாடல்கள் சிலவற்றை இங்கு குறிப்பிடுதல் சாலப் பொருத்தமானதேயாம்.

"பிரகேளிகை'' ஆவது சொல்லக் கருதிய பொருளை ஆழ்ந்து கிடக்குமாறு மறைத்து, வெளிப்படையில் வேறொன்றுபோற் காட்டிப் புலவர்களை மயக்கி விநோதம் புரிதற்குரிய சொற்களால் பாடப் படுவது. "நாமாந்தரிகை''ஆவது வெளிப்படையில் நாமம் வேறொன்றைக் காட்டிக் கருதிய பொருளை மறைத்திருப்பது. பாடல்களின் பாங்கைப் பார்க்கவும்.

1. "மல்லாக மாதகலான் மருகன் சுன்
 னாகத்தான் மதன்பா வாணர்
 சொல்லாச்சீர் ஈவினையான் துன்னாலை
 யானத்தான் சுரும்ப ரோதி
 சில்லாலை யிருள்வென்ற குறக்கொடிகா
 மத்தானைச் சிகண்டி மாவூர்
 வல்லானை மாவிட்ட புரநகரத்
 திடைப்பவனி வரக்கண்டேனே,''

இங்கே கருதிய பொருளை மறைத்துக்கொண்டு வெளிப்படையிலே வேறொன்றாகத் தோன்றும் பெயர்களாவன: மல்லாகம், மாதகல், சுன்னாகம், ஈவினை, துன்னாலை, சில்லாலை, கொடிகாமம் என்னும் ஏழு ஊர்ப்பெயர்களாகும். இவ்வூர்ப்பெயர்களில் மறைந்து நிற்கும் பொருள்கள் ஆவன: மல் ஆகம் மாது அகலான் மருகன் - வலிமை மிக்க திருமார்பிலே திருமகள் நீங்காதிருக்கப் பெற்றவராகிய திருமாலுக்கு மருகரும், (சுல் + நாகம் = சுன்னாகம்) சுல் — வெள்ளி, நாகம் - மலை, சுன்னாகத்தான் மகன் — வெள்ளியங்கிரியில் வீற்றிருக்கும் பரமேசுவரமூர்த்தியுடைய திருக்குமாரரும், பாவாணர் சொல்லாச்சீர் ஈவினையான் — தம்முடைய மெய்யன்பராய் உள்ளவர்களுக்கு யாவற்றிலும் சிறந்ததாகிய முத்தியின்பத்தினை இடையீடின்றிக் கொடுக்குந் தொழிலையுடையவரும், துன்னாலையான் அத்தான் — நெருங்கிய கரும்பு வில்லையுடைய மன்மதனுக்கு மைத்துனரும், சுரும்பர் ஓதி சில்லாலை ஐ இருள் வென்றான் — வண்டு வீழ்கின்ற கூந்தலில் உள்ள

தகட்டணியால் செறிந்த இருளை வெற்றி கொண்ட, குறக்கொடிகாமத் தானை - வள்ளிநாயகியின்மீது இச்சையுடையவரும், சிகண்டிமா ஊர் வல்லானை — தோகைமயில் என்னும் புரவியைச் செலுத்த வல்லவரு மாகிய முருகக் கடவுளை, மாவிட்டபுர நகரத்திடைப் பவனிவரக் கண்டேனே· மாவிட்டபுர நகரத்திலே திருவுலா வரக் கண்டேன்.

2. "முடிவி லாதுறை சுன்னுகத் தான்வழி
முந்தித் தாவடிக் கொக்குவின் மீதுவந்
தடையை வோர்பெண் கொடிகாமத் தாளசைத்
தானைக் கோட்டை வெளிகட் டுடைவிட்டாள்
உடுவி லான்வரப் பன்னுலை யான்மிக
உருத்த னன்கடம் புற்றமல் லாகத்தில்
தடைவி டாதணை யென்றுப லாலிகண்
சார வந்தனள் ஓரிள வாலையே,"

இங்கே சுன்னுகம், தாவடி, கொக்குவில், கொடிகாமம், ஆனைக் கோட்டை, கட்டுடை, உடுவில், பன்னுலை, மல்லாகம், பலாலி, இள வாலை ஆகிய பதினொரு ஊர்களின் பெயர்கள் கூறப்படுகின்றன.

"சுன்னுகம்" என்பதைச் சுல்+நாகம் என்று பிரிக்கலாம் சுல் – வெள்ளி, நாகம் – மலை. சுன்னுகம் – வெள்ளிமலை. வழி-பிள்ளை. முடிவிலாதுறை சுன்னுகத்தான் வழி - ஆதியும் அந்தமுமில்லாத வெள்ளிமலையாகிய கைலாசத்தில் இருக்கின்ற சிவபெருமானுடைய பிள்ளையாகிய கந்தசுவாமி, முந்தித் தாவு அடிக் கொக்குவில் மீது வந்து அடைய - (கொக்கு என்பது குதிரை) முந்தித் தாவுகின்ற (அடி-கால்) கால்களுடைய குதிரை வாகனத்தில் பவனிவர, ஓர் பெண் கொடி காமத்தாள் – ஒரு பெண்கொடி (தலைவி) காதல் கொண்டவ ளாய், அசைத்து ஆனைக்கோட்டை வெளிகட்டு உடை விட்டாள் - தன் நிலையைக் குலைத்து மார்பிற் கட்டிய உடையையும் நெகிழவிட்டாள்: உடுவிலான் வர - அந்தச் சமயத்திலே, (உடு-நட்சத்திரம், இல்-மனைவி) நட்சத்திரத்தை மனைவியாகக்கொண்ட சந்திரன் உதயம் ஆனுன்; ஆக, பன்னுலையான் மிக உருத்தனன் - (ஆலை – கரும்பு) கரும்பு வில்லை யுடைய மன்மதன் கோபித்தான்; ஓர் இளவாலை – அந்த ஒப்பற்ற இளம்பெண் — கந்தசுவாமியைக் காதலித்தவள்; கடம்பு உற்ற மல் ஆகத்தில் – கடப்பமாலை அணியப்பெற்ற மல்யுத்தம் செய்கின்ற மார் போடு, தடைவிடாது அணையென்று – இடையீடு இன்றி அணைத்தருள வேண்டுமென்று, பல ஆலி - பல நீர்த்துளிகள், கண்சார வந்தனள் - கண்ணினின்றும் சொரிய, கந்தசுவாமிக்கு எதிரே—திருவடியே சரண மென்று, வீதியிலே பவனியை எதிர்கொண்டாள். இது பாட்டின் உரைவிளக்கம்.



முருகக் கடவுள் குதிரையில் பவனிவருதலைக் கண்ட பெண்க ளுள்ளே ஒருத்தி ஆடை சோரப்பெற்ருள் எனவும், மற்ருெருத்தி கண்ணீர் உதிர்த்தனள் எனவும், கடவுள் முயக்கம் விரும்பிய மானிடப் பெண்கள் இருவர் கொண்டநலிவு கூறிய பாடாண் திணை இதுவாகும்.

3. "பன்னி ரண்டு கரகந்தனை எட்டுப்
பானை யைத்துண் டதரக் குயவனை
முன்னி ரண்டு குடங்கையில் ஏந்தியை
முட்டி முட்டிமல் லாய்மாவைச் சாடியைப்
பொன்னி ரண்டு பெறும்பெருஞ் செட்டியைப்
போற்று வீர்புல வீர்சக ரந்தனை
முன்னர் வைத்த கலசம்பத் தும்பெறீஇ
முதன்மை சால்பெரு வாழ்வுறன் மெய்மையே."

இங்கு கருதிய பொருளை மறைத்துக்கொண்டு வெளிப்படையில் வேறு பொருளாகத் தோன்றும் பெயர்களாவன: கரகம், பானை, முட்டி, குடம், சாடி, கலசம், சால் என்னும் பாத்திரப் பெயர்கள். இவற்றுள்ளே சில பன்னிரண்டு கரகம், எட்டுக் குடப்பானை, இரண்டு குடம், கலசம் பத்து எனத் தொகை பூண்டும் நிற்கின்றன. செட்டி என்பது வணிகர் மரபில் உதித்த காரணம்பற்றி முருகனுக்கு வந்த பெயர்.

இங்கே மறைந்து நிற்கும் பொருள் பன்னிரண்டு கரகந்தனை-பன் னிரு திருக்கரங்களையுடைய கந்தசுவாமியை, எள், தும்பு, ஆனை, ஐ துண்டம், அதரம், குயம், அனை, முன் இரண்டு குடங் கையில் ஏந்தியை - எட்டுப் பூவினையும், பவளத்தினையும், யானையையும் முறையே நிகர்த்த அழகிய மூக்கு, அதரம், முலை என்பவற்றினை உடைய உலக மாதா வாகிய உமாதேவியாரால் முன்னரே உள்ளங்கை இரண்டினுலும் ஏந்தி வளர்த்தருளப்பட்டவரை, முட்டி முட்டி மல்லார் மாவைச் சாடியை- பலமுறை எதிர்த்துப் போராடி, வலிநிறைந்த மாமரவடிவாக நின்ற சூரபன்மனைக் கொன்றருளியவரை, பொன்னிரண்டு பெறும் பெருஞ் செட்டியை – தெய்வானை வள்ளியம்மை என்னும் மகளிரிருவரையும் மனைவியராகப் பெற்றுக்கொண்ட உருத்திரசன்மராகிய முருகப்பெரு மானை, புலவீர் போற்றுவீர் - புலவீர்காள் போற்றக்கடவீர். இப்படிப் போற்றின், சகரம் தனை முன்னர் வைத்த கலசம் பத்தும் பெறீஇ. – கல சம் பத்தும் என்ற சொல்லின் முன் "ச" என்ற எழுத்தை வைத் தால் "சகல சம்பத்து" என நிற்கும். சகலசம்பத்து என்பது, வலி, ஆண்மை, கல்வி, பொருள், புகழ் முதலியவாய் இம்மையில் பெறும் பெரும் செல்வங்கள் பெற்று, முதன்மைசால் பெருவாழ்வுறன் மெய்ம் மையே - முதன்மை நிறைந்த பெருவாழ்வை அடைதல் உண்மை என்பதாகும்.

## 7. மண்டூர் கந்தசுவாமி கோவில்

மட்டக்களப்பில் முப்பது மைல் நீளமுள்ள வாவி ஒன்றுளது. அது கடலோடு கலக்குமிடம் அமிர்தகழி என்னும் புண்ணிய பழம் பதிக்கு அண்மையிலுள்ளது. இதன் தென்கோடிக்கு அண்மையாக மேற்குக்கரையில் மண்டூர் என்னும் பழம்பதி ஒன்றுண்டு. அங்கு கோயில் கொண்டிருக்கும் பெருமான் முருகன் ஆவார். இக்கோயில் இப்பகுதியில் பிரசித்தமான ஒன்ருகும். மட்டக்களப்பிலுள்ள திருப் படைக் கோயில்களுள் மண்டூரும் ஒன்ருகும்.

கதிர்காமம் முருகப்பெருமானது படைவீடுகளில் ஒன்று என்று நம்பப்படுவது. முருகனது ஆணைப்படி சூரனைக் கொன்று கோபா வேசத்துடன் திரும்பிய வெற்றிவேலானது வரும் வழியில், எதிர்ப் பட்ட வாகூரமலையை இரு கூருகப் பிளந்தெறிந்து கடலில் மூழ்கிய தாகவும்; மூழ்கிய இடத்தில் மூன்று கதிர்கள் சிந்தியதாகவும்; வேலுருக் கொண்ட அக்கதிர்கள் மூன்றும் ஈழத்தின் கிழக்குக் கரையி லுள்ள மூன்று இடங்களில் தங்கின என்றும், அவற்றுள் ஒன்று மண்டூர்த் தில்லைமரம் ஒன்றில் தங்கியதாகவும், இதனைக் கண்டாச் சரியமடைந்த அவ்விடத்தில் வாழ்ந்த அக்கால வேடர் கொத்துப் பந்தர் அமைத்து அதனை வழிபட்டு வந்த இடமே இன்றைய மண்டூர் கந்தசுவாமி கோவில் எனவும் கர்ணபரம்பரையான கதை ஒன்று நிலவி வருகின்றது. இது தில்லைமண்டூர் எனவும், சின்னக்கதிர்காமம் எனவும் போற்றப்படுவது.

மண்டூர்க் கோயில் அமைப்பும், பூசை முறைகளும் கதிர்காமத் தைப் பின்பற்றியனவேயாகும். இங்கும், கதிர்காமம் போல் வாய் கட்டி மௌன பூசையே நடைபெறுகின்றது. பரம்பரையாக நடை முறையில் வந்த தனிப்பட்ட சில வழக்க முறைகளிலே பூசைகள் நடைபெறுகின்றன. பூசை செய்பவர் "கப்புகனர்" என்ற பெயரால் அழைக்கப்படுவார்.

கப்புகக் குடியில் பிறந்து, சந்ததி சந்ததியாக உரிமை பெற்றவர் கள் மாத்திரம் கப்புகனராக வர முடியும். தகுதி பெற்று வருப வர்க்குப் பெரிய கப்புகனர் "படிகடத்தல்" என்னும் கிரியையைச் செய்து வைப்பார். படிகடந்தவர் கப்புகனராவர். "படிகடத்தல்" என்பது மூலத்தானத்து வாயிற்படியைக் கடந்து உள்ளே புகும் உரிமை யைப் பெறுதலாகும். இது ஆகம முறையில் பூசை செய்யும் அர்ச்சகர் ஒருவர் பெறும் ஆசாரிய அபிஷேகத்திற்குச் சமமாகும்.



இக்கோயில் மூலத்தானத்தில் இருப்பதென்ன என்பது பரமரகசி யம். கதிர்காமமும் இத்தகையதே. பூசை செய்யும் கப்புகனர் மாத்திரம் இதனை அறிவார். கோயில் வண்ணக்கர்களுக்கும் (நிர்வாகி களுக்கும்) இது தெரியமாட்டாது. திரை திறந்து பூசை செய்யும் வழக்கமும் இங்கு இல்லை. கப்புகனர் அமுதுக்காவைத் (நிவேதனப் பொருட்கள்) தூக்கிக்கொண்டு அமைதியாக நடந்து செல்லுங்காட்சி பார்ப்போர்க்குப் பரவசமூட்டுவதாக இருக்கும். பூசை முடிந்த பின்னர் கப்புகனர் வெளியே வந்து திரை முன்பு நின்று பூசையை ஏற்றருளுமாறு சங்கு முழங்க, மணியோசை ஒலிக்கக் கையெடுத்துக் கும்பிட்டு வேண்டுதல் செய்யுங் காட்சி கல் மனதையும் உருக்கி மெய்மறக்கச் செய்துவிடும்.

இவ்வாலய உற்சவம் (கொடியேற்றத் திருவிழா) ஆடிமாதப் பூரணை கழிந்த பத்தாவது நாள் தொடங்கும். தொடர்ந்து இருபது நாட்கள் திருவிழாக்கள் நடைபெற்று, இருபத்தோராம் நாளான ஆவணி மாதப் பூரணையன்று தீர்த்தோற்சவம் நடைபெறும். திருவிழாக் காலத்தில் வேடர் குடியில் உள்ளோருள் ஒருவர், வாய்க்குச் சீலை கட்டி, வில்லம்பு கைக்கொண்டு, புஷ்பக விமானத்தின் முன்னே புற முதுகு காட்டாமல்—வைத்தகண் வாங்காமல், அடிமேல் அடி வைத் துச் சுவாமியைக் காவல் செய்யும் பாவனையில் வீதிவலமாக நடந்து வரும் காட்சி இன்றும் நடைமுறையில் இருந்து வருகின்றது. வேடர்க்கும் இவ்வாலயத்திற்கு முள்ள அநாதியான தொடர்பை இந்நிகழ்ச்சி காட்டி வருகின்றது. திருவிழாக்காலத்தில் ஆராத்திப் பெண்கள் மயங்கி விழுவதும், கப்புகனர் தீர்த்தந் தெளித்துத் திருநீ றிட்டு மயக்கந் தெளியச் செய்வதும் இங்கு இன்றும் நடைபெறும் அற்புதக் காட்சியாகும். இன்னும் தீர்த்தமாடும் வேளையில் கப்புகனர் அறிவிழப்பதும், அவரைக் கைப்பந்தமாகக் கொண்டுவந்து சபா மண்டபத்துள் வைத்து மயக்கந் தெளிவிப்பதும் இங்கு நிகழும் அதிசய நிகழ்ச்சியேயாம்.

தீர்த்தவிழா முடிந்ததும் குடுக்கை கூறுதல், மாலை கூறுதல் என்ற குலவிருது நிகழ்ச்சிகள் இவ்வாலயத்தில் நடைபெறும். "குடுக்கை", என்பது அமுத முட்டியைக் குறிக்குஞ் சொல். விழாவின்போது, கோயிற்றிருப்பணிகளில் ஈடுபட்டோர்க்கும், விழாப் பொறுப்பாளர்களாய் இருந்தோர்க்கும் ஆண்டவனுல் அருளப்பெறும் அருட்பிரசாதத்தைக் கொண்ட முட்டியே குடுக்கையாம்.

மண்டூர், குருமண்வெளி, துறைநீலாவணை ஆகிய ஊர்களைச் சேர்ந்த சிர்பாதக்காரரே இவ்வாலயத்தோடு தொடர்புபட்டவர்க ளாக ஆரம்பத்தில் இருந்து வந்தனர், காலக் கிரமத்தில் தேசுரா

களப்புப் பெரிய கவுத்தன் குடியோரை வண்ணக்கர்களாகக் (நிர்வாகத் தலைவர்களாக) கொண்டு நடைபெற்று வந்தது. பின்னுளில் கோட்டைக் கல்லாறு, பெரிய கல்லாறு ஆகிய கிராமங்களுஞ் சேர்ந்து கொள்ளவே ஆலய நிர்வாகம் இவ்வைந்து கிராமங்களுக்கும் பரவலாக்கப்பட்டது. அரசாங்க அங்கீகாரத்துடன் இவ்வைந்து கிராமத்தவருமே இன்று இதனை நடத்தி வருகின்றனர்.

தில்லை மண்டூர்க் கோயிற் குடிசையில் பழைய நாட்களில் பல அற்புதங்கள் நடந்ததாகக் கூறுவர். அவற்றுள் ஆங்கிலேயர்கால ஆட்சியில் நடந்ததாகக் கூறப்படும் ஒன்று, "கண்டியை நோக்கித் தனது படையுடன் குறுக்கு வழியாற் செல்லுதற்கு வந்த ஆங்கிலத் தளபதி ஜோன்ஸ்டன் என்பவன், கோயில் வேலியை அழித்து விட்டுப் படையுடன் செல்ல முயன்றபோது, ஆயிரக் கணக்கான குளவிகளின் தாக்குதலுக்கு இலக்காகித் தங்கள் ஆயுதங்களையுங் கைவிட்டுத் திசைகெட்டுத் திரும்பி ஓடியதாகும்". இதற்கு ஆதாரமாக இவர்கள் கைநழுவவிட்டுச் சென்ற ஒரு வாளும், துப்பாக்கியும் கோயிற் பண்டசாலையில் இருப்பதைக் காணலாம். இந்த அற்புதம் நடந்த பின்னர் தான் ஆலயத் திருப்பணி வேலைகள் சிறப்பாக நடைபெற்று இப்போது இருக்கும் கட்டட அமைப்புக்கு உயர்ந்ததாகக் கூறப்படுகின்றது.

இவ்வாறு பற்பல அற்புதங்களை நிகழ்த்தி, அடியவர் துயர் தீர்த்தருளும் மண்டூர் முருகன்மீது பல பெரியோர் பாடல்கள் பாடியுள்ளனர். இவற்றுள் புலோலியூர் **வித்துவான் வைத்திலிங்கதேசிகர், பண்டிதர் முருகேசபிள்ளை, புலவர்மணி ஏ. பெரியதம்பிப்பிள்ளை, விநாசித்தம்பி** ஆகியோர் பாடிய **மண்டூர்ப் பதிகம், மண்டூர் இரட்டை மணிமாலை, மண்டூர் வடிவேலவர் குறம், மண்டூர் முருகன் காவடிப்பாட்டு** முதலியன சில வாகும்.

---

**குறிப்பு:** பண்டை அரசர்களது மானியமும், சீர்வரிசைகளும் பெற்று நித்திய நைமித்தியங்கள் நடைபெற்று வந்த கோவில்கள் திருப்படைக் கோவில்கள் என மட்டக்களப்பில் கூறப்படும். திருக்கோவில் சித்திர வேலாயுதசுவாமி கோவில், கொக்கட்டிச்சோலை தான்தோன்றீசுவரன் கோவில், பெரிய போரதீவு சித்திர வேலாயுதசுவாமி கோவில், உகந்தமலைக் கந்தசுவாமி கோவில், மண்டூர் கந்தசுவாமி கோவில், சித்தாண்டி கந்தசுவாமி கோவில் முதலானவை திருப்படைக்கோவில் வரிசையிலுள்ளனவாம்.



## 8. நல்லூர் கந்தசுவாமி கோவில்

சைவ உலகில் "கோயில்" என்ருல் சிறப்பாகக் கருதப்படுவது "சிதம்பரம்" என்னுந் திருத்தலமேயாம். அதேபோன்று இன்று ஈழத்தில் கோயில் என்ருல் சிறப்பாகக் கருதத்தக்கது நல்லூர்க் கந்தசுவாமி கோயிலேயாம்.

நல்லூர் யாழ்ப்பாணப் பட்டனத்திலுள்ள ஓர் ஊர். ஆரியச் சக்கரவர்த்திகள் என்று கூறப்படும் யாழ்ப்பாணத் தமிழ் அரசரின் அரசிருக்கையாகப் பன்னெடுங்காலம் பேர் புகழுடன் விளங்கிய ஊர்; **ஆரியச்சக்கரவர்த்திகள் சைவசமயிகள்;** இவர்களது அமைச்சர்களும், குடிமக்களும் சைவசமயிகளாகவே இருந்தனர். இதனுல் இம்மன்னர்கள் தங்களதும், தங்கள் மக்களதும் சமயக் கடமைகளை நிறைவேற்றுதற்காகத் தங்கள் அரணைச் சுற்றியும், சுற்றுப்புற ஊர்களிலும் பல சிவாலயங்களைக் கட்டுவாராயினர். **வெயிலுகந்த பிள்ளையார் கோயில், கைலாயநாதர் கோயில், சட்டநாதர் கோயில், வீரமாகாளியம்மன் கோயில், நீர்வேலி** [1]**அரசகேசரிப் பிள்ளையார் கோயில்** போன்றவை இவர்கள் கட்டிய கோயில்களுட் சிலவாகும். இவ்வாறு இவர்களினுல் அமைக்கப்பட்ட ஆலயங்களில் பரிவார தேவகோட்டங்களும், சிறந்த யாக மண்டபங்களும், களஞ்சியம், மடைப்பள்ளி, திருக்குளம் முதலியனவும் சித்திரக் கோபுரங்களோடு மதில்களும், நந்தவனம், [2]அக்கிரகாரம், வேதாத்தியயன மண்டபம், அன்னதான சத்திரங்கள், தேரும் தேரோடும் வீதிகளுமே அமைந்திருந்தனவாம். இவற்ருேடு நான் மருங்கும் தாமரைத் தடாகங்களும், அவைகளைச் சுற்றிச் சிறந்த படித்துறைகளும், அவைகளுக்கு அருகே தோரண மண்டப மேடைகளும், இடையிடையே சிறந்த மரக்காக்களும் அமைப்பித்துத் தேவநகராக நல்லூரை எழில்பெற இவர்கள் அக்காலத்தில் வைத்திருந்தனர். இப்படியாக மன்னர்களினுல் எடுக்கப்பட்ட மனம் நிறைந்த அருள் அலை வீசும் சிவாலயங்கள் நிறைந்த கோட்டமாகிய நல்லூருக்கு இன்று அணியாக விளங்குவது அங்குள்ள **கந்தவேள் கோயிலாகும்.**

தமிழுக்கும் சைவத்திற்கும் அருந் தொண்டுகள் ஆற்றிய யாழ்ப்பாணத்தரசர்களது நேரடிப் பரிபாலனத்தில் இருந்துவந்ததும், அவர்களது முக்கிய வணக்கத்தலங்களுள் ஒன்ருகவிருந்ததும் நல்லூர்க் கந்தசுவாமி கோயிலாகும். இக்கோயில் ஆரியச் சக்கரவர்த்தியின் முதலமைச்சராக விளங்கிய **புவனேகவாகு** என்பவனுல் கட்டப்பட்ட

1, அரசகேசரி என்ற அமைச்சனுல் கட்டப்பட்ட கோயில்.

2. அந்தணர் சேரி

தென்பர் ஒரு சாரார்: இன்னொரு சாரார், யாழ்ப்பாண அரசைக் கைப்பற்றிய **செண்பகப்பெருமாள்** என்னும் **புவனேகவாகுவினால்** 1454இல் கட்டப்பட்டதென்பர். எது எப்படியாயினும், புவனேகவாகு என்பவனது பெயர் மகோற்சவங்களில் ஆலயக் கட்டியத்தில் கூறப்பட்டு வரும் வழக்கம் இன்றும் இவ்வாலயத்தில் இருந்து வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

பண்டை நல்லூரில் 64 வீதிகள் இருந்தன. அவை ஒவ்வொன்றிலும் கந்தவேள் கோவிலுக்கு நியமப்படி தொழும்பு செய்பவர்கள் வாழ்ந்து வந்தனர். பலதலைமுறைகளும், பல அரசமுறைகளும் உருண்டோடி விட்டன. ஆயினும், இக்கோயிற் தொழும்பு முறையால் ஏற்பட்ட இவ்வாலய அயல் இடங்களினது பெயர்கள் இன்றுவரையும் மாற்றமடையாது நின்று நிலவி வருகின்றன. அவ்விடங்களில் வாழும் மக்கள் தலைமுறை தலைமுறையாகத் தொன்று தொட்டுச் செய்துவரும் தொழும்புகளை மறவாது உரிமையோடு செய்துவருகின்றனர். இவை இவ்வாலயத்தின் பண்டைப் பெருமையை நினைவுகூர வைத்து, இப்பெருமான் மீது இம் மக்களுக்கு இருந்துவரும் பக்தியையும் எடுத்துக் காட்டுகின்றன.

1478இல் அரசகட்டிலேறிய சிங்கை பரராசசேகரன் இவ்வாலயத்திற்கண்மையில் பகரவடிவிலான திருமஞ்சனக் கேணி ஒன்றை அமைப்பித்தான். புண்ணிய நதியான யமுனையிலிருந்து தீர்த்தம் தருவித்து இவ்வேரியில் சொரிவித்தான். அதனால் அவ்வேரியை ''யமுனையேரி'' என்றழைப்பாராயினர். ''யமுனாரி'' என இன்று அழைக்கப்படுவதும் இவ்வேரியேயாம்.

400 ஆண்டுகள் வரை சைவத் தமிழரசர்களால் ஆளப்பட்டுவந்த யாழ்ப்பாணவரசு 2–2–1621இல் அந்நியரான போர்த்துக்கேயரின் கைப்பட்டது. யாழ்ப்பாணவரச வீழ்ச்சியுடன் சைவ ஆலயங்கள் பல போர்த்துக்கேயரினால் இடித்தழித்துத் தரைமட்டமாக்கப்பட்டன. அப்படியாக அழிக்கப்பட்ட சைவக்கோயில்களுள் மகோன்னத நிலையிலிருந்த நல்லூர் கந்தசுவாமி கோவிலும் ஒன்றாகும். இதனை அழித்தவன் 'ஒலிபறா' என்னும் பறங்கித் தளபதியாம். கோவிலை அழித்துச் சூறையாடியதோடு நிற்காது, அஃது இருந்த இடமும் தெரியாதபடி அத்திவாரத்தையுமே கிளறியெடுத்துவிட்டதாம் பறங்கிப்படை, போர்த்துக்கேயரிடமிருந்து 21–6–1658இல் யாழ்ப்பாணவரசு ஒல்லாந்தர் கைக்கு மாறியது. அப்போது அவர்கள் தங்கள் மதவணக்கத்திற்குரிய தேவாலயம் ஒன்றைப் பழைய கந்தசுவாமி கோவில் இருந்த இடத்தில் கட்டிக்கொண்டனர். பழைய



நல்லூர் கந்தப்பெருமான் கோவில் இருந்த யமுனா ஏரிக்குப் பக்கத்தில் இன்று இருப்பது ஒல்லாந்தர் காலத் திருச்சபைத் தேவாலயமாகும்.

இப்படியாகப் புறத்தோற்றத்தில் இருந்த நல்லூர்க் கோவிலை அந்நியரால் அழிக்கமுடிந்ததே தவிர, அவனடியாரது அக்கோயில் வழிபாட்டை அவர்களால் அழிக்கவோ, அகற்றவோ, அசைக்கவோ முடியவில்லை. எனினும் மனத்தகத்தவனாகிய முருகப்பெருமானுக்குப் பழைய கோவிலுக்கு அண்மையில், *1734இல், புதிய ஒரு சிறு மடாலயம் அமைத்தனர். ஆரம்பத்தில் இம்மடாலயம் கந்தபுராணம் படிக்கும் இடமாகவே பெரிதும் பயன்பட்டு வந்தது. இம்மடாலயத்தில் வேல் ஒன்றையே வைத்து வழிபட்டும் வந்தனர். மடாலயமாக இது இருந்ததினாற்றான் தூபி எதுவும் இல்லாது இருந்து வந்தது. அக்கால ஒல்லாந்தர் ஆட்சியில் சிறாப்பராக இருந்த இரகுநாதமாப்பாண முதலியார் தனது செல்வாக்கைப் பயன்படுத்தி, இம்மடாலயத்தைக் கற்களாலும், செங்கற்களாலும் கட்டுவித்து ஓட்டால் வேயப்பட்ட கோயில் ஆக்கினார். அவர் பரம்பரையில் வந்தோரே அன்று தொடக்கம் ஆலயத்தை நிர்வகித்து வரும் அறங் காவலர்களாக இன்றுவரை இருந்துவருகின்றனர்.

இக்கோயிலைக் கருங்கற்களாற் கட்டவேண்டும் எனவும், மூலத்தானத்தில் வேலுக்குப் பதிலாகத் தேவப்பிரதிட்டை செய்யப்படவேண்டுமெனவும் கூறி வந்தவர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் அவர்கள் ஆவார். இதற்காக அவர் மூவாயிரம் ரூபாவரை பணமும் திரட்டிக் கொடுத்ததாக வரலாறு கூறுகின்றது. ஆயின் இவர் காலத்தில் இவை நிறைவேறவில்லை.

மூலத்தானத் தளவேலைகள் கருங்கற்றிருப்பணியாக 1902இல் நிறைவேறி ஆலயப் பிரதிட்டை செய்யப்பட்டுக் குடமுழுக்கு நடைபெற்றது. 1909இல் சுற்றுப்பிரகார மண்டபங்கள் கட்டப்பட்டன. ஆயின் இவற்றுக்கு முன்னதாக 1899இல் மணிக்கூட்டுக் கோபுரம் ஒன்று கட்டப்பட்டிருக்கின்றது. இதற்குச் சான்று அதிலுள்ள செப்பேடாகும்.

இவ்வாலயம் குமார தந்திர முறையில் பூசை நடைபெறும் தலமாகும். ஈழத்தில் இம்முறையில் பூசை நடைபெறும் தலம் இது ஒன்றேயாம். இன்று இவ்வாலயத்தில் நாள்தோறும் ஆறுகாலப் பூசைகள் நேரம் தப்பாது குறித்தபடி நடைபெற்றுவருகின்றன. மற்றும் சிறப்பு விழாக்களும் இதே ஒழுங்கிற்றான் நடைபெற்றுவருகின்றன. ஒவ்வொரு மாதப்

* இஃது 1793 என்றும் கூறப்படும்.

பிறப்பன்றும் திருவனந்தற் பூசைக்கு முன்னதாகப் பூந்தோட்டத் திருமஞ்சனக் கிணற்றில் தீர்த்தம் நடைபெறுவது இவ்வாலய வழக்கம். இங்கு மாதந்தோறும் கார்த்திகை உற்சவம் சிறப்பாக நடைபெறுவதுடன், சஷ்டி தோறும் செல்வ முத்துக்குமார சுவாமிக் குத் திருமஞ்சனமும் நடைபெறுகின்றது.

இவ்வாலய மகோற்சவம் இருபத்தைந்து நாட்கள் நடைபெறும். இவ்வாலயக் கொடியேற்றச் சீலையை ஆண்டுதோறும் நல்லூரில் வாழ்ந்துவரும் செங்குந்த மரபினரே அழகிய தேரில் வைத்துக் கொண்டுவந்து கொடுப்பர். ஆவணி மாத அமாவாசையன்று தீர்த் தமும், முதல்நாள் தேர்த்திருவிழாவும் நடைபெறும். இக்காலத்தில் செந்துவர் வாயார் சேவடி சிந்திக்கவரும் பக்தர்கள் கூட்டம் பல் லாயிரமாக இருக்கும். இக்காட்சி அப்பர் பெருமான் "முத்துவிதானம்" என்ற திரு ஆரூர்ப் பதிகத்தில் காட்டும் ஆதிரைநாட் காட்சியையும் சிறப் பையும் எண்ணச் செய்யும்.

தேர்த் திருவிழாவன்று மாலை தேர்முட்டியில் சண்முகப் பெருமானுக் குப் பச்சை சாத்தி நடைபெறும் அர்ச்சனையும், அப்பொலிவோடு பெருமான் ஆலயத்திற்குத் திரும்பும் கோலமும் நெஞ்சை நெகிழ்விப்பதாகும். பச்சை சாத்தி எழுந்தருளுவதன் நோக்கம் "எல்லாச் சீவராசிகளுக்கும் எல்லா அநுக்கிரகங்களையும் செய்யும் கருத்தாவாகிய சதாசிவமூர்த்தியாக உள்ளவர் தானே என்பதையும், வேண்டுவார் வேண்டுவதை ஈயும் தன்மையும் தனக்கே உடையதென்பதையும் காட்டி, எல்லா நலன்களையும் பெற்று வாழுங்கள் என்று அருள் செய்யும் குறிப்பை உணர்த்தும் கோலம்" என்பதுதான்.

இங்கு ஒவ்வொரு மூர்த்திக்கும் விலையுயர்ந்த தங்க, வைர, இரத் தினங்களால் ஆகிய ஆபரணங்கள் உள. அதே போன்று வெள்ளி தங்க வாகனங்களும், சிங்காசனமும் உள.

கோயிலின் கிழக்கு வாயிலைச் சிறந்த சிற்ப வேலைப்பாடுகள் அமைந்த ஐந்தடுக்குக் கோபுரமும், அதன் இருமருங்குமுள்ள அழகிய மணிக்கூட்டுக் கோபுரங்களும் அணி செய்கின்றன. தெற்கு வீதியில் இன்னொரு கோபுரம் கோயிலை அழகு செய்கிறது. இதற்கு நேராகத் தெற்குப் புற வெளிவீதிக்குத் தெற்கே அழகிய தீர்த்தக் கேணியும், தண்டாயுதபாணி கோவிலும் இருக்கின்றன. இத்திருக்கேணியிற்றான் மகோற்சவகாலத் தீர்த்தம் நடைபெறுகிறது.

கோயிலைச் சுற்றிவரப் பல மடங்கள் இருக்கின்றன. அவற்றுள் தேர்முட்டிக்கு அண்மையில் உள்ள அறுபத்து மூவர் குருபூசை மடம் பிரபல்யமானது. இதுவே சடையம்மா மடம் எனப்படுவதாகும். இதன் காலம் 1892.



படமாடும் இக்கோயிற் குமரனிடம், நடமாடும் கோயில்களாக விளங்கிய யாழ்ப்பாணச் சித்தர் பரம்பரையில் வந்த செல்லப்பாச்சாமி, யோகர்சாமி போன்ற ஞானவான்கள் வந்து தரிசனஞ்செய்து நடமாடி இருக்கின்றனர்.

இவ்வாலயம் இன்றிருக்கும் காணியின் பெயர் குருக்கள் வளவு, தோம்பு உறுதியின்படி கோயிற் காணிக்கு உரிமையுடையவர் அம்பல வாணர் கந்தப்பச் செட்டியார். (அம்பலவாணர் - சிவன்; கந்தப்பச் செட்டியார் - சிவன் மகன் முருகன்.)

இவ்வாலயத்தின்மீது 45க்கு மேற்பட்டோர் பாமாலை பாடி யுள்ளனர்.

## 9. நயினாதீவு நாகபூஷணியம்மன் கோவில்

யாழ்ப்பாணக் குடாநாட்டிற்குத் தென்மேற்காகக் கடல்களால் சூழப்பட்ட பல தீவுக் கூட்டங்கள் உள. இவைகள் "சப்த தீவுகள்" எனவும்படும். இத்தீவுகளுக்குந் தமிழ் நாட்டிற்கும் வழிபாட்டிலும், வாணிபத் துறையிலும் பண்டை நாட்களில் பெருந் தொடர்புகள் இருந்திருக்கின்றன. அந்நாளில் இராமேசுவரப் பெருமானுக்கு நெடுந் தீவில் (பசுத்தீவு) இருந்து பாலும், கச்சைதீவில் இருந்து பூசைக்கு வேண்டிய பூக்களும் யாழ்ப்பாணத்தரசர்களால் அனுப்பப்பட்டு வந்த தாக வரலாறு உண்டு. இப்படியான இத்தீவுக் கூட்டங்களுள் வர லாற்றுச் சிறப்புமிக்கது நயினாதீவு ஆகும். வரலாற்றுச் சிறப்போடு சைவர்களது வணக்கத்துக்குரிய புராதன சக்திபீடத் தலமகிமை பொருந்தியதும் இதுவாகும். பண்டைநாளில் தமிழ் நாட்டவர்கள் யாத்திரை செய்யும் ஈழத்துத் திருத்தலங்களுள் இவ்வாலயமும் ஒன் றாக விளங்கி வந்தமை குறிப்பிடத்தக்கதாகும்.

முன்னரெல்லாம் யாழ்ப்பாணத்திலிருந்து காரைநகர் சென்று, வத்தைகளிலும், வள்ளங்களிலுமே நயினாதீவு செல்வர். இப்பொழுது புங்குடுதீவுவரை நெடுஞ்சாலை வசதி உண்டு. இதனால் இப்போ புங்குடுதீவிலிருந்து இயந்திரப்படகு மூலம் இங்கு செல்கின்றனர். இதுவே இக்காலச் சுருக்கமானதும், சுலபமானதுமான வழியாகும்.

ஈழத்தின் வடகோடியில் ஆதியில் நாகர் என்ற இனத்தவர் வாழ்ந்து வந்தனர். இவர்கள் சிவ வணக்கத்தினராவர். இவர்கள் கடவுள் பத்தியிலும், தவத்திலும், சீர்திருத்தத்திலும் மிகவுஞ் சிறந் திருந்தனர். இவர்கள் தங்களுக்குத் தண்டனையைத் தேடிக் கொடுக் கின்ற ஐந்து புலன்களையும் அடக்கி, தங்களுக்கு நித்திய பேரின்ப வாழ்வு அருளவேண்டுமென்ற நினைப்பில் கடவுளை வழிபாடு செய்து வந்தனர். இதற்காகப் பல கோவில்களைக் கட்டிச் சிலை வைத்து

வணங்கிவந்தனர். அப்படியான நாகரிக வாழ்வு வாழ்ந்த நாகர்கள் காலத்தில் உருவாய கோவில்களில் ஒன்றுதான் நயினுதீவு நாகபூஷணி யம்மன் கோவிலாகும். இந் நாகர்களையும் இவர்களது வழிபாட்டினை யும் நினைவுபடுத்துவனவே வடமராட்சி கிழக்கிலுள்ள "நாகர் கோயிலில் அமைந்துள்ள நாகதம்பிரான் கோயில், யாழ் மாவட்டக் கரைச்சிப் பகுதி ஊர்களில் ஒன்றுகிய புளியம்பொக்கணை நாகதம்பிரான் கோயில், மாங்குளத்தையடுத்த புளியங்குளம் புதூர் நாகதம்பிரான் கோயில், முதூரிலுள்ள கட்டை பறிச்சான் நாகதம்பிரான் கோயில், கொக் கட்டிச்சோலை புண்டாரிவெளி நாகதம்பிரான் போன்ற கோயில்களாம். ஆதிநாகர் கட்டி வழிபட்ட புராதன ஐந்தலை நாகவழிபாட்டுத் திருத்தலங் களின் அழிபாடுகள்" மதவுவைத்த குளம், குருந்துக்குளம் போன்ற இடங்களில் உள. இன்னும் இன்றும் பூநகரியில் நாகதேவன்துறை என் னும் பெயருடைய துறை ஒன்று இருந்து வருவதும் ஈண்டு குறிப் பிடத்தக்கதாகும்.

மேலும் நாகர், நாகநாதன், நாகப்பர், நாகமணி, நாகேந்திரன், நாகராசா, நாகையர், நாகலிங்கம், நாகம்மா, நாகேசுவரி, நாகபூஷணி, நாகநந்தினி, நாகலட்சுமி, நாகரத்தினம் போன்ற இன்றைய வழக்காற்றுப் பெயர்களும் இந்நாட்டுப் பண்டை நாகரை எமக்கு நினைவூட்டும் காரண இடுகுறிப் பெயர்களேயாம். இன்னும் நாகர்களால் வழிபடப்பட்ட ஆலயங்களில் ஒன்றே மாதோட்டத்திலுள்ள திருக்கேதீச்சரமாகும். திருக் கேதீச்சரநாதருக்கு "நாகநாதர்" என்ற இன்னெரு திருப்பெயர் இருப்பது இதனை வலியுறுத்துகின்றது. எப்படி நாகர் இந்நாட்டுத் தொன்மைமிக்க நாகரிக மக்களாகக் கருதப்படுகின்றனரோ, அப்படி யான தொன்மை சைவத்திற்கும் நயினை நாகபூஷணி கோயிலுக்கும் ஈழத்தில் உண்டு என்பது தேற்றம்.

நயினுதீவு நான்கு மைல் சுற்றளவு கொண்ட ஊர். அதில் 150 பரப்பு நிலம் கோயிலும் கோயில் சார்ந்த இடங்களுமாகும். நயினு தீவுக்கு நாகதீவு, "மணிபல்லவம்", மணித்தீவு பிராமணத்தீவு போன்ற பெயர்களுமுண்டு. 'மணிமேகலை' என்ற காவியத்தில் வரும் 'மணிபல் லவம்' இதுதான் என்பது பெரும்பாலான ஆராய்ச்சியாளர் முடிபு. இங்கு கோயில் கொண்டிருக்கும் பெருமாட்டி நாகம்மாள் என்றும், நாகேசுவரி என்றும் போற்றப்படுவாள். இவ்வாலயம் எப்போது தொடக்கப்பட்டதென அறுதியிட்டுக் கூறமுடியாததாகும். உமையம் மைக்குரிய கீர்த்திவாய்ந்த 64 சக்தி பீடங்களுள் இதுவும் ஒன்றெனக் கூறப்படுகின்றது. ஆலயம் பற்றிய கர்ண பரம்பரைக் கதை, "முன்னெருகாலத்தில் நயினுதீவிலுள்ள அம்பிகையின் படிமத்தை அயற்றீவான புளியந்தீவிலிருந்த நாகமொன்று பூசித்து வந்த, தாகவும், ஒருநாள் அந்நாகம் அர்ச்சனை செய்தற்காகப் பூக்களைக் கொய்து கொண்டுவரும் வழியில், கருடன் (பருந்து) ஒன்றைக் கண்டஞ்சிக், கடற்கரைக்கு அண்மையிலுள்ள கல்லொன்றினைச் சுற்றிக்கொண்டிருந்த தாகவும். கருடனும் இதனைக் கொல்லும் நோக்குடன் எதிரிருந்த கல் லொன்றில் இருந்ததாகவும், இந்நேரம் இவ்விரண்டினதும் பகைமையை அக்கடல் வழியாகச் சென்று கொண்டிருந்த வணிகன் ஒருவன் கண்டு அவற்றைச் சமாதானம் செய்யும் நோக்கோடு தான் சென்றுகொண்டிருந்த கலத்தை நிறுத்தி, கருடனை அவ்விடத்தை விட்டு விலகும்படி கேட்டதாக வும், அதற்குக் கருடன் உனது செல்வம் யாவற்றையும் கொணர்ந்து என் முன் வைத்தால் விலகுவேன் என்றதாகவும், அவனும் அப்படியே செய்யக் கருடன் விலகியதாகவும், ஊர் திரும்பிய வணிகனது வீட்டிலே பேரொளி ஒன்று தோன்றியதாகவும், அங்கெல்லாம் கண்ணைப் பறிக்கும் நாகரத்தினக் கற்கள் காணப்பட்டதாகவும், இவை நயினுதீவு அம்பிகை யின் திருவருட் செயலென எண்ணிய வணிகன் யாத்திரை புறப்பட்டு வந்து அம்பாள் கோயிலைப் பெரிதாகக் கட்டி நயினுபட்டர் என்பவரைப் பூசைக்கமர்த்தி ஆலயத்தை நிர்வகித்து வந்ததாகவும்" கூறப்படுகின்றது இப்பொழுதும் பாம்பு சுற்றிய கல், கருடனிருந்த கல் என இரு கற்களைப் பொதுமக்கள் காட்டும் வழக்கம் இங்கு உண்டு.



இக்கோயிலுக்கும் வணிகச் செட்டிகளுக்கும் தொடர்புண்டென் பதை இவ்வாலயத்து நகரத்தார் மடம் தெளிவு படுத்துகின்றது. மேலும், இத்தீவு நீண்டகாலம் கப்பற்போக்குவரத்துத் துறைமுகமாக இருந்ததென்பதை இத்தீவின் மேற்குக் கடற்கரையிலுள்ள படகுத் துறை என்னும் பெயர் கொண்ட இடமும், இத்தீவில் கண்டெடுக்கப் பட்ட 12-ஆம் நூற்றுண்டுப் பொலநறுவை அரசனுகிய பராக்கிரமவாகு வின் கற்சாசனம் ஒன்றும் வலியுறுத்துகின்றன.

இப்படியாகப் பெரும்புகழுக்கும், மகிமைக்கும், உறைபதியாக விளங்கியதுடன், கடல் வணிகரின் காவற்தெய்வமாகவுமிருந்து அருள் பாலித்து வந்த அன்னையின் இக்கோவிலும் ஏனைய கோவில்கள் போன்று பறங்கியர்களினுல் இடித்தழிக்கப்பட்டது. இடித்தழிக்கப் பட்டாலும் புத்தளப்பகுதியிலுள்ள காரைத்தீவுக் கோயில், கற்பிட்டியி லிருந்த நாச்சியம்மன் கோயில், நீர்கொழும்பிலிருந்த மீனுட்சி அம்மன் கோயில் (மீனுட்சி ஒடையில்), பெந்தோட்டை (Bentota) காளிகோயில் போன்ற பழம்பெருந் தேவி கோயில்களுக்கு நேர்ந்த கதி இவ்வாலயத் திற்கு நிகழவில்லை. காரணம் இவ்வாலயச் சூழலிலுள்ளோர் சமயம் விட்டுச் சமயம் மாருதிருந்தமையேயாம். மேற் கூறிய பிரதேசக் கோவில்கள் அழிவோடு அழிந்தமைக்குக் காரணம் சைவராக அவ் விடங்களில் வாழ்ந்தோர் தம் சமயம் மாறியிருந்தமையேயாம்.

மேலும், பறங்கியரால் இடியுண்ட நயினை ஆலயம் ஒல்லாந்தர் காலத்தில் சிறிய அளவிற் கட்டப்பட்டது. பின்னர் காலத்துக்குக் காலம் அடியவர்களது நன்நிதியங்கொண்டு திருப்பணிவேலைகள் நடைபேற்று இன்று முழுமையான ஒரு பெருங் கோவிலாக விளங்குகின்றது கோயிலின் கிழக்கு வாயிலைக் கப்பீரத் தோற்றத்துடன் அணிசெய்வது 1935இல் கட்டி முடிக்கப்பட்ட தூலலிங்கமாகிய கோபுரமாகும்

ஆலயத்தின் இப்போதுள்ள விமானம், இன்றைய திருக்கேதீச்சரம் திருப்பணிகளை மேற்கொண்டு நிறைவுசெய்த காரைக்குடிச் சிற்ப வல்லுனர் திரு. எம். செல்லக்கண்ணு ஸ்தபதியாரினால் பாண்டி நாட்டுச் சிற்பமுறையில் அமைக்கப்பட்டு 25–4–51இல் குடமுழுக்குச் செய்யப்பட்டதாகும்.

உற்சவ காலத்தில் இப்போது அம்பாள் உலா வருந்தேர் ''தேர்த் திருப்பணிச் சபை'' என ஏற்பாடு செய்யப்பட்ட சபை ஒன்றின் மூலம் செய்துமுடிக்கப்பட்டு, 8–7–57இல் வெள்ளோட்டத்திற்குவிடப்பட்டதாகும். இதனைப் பூர்த்திசெய்தவர் அருட்டிரு குன்றக்குடி அடிகளாரின் ஆலோசனைப்படி அழைக்கப்பட்ட தமிழ் நாட்டு நாகர் கோயிலைச் சேர்ந்த திரு. எஸ். குமாரசாமி ஆசாரியார் ஆவார். இத்தேர் இன்று ஈழத்திலுள்ள முதன்மை பெற்ற சித்திரலங்காரச் செய்கைத் தேர்களுள் ஒன்றாகும்.

இவ்வாலயத்தில் நாள்தோறும் ஆறுகாலப் பூசைகள் ஒழுங்காக நடைபெற்று வருகின்றன. உற்சவம் ஆனிப் பூரணையில் தீர்த்தமும். அதற்கு முதல் நாள் தேரும் வரக்கூடியதாகப் பதினைந்து நாட்கள் நடைபெறும். உற்சவ காலத்தில் திரள் திரளாக நாகம்மாளைத் தரிசிக்க அடியார்கள் யாத்திரை செய்வர். அம்பாள் தேரில் திருஉலா வரும்போது மெய்யுருகும் அடியார்கள் இடும் "அரோகரா" ஒலி பாம்பன் கடல் ஒலியுடன் கலந்து வானளாவும். அம்பாளின் தேர் இருப்புக்கு வரும்வரை எந்த ஒரு அடியாரும்—படகோட்டிகள் கூட ஆலயத்தை விட்டு அடி நகரமாட்டார்கள். கேணித் தீர்த்தம் முடிந்த மறுநாள் இரவு இங்கு தெப்போற்சவம் நடைபெறும். இவ்வாலயத் தனிச்சிறப்பு அம்சங்களுள் இதுவும் ஒன்றாகும், மேலும் நவராத்திரிக் காலத்தில் பார்க்கும் அடியவர் மனதில் பக்தி அநுபவப் பெருக்கு ஏற்படுமாறு விரிவாக இங்கு நடைபெற்று வரும் ஸ்ரீசக்கர பூசையும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும்.

இத்தலம் பல மகான்களுக்கும், அறிஞர்களுக்கும், சாதனையாளர்களுக்கும், புலவர்களுக்கும் இருப்பிடமாய் அமைந்துள்ளது. இங்கு ஒரு தனியான ஆத்மீக அலை உண்டு. அந்த அலைதான் பூசை, நேர்த்திக்கடன் என்று கூறிக்கொண்டு நாளாந்தம் ஆட்களை அள்ளுப்பட்டுத் தன்னிடம் ஓடிவரச் செய்கிறது.



இன்று இவ்வாலயம் ஒன்பது பேர் கொண்ட அறங்காவலர் சபை ஒன்றின் மூலமே நிர்வகிக்கப்படுகிறது. இவ்வாலயப் பிரதம குருக்களாக விளங்குபவர்தான் எல்லோருக்கும் நன்கு அறிமுகமானவரான சிவபூசாதுரந்தரர் பிரதிஷ்டாபூஷணம் சிவஸ்ரீ ஐ. கைலாயநாதக்குருக்கள் ஆவார்.

இவ்வாலய ஊஞ்சல்பாட்டு வண்ணை ம. அமரசிங்கப் புலவரினால் பாடப்பெற்றதாகும். ஆலயச் சிறப்புப் பற்றிக் கூறும் ஏனைய நூல்கள் :

| | ஆசிரியர் பெயர் | நூற்பெயர் |
|---|---|---|
| 1, | அராலி முத்துக்குமாருப்புலவர் | நயினாதீவு நாகேஸ்வரியம்மை பதிகம் |
| 2. | வேலணை தம்பு உபாத்தியாயர் | நயினை நாகாம்பிகை பதிகம், நாகை திருவிரட்டை மணிமாலை, திரு நாக தீபப் பதிகம். |
| 3. | நயினாதீவுச்சுவாமி | ஸ்ரீ நாகபூஷணி அந்தாதி மாலை. |
| 4. | நயினை நாகமணிப் புலவர் | நயினை நீரோட்ட யமக அந்தாதி, நயினை மான்மியம். |
| 5. | நயினை வ. கு. சரவணபவன் | நயினை நாகாம்பிகை பதிகம். |
| 6. | யோகி சுத்தானந்தபாரதியார் | மனோன்மணி மாலை. |
| 7. | நயினை க. இராமச்சந்திரன் | தேவி பஞ்சகம். |
| 8. | நயினை வே. செல்வநாயகம் | நாகேஸ்வரி பதிகம், நாகராஜேஸ்வரி திருவிரட்டை மணிமாலை. |
| 9. | வை. சி. வைத்தியலிங்கம் | நயினைநாயகி தோத்திரம் |
| 10. | நயினை நா.க.சண்முகநாதபிள்ளை | நயினை நாகம்மாள் பதிகம். |
| 11. | கரவை கவிராயர் வ. சிவராசசிங்கம் | நயினை நாகபூஷணியம்மை பிள்ளைத் தமிழ். |

**வரலாறு கூறும் நூல்**

**நயினை நாகேஸ்வரி — குல சபாநாதன்**

பௌத்தர்களும் இன்று இவ்வாலய தரிசனத்திற்காக யாத்திரை செய்கின்றனர். சைவத் தமிழர்களதும், சிங்கள பௌத்தர்களதும் நல்லுறவிற்குப் பாலமாக இவ்வாலயம் இன்று அமைந்திருப்பது அன்னை பராசக்தியின் அருளேயாம்.

**குறிப்பு :**

தங்களைக் கொண்டு பாவம் செய்விப்பதற்கு ஐந்து பகைகளாகிய ஐந்து புலன்களும், தங்களுடன் சதாகாலமுங் கூடியிருக்கின்றன என்

பதை, தாங்கள் எந்நேரமும் நினைவு கூருகிறதற்காகவே ஐந்து தலை நாகபாம்பின் விக்கிரகத்தைத் தங்கள் கோயில்களிலும், வீடுகளிலும் தமிழ் மக்களிற் சிலர் வைத்திருந்ததோடு தங்கள் சரீரங்களிலும் ஐந்து தலை நாகபாம்பின் விக்கிரகத்தை அணிந்துகொண்டும் வந்தார்கள். முற்காலத் தமிழரிற் சிலர், தங்கள் கோயில்களிலும், வீடுகளிலும் கும்பிடுவதற்காகக் கடவுள் விக்கிரகத்தையும், ஞாபகத்திற்காக ஐந்து தலை நாகபாம்பின் விக்கிரகத்தையும் வைத்திருந்தார்கள். ஐந்து தலை நாகபாம்பின் விக்கிரகத்தைக் கடவுள் விக்கிரகத்தின் எதிரில் வைத்தார்கள். ஐந்து புலன்கள் என்னும் ஐந்து பெரிய பகைகள் மனிதருக்கு உண்டென்பதையும், இந்தப் பகைகளில் இருந்து தப்பிக்கொள்கிறதற்காகக் கடவுளுடைய உதவியை மனிதர் எந்நேரமும் கேட்கவேண்டுமென்பதையும், ஐந்து தலை நாகபாம்பின் விக்கிரகம் அவர்களுக்கு நினைப்பூட்டிக்கொண்டிருந்தது.

மனத்தை நாகபாம்பாகவும், கர்மேந்திரியங்களின் தொகுதியை வாலாகவும், மெய் வாய் கண் மூக்கு செவி என்ற ஐந்து பொறிகளும் அப்பாம்பு விரித்து நின்ற ஐந்து தலைகளாகவும், அவ் ஐம்பொறிகளிலிருந்து தோன்றுகின்ற ஐந்து அவாக்களும் விஷங்களாகவும், அவ் அவா பற்றப் பட்டார்க்கு உண்டாகின்ற காமம், விஷ மயக்கமாகவும் மயங்கியவர் தம் நல்லறிவு இழத்தல், நல்லிரத்தங் கெடுதலாகவும் கொள்க. இந்த நினைப் பூட்டுதலானது பாவங்கள் செய்வதிலிருந்து மனிதரை விலக்கிக் கொண் டிருந்தது. ஒரு புலன் செய்யுந் தீங்கானது ஒரு தலை நாகபாம்பின் நஞ்சுக்குச் சமம் என்றும், ஐந்து புலன்கள் செய்யுந் தீமையானது ஐந்து தலை நாகபாம்பின் நஞ்சுக்குச் சமமென்றும் அவர்கள் நினைத்தார்கள். ஐந்து தலை நாகபாம்பின் விஷம் மனிதனைக் கொல்வது போலவே, ஐந்து புலன்கள் தேடிக் கொடுக்கும் பாவ விஷமும் மனிதனைக் கொல்கிறது என்று அவர்கள் நம்பினார்கள். கடவுளை வேண்டிக் கொள்கிறபோது அவருடைய கிருபையானது ஐந்து புலன்களையும் அடக்குகிறதென்றும், அவ்விதமான அடக்குதலைத்தான் விஷ்ணு ஐந்து தலை நாகபாம்பின் மீது சயனிக்கிறார் என்று சொல்லுதல் என்றும் தமிழரிற் பலர் கருதினார்கள்.

# 14. ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர்

* ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் பிறந்த நாள்: சித்திரபானு ஆண்டு மார்கழி 5ஆம் நாள் (18-12-1822) புதன்கிழமை இரவு அவிட்ட நட்சத்திரம்
* தகப்பனார் பெயர்: கந்தப்பிள்ளை; தாயார் பெயர்: சிவகாமி.
* ஊர்: யாழ்ப்பாணம் நல்லூர்.
* இறைவனடி சேர்ந்த நாள்: பிரமாதி ஆண்டு கார்த்திகை ௨௧ ஆம் நாள் (5–12–1879) மக நட்சத்திரம்.
* இலங்கை அரசாங்கம் ஐந்துசத நாவலர் நினைவு முத்திரை வெளியிட்ட நாள்: 29–10–1971.

## I. ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் சைவப்பணிகள்

நாவலர் பெருமான் கொண்ட மேலான நோக்கங்கள் இரண்டு. அவற்றுள் ஒன்று அந்நிய சமயத்தவரின் ஆதிக்கத்தில் தன் உன்னத நிலை குன்றிய சைவத்தைத் தொன்மைபோல் ஓங்கச்செய்யவேண்டும் என்பது. மற்றது செந்தமிழ் மொழியைச் சீர்படுத்தவேண்டும் என்பதாம். இதில் முதலாவது குறித்து 1868இல் அவர் செய்துகொண்ட விண்ணப்பம் ஒன்று பின்வருமாறு:

"அடியவர் குறைவு தீர்த்தாண்டருள்வதே விரதம் பூண்ட பெருங் கருணைக்கடலாகிய சிவபெருமான்" நான் நல்லறிவும் நல்லொழுக் கமும் தம்மாட்டு மெய்யன்பும் சற்றுமுற்றறியாப் பரமசண்டாளனே யாயினும், தமது சமயம் குன்றுதலைக் காண்டலின்கண்ணே பெருங் கவலையும், அச்சமயத்தை வளர்த்தலின்கண்ணே பேராசையும் உடைமையினாற்றானே என்னிம்மைப் பயன்களெல்லாவற்றையும் இழந்தும், பலராலே பலவகையிடையூறுகளை அநுபவித்தும், வருத்த முற்றும்—உண்மையைத் திருவுளங்கொண்டிரங்கி, என் கருத்தை யான் எடுத்த தேகம் விழுமுன் நிறைவேற்றியருளும்பொருட்டு, அவருடைய திருவடிகளைப் பணிந்து பிரார்த்திக்கின்றேன்."

இப்படியாகக் கூறிய நாவலர், சைவத்தின் உயர்வுக்காக ஆற்றிய பணிகளை வரிசைப்படுத்தின், அவை கீழ்க்கண்டவாறு அமைவனவாகும்:—

1. ஐரோப்பியர் வருகையால் நிலை குன்றியிருந்த சைவசமயத்தை மீண்டும் அதன் நிலைக்குக் கொண்டுவரவேண்டும் என்ற எண்ணம் நாவலருக்கு இளமை முதல் இருந்து வந்தது. பதின்மூன்றாவது வயதிலே இதனை நினைந்து மனம் வருந்தி, சிவபெருமானை வேண்டி வெண்பாப் பாடினார்.

2. சைவத்தை வாழவைக்கவேண்டும் என்ற பேராசையினாலே, தனது சுகபோகங்களை எல்லாந் துறந்து வாழ்நாள் முழுவதும் *நைட்டிங்க பிரமசாரியாகவே வாழ்ந்தார். இவைகளெல்லாவற்றிற்குங் காரணம் ''சைவசமயத்தையும் அதன் வளர்ச்சிக்குக் கருவியாகிய கல்வியையும் வளர்க்கவேண்டும் என்னும் பேராசையேயாம்'' என 1868இல் ''சைவசமயிகளுக்கு விக்கியாபனம்'' என்னும் இவரது வெளியீட்டில் கூறியிருப்பதன் மூலந் தெரிந்துகொள்ளலாம்.

3. ஊதியங்கொடுத்துவந்த ஆசிரியர் தொழிலையே விட்டுவிலகினார்.

4. சைவமுறையிற் கல்வியூட்டவேண்டுமென்று நினைத்துப் பாலபாடங்களை எழுதினார். பாதிரிமார் முதலாம் வேதவினாவிடை, இரண்டாம் வேதவினாவிடை என்னும் புத்தகங்களை எழுதி அச்சிட்டுப் பரப்பியதுபோல், முதலாம் இரண்டாஞ் சைவ வினாவிடைகளை எழுதிப் பரப்பிச் சைவ சமய அறிவையூட்டினார்.

5. செய்யுள் நடையிலுள்ள நூல்கள் தமிழறிவு குறைந்த அக்காலத்துப் படிப்போர்க்குக் கடுமையாக இருத்தலைக்கண்டு, சிவாலய தரிசனவிதி, பெரியபுராண வசனம், திருவிளையாடற்புராண வசனம், கந்தபுராண வசனம் போன்ற நூல்களை வசன நடையில் எழுதி வெளியிட்டார்.

6. பாதிரிமார்கள் அச்சியந்திரசாலையைத் தாபித்துத் துண்டுப் பிரசுரங்களையுஞ் சைவ கண்டனமான பிரதிகளையும் அச்சிட்டு வெளிப்படுத்தித் தம் சமயத்திற்கு மக்களை இழுப்பதைக் கண்டு, தானும் சென்னையிலும் யாழ்ப்பாணத்திலும் அச்சுக்கூடங்களை நிறுவிப் பழைய சமய நூல்களை ஆதாரமாகக் கொண்டு தாம் எழுதிய வசன நூல்களையும், கிறித்துமத கண்டனப் புத்தகங்களையும் அச்சிட்டுப் பரப்பினார். மேலும், இதில் பல பழந்தமிழ்ப் பெரு நூல்களையும் பிழையறப் பரிசோதித்துப் பதிப்பித்தும், எழுதியும் வெளியிட்டார்.

7. இளமைதொட்டு மாணவர்களைக் கூட்டி இலவசமாகச் சமய நூல்களையும் கருவி நூல்களையும் கற்பித்தார். இப்படி இவரிடம் கற்ற மாணவர்கள் பிற்காலத்தில் சமயத்திற்குப் பெரும் பணியாற்றியதுடன், நாவலர் மாணவ பரம்பரை ஒன்றையும் சிருட்டித்து விட்டனர். இப்பரம்பரை வழிவழியாக வந்துகொண்டே இருக்கின்றது; புலோலி நா. கதிரைவேற்பிள்ளை, வித்துவசிரோன்மணி பொன்னம்பலபிள்ளை, கோப்பாய் சபாபதி நாவலர், ஆறுமுகப்பிள்ளை, நடராச ஐயர் போன்றோர் நாவலர் மாணவர்களுள் குறிப்பிடத்தக்க சிலராவர். இன்று நம்முடன் வாழ்ந்து வரும் இலக்கிய கலாநிதி பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை, காலஞ்சென்ற வித்துவான் நா. சுப்பையாபிள்ளை போன்றோர் நாவலர் மாணவ பரம்பரையைச் சார்ந்தவர்களேயாம்.

* திருமணஞ் செய்யாமலும் சந்நியாச ஆச்சிரமங் கொள்ளாமலும் தூயநெறியில் இருக்கும் பிரமசாரியம்.



8. சைவப்பிள்ளைகள் சைவப்பாடசாலையில் கல்வி கற்கவேண்டுமென்பதை உணர்ந்து, இதனை யாவருக்கும் வெளிப்படுத்தியதோடு வண்ணார்பண்ணையில் கீலக ஆண்டு ஆவணி 5ஆம் நாள் (1848இல்) ''சைவப்பிரகாச வித்தியாசாலை'' என்னும் பெயருடன் ஒரு பாடசாலையை நிறுவினார். இதனைத் தொடர்ந்து ஊர்கள் தோறும் சைவப்பாடசாலைகளை நிறுவும்படி பிரசங்கித்தும்வந்தார். இதனால் இணுவில், கோப்பாய், புலோலி, கொழும்புத்துறை போன்ற இடங்களில் பாடசாலைகள் நிறுவப்பட்டன. சிதம்பரத்திலும் இதே நோக்கத்திற்காகப் பாடசாலை ஒன்றினை நிறுவியதோடு (1864) ஊர்கள் தோறும் சைவப்பாடசாலைகளைத் தமிழ் நாட்டில் நிறுவும்படியும் ஊக்குவித்து வந்தார். இதனால் ''சைவப் பாடசாலைகளின் தாபகத் தந்தை நாவலர்'' என்று போற்றத்தக்கவர். தம்மால் தாபிக்கப்பட்ட பாடசாலைகள் இடரின்றி நடைபெறுவதற்கேற்ற தருமங்களையும் அமைத்து வைத்துள்ளார். இங்கெல்லாம் தக்க ஆசிரியர்களையே நியமனஞ் செய்தும் வந்தார். மாணவர்கள் வேதனம் செலுத்தாதே படிந்து வந்தனர். இலவசக் கல்வியை அருளம்பல முதலியாருக்குப் பின்னர் முதன்முதலாக இந்நாட்டில் நடைமுறைப்படுத்தி நிலைபெறச் செய்தவர் நாவலரேயாவர்.

9. சைவப்பிள்ளைகள் ஆங்கிலங் கற்பதற்குச் சைவாங்கிலப் பாடசாலை ஒன்றின் இன்றியமையாமையை உணர்ந்து, வண்ணார் பண்ணையில் ஆங்கிலப் பாடசாலை ஒன்றையும் 1872இல் ஆரம்பித்தார். இப்பாடசாலையைக் கொண்டு நடத்தப் போதிய மூலதனம் சேராமையால் சிறிது காலத்தில் நின்றுவிட்டது. இருந்தும் சிறிது காலத்தின் பின் எழுந்த யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரிக்கும், அதன்பின் ஆங்காங்கு தோன்றிய சைவாங்கில பாடசாலைகளுக்கும் வித்திட்டு வைத்தவர் நம் நாவலர் பெருமானேயாம்.

10. சைவசமய உண்மைகளை விளக்கி வண்ணை வைத்தீசுவரன் கோவிலிலும், பிற இடங்களிலும் கேட்டார் பிணிக்குந் தகையவாய் பிரசங்கங்களைத் தான் செய்து வந்ததுடன், தன் மாணாக்கர்களையும், பிறரையும் கொண்டு செய்வித்தும் வந்தார். இதற்

காக இடத்திற்கு இடம் சைவப் பிரசார சபைகளைத் தாபித்தும்— தாபிக்க உதவியும் வந்தார். இப் பிரசங்கங்களினால் மதமாற்ற மடைந்த பலர் திரும்பவும் சைவத்திற் சேர்ந்துள்ளனர்.

11. சைவசமயம் தொடர்பான பிரசாரத்திற்கு 'பத்திரிகை' ஒன்று வேண்டும் என அவாவினர். 'சைவோதயபானு'' என்ற பெயரில் யாழ்ப்பாணத்தில் வெளியிடப்பட்ட பத்திரிகை இவர் துணை யானதேயாம். இதுவே பின்னாளில் இந்துசாதனமாக மாறியது.

12. சைவசமய வளர்ச்சிக்காகச் சேமநிதிகள் உண்டாக்க வேண்டும் என நினைந்து, அதற்கு வேண்டிய விதானங்களையும் எழுதி வைத்தார். இதற்காகத் தம்பலகமத்தில் விளைநிலங்கள் வாங்கி விட்டதற்கு ஆவணங்கள் உண்டு.

13. வேத சிவாகம நெறிதவறி நடந்து வந்த தேவாலயக் கிரியைகளை நெறிப்படுத்துவித்தார்.

14. வைதிகம் சைவம் என்பன பற்றிப் பிரசங்கித்து, சிவதீட்சை பெறாத வைதிகநெறிப் பிரமாணர்களைச் சிவதீட்சை எழுந்தருளச் செய்தார். இதனால் சிவாகம ஆராய்ச்சியும், சிவபூசையும், தேவார திருவாசக பாராயண ஓசையும், சிவபூசைக்கு இன்றியமையாச் சிறப்பினதாயுள்ள பூசைமணி ஓசையும் (ஆகாச சம்பந்தமான உபசார ஒலி) யாழ்ப்பாணம் எங்கும் பரவத் தொடங்கின. இதனாற் சைவந் தழைத்தோங்கியது.

15. சிவாலயங்களில் சிவ தரிசனஞ் செய்பவர்களுக்குப் பக்தி உண் டாகும்வண்ணம் பண்ணோடு திருமுறைகளை நியமமாக ஓதுவிக்க வேண்டுமென எண்ணி, ஓதுவார்களைத் திருவாவடுதுறைஆதீனத் தில் இருந்தும் வரவழைத்துப் பண்முறைப் பயிற்சி செய்வித்தார்.

16. திருக்கோவில்கள் தோறும் புராணபடனஞ் செய்வித்தும் — பொருள் விரித்தோதியும் மக்களிடத்திலே சைவ நற்சிந்தனைகளை வளர்த்தார்.

17. திருக்கேதீச்சரம், கீரிமலைச் சிவன்கோவில் என்பவற்றின் புனருத் தாரணம் பற்றி விஞ்ஞாபனஞ் செய்து அறிவுறுத்தினர். ''யாழ்ப்பாணத்துச் சமயநிலை'' என்ற விஞ்ஞாபனத்தில் திருக் கேதீச்சரம் பற்றி அறிக்கை செய்துள்ளார்.

18. சிவாலய தரிசனஞ் செய்பவர்கள் பொருட்டு ''சிவாலய தரிசன விதி'' என்னும் நூலையும், சைவசமயத்தின் சாரங்களையெல்லாந் திரட்டித் தாமெழுதிய ''சைவசமய சாரம்'' என்னும் துண்டுப்



பத்திரிகையையும், ''கொலைமறுத்தல்'' என்னும் நூலுக்குத் திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் செய்த உரையையும் பதிப் பித்து வெளியிட்டார்கள்.

19. யாழ்ப்பாணத்தவர் — ஏன் தமிழ்நாட்டவர்கூடக் கேட்டிருக்க முடியாத — பெயரே தெரிந்திருக்க முடியாக் கிடைத்தற்கரிய வடமொழி ஏட்டுருச் சிவதத்துவ - சாத்திர நூல்களைத் தேடி எடுத்துத் தாமே முயன்று வாசித்து விளங்கி, அவற்றின் சாரங் களைத் தாம் எழுதிய 'சிவனது பரத்துவம்', 'சித்தத்தைச் சிவன் பாலே வைத்தார் புராணம்' முதலிய தமிழ் நூல்களில் சாதாரண மக்கள் விளக்கத்திற்காக எழுதியமை அருமையின் அருமையாகும்.

20. தமிழ்நாட்டிலும் சைவப்பணிகள் செய்யவேண்டிய இன்றியமை யாமையை உணர்ந்து அங்குஞ் சென்று பணிபுரிந்தார். திருவா வடுதுறை ஆதீனம், தருமபுர ஆதீனம், மதுரை ஆதீனம், திருவண்ணாமலை ஆதீனம், மதுரை, காஞ்சி, இராமநாதபுரம், சிதம்பரம், சென்னபட்டணம், தொண்டைமண்டலப் பதி புண்ணிய சபை, காரைக்கால், வேதாரணியம் முதலிய இடங் களிலும் பிரசங்கமூலம் சைவப்பிரசாரஞ் செய்தார்.

21. சிதம்பரத்திலும் நல்லூரிலும் வேத சிவாகம குருகுல பாடசாலை களை ஆரம்பிப்பதற்கு எத்தனித்தார். இவர் எண்ணங்கள் கைகூட வில்லை. ஆயின் இவர் கனவை நனவாக்கி நிற்பதுதான் திருக் கேதீச்சரத்தில் 1961இல் தொடங்கப்பட்டு, 1974இல் யாழ் வண்ணை வைத்தீசுவரன் கோவிலடிக்கு மாற்றம் செய்யப்பட்டு, இன்று நடேசர் கோவிலடியில் நடைபெற்றுவரும், வேதாகம குருகுல பாடசாலை ஆகும்.

22. ஈழத்துத் தமிழர் போற்றும் சமயம் சைவம். இந்நாட்டில் தமிழர் கலாசாரம் — சால்பு இந்நெறி வழியதாம் என்பதை எடுத்துக் காட்டு முகமாகத் தன்னால் தோற்றுவிக்கப்பட்ட யாவற்றிற்கும் 'சைவம்' என்ற அடை கொடுத்துப் பெயர் சூட்டினர். சைவ வினாவிடை—சைவசமய சாரம்—சைவப்பிரகாச வித்தியாசாலை— சைவப்பிரகாச அச்சகம்—சைவப் போதகர்கள்—சைவ அநுட் டானம் போன்றவை குறிப்பிடத்தக்க சிலவாகும். இதனைத் தொடர்ந்து பின்நாளில் சைவபரிபாலன சபை—சைவ வித்தியா விருத்திச் சங்கம்—சைவாசிரியர் கலாசாலை—சைவப் பாட சாலைகள்—சைவசமய பாடப் பரீட்சை—சைவபோதம், சைவ போதினி, சைவ மகத்துவம், சைவப்பிரகாசனம், சைவசித்தாந்த சங்கிரகம், சைவ பூஷண சந்திரிகை, சைவசித்தாந்தச் சுருக்கம், சைவக்கிரியை விளக்கம், சைவ மஞ்சரி, சைவ நெறி போன்றவை பிறந்தன.

* சி. க. சி

23. நாவலர் பிறந்திலரேல் யாழ்ப்பாணம் முழுவதும் மதம் மாறியிருக்கும். சிவாலயங்கள் எதனையும் அங்கு காணவும் முடியாது இருந்திருக்கும். யாழ்ப்பாணத்திலுள்ள சில கிராமங்களில் இன்று சைவசமயத்தவர் எவரையும் காணமுடியாது இருப்பது போன்ற நிலைதான் சூடாநாடு முழுவதற்கும் நேர்ந்திருக்கும்.

24. தாம் இல்லாத காலத்திலும் சைவமும் தமிழும் தழைத்தோங்கும் வண்ணம் எப்பிழையுமின்றிப் பல நூல்களைப் புதியனவாக எழுதியும், உரை வகுத்தும், பரிசோதித்தும் வெளியிட்டார். (இந் நூல்களெல்லாம் யாழ்ப்பாணத்திலே அவராற்ருபிக்கப்பட்ட வித்தியானுபாலன யந்திரசாலையிலும், சென்னை அச்சகங் களிலும் அச்சிடப்பட்டவை.)

**நாவலர் புதியனவாக எழுதி வெளியிட்ட நூல்கள்:**

1. முதலாம் பாலபாடம்
2. இரண்டாம் பாலபாடம்
3. நான்காம் பாலபாடம்
4. பெரியபுராண வசனம்
5. சிவாலய தரிசன விதி
6. சைவதூஷண பரிகாரம்
7. சுப்பிரபோதம்
8. சைவ விஞவிடை முதற் புத்தகம்
9. சைவ விஞவிடை இரண்டாம் புத்தகம்
10. இலக்கணச் சுருக்கம்
11. சிதம்பர மான்மியம்
12. கந்தபுராண வசனம்
13. அநுட்டான விதி
14. யாழ்ப்பாணச் சமய நிலை
15. இலங்கைப் பூமிசாத்திரம்
16. திருவிளையாடற் புராண வசனம்
17. இலக்கண விஞவிடை முதற் புத்தகம்
18. இலக்கண விஞவிடை இரண்டாம் புத்தகம்
19. நல்லூர் கந்தசுவாமி கோவில் முதற் புத்தகம்
20. நல்லூர் கந்தசுவாமி கோவில் இரண்டாம் புத்தகம்
21. பெரியபுராண சூசனம்
22. போலி அருட்பா மறுப்பு
23. மித்தியவாத நிரசனம்
24. புலோலி பசுபதீச்சரப் பெருமான் திருவூஞ்சல்
25. கதிர்காம சுவாமிமீது கீர்த்தனங்கள்
26. தனிப் பாமாலைகள்



**உரை எழுதி வெளியிட்ட நூல்கள்:**

1. திருமுருகாற்றுப்படை
2. கோயிற் புராணம்
3. சைவசமய நெறி
4. ஆத்திசூடி
5. கொன்றைவேந்தன்
6. வாக்குண்டாம்
7. நன்னெறி
8. நல்வழி
9. நன்னூல் (காண்டிகையுரை)

**பரிசோதித்துப் பதிப்பித்த நூல்கள்:**

1. சூடாமணி நிகண்டு-உரையுடன்
2. சௌந்தரியலகரி-உரையுடன்
3. நன்னூல் விருத்தியுரை
4. திருச்செந்தினிரோட்ட யமகவந்தாதி
5. குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்
6. கந்தரலங்காரம்
7. கந்தரனுபூதி
8. ஏரெழுபது
9. திருக்கைவழக்கம்
10. மறைசையந்தாதி
11. கோயிற்புராண மூலம்
12. திருக்கருவைப்பத்தந்தாதி
13. சிதம்பர மும்மணிக்கோவை
14. பட்டினத்துப்பிள்ளையார் பாடல்
15. அருணகிரிநாதர் வகுப்பு
16. மருதூரந்தாதியுரை
17. திருச்செந்தூரகவல்
18. விநாயகரகவல்
19. விநாயக கவசம்
20. சிவகவசம்
21. திருவள்ளுவர் — பரிமேலழகருரை
22. திருச்சிற்றம்பலக் கோவையுரை
23. சேதுபுராணம்
24. பிரயோகவிவேக மூலமும் உரையும்
25. தருக்க சங்கிரகம்
26. உபமான சங்கிரகம்
27. இரத்தினச் சுருக்கம்
28. இலக்கணக்கொத்து
29. தொல்காப்பியச் சூத்திர விருத்தி
30. இலக்கண விளக்கச் சூறுவளி

31. கந்தபுராணம்
32. பதினோராந் திருமுறை
33. நால்வர் நான்மணிமாலை, பெரியநாயகி விருத்தம், பெரியநாயகி கலித்துறை, புஷ்டான நவமணிமாலை
34. தொல்காப்பியம் சொல்லதிகாரம்—சேனாவரையருரை
35. சிதம்பர மான்மியம்
36. சிவஞானபோதச் சிற்றுரை
37. பெரியபுராணம்
38. புட்பவிதி
39. உபநிடத மூலமும் உரையும்

**நாவலரது சைவப் பணிப் பயன்கள்:**

ஆறுமுகநாவலரது சித்தசுத்தியும், சிவபத்தியும் கூடிய இருதய கமலத்தெழுந்த நன்முயற்சிகளும், அற ஒழுக்கங்களுமே அவர் நினைத்த—எடுத்த பணிகள் செம்மையாக நடந்தேற உதவின.

நாவலரது எழுத்துக்களும் — பேச்சுக்களும் — பதிப்புக்களும் சூழ் நிலையின் படிப்படியான வளர்ச்சியைக் குறிக்கோளாகக் கொண்டவை. அக் காரணத்தால் அவர் முயற்சிகள் எல்லாம் சிறந்த அடிநிலையி லிருந்து தொடங்கி நடந்தவை எனலாம்.

நாவலரது சைவப்பணிப் பயன்கள் பல; அவரது முயற்சியால் அந்நியரின் பொய்யுரையும், மதமாற்றமும் தடைப்பட்டன. மதம் மாறினோர் மீண்டும் சைவராயினர். சைவத்தின் உயர்வை உலகம் அறிந்தது. சைவ மக்கள் சிவாகம அறிவும், ஒழுக்கமும் உள்ளவ ராயினர். சைவக் கல்வி, சைவ அறிவு, சைவ ஒழுக்கம் ஆகிய மூன்றும் வளரத் தலைப்பட்டன. சிவ சின்னங்களை அணிதலும், சைவப் பிரசங் கங்கள் நிகழ்த்தலும், புராணபடனமும் திருமுறை ஓதலும் வழக் கத்திற்கு உரியனவாயின. நாடெங்கும் சைவக் கல்லூரிகளும், பாடசாலைகளும் தோன்றின. நாவலர் வழியில் சான்றோரும் பலர் தோன்றிச் சைவப் பணியை ஈழத்திலும், தமிழ் நாட்டிலும் செய்தனர். சைவச் சபைகள் தோன்றின. சைவ நூல்கள் பல பதிப்பிக்கப் பெற்றன; எழுதவும்பெற்றன. சைவப் பத்திரிகைகள் தோன்றின. ஊர்கள் தோறும் புதிய ஆலயங்களும் உருவாகின. அங்கெல்லாம் நித்திய நைமித்திய விழாக்கள் சிறப்பாக நடைபெற ஏற்பாடாயின. திருக்கேதீச்சரமும், திருக்கோணேசுவரமும் பண்டை நிலையைப் பெற்றன. நாவலர் திட்டமிட்ட முயற்சிகள் அவர்பின் நிறைவேறின. மிகுதியாயுள்ளவையும் விரைவில் நிறைவேறுதற்கான சூழ்நிலைகள் ஏற்பட்டன. இந்துக்கல்லூரி, கீரிமலைச் சிவன்கோவில், வேதாகம பாடசாலைகள் இவர் காலத்தில் நிறைவேருது, பிற்காலத்தில் இவர் கனவை நனவாக்கும் பொருட்டு நிறைவேறியவையாகும்.



நாவலரைப் போல வரலாற்றில் ஒருவரைக் காணல் அரிது. நாவலர் சைவத்தின் காவலர். பல்லவர் காலத்தில் சைவநெறி சீர்குலைந்தபோது ஞானசம்பந்தரும், அப்பரும் தோன்றிச் சைவத்தைக் காத்தனர். அதேபோன்று ஐரோப்பியர் ஆட்சியில் சைவநெறி சீர் குலைந்தபோது நாவலர் தோன்றிக் காத்தார். நாவலர் ஐந்தாம் குரவர். அறுபத்துநான்காம் நாயனுர். இன்று நாவலர் இட்ட சைவ நற்பணி ஆல் போல் பரந்து பயன் தருகிறது. இன்று நாம் காணும் சைவம் நாவலரின் சைவம் எனலாம். நாவலரின் சிவப்பணியைப் போற்றுதார் இலர். நாவலர் பிறந்த நல்லூரில் சைவ நன்மக்கள் அவருக்கு ஆலயம் அமைத்துள்ளமை அவரின் சைவப் பணிக்குச் சான்று பகர்கிறது.

இப்பணி நிறைவுபெறவேண்டுமெனக் கருவிட்டு முன்னோடியாக நின் றுழைத்தவர் திரு. க இளையதம்பி ஆவர்.

## II. நாவலர் சமூகப் பணிகள்

நாவலர்பெருமான் ஆற்றிய பணிகள் யாவும் சமூகநல அடிப் படையில் உள்ளனவே. எனினும், படிப்பவர் வசதி குறித்துப் பொது நோக்கில் அவர் செய்த சமூகத் தொண்டுகள் சிலவற்றைச் சமயப் பணியினின்றும் பிரித்துச் சிறப்பாக இங்கே காட்டப்படுகின்றன.

இதற்கு முன் கூறிய சமயப் பணிகளுள்ளும், சமூகப் பணிக் குரிய குறிப்புகள் இருப்பதனால், பொருத்தமானவற்றையும் இங்கு சேர்த்துக் கொள்ளவும்.

1. நாவலர் கல்விகற்ற காலங்களில் அநுபவித்த சிரமங்கள் அவர் மனதில் எப்போதும் இருந்தபடியால், பல இடங்களில் பல கல்விக் கூடங்களை ஆரம்பித்துச் சம்பளம் வாங்காமற் படிப்பிக்க வேண்டுமென்ற எண்ணம் அவருக்கு இருந்து வந்தது. அந்த எண்ணத்தில் உதயமானவையே வண்ணார்பண்ணைச் சைவப்பிரகாச வித்தியாசாலை போன்றவை. தமிழ்க் கல்வியுடன் ஆங்கிலக் கல்வியையும் நம் சமூகம் அறிந்திருக்க வேண்டுமென்ற பெரு நோக்குடன் சைவ ஆங்கில வித்தியாசாலை ஒன்றையும் வண்ணார் பண்ணையில் தொடக்கினர். இவர் விட்டுச்சென்ற நோக்கத்தில் உள்ள இச் சமூகப் பணிகளை இவர் அடியை ஒற்றிச் செய்வதற் குத் தோன்றிய தாபனங்கள்தான் யாழ்ப்பாணம் சைவ பரிபாலன சபை, சைவ வித்தியாவிருத்திச் சங்கம் போன்றவையாகும். இவற்

றைக் கண்டு தனிப்பட்ட பெரியோரும் இப்பணிகளில் ஈடுபடத் தலைப்பட்டனர். இவை யாவற்றுக்குங் காரணராக இருந்தவர் நாவலர் பெருமானேயாம்.

2. நாவலர் அவர்களால் தொடக்கப்பட்ட பாடசாலைகள் தனக்குப் பிற்பட்ட காலங்களில் அவை எவ்வாறு இயங்கவேண்டுமென்பதற் குரிய விதானங்களைச் செய்ததுடன், அவற்றின் பரிபாலனத்துக் குரிய சொத்துக்களையும் தேடிவைத்துள்ளார்.

3. படித்தவர்க்கு மட்டுமே என்றிருந்த பாவுரு நூல்களைச் சாதாரண மக்கள் சமுதாயமும் விளங்கிக்கொள்ளக்கூடியதாக வசனநடையில் எழுதி உதவினர்.

4. அச்சுக்கூடம் நிறுவியதும், பழைய நூல்களைச் சமூகத்திற்கு ஏற்ப இலகு மொழியில் ஆக்கியதும், புது நூல்களை எழுதியதும், பழையனவற்றைப் பரிசோதித்ததும், யாவரும் கல்வி கற்பதில் சமவாய்ப்பினைப் பெறவேண்டும் என்ற பெருநோக்கினுலேயாம்.

5. நாவலர் பெருமான் பிரசங்கங்களை வீண் பொழுதுபோக்குக் காகச் செய்தவரல்ல. கேட்டவர்கள் கேட்டபடி ஒழுகி, நன்மை பெறத்தக்க வகையிலேயே அவற்றை ஆற்றி வந்தார். இவற்ருல் பயன் பெற்ருேர் அளப்பிலர்.

6. துண்டுப் பிரசுரங்கள் மூலம் மக்கள் சமுதாயத்திற்கு விடயங்களை உணர வைக்கும் முறையை முதலில் கைக்கொண்டவர் நாவலரே. இம்முறை இன்று நம்மிடை நன்கு வேருன்றி நின்று நன்மை பயந்து வருகின்றது.

7. ராவ்பகதூர் சி. வை. தாமோதரம்பிள்ளை போன்ற ஆங்கிலங் கற்ற கல்விமான்களைத் தமிழ்த் தொண்டர்களாக்கித்—தமிழர் சமுதாயத்தைச் சிறப்புற வைக்கக் காரணராக இருந்தவர் நாவலரே.

8. ஈசுர ஆண்டு (1877) மழை குறைந்ததால் தானியங்கள் விளைவு குன்றி நாட்டில் பஞ்சமேற்பட்டபோது, கஞ்சித்தொட்டி கட்டிப் பஞ்சம் நீங்கும்வரை ஏழு மாதங்களுக்கு ஆரம்பத்தில் கஞ்சியும், பின்னர் அன்னம் கறி முதலியனவும் ஏழை மக்களுக்கு வழங்கிப் பஞ்சப் பிணியைப் போக்கி வந்தார்.

9. சரியான குற்றம் கண்டவிடத்து, அப்பிழைகளை விட்ட பெரும் பிரபுக்கள் பலரை நேருக்குநேர் வைத்துக் கண்டித்து நல்வழிப் படுத்தியவர் நாவலர் பெருமான்.



10. 1877இல் யாழ்ப்பாணத்தில் பாசையூர், கரையூர் போன்ற கிறீஸ் தவப் பகுதிகளில் பரவி வந்த பேதி நோயைக் கண்டு, தகுந்த பாதுகாப்பு அளிக்கும்படி அரசினர் விட்ட அறிக்கையைச் சீரான முறையில் நடைமுறைப்படுத்தாது பராமுகம் காட்டி வந்த அக்கால மாவட்ட அதிபராகிய துவைனம் துரையின் செய்கையைச் சுட்டிக் கண்டித்து, யாழ்ப்பாணம் வந்த தேசாதி பதிக்கு விண்ணப்பித்து, தூதுக்குழு வொன்றையும் அனுப்பி வைத்தவர் நாவலரே. இது அவர் செய்த சாதி சமய பேத ஆசார உயர்வு தாழ்வுகளுக்கு அப்பாற்பட்ட பணியையும், சீர் திருத்தப் பண்பினையும் காட்டுவதாகும்.

11. நாவலர் தனக்கு எதிராக முறையீடு செய்ததை ஒட்டி, துவைனம் கோபம் உடையவராக இருந்தாரேனும், நாவலர்க்கோ அன்றி அவர் செய்துவந்த பணிகளுக்கோ பெருமதிப்பளிக்க அவர் தவறவில்லை என்பதற்கு, நாவலரின் இறுதி நாளன்று துவைனம் செய்த செயல் நல்லதோர் எடுத்துக்காட்டாகும். நாவலர் உலக வாழ்வை நீத்த செய்தியைக் கேட்ட துவைனம் மிகவும் மனம் நொந்ததுடன், தம் கீழுள்ள அலுவலர்கள் எல்லோரை யும் "இன்று நீங்கள் கச்சேரி வேலை பார்க்கவேண்டியதில்லை, நாவலர் வீட்டுக்குப் போக வேண்டும்" என்று சொல்லி, அவர்களை அனுப்பி வைத்தமை நாவலர் தொண்டுகளுக்கு அவர் செய்த அரச மரியாதையைக் காட்டுகிறது.

12. திரு. பொன்னம்பலம் இராமநாதன் என்ற இளைஞரைச் சட்ட சபைக்கு அனுப்புவதற்காக ஆதரவு வேண்டி 22-5-1879இல் சைவப்பிரகாச வித்தியாசாலையில், சுதுமலை கறேல் விசுவநாத பிள்ளை தலைமையில் யாழ்ப்பாணத்தில் நடந்த அரசியல் கூட்டத் தில், சபையோர் மெச்சும் வகையில் தருக்க ரீதியான உண்மைக் கும் நேர்மைக்கும் புறம்போகாத நியாயங்கள் காட்டி உரை யாற்றியவர் நாவலர். இவர் அரசியல் நோக்கில் சமூகத்திற் காற்றிய பணிக்கு இஃது ஓர் உதாரணமாகும்.

13. சமூகநல விருத்திக்குப் பயன்படக்கூடிய முறையில் இன்றைய அண்ணுமலைப் பல்கலைக்கழக வளவுடன் சேர்ந்த 60 ஏக்கர் நிலத்தை விலைக்கு வாங்க உத்தேசித்திருந்தார். ஆயின், உத்தேச அளவுக்குக் கொள்வனவு செய்யப் பணம் சேரவில்லை. அதனுல் கொள்வனவு தடைப்பட்டதெனினும், அவர் கனவுகளையே பின்னுளில் அண்ணுமலைச் செட்டியார் நனவாக்கி இருக்கின்ரு ரென்பது ஈண்டு நினைவு கூர்ந்து மகிழத் தக்கதாகும்.

14. அன்ன சத்திரம் இல்லாத இடத்து அன்னசாலை தாபித்து சிரத்தையுடன் தீர்த்தயாத்திரை தலயாத்திரை செய்பவர்க

ளுள்ளும், கடவுளுக்கு இடையருத திருத்தொண்டு செய்பவர்களுள்ளும், வறியவராய் உள்ளவர்க்கும், தொழில் செய்து சீவனஞ் செய்யச் சக்தியில்லாத குருடர் முடவர்களுக்கும், சிறு குழந்தைகளுக்கும், நோயாளர்க்கும் அன்னம் கொடுக்க வேண்டுமென்ற அறக்கட்டளைகளை நாவலர் ஏற்பாடு செய்திருந்தார்.

15. விவிலிய வேதத்தைத் தமிழில் மொழிபெயர்த்தமை நாவலரது பரந்த நோக்குடன் கூடிய பெருந்தன்மையான சமூகத் தொண்டு என்று கூறுவதில் சைவசமயிகள் பெருமையடைகின்றனர்.

16. கந்தளாய்க் குளத்திற்கு அண்மையில் உள்ள இருபதினாயிரம் ஏக்கர் வளமிக்க காட்டு நிலத்தை நாட்டு மக்களுக்கு வழங்குவதற்கு, யாழ்ப்பாணம்—மட்டக்களப்பு வர்த்தக வேளாண்மைச் சங்கம் என்ற பெயரில் ஒரு சங்கத்தை 1872இல் தேசாதிபதியாயிருந்த சேர் வில்லியம் கிரகரி உருவாக்கினார். இச்சங்கம் பங்கொன்று பத்துரூபா வீதம் முப்பதினாயிரம் பங்குகளை விற்கும் உரிமை பெற்றிருந்தது. இச்சங்கப் பங்குகளில் நாவலர் அவர்களும், திரு. ரா. ம. சித. முத்துக்கருப்பன் செட்டியாரும் சேர்ந்து இரண்டாயிரம் ரூபா கட்டி இருநூறு பங்குகள் பெற்றார்கள். இவர்கள் இதனை வாங்கியதன் நோக்கம் பஞ்சத்தினாலும், நோய்களினாலும் வாடி வருந்தும் மக்களின் வறுமையையும், பிணியையும் போக்க உதவுமுகமாகவேயாம். இக்காட்டில் வளர் பயன்தரு மரங்களாகிய கருங்காலி, முதிரை, பாலை, சமண்டலை முதலியவற்றைத் தறித்துப் பிற ஊர்களுக்கு அனுப்பின் மிகுந்த வருமானம் வரும் எனவும், அவ்வருமானங்களைத் தான் எடுத்த பொதுப்பணிகளுக்குப் பயன்படுத்தலாம் எனவும் நம்பியமை இன்னோர் நோக்கமாம். மேலும் இருநூறு பங்குகள் பெற்றிருந்தபடியினால் அச்சங்க முகாமைக்காரரில் ஒருவராகவும் இவர் தெரிவு செய்யப்பட்டார். தான் சங்கத்தில் சேர்ந்ததோடு நிற்காது மற்றும் ஆட்களையும் இச்சங்கத்தில், சேர்த்து வேளாண்மையைப் பெருக்குவதற்குக் கூட்டம் கூட்டிப் பிரசங்கித்தும் வந்தார். இன்னும் கிளைச்சங்கம் ஒன்றை நிறுவவும் எண்ணியிருந்தார். சமயப்பிரசாரகராக இருந்த நாவலர், நிலச் சீர்திருத்த வேளாண்மைப் பிரசாரகராக விளங்கியதை மெச்சி, அக்காலச் செய்தி மடலான இலங்கைநேசன் பலமுறை பாராட்டி எழுதியதுடன், ஆசிரியத் தலையங்கத்திலும் விரித்தெழுதியிருந்தது.

17. நாவலர் செய்த சமூகத் தொண்டுகளின் பெருமையினைக் கூற வந்த இலங்கைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை ஆசானாகிய தமிழ்ப்பெரியார் வண. கிங்ஸ்பெரி அவர்கள் "அளப்பருஞ் சலநிதி" எனக் கம்பர் வாக்கினைக் காட்டி உயர்த்தியுள்ளார். இதற்கு மேலாக அவர் பணி பற்றி யாம் கூற இருப்பது என்னே!



## III. நாவலர் திருக்கோயிற் பணிகள்

**1.** தொண்டை நாட்டில் உள்ள பாடல் பெற்ற தலங்கள் பல கிலமாகி இருந்தன. அவற்றைப் புனர்நிருமாணம் செய்வதற்கு சென்னையில் சபை ஒன்று கூட்டப்பட்டது. அதன்பெயர் திருத்தொண்டை நாட்டுப் பதிபுண்ணியசபை. இச்சபையின் சார்பில் தொண்டை நாட்டு கிலமடைந்த திருத்தலப் புனர்நிருமாணத்தின் பொருட்டு பொருள்சேர்க்க 1867 மார்கழி 22ஆம்நாளும், 1868, மாசி 1 ஆம் நாளும் சென்னையிற் கூட்டப்பட்ட இரு கூட்டங்களில், திருக்கோயிற்றிருப்பணிகள் செய்யப்படவேண்டிய அவசியம்பற்றியும், திருப்பணிகள் செய்வோர் பெறும் பயன்கள்பற்றியும் நாவலர் பெருமான் விரிவுரை செய்துள்ளார். அவற்றின் சாராம்சமான முக்கிய குறிப்புக்கள் சில இதன் கீழ்த் தரப்படுகின்றன;-

(அ) சிவபெருமான் தம்மைப் புகழ்ந்து தம்மாலே அருளப்பட்ட வேதத்தினும், தம் மெய்யன்பர்களாகிய சமயாசாரியர்கள் வாய்த் தோன்றிய தேவார திருவாசகங்களில் விருப்பமிக்குடையவராய், அவைகளால் வசீகரிக்கப்படுவராதலாலும், அவர்களால் வணங்கப்பட்டு—அவர்கள் திருப்பதிகங்களைப் பெற்ற சிவத்தலங்கள் உத்தமோத்தம சிவத்தலங்களாகும்.

(ஆ) சிவாலயத் திருப்பணிகள் "பரமதருமம்" என்பதும், சைவசாத்திர படனத்துக்குஞ் சைவப்பிரசாரத்திற்கும் முக்கியமான இடங்கள் சிவாலயங்களாமாதலாலும், கிலமடைந்திருக்கும் திருக்கோயில்களைத் தற்காலத்தில் புனர்நிருமாணஞ் செய்யாவிடின் விளையுங்கேடு பெரிதாதலாலும், இந்நாட்டிலுள்ள (தொண்டைநாடு) தேவாரம் பெற்ற கோவில்கள் பல கிலமடைந்திருக்கின்றமையினாலும், அப்படியான தலங்களைப் புனர்நிருமாணஞ்செய்தற்கும், நித்தியபூசைகள் இல்லாத ஆலயங்களில் நித்திய பூசை முதலியவை நடத்துவதற்கும் பெரும் பொருள் வேண்டும். தனித்தாயினும், சிலர் மாத்திரம் கூடியாயினும் இவைகளை நிறைவாக்குதல் இயலாது. சைவசமயிகளாகிய நம்மவர்களெல்லோரும் வேறுபாடுகளையும்—பகை உணர்வுகளையும் பாராட்டாது, ஒற்றுமையுடன்—ஐக்கியத்தோடு ஒருங்குகூடி உத்தமோத்தம சிவபுண்ணியமாகிய இச் சிவாலயத்திருப்பணிகளின் பொருட்டுத் தங்கள் தங்களால் இயன்றபடி சிறிதாயினுந் திரவியம் உபகரிக்கக் கடவர். "ஆயிரமாகாணி அறுபத்திரண்டரை" என்றபடி, நம்மவர்களால் உபகரிக்கப்படும் பொருள் மிகப் பெருகிவளர்ந்து திருப்பணியாளர்கள் உத்தேசித்திருக்கும் சிவபுண்ணியங்கள் எல்லாம் இனிது நிறைவேறுதற்குக் காரணமாகும். இப்படிச் செய்பவர்களன்றோ சைவசமயிகள் என்னும் பெயருக்கும், அதனாற் பெறற்பாலதாகிய பெரும்பயனுக்கும் பாத்திரர் ஆவார்கள்.

(இ) திருக்கோயில் முதலியவை அழிந்தால் அவைகளை முன் போலச் செய்தவர் பெறும்பயன்; அவைகளை முன் செய்தவர்கள் பெற்ற பயனிலும் ஆயிரமடங்கு அதிகமாகும். திருக்கோயிலின் ஒருறுப்புக் கிலமாயின், அதனை முன்போலச் செய்பவர் பெறும் பயன், முன்செய்தவர் பெற்ற பயனிலும் நூறுமடங்கு அதிகமாகும். இவற்றுக்குப் பிரமாணங்கள் சிவபுண்ணியத் தெளிவு, திருமந்திரம், சைவசமயநெறி போன்றவை.

(ஈ) சிவாலயத் திருப்பணிகளுக்குப் பொருள் கொடுப்பவர்களும், அப்பொருளை வாங்கிச் சிவாலயத் திருப்பணிகளைச் செய்பவர்களும் முத்தியை அடைவார்கள்.

(உ) தருமங்களையும், அவைகளின் பலன்களையும், அவைகளைச் செய்யும் முறைமைகளையும் அறியவும் — அறிவிக்கவும் — வல்லவர் கல்வியறிவுடையவராதலாலும், அவைகளைத் திரவியமுபகரித்து முடிக்க வல்லவர் செல்வமுடையவராதலாலும், இவ்விரு திறத்தாருள்ளும் பலர் சபையாகத் திரண்டு விதானங்கள் செய்துகொண்டு, அவ்விதானங்களின் படியே தருமங்கள் நடத்தப் புகுவாராயின், அத்தருமங்களெல்லாம் விதிப்படி நிறைவேறும். அவற்றின் பொருட்டுக் கொடுக்கும் பொருள் முழுவதுந் தருமத்திற்றானே உபயோகப்படும். ஆதலினால், நம்மவருள்ளே தருமஞ் செய்யக் கருத்துடையவர்கள் யாவரும் இத் திருப்பணிச் சபையில் சேர்தலே உத்தமோத்தமம்.

(ஊ) யாவராயினும் ஒரு தருமத்திற்குத் திரவியம் உபகரிக்கச் சங்கற்பித்தாராயின், சங்கற்பித்த அக்கணமே அத்திரவியந் தருமத் திரவியமேயாய் விடும். ஆகவே, அத்திரவியத்தைப் பின்பு கொடாதொழிந்தவர் தருமத்திரவியத்தை அபகரித்து அதிபாதகராகி, எரிவாய் நரகத்தில் விழுந்து வருந்துவர். இது உண்மைநூற்றுணிபு. ஆதலினால், நீங்கள் தருமத்தின் பொருட்டுச் சங்கற்பித்த பொருளைச் சிறிதாயினும் தடையின்றி அச்சத்தோடும், அன்போடும் கொடுத்துவிடல் வேண்டும்.

(எ) புண்ணியத்தையேனும், பாவத்தையேனும் செய்தல், செய்வித்தல், உடன்படல் என்னும் மூன்றும் தம்முள் ஒக்குமாதலால், நீங்கள் இத் தருமத்திற்கு உபகரித்தல் மாத்திரமன்றி, உங்கள் உங்கள் பந்துக்கள், நண்பர்கள் முதலாயினோருக்குஞ் சமயம் வாய்க்கும் பொழுதெல்லாம் நல்லறிவுச் சுடர் கொழுத்தி அவர்களையும் இயன்ற மட்டும் இத்தருமத்திற்கு உபகாரர்களாக்க முயலல் வேண்டும்.



(ஏ) இங்கு நாம் கூறியவாறு நடப்பின், சிவபுண்ணியங்களும் சிவஞானமும் அபிவிருத்தியாகும். நீங்கள் உங்களுக்கும் பிறருக்கும் பயன்பட்டு, உங்களுக்கு இனியர்களாகிய உங்களுக்கு, உங்களிலும் இனியராகிய சிவபிரானுடைய திருவருளைப் பெற்று வாழ்வீர்.

2. கோயில் அடையாளமேயின்றி தேவார வடிவில் மாத்திரம் மூன்று நூற்றாண்டுவரை இருந்துவந்த திருக்கேதீச்சர திருக்கோயிற் திருப்பணி பற்றி "யாழ்ப்பாணச் சமயநிலை" என்னும் பிரசுரத்தில் 1872ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் நாவலர் பெருமான் செய்த விஞ்ஞாபனம்:

"தேவாரம் பெற்ற சிவத்தலங்களுள் இரண்டு இவ் இலங்கையில் உள்ளன. அவைகளுள் ஒன்றாகிய திருக்கோணமலைக்குச் சம்பந்தமூர்த்தி நாயனார் திருப்பதிகமொன்றிருக்கின்றது. மற்றொன்றாகிய திருக்கேதீச்சரத்துக்குத் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருப்பதிகமொன்றுஞ், சுந்தரமூர்த்திநாயனார் திருப்பதிகமொன்றும் இருக்கின்றன. இத் திருக்கேதீச்சரம் இவ் வடமாகாணத்தின் கண்ணுள்ள மன்னாருக்கு அதி சமீபத்திலிருக்கின்ற மாதோட்டத்திலுள்ளது. இத்திருக்கேதீச்சரம் அழிந்து காடாகக்கிடக்கின்றதே! புதிது புதிதாக இவ்விலங்கையில் எத்தனையோ கோயில்கள் கட்டப்படுகின்றனவே! நீங்கள் இந்த மகாதலத்தைச் சிறிதும் நினையாததென்னையோ! இவ்விலங்கையிலுள்ள விபூதிதாரிகள் எல்லாருஞ் சிறிது சிறிது உபகரிப்பினும், எத்துணைப் பெருந்தொகைப் பொருள் சேர்ந்து விடும்! இதை நீங்கள் எல்லீருஞ் சிந்தித்து இத்திருப்பணியை நிறைவேற்றுவீர்களாயின் அருட்கடலாகிய சிவபெருமான் உங்களுக்கு அநுக்கிரகஞ் செய்வர்".

இன்று யாம் காணும் திருக்கேதீச்சரப் பெருங்கோவிற்றோற்றம் நாவலர் பெருமானது இவ்விஞ்ஞாபனத்தின் அத்திவாரத்தில் எழுந்ததேயாம்.

3. 1873ஆம் ஆண்டு தை மாதத்தில் நல்லூர் கந்தசுவாமி கோயிலில், அக்கோயில் ஆகமவிரோதக் கிரியைகள்பற்றி விரிவுரை செய்தார். அதனையொட்டி அவ்வாலயத்திலுந் திருப்பணிச்சபை யொன்று உதயமாகியது. விவரம் ;-

"நல்லூர் கந்தசுவாமிகோயில் கர்ப்பக்கிரகத்தில் வேலாயுதப் பிரதிட்டை செய்து, இருபுறத்திலும் தெய்வநாயகி, வள்ளிநாயகி விக்கிரகங்களை வைத்துப் பூசித்தல் ஆகமவிரோதமென்றும், அவைகளை நீக்கிச் சிலா விக்கிரகந் தாபித்தல் வேண்டுமென்றும் விரிவுரை செய்தார். நாவலர் கூற்றை ஏற்றுக்கொண்டு சிவாகம சம்மதப்படி கர்ப்பக்கிருகம் முதலியவைகளைப் பிரித்துக் கருங்கல்லினாலே கட்டிச்

சிலாவிக்கிரகப் பிரதிட்டை கருவறையில் செய்ய அக்கால அறங் காவலர் இணங்கினர். அதற்கென ஒரு திருப்பணிச்சபை தெரிவு செய்யப்பட்டது. அச்சபையின் தலைவராக நாவலரையே வைத்திருந் தனர். இத்திருப்பணிக்கு 6000 ரூபா வரை கையொப்பத்தில் சேர்ந் திருந்தது. இத்தொகையில் 3000 ரூபா வரையில் அறவிடப்பட்டுக் கோயிலதிகாரி ஒருவரிடம் ஒப்படைக்கப்பட்டது. அப்பணத்துடன் நாவலர் பரிந்துரைக் கடிதத்துடன் தென்னாடு சென்று திருப்பணிக்கு வேண்டிய உயர்தரக் கருங்கற்கள் கருவூரிலிருந்து தருவிக்கப்பட்டன."

4. ஈழநாட்டில் வரலாற்றுச் சிறப்புமிக்க சிவாலயங்கள் பல போர்த்துக்கேயரால் இடித்துத் தரைமட்டமாக்கப்பட்டன. அவற்றுள் ஒன்று கீரிமலை சிவன்கோவில். இக்கோயிலின் புனருத்தாரணத்திற் காகவும் நாவலர் முயற்சிகள் எடுத்திருக்கின்றார். இப்புனருத் தாரணத்திற்கென வெகுதானிய ஆண்டு வைகாசி 24ஆம் நாள் (1878) சைவ உலகிற்கு உருக்கமான ஒரு விண்ணப்பத்தைத் தமது கையொப் பத்தோடு வெளியிட்டிருந்தார்கள். இதனோடு தமது வண்ணார்பண்ணைப் பாடசாலையில் கூட்டிய கூட்டத்திலும் இது விடயமாக விரிவுரை செய்ததாகவுந் தெரிகின்றது. கீரிமலைக் கோயில்பற்றி அவர் விடுத்த விண்ணப்பம் கீழ்க்கண்டவாறு:–

"கீரிமலையில் ஆதியில் பெரிய சிவன்கோவில் ஒன்று இருந்தது; அக்கோயில் போர்த்துக்கேயரால் இடிக்கப்பட்டுவிட்டது. கீரிமலையின் அடியினின்றுஞ் சுத்த நீர் ஊற்றெடுத்துக் கடலினுள்ளே பாய்கின்றது. அந்தச் சங்கமம் புண்ணிய தீர்த்தமென்று விசுவசித்தன்றோ யாழ்ப் பாணம் எங்குமுள்ள சைவசமயச் சனங்கள் விசேட நாட்களில் அங்கே போய் நீராடுகின்றார்கள். அநேகர் அந்தியேட்டி – சிரார்த்தம் முதலிய கிரியைகள் அங்கே செய்கின்றார்கள். இப்படியாக அங்கு செல்கின்ற வர்கள் நீராடியவுடன் சுவாமி தரிசனஞ் செய்யும் பொருட்டு அங்கே ஒரு கோயில் இல்லையே. யாழ்ப்பாணத்தில் எத்தனையோ இடங்களில் புதிது புதிதாகக் கோயில் கட்டும் நம்மவர்கள், எல்லாச் சனங் களுக்கும் பொதுத்தலமாகிய கீரிமலையிலே ஒரு கோயில் கட்டுவிக்க இதுவரை நினையாதது என்னையோ! கீரிமலையிலே ஒரு கோயில் கட்டுவித்துச் சிவலிங்கப் பிரதிட்டை செய்வித்து, நித்தியபூசை நடத்துவிப்பது மேலாகிய சிவதருமம். பொருளுதவி செய்வார்களானால் இந்தச் சிவதருமத்தைத் தொடங்கி நிறைவு செய்யலாம் எனக் கூறி, பொருள் சேகரிப்பதற்கும் – வழங்குவதற்குமான வழிவகைகளையும் அதில் தெரிவித்திருந்தார்கள்".

தம் பொருள்கொண்டு கிட்டங்கி ஒன்று கட்டி விடுவதற்காக, காங்கேசன்துறையில் இக்கோயிலுக்கு நாவலர் நிலம் வாங்கிவிட் டிருந்தார்;



கோயில்கட்டுவதற்கான நிலையத்தை நல்லூர்ச் சோதிடவித்துவானாக விளங்கிய ச. இரகுநாத சாத்திரி, அராலி சுவாமிநாத சிற்பாசாரி ஆகியோரைக் கொண்டு நாவலரே இடுவித்தார்.

இவ்வாறு பலவகையிலும் நாவலர் அன்று எடுத்த முயற்சிகளின் பயனாகத்தான், பின்னாளில் பலர் இப்பணியை நிறைவு செய்ய முன் வந்தனர். இன்று இவ்வாலயத் திருப்பணிகள் ஓரளவிற்கு முற்றுப் பெற்று நாவலர் கனவை நனவாக்கி வருகின்றதுடன், ஈழத்துப் பெருங் கோவில் வரிசையில் ஒன்றாகவுந் திகழ்கின்றது.

5. நாவலர் பணிகளுக்கு நல்லாதரவு செய்தவர்களுள் நாட்டுக் கோட்டைச் செட்டிகளும் அடங்குவர். ஆயின், தவறிழைப்போர் யாராக இருப்பினுந் தமர் நமர் என்ற பேதங்காட்டாது உற்றதை உற்ற இடத்தில் உறுதியுடன் கண்டித்து எதிர்ப்பவர். இதற்கு நல்ல சான்று சிவாகம விதிகளுக்கு விரோதமான முறையில் யாழ்ப்பாணம் வண்ணார்பண்ணையில் நாட்டுக்கோட்டை நகரத்தார் கட்டிய கதிரேசன் கோயில் பற்றிய நாவலர் கண்டனங்களும் – வெளியீடுகளும்.

## IV. நாவலர் கல்விப் பணிகள்

1. நாவலர் மெதடிஸ்த்த பாடசாலையில் (இன்றைய யாழ் மத்திய கல்லூரியில்) பயின்ற காலத்தில் கீழ்வகுப்பு மாணவர்களுக்கு ஆங்கிலமும், மேல்வகுப்பு மாணவர்களுக்குத் தமிழும் கற்பித்து வந்தார். திண்ணைப்பள்ளிக்கூடக் காலச் சட்டாம்பிள்ளைமுறை இதுவே யாகும். பாடசாலை ஆசிரியர் வேதனச் செலவுகளைச் சுருக்குவதற்கு இம்முறை பெரிதும் பயன்பட்டமையால், பின்னாளில் பல பாடசாலை அதிபர்கள் இம்முறையினைப் பின்பற்றுவாராயினர்.

2. நாவலரது கல்வியறிவு விருத்திக்காக அக்காலத்து யாழ்ப் பாணத்துப் பெரும்புலவர்களிடம் வீட்டோர் இவரைச் சேர்ப்பித் திருந்தனரேனும், இவரது கல்விப்பெரும்பசியை அவர்களினால் முற்றாகத் தீர்க்கக்கூடிய நிலை இருக்கவில்லைப்போலும். இவர் தாமாகவே பல நூல்களையும் அரிதில் முயன்று கற்றிருக்கின்றார். அச்சமயம் தான் பட்ட இடர்களைப் பின்வருவோரும் படாதிருக்க வேண்டுமென்ற நினைப்பே 1841ஆம் ஆண்டு தொடக்கம் விவேகபுத்தி யுள்ள தகுதியான நன்மாணாக்கர்களைக் கூட்டி அவர்களுக்கு இரவுபகல் பாராது இலவசக்கல்வி கற்பிக்க இவரைத் தூண்டியிருக்கின்றது. இதில் வளர்ந்த நல்லாசிரியர் மரபொன்று வாழையடி வாழையாக வந்துகொண்டிருக்கின்றது;

3. காலையிலும் மாலையிலும் மாணவர்களுக்கு இலவசமாகக் கல்வி கற்பிப்பதுடன், முதியோர் கல்வியிலும் கவனம் செலுத்தியுள்ளார். 31-12-1847 தொடக்கம் ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும், வண்ணார் பண்ணை சிவன்கோயிலிலும், ஏனைய இடங்களிலும் செய்துவந்த பிரசங்கமாரி, சமய அறிவை ஊட்டிவந்ததுடன் முதியோர் அறிவையும் பெருக்கியுள்ளதென்றே கூறலாம்.

4. தமிழில் பட்டத்தேர்வுகள் வைத்துப் பட்டங்கள் வழங்குவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்து வைத்தார். யாழ்ப்பாணத்தில் பின்னாளில் உருவாகிய தமிழ்ச்சங்கத்திற்கு மூலமாக விருந்தவை நாவலர் அவர்களால் செய்து வைக்கப்பட்ட இவ்வேற்பாடுகளேயாம்.

5. நன்மாணுக்கர் நல்லாசிரியரைத் தேடி அடையும் முறையையும், அவர்வழி ஒழுகி நூல்களை அணுகும் முறையையும், அவற்றினைக் கற்கவேண்டிய மரபினையும் தாம் வகுத்த கல்விமுறையில் விளக்குகின்றார். "இளமையில் கல்" என்ற ஔவை வாக்கினை உணர்ந்த நாவலர், இளம் மாணவர்க்குத் தம் மூன்றும் பாலபாடத்திற் கற்கும் முறைகள் பற்றிக் கூறியவற்றுள் பல இக்காலக் கல்வி முறைக்குப் பெரிதும் உகந்தனவாகக் காணப்படுகின்றன.

6. பெண்கள் கற்றலின் அவசியம்பற்றி 3ஆம் பாலபாடத்தில் விளக்கமாகவும் விரிவாகவும் கூறியுள்ளார்.

7. மக்களால் தேடப்படும் கல்விப்பொருள், செல்வப்பொருள் என்னும் இரண்டினுள், செல்வப்பொருளைச் சம்பாதித்தற்கும், காப்பாற்றுதற்கும், அதனாலடைய வேண்டிய சுகங்களை உள்ளபடி அறிந்து அனுபவிப்பதற்கும், கடவுளையும் அவரை வழிபடும் நெறியையும் அறிந்து வழிபட்டு முத்தியின்பம் பெறுவதற்கும் காரணமாய்ச் சிறந்து முன்னிற்பது கல்வியே. ஆதலால், அதனைப் பயிலுதற்குத் தானமாகிய (இடமாகிய) வித்தியாசாலைகளைத் தாபிக்க வேண்டும், அவைகளுக்கு உதவிசெய்ய வேண்டும். முதற் பொருள் வைத்து அவைகளை ஒழுங்குபெற நடத்த வேண்டும். இப்படியாகக் கட்டப்படும் கல்விக்கூடங்களில் கருவிநூல், சமயநூல்களேயன்றிக் கைத்தொழில்களையும் கற்பிப்பது விசேடம் எனக் கூறியிருக்கின்றார்.

8. நாவலர் கல்வித்திட்டத்திலே இளைஞர்களுக்கு அறிவூட்டுவதே முதலிடம் பெற்றிருந்தது. மற்றும் பெரும் புலவர்களெல்லாம் கற்றோர்க்கு நூல் செய்வதில் காலம்கழிக்க, நாவலர் இளைஞர்க்குக் கல்வி ஊட்டுவதில் நாட்டங்கொண்டிருந்தார். சைவத்தை நிலை நாட்ட வேண்டுமாயின், தமிழை வளர்க்கவேண்டுமாயின், வழிவழி



வந்த அறிவுச் செல்வத்தைக் காக்கவேண்டுமாயின், இளைஞர்களுக்குத் தகுந்த சூழலிலே கல்வி புகட்டப்படவேண்டுமென்பதை உணர்ந்தார். இதற்காக மாணவர்கள் இலகுவில் உணரக்கூடிய இலக்கண இலக்கிய நூல்களை எழுதியுள்ளார். இலக்கணவினாவிடை, இலக்கணச் சுருக்கம், நன்னூல் காண்டிகையுரை ஆகியவை ஒவ்வொன்றும், ஒன்றிலொன்று உயர்ந்தனவாய் எழுதியமைக்கான காரணம் இதுவேயாகும்.

"இலக்கணநூல்" என்பதற்கு நாவலர் கூறியிருக்கும் வரைவிலக்கணத்தை இனி எவரும் திருத்தவோ அன்றிப் புதுப்பிக்கவோ முடியாது.

இலக்கண நூலாவது உயர்ந்தோர் வழக்கத்தையுஞ் செய்யுள் வழக்கத்தையும் அறிந்து, விதிப்படி எழுதுவதற்கும், பேசுவதற்கும் கருவியாகிய நூலாம் என்பது அவர் கூற்று.

இன்னும் குற்றியலுகரத்திற்கு நாவலர் எழுதிய வரைவிலக்கணம், நன்னூலார் வரைவிலக்கணத்தையும் கடந்து மாணவர் மனதில் பதிந்து விடுகின்றது.

"குற்றியலுகரமாவது தனிக்குற்றெழுத்தல்லாத மற்றை எழுத்துக்களுக்குப் பின்னே மொழிகளினிறுதியில் வல்லின மெய்களில் ஏறிநிற்கும் உகரமாம்" என்பர்.

"தமிழ் கற்கப்புகுஞ் சைவசமயிகள் முன்னர் பாலபாடங்களைப் படித்துக்கொண்டு, இலக்கணச் சுருக்கத்தைக் கற்றறிந்து, இயன்றளவு பிழையில்லாமல் எழுதவும் பேசவும் பழகுக" என்று கூறிய நாவலரது இலக்கணச்சுருக்கம், தமிழ் கற்றவர்களுமே தங்கள் ஐயங்களைத் தீர்ப்பதற்குக் கைநூலாகக் கொள்ளத்தக்கதாகும். அத்தகைய திட்பநுட்பத்துடன் எழுதப்பட்ட நூல் இலக்கணச் சுருக்கம், தொல்காப்பியரும் நன்னூலாரும் வரையறுக்காது பொதுப்படக் கூறிய சொற்புணர்ச்சி விதிகளை நாவலர் வகைப்படுத்தி வரையறுத்துத் தந்திருப்பது பாராட்டத் தக்கது.

9. மாணவர் தமக்கெழும் ஐயங்களைப் பத்திரிகையில் வினாவாக எழுதி, விடைகளைக் கற்றுவல்லோர் மூலந் தெளிந்து கொள்ளலாம் என்ற கொள்கையையுடையவர் நாவலர். இதற்கு கட்புலன்பற்றித் தமக்கெழுந்த ஐயத்தை நீக்க 1841 ஆவணி 14ஆம் நாள் உதயதாரகைக்கு நாவலர் எழுதிய கடிதத்திற்குரிய விளக்கமான விடை, 1841 புரட்டாதி 2ஆம் நாள் உதயதாரகையில் வெளிவந்தமை தக்கவொரு சான்றாகும்.

10. 1848இல் நாவலரால் தாபிக்கப்பட்ட யாழ்ப்பாணம் சைவப் பிரகாச வித்தியாசாலையே பலதுறைகளிலும் பின்னெழுந்த தமிழ்ப் பாடசாலைகளுக்கு முன்னோடியாகத் திகழ்ந்ததாகும்.

11. எத்தகைய பண நெருக்கடி நேர்ந்தபோதிலும் மாணவர் களிடமிருந்து நாவலர் பணம் வாங்கியது கிடையாது. பாடசாலை ஆசிரியர்களுக்கும் சம்பளம் கொடுக்க வசதியில்லாதிருந்தபோது வீட்டுக்கு வீடு பிடியரிசி சேர்த்து அதனை விற்றுக் கொடுத்து வந்தார். பின்னாளில் சேர்க்கும் கூலிக்கே சேர்ந்த அரிசி காணுமலிருந்தபடியால், அப் பிடிஅரிசி சேர்த்தலையும் விட்டுவிட்டிருந்தார், இப்படியான நிலையில் மனம் நொந்து கொண்டிருக்கும் பொழுதுதான், திருவருள் செயலாக பொன். இராமநாதனின் மனைவியாரது தகப்பன் நன்னித்தம்பி முதலியார் கொழும்பிலிருந்து பணம் அனுப்பி இருந்தார்கள். அதனைக் கொண்டு பாடசாலைக்கென இரு கடைகள் வாங்கப்பட்டன.

12. சைவப்பாடசாலைகளைத் தொடங்கிய பின் அப்பாடசாலை களில் கற்பிப்பதற்கு வேண்டிய பாடப்புத்தகங்கள் இருக்கவில்லை. அக்குறையை நிவிர்த்தி செய்வதற்காக வகுப்பிற்கும், வயதிற்கும் ஏற்றதன்மையில் எழுதிவெளியிடப்பட்டவையே பாலபாடங்களாகும். பயனில்லாத வெறும் வசனங்களை எழுதாது, கல்வியின் நோக்கத்திற் கமைந்த பொருள் பொதிந்த வசனங்களையும், கட்டுரைகளையுமே பாலபாடங் களில் எழுதியுள்ளார். இவற்றைக் கூர்ந்துநோக்குவோர்க்கு இவ்வுண்மை புலப்படும்.

13. கற்பவர் இலகுவில் விளங்கும் வகையில் கடுஞ் சந்திகளைப் பிரித்தும், ஏற்ற குறியீடுகளைப் பயன்படுத்தியும் முதன்முதலில் தமிழ் நூல்களை வெளியிட்டவர் நாவலரேயாம்.

14. நாவலர் பாலபாடங்கள் பற்றி சென்னையிலிருந்து 1872 இல் வெளியாகிய "நேற்றிவ் பப்ளிக் ஒபினியன்" (Native Public Opinion) என்ற ஆங்கிலப் பத்திரிகையில் சிறப்பான நீண்ட மதிப்புரை ஒன்று எழுதப்பட்டிருந்தது.

15. பலரது பல ஆண்டு ஆலோசனைகள்—அறிக்கைகள் போன்ற ஆரவாரங்களுக்கு ஊடாக 1945 இல் இலங்கையில் இலவசக் கல்வித் திட்டம் அரசாங்கத்தினுல் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டது. ஆயின், எவரதும் ஆலோசனையோ, அறிக்கையோ ஒன்றுமேயின்றித் தன்னந்தனியாகச் சிந்தித்து "வேதனம் பெறுது கற்பிப்பதே சிறந்த முறை" என்ற திட்டத்தை நூறு ஆண்டுகளுக்கு முன்னரே செயற் படுத்திச் சாதனையில் காட்டிய தீரர் நாவலர்.



16. பல நாட்டிலுள்ள கல்விமான்களதும், மனோதத்துவ நிபுணர் களதும் பலகால ஆராய்ச்சி அநுபவமுடிபு "தாய்மொழிக்கல்வியே மாணவர் அறிவு வளர்ச்சிக்குச் சிறந்தது" என்பதாம். இவ்வடிப்படையில் இந்நாட்டில் தாய்மொழிக் கல்வி மொழிமாற்றம் 1946 இல் செயல் படத் தொடங்கியது. இது படிப்படியாக வளர்ந்து 1957 இல் சிரேஷ்ட தராதரப் பத்திர வகுப்புத் தேர்வும், தாய்மொழியில் நடக் கவும், 1963 இல் பல்கலைக் கழக இளங்கலை மாணித் (B. A.) தேர்வு தாய்மொழி மூலம் நடக்கவும் வழிபிறந்தது. ஆயின், எவரதும் ஆலோசனையோ ஆராய்ச்சியோ ஒன்றுமேயின்றி, ஒரு நூற்றுண்டு காலத்திற்கு முன் நாவலரே இத்திட்டத்தைச் செயற்படுத்திவிட்டார். நாவலர் காலத்தில் இங்கிருந்த பெரும்பாலான பாடசாலைகள் ஆங்கிலத்தையே போதனமொழியாகக் கொண்டிருந்தன. ஏன் நாவலர் படித்ததுகூட ஆங்கிலப்பாடசாலையேயாம். அப்படியிருந்தும். பொதுநோக்கில் எல்லோரும் விளக்கமான கல்வி அறிவுபெறவேண்டும் என்றபான்மையில், எல்லாப்பாடங்களையுந் தமிழில் கற்பிக்குந் தமிழ்ப்பாடசாலையையே நாவலர் முதன் முதல் தாபித்தார். தமிழில் கற்பிக்கப்படவேண்டும் என்ற கொள்கைப்படி அக்காலத்தில் அவர் கல்வித்திட்டத்தில் இடம்பெற்ற பாடங்களாவன பூகோளம், வைத்தியம், சோதிடம், வேளாண்மை, வாணிகம், அரசநீதி, சிற்பம் போன்றவைகளாகும். தாய்மொழியிற் கற்பிப்பதே சிறந்ததெனக் கருதிய நாவலர், தாய்மொழியிலே ஒவ்வொரு பாடத்திற்கும், தரமான நூல் எழுதப்படவேண்டும் என்பதனையும் உணர்ந்திருந்தார். அந்நோக்கில் அவர் எழுதிய நூல்தான் இலங்கைப் பூமிசாத்திரம்.

17. நாவலர் தன்னுற் தாபிக்கப்பட்ட பாடசாலையிலும், தன் வேண்டுகோட்படி பிறரால் தாபிக்கப்பட்ட பாடசாலைகளிலும் தக்கோரைக்கொண்டு தவணைக்குத் தவணை தேர்வுகள் நடத்துவித்து வந்தார்.

18. நமது நாட்டுக் கல்விக்கொள்கை கடந்த காலங்களில் எங்கெங்கோவெல்லாஞ் சுற்றிச்சுழன்று வலம் வந்துகொண்டிருந்தது. ஈற்றில் சமயத்தினடியில் சரணடைந்தது. நல்லொழுக்கத்திற்கும், ஆன்ம ஈடேற்றத்திற்கும் வழிவகுப்பதே கல்வியின் முக்கிய அடிப்படை நோக்கமாக இருக்க வேண்டும் என்பதனை உணரத் தலைப்பட்டது. இதனை யொட்டியே 1965ஆம் ஆண்டு தொடக்கம் க. பொ. த. சாதாரண தேர்வுக்குச் சமயத்தை ஒரு கட்டாய பாடமாக்கி யுள்ளனர். பல ஆண்டுகளுக்குப் பின்னர் இங்கு இவர்கள் கண்டுபிடித்த உண்மையை, நாவலர் நூறுண்டுகளுக்கு முன்னரே கண்டிருந் தார். சமயக்கல்வியை மையமாக வைத்தே நாவலர் தனது கல்விக் கொள்கைகளை அமைத்து விருத்திசெய்ய முயன்றுவந்தார். கல்வி

தொடர்பாக அவர் எழுதிய எழுத்துக்களிலும், ஏனைய செயல்களிலும் சமயக்கல்வியின் பிரதிபலிப்புக்கள் மேலோங்கியிருப்பதைக் காணலாம்.

19. ஏட்டுக்கு ஏடு மாறுபட்டிருக்குஞ் சொற்களை "பாடபேதம்" என அடியிலே குறிப்பிட்டு நூல்களை அச்சிட்டு வருவதே பதிப்பாசிரியர்கள் வழக்கம். பாடபேதச் சொற்களைப் பழைய ஏட்டுச் சுவடிகளுடன் மீண்டும் மீண்டும் ஒப்புநோக்கி ஆராய்ந்து, பொருத்தமான சொல்லை எடுத்து அச்சிட்டுக்கொண்டு, ஏனையவற்றை நீக்கிப் பாடபேதமில்லாது நூல்களைப் பதிப்பிப்பதே நல்லமுறை என அண்மைக் கால அறிஞர் செய்துகொண்ட முடிபு. அம்முடிபுக்குத் தகப் பல அறிஞர்கள் ஒருங்கிருந்து ஆராய்ந்து பல நூல்களைப் பாடபேதமில்லாத முறையில் பதிப்பித்து வருகின்றனர். இன்று இவர்கள் கண்ட இச்சிறப்பு முறையை நாவலர் ஒருநூற்றாண்டுக்கு முன்னரே அறிந்து, தானே தன்பாட்டில் பாடபேதச் சொற்களை ஆராய்ந்து, பொருத்தமான சொல்லை எடுத்துக்கொண்டு ஏனையவற்றை நீக்கிப் பாடபேதமில்லாது நூல்களைப் பதிப்பித்திருக்கின்றார். இவரது திருக்குறள் பதிப்பே (கி. பி. 1861) இதற்கு நல்ல எடுத்துக்காட்டு.

இவ்வாறு கல்வி தொடர்பான பலதுறைகளிலும் தீர்க்கதரிசனத்தோடு, சைவத் தமிழுலகிற்கு ஒரு முன்னோடியாக விளங்கிய ஞானச் சுடர்க்கொழுந்தாகிய நாவலரை யாம் மனித நிலையில் வைத்தெண்ணத் தகுமா? இல்லை. அவர் ஒரு தெய்வப் பிறப்பு.

முத்தமிழ் வித்தகர் அருட்டிரு விபுலாநந்தர் கூறுகின்றார்:

ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரவர்களுடைய முன்மாதிரியைப் பின்பற்றிச் சைவசமயமும், சைவக் கல்வியும் நிலைபெறவுடைய வேண்டுமென்னும் ஒரு நோக்கத்தோடு நைட்டிகப் பிரமசாரிகள் பத்துப்பேர் முன்வருவார்களாயின் இந்நாடு நலமடையும். சைவக் கல்வி வளர்ந்தோங்கும். சைவசமயம் விருத்தியடையும்.

# பின்னிணைப்பு

**கதிர்காமம்:**

கதிர்காமம் செல்வோர், கதிர்காம முருகனைக் கோயிலில் வழிபட்டு விட்டுச் செல்லக்கதிர்காமம் செல்வர். அங்குள்ள மாணிக்கப் பிள்ளையாரை வணங்கியபின், திரும்பக் கதிர்காமம் வந்து கங்கையில் நீராடிவிட்டு, குன்றுதோறாடும் குமரன் கொலுவிருக்கும் கதிரைமலை உச்சிக்குச் செல்வர். கதிர்காம யாத்திரையின் முழுமையான பெறுபேறும், நிறைவும் கதிரைமலைத் தரிசனமேயாம்.

'அதிரவரு மாணிக்க கங்கைதனில் மூழ்கி
அன்பொடு சிவாயஎன அருணீறு பூசி
முதிருமன் பால்நெஞ்ச முருகவிழி யருவி
முத்துதிர மெய்ப்புளக மூரவுரை குளறப்
புதியசெந் தமிழ்மாலை புகழ்மாலை சூடிப்
பொருவில்கந் தாசுகந் தாவென்று பாடிக்
**கதிரைமலை காணாத கண்ணென்ன கண்ணே**
**கர்ப்பூர வொளிகாணாக் கண்ணென்ன கண்ணே"**

என, இலங்கை வளம் பற்றி நவாலி, திரு. க. சோமசுந்தரப் புலவர் பாடிய நெஞ்சையள்ளும் கவிமலர்களுள், கதிர்காமம் பற்றிப் பாடிய இதழ் இதுவாகும்.

கதிர்காமத்தின் மறுபெயர்கள் ஏமகூடம், கார்த்திகேயபுரம், கதிர்வேலன் மலை, மாணிக்க நகர், மணிபுரம், கந்தவேள் கோயில் முதலானவையாம். கதிர்காமத்திற்குரிய தீர்த்தம். "மணிதாளம் வீசி யணியாவி" எனப் போற்றப்படும் மாணிக்ககங்கை. அருணகிரிநாத சுவாமிகளது திருப்புகழில் இடம்பெற்ற திருத்தலம் இதுவாகும். சீதையைத் தேடி வந்த அநுமானால் வணங்கப்பட்ட தலமும் இதுவாகும்.

கதிர்காமத்தையொட்டிப் பல கந்தசுவாமி கோவில்களும், ஊர்களும் கிழக்குப் புறத்திலும், தெற்குப் புறத்திலும் தோற்றியுள்ளன. கழுத்துறைக்குத் தென்பாலுள்ள "வேலபுரம்" மட்டக்களப்புக்குத் தெற்கேயுள்ள கடற்றுறையான கந்தபாணன்துறை (இன்றைய திருக்கோவிலின் பழைய பெயர் கந்தபாணன்துறை) போன்றவை இவற்றுள் சிலவாம். அவை யாவற்றையுங் கொண்டு வரலாற்றிற்கு முற்பட்ட காலத்தில் சைவத்தமிழர் இவ்விடங்களில் வாழ்ந்திருக்கின்றனர் என்பதை யாம் உணர்ந்து கொள்ளலாம்.

## கதிர்காமச் சிறப்புப்பற்றிக் கூறும் நூல்கள்

| | நூலின் பெயர் | நூலாசிரியர் பெயர் |
|---|---|---|
| 1. | *கதிரைமலைப் பள்ளு | — — |
| 2. | கதிர்காமப் பிள்ளைத்தமிழ் | புலவர் சிவங்கருணாலய பாண்டியனார் |
| 3. | கதிர்காமவேலவர் தோத்திர மஞ்சரி | மட்டக்களப்பு வித்துவான் அ. சரவணமுத்து |
| 4. | கதிர்காம நான்மணிமாலை | வண்ணை நெ. வை. செல்லையா |
| 5. | கதிர்காம புராணம் | வதிரி சி. நாகலிங்கம்பிள்ளை |
| 6. | கதிரைமலை வேலவர் பதிகம், கதிரைச் சிலேடை வெண்பா | தங்கத் தாத்தா நவாலியூர் க. சோமசுந்தரப் புலவர் |
| 7. | கதிர்காம முருகேசர் ஆருதார சடாட்சர அந்தாதி | வறுத்தலைவிளான் முத்துக்குமார ஆசாரிய சுவாமிகள் |
| 8. | கதிர்காமவேலர் திருவருட்பா | சுழிபுரம் திருஞானசம்பந்த உபாத்தியாயர் |
| 9. | கதிர்காமசுவாமி பதிகம், கதிர்காமசுவாமி கீர்த்தனம் | வயாவிளான் ஆசுகவி க. வேலுப் பிள்ளை |
| 10. | கதிர்காமமுருகன் திருப்பள்ளி எழுச்சி, கதிர்காமமுருகன் திருவூஞ்சல், கதிர்காம முருக வேள் பிள்ளைத்தமிழ் | வட்டுக்கோட்டை திரு. க. சிதம்பர நாதன் |
| 11. | கதிரை யாத்திரை விளக்கம் | வண்ணை விநாயகமூர்த்திச் செட்டியார் |
| 12. | **கதிர்காமத்து அம்மானை | — — |

*இந்நூலாசிரியர் பெயர் தெரியவில்லை. கி. பி. 1478 - 1519 வரை நல்லூரிலிருந்து அரசாண்ட பரராசசேகரன் காலத்தில் இந்நூல் செய்திருக்கலாம் என நம்பப் படுகின்றது. இம்மன்னன் வேண்டுகோளின்படி 12 புலவர்களினால் எழுதப்பட்ட வைத்திய நூல் பரராசசேகரம். இதில் பலவிடங்களில் தென்கதிரைவேலர் இடம் பெறுகின்றார், இப்பன்னிருவர் பெயர்களும்கூடத் தெரியாதே இருக்கின்றன. இப்பன்னிரு புலவர்களுள் ஒருவரே இதனையும் பாடியிருக்கக்கூடும் எனவும். இப்பன்னிருவர் பெயர்களுங் குறிப்பிடப்படாதிருப்பது போன்று, இப்பள்ளு ஆசிரியர் பெயருங் குறிப்பிடப்படாதிருக்கலாம் எனவும் கருதப்படுகின்றது. இது ஈழத்துப் பள்ளுப் பிரபந்தங்களுள் காலத்தால் முந்தியது மாத்திர மன்றி, தமிழகத்துப் பள்ளுப் பிரபந்தங்களும் கதிரைமலைப் பள்ளுவைப் பின் பற்றியே எழுந்துள்ளன எனவுங் கூறப்படுகின்றது,



தெல்லிப்பழை சட்டத்தரணி திரு வ. குமாரசாமி (பி. ஏ.) அவர்கள் பல ஏட்டுப் பிரதிகளைக்கொண்டு பரிசோதித்து எழுதிய ஆராய்ச்சிக் குறிப்புகளுடனும், அரும்பதவுரை அருந்தொடர் விளக்கங்களுடனும் கூடிய இந்நூற்பதிப்பொன்று 1935இல் சென்னையில்— திருமலையில் சே, வெ. ஜம்புலிங்கம்பிள்ளை அவர்களால் பதிப்பிக்கபெற்றது.

2, ** ஆசிரியர் பெயர் கூறப்படவில்லை. கழுவாஞ்சிக்குடி திரு. எஸ். சுப்பிரமணியம் அவர்கள் தந்த கையெழுத்துப் பிரதியின்படி அச்சிடப்பெற்றது எனக் கூறப் பட்டுள்ளது. பதிப்புரிமை கொழும்பு செட்டியார் தெரு கலாநிலையம்.

**குறிப்பு :**

சைவ ஆலயமாகிய கதிர்காமம், . சைவ மக்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமாகப் பரிபாலிப்பதற்குச் சைவ மக்களிடம் கையளிக்கப்பட வேண்டு மென்ற வேண்டுகோள் ஒன்று, 1908ஆம் ஆண்டு முதன் முதலாக சேர் பொன். அருணாசலம் தலைமையில் கொழும்பில் இயங்கி வந்த அகில இலங்கைச் சைவபரிபாலனசபையினால் விடுக்கப்பட்டது. இதே வேண்டு கோளுடன் ஆலயத்திற்குச் சேரும் வருவாய்கள் கோயிற் தேவைகளுக்கு மட்டுமே பயன்படுத்தப்பட வேண்டும் என்ற வேண்டுகோளொன்றை மேலும் கூடச் சேர்த்த விண்ணப்பம் ஒன்று செய்யவேண்டுமென சேர் அருணாசலம் மகாதேவா தலைமையில் 18–3–1938இல் கொழும்பு விவேகாநந்த சபை யில் கூட்டப்பட்ட சைவப்பெரியார்களதும், சைவதாபனங்களதும் கூட்டத்தில் ஒரு மனதான தீர்மானஞ் செய்யப்பட்டது. ஆயின், அக்காலத்தில் ஏற்பட்ட 2ஆம் உலகப்போர் நெருக்கடி காரணமாக இவ்வேண்டுகோள் விடுக்கப்பட வில்லை. அதன்பின் இதுபற்றிக் கேட்கப்பட்டதாக எட்டவில்லை.